# தம்மபதம்

## புத்தரின் வழி

◆

முடிவற்ற உண்மை

◆

பாகம்: 2

◆

ஓஷோ

தமிழில்

பேராசிரியர் டாக்டர் என்.ரமணி

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,

தியாகராய நகர், சென்னை - 600 017.

போன் : 24332682, 52077776.

# ஓஷோ

பகவான் ஸ்ரீ ரஜ்னீஷ், தற்போது
'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே
குறிப்பிடப்படுகிறார்.

வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட
'ஓஷியானிக்' என்ற சொல்லிலிருந்து
தம்முடைய பெயர் உருவானதாக
ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.

'ஓஷியானிக்' என்றால்
கடலில் கரைந்து போவது
என்று பொருள்.
'ஓஷியானிக்' என்ற சொல்
அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது.
ஆனால், அனுபவிப்பவரைக்
குறிப்பிடவில்லை. அதனால்,
'ஓஷோ' என்ற சொல்லை
உருவாக்கினேன் என்கிறார், ஓஷோ.

ஆனால், இந்தச் சொல்
கீழை நாடுகளில், நீண்ட காலமாக,
வேறு ஒரு பொருளிலும்
பயன்படுத்தப்பட்டு வருவதை
ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்.

இதன் பொருள்:
''வானம் பூச்சொரிந்து
ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன்.''

**புத்தருடைய** விரோதிகள் மட்டுமன்றி அவருடைய அபிமானிகள் கூடத்தான் அவரைப் பெரிதும் தவறாகப் புரிந்து கொண்டிருந்திருக்கிறார்கள். பார்க்கப் போனால் அவரைத் தவறாகப் புரிந்து கொண்ட அபிமானிகள்தான் அதிகம்.

வேறு எவரையும் விடப் புத்தரைத்தான் அதிகம் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். காரணம் அவர் மிக ஆழமான ஞானிகளில் ஒருவராக இருந்துவிட்டதுதான்.

அவருடைய எண்ணங்கள் மிக ஆழ்ந்தவை. எனவே தவறாகத்தான் புரிந்து கொள்ளப்படும்.

நான் ஒரு பௌத்தனல்ல. எனவே புத்தருடைய வார்த்தைகளுக்கு வியாக்கியானம் சொல்ல வரவில்லை. கௌதம புத்தர் எதை அனுபவித்திருந்தாரோ அதையே நானும் அனுபவிக்கிறவன் என்பதால், அவரைப் பற்றி நான் பேசுவது என்னைப் பற்றி நானே பேசிக் கொள்வதைப் போலத்தான்.

இது ஒரு வியாக்கியானமல்ல. விளக்கம் அல்ல. புத்தரை ஒரு முகாந்திரமாகக் கொண்டு பேசப் போகிறேன். என்னுடைய ஞானத்தைப் பற்றி உங்களிடம் பேச ஒரு பிரமாதமான முகாந்திரம்.

என்னுடைய அனுபவத்தை மட்டுமே நான் பேசுகிறேன் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். நான் புரிந்து கொண்டதையும் என் அனுபவத்தையும் மாட்டி வைக்க ஒரு முளைக்குச்சிதான் புத்தர்.

அந்த மனிதர் மீது எனக்கு அலாதிப் பிரியம். ஏனென்றால் அவரளவுக்கு ஞானத்தில் ஆழ்ந்தவரோ உயர்ந்து நின்றவரோ வேறு யாரும் இல்லை. மானுடப் பிரக்ஞை இதுவரைக்கும் போய்ச் சேர்ந்த மிகப் பெரிய உயரத்தில், எவரெஸ்டில் அவர் இருந்து கொண்டிருக்கிறார்.

**ஓஷோ**



தம்மபதம் – ஓஷோவின் சொற்பொழிவுகள்

# வெகுளித்தனத்தின் ஞானம்

# 1





# தம்மபதம் -II

கலங்கிய மனம் எப்படி
நெறியைத் தெரிந்து கொள்ளும்?
எவனொருவன் மனம் கலங்கியிருக்கிறானோ
அவன் அறிவால் நிறைக்கப்படான்.

கலங்காத மனம்
எது சரி, எது தவறு என்று
எடை போடாத மனம்...
கருத்துக்களைத் தாண்டிய மனம்...
கவனிக்கிறது. புரிந்து கொள்கிறது.

உடல் உடையும் பாத்திரம் என்ற உணர்வோடு
மன மாளிகையை கட்டு.
ஒவ்வொரு சோதனையின் போதும்
புரிதல் உனக்காகப் போராடட்டும்
நீ வென்றதைக் காக்க
போராடட்டும்.

விரைவில் உடலைக் கழிக்கப்
போகிறோம்
பிறகு உணர்வதற்கு என்ன இருக்கப்
போகிறது?
பயனற்ற கட்டையாக மண்ணில் கிடக்கப்
போகிறது.
அப்போது அதற்கு என்ன தெரியப் போகிறது?

கவனிக்காமல் சேர்த்துள்ள
உன்னுடைய எண்ணங்கள்
உன் மோசமான எதிரியை விட
உனக்கு ஆபத்தாகிப் போகும்.

ஆனால் கட்டுப்பாட்டில் வந்துவிட்டாலோ
அதனளவு யாரும் அவ்வளவு சகாயமாயிருக்க
முடியாது.
உன் தந்தை தாயும் கூடத்தான்.

**ஒரு** தடவை என்னைக் கேட்டார்கள். ''தத்துவம் என்பது என்ன?''

நான் சொன்னேன், ''தவறான கேள்விகளையே கேட்கும் கலைதான் தத்துவம்.''

குருடன் ஒருவன் வெளிச்சம் என்றால் என்ன என்று கேட்கிறான். இதுதான் தத்துவம். செவிடன் ஒருவன் இசை என்றால் என்ன, சத்தம் என்றால் என்ன என்று கேட்கிறான். இதுதான் தத்துவம்.

ஒரு குருடன் எப்படி எனக்குப் பார்வை கிடைக்கும் என்று கேட்டால் அது தத்துவம் அல்ல. அது சமயம். செவிடன் ஒருவன் மருத்துவரிடம் போய்த் தனக்குக் காது கேட்கச் சிகிச்சை எடுத்துக் கொண்டால் அது தத்துவத்தை நோக்கிப் போவதல்ல. சமயத்தை நோக்கி நகர்வதுதான்.



தத்துவம் என்பதே யூகம்தான். அது ஒரு பகல்கனவு. எதுவும் தெரியாதவர் சத்தியத்தை உருவாக்க முயல்கிறார். சத்தியத்தை யாரும் உருவாக்க முடியாது. உருவாக்க முடிந்த எதுவும் சத்தியமாகாது. சத்தியத்தைக் கண்டுபிடிக்கத்தான் முடியும். சத்தியம் ஏற்கெனவே இருப்பது. செய்ய வேண்டியதெல்லாம் கண்ணைத் திறந்து வைத்துக் கொள்ள வேண்டியதுதான், காண்பதற்குக் கண்களை, உணர்வதற்கு நெஞ்சை, இருப்பதற்கு ஜீவனை.

சத்தியம் என்றும் இருக்கிறது. நாம்தான் இல்லாதிருக்கிறோம். நாம் இல்லாதிருப்பதால் சத்தியத்தை நாம் காண முடிவதில்லை. சத்தியத்தைப் பற்றிக் கேட்டுக் கொண்டே இருக்கிறோம். ஆனால் சரியான கேள்வியைத்தான் கேட்பதில்லை. எப்படி இருப்பவராவது? எப்படி இருத்தலாவது?

சத்தியத்தைப் பற்றிக் கேட்டுக் கொண்டே இருக்கிறோம். அப்படிக் கேட்பதே சத்தியத்தை விட்டு விலகிப் போவதுதான். கேட்பதற்குப் பொருளே யாரோ ஒருவர் பதில் சொல்வார் என்பதுதான். அதாவது பிறர் சத்தியம் என்பதை என்னவென்று சொல்ல முடியும் என்று பொருள். ஆனால் யாரும் சொல்ல முடியாது. அது சொல்வதற்குள் அடங்குவதல்ல.

லாவோட்சூ சொல்கிறார்: சொல்லிவிட முடியுமென்றால் அது சத்தியமே அல்ல. சொல்லியாகிவிட்டது என்றால் அது பொய்யாகிவிடுகிறது.

ஏன்? சத்தியத்தைத் தெரிந்து கொண்டவருக்குச் சத்தியம் ஒரு தகவல் அல்ல. அப்படி அது ஒரு தகவல் என்றால் அதைக் கேட்கத் தயாராக இருக்கும் யாரொருவருக்கும் அதைச் சொல்லித் தந்துவிட முடியும்.

## வெகுளித்தனத்தின் ஞானம்



சத்தியம் ஓர் அக அனுபவமாக அறியப் படுவது. நாவில் ஒரு சுவை அறிவதைப்போல. இனிப்பு என்பதை ஒருவன் சுவைத்துப் பார்க்காத வரை இனிப்பு என்பதைச் சொல்லிப் புரிய வைக்க முடியாது. காரிய சாத்தியமே இல்லை. நிறத்தைப் பார்க்காத ஒருவனுக்கு நிறம் என்பதை என்னவென்று சொல்லிப் புரிய வைக்க முடியுமா என்ன?

அனுபவித்து உணர மட்டுமே என்றும், அனுபவித்து மட்டுமே புரிந்து கொள்ள என்றுமே சில விஷயங்கள் இருக்கின்றன.

கடவுள் அந்த அனுபவங்களில் இறுதி அனுபவம். சொல்லி விட முடியாத அனுபவம். கொடுக்க முடியாத அனுபவம், சொல்லிப் புரிய வைக்க முடியாத அனுபவம். வார்த்தைகளில் அடக்க முடியாத அனுபவம். சில குறிப்புகளை வேண்டுமானால் தரலாம் என்றாலும் மென்மையான இதயத்துடன் ஏற்றுக் கொள்ள தயாராக இல்லாவிட்டால், நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள்.

மனதைக் கொண்டு வியாக்கியானம் செய்தால் அவ்வகை அனுபவங்களை இழந்து விட வேண்டியதுதான். வியாக்கியானத்தைக் கொண்டு மனம் எதைச் சாதிக்க முடியும் என்கிறீர்கள்? அது தன்னுடைய கடந்த காலத்தை மட்டுமே நினைவுக்குக் கொண்டு வர முடியும். அது தன் விரோதங்களை, தன் ஐயங்களை, தன் குழப்பங்களைத்தான் கொண்டு வர முடியும். இவைகளைச் சத்தியத்தின் மீதும், அதை அறிவதற்கான குறிப்புகளின் மீதும் மனம் திரித்துப் போட்டுவிடும். மனம் பார்ப்பதற்கோ உணர்வதற்கோ ஏதுவான நிலையில் இருப்பதில்லை.

சமயம் என்பதே பார்க்க முடிகிற ஒரு பகுதியை மனதில் உருவாக்குவதுதான். அது மோதல்களைத் தவிர்க்க முடிந்த பகுதி. பிளவுபடாது ஒன்றாகவே இருக்க முடியக்கூடிய



பகுதி. ஒருங்கிணைவும் தெளிவும் உணர்வும் நிறைந்து இருக்க முடியக் கூடிய பகுதி.

எண்ணங்கள் நிறைந்த மனம் உய்த்துணர முடியாது. எண்ணங்கள் குறுக்கிட்டுக் கொண்டே இருக்கின்றன. அடுக்கடுக்காக அல்லவா அவை படர்ந்திருக்கின்றன! அறிந்தவர் ஒருவர் சொல்லக் கேட்ட ஒன்று எப்படியோ உன் ஆழத்துக்கு போய்ச் சேருகிறதென்றாலும் அதற்குள் அது முழுக்கத் திரிந்து போய்விடுகிறது.

புத்தர் ஒவ்வொரு குறிப்பையும் மும்முறை சொல்வார். ஒருவர் ஏன் மும்முறை என்று கேட்டாராம்.

அதற்கு புத்தர், ''மூன்று தடவை சொல்வது கூடப் போதாது. முதல் முறை சொல்லும்போது வார்த்தைகளை மட்டுமே கேட்கிறாய். வார்த்தைகளில் ஒன்றுமே இல்லை. வெறுமையானவை. மருந்தில்லாத தோட்டாக்கள். முதல் தடவை கேட்கும்போது உள்ளடக்கம் கேட்பதில்லை.

''இரண்டாவது தடவை கேட்கும்போது உள்ளடக்கம் என்பது தெரிகிறது. வார்த்தைகளின் மணம் பரவுகிறது என்றாலும் மயங்கிப் போயிருப்பதால், அதன் தாக்கம் பிரமிக்க வைத்திருப்பதால் அதைப் புரிந்து கொள்ளும் நிலையில் நீ இருப்பதில்லை. கேட்கிறது ஆனால் புரிவதில்லை. அதனால்தான் நான் மூன்று தடவை சொல்கிறேன்.''

நானோ பல முறை திருப்பித் திருப்பிச் சொல்கிறேன். நீ தூங்கிக் கொண்டிருப்பதுதான் காரணம். பல தடவை அதை அடித்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. ஏதோ ஒரு கணம் ஏதோ ஒரு அதிர்ஷ்டமான கணத்தில் நீ தூக்கத்திலிருந்து விடுபட்டிருக்க நேரிடலாம். விழிப்புணர்வுக்கு வெகு அருகில் இருக்க நேரிடலாம். அப்போது ஏதாகிலும் உனக்குள் நுழையலாம். உன்னால் கேட்க முடியலாம். ஆமாம்,



விழிப்புணர்வுக்கு மிக நெருக்கத்தில் இருக்கலாம் என்றேன். முழுக்க விழித்தவனாக அன்றி, தூங்கிக் கொண்டும் இல்லாமல் ஓர் அரைகுறைப் பிரக்ஞையில் இருக்க நேரிடலாம் என்கிறேன். விழிப்புக்கும் தூக்கத்துக்கும் இடைப்பட்ட ஒரு நிலை.

ஒவ்வொரு காலையும் அந்த நிலையை நீ உணர்ந்திருப்பாய். முழுக்கத் தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளாமல், அதேசமயம் தூக்கத்தின் பிடியிலும் இல்லாமல் இருக்கும்போது விழிப்பு வந்துவிட்டது என்று சொல்ல முடியாதுதான். பறவைகளின் சலசலப்பு, பால்காரனின் குரல், பக்கத்து வீட்டுக்காரியோடு பேசிக் கொண்டிருக்கும் மனைவி, பள்ளிக்குத் தயாராகிக் கொண்டிருக்கும் குழந்தைகள் பேச்சு, போக்குவரத்து இரைச்சல், கடந்து கொண்டிருக்கும் ஒரு ரயில் என்று பல ஓசைகளையும் கேட்க முடிகிறது என்றாலும் தெளிவாக இல்லாமல் முழுக்க இல்லாமல் அந்த ஓசைகள் உன்னை அடைகின்றன. நீயோ தூக்கத்தில் கிடக்கிறாய். ஒரு கணம் கடக்கும் ரயிலின் இரைச்சல் கேட்கிறது. மறுகணம் தூக்கத்தில் ஆழ்ந்துவிடுகிறாய்.

தூக்கம் பற்றிய ஆராய்ச்சிகள் செய்கிறவர்கள் இப்படித் தொடர்ந்து தூக்கத்தில் நடக்கிறது என்கிறார்கள். எட்டு மணிநேரம் தூக்கம் என்றால் தொடர்ந்து ஒரே மாதிரியான தூக்கம் இருப்பதில்லை. ஆழ்ந்த தூக்கம் கொஞ்ச நேரம். மேம்போக்கான தூக்கம் கொஞ்ச நேரம் என்று பல நிலைகளில் தூங்குகிறாய்.

இரவு முழுக்க இப்படிப் பல நிலைகளில் தூங்குகிறாய். சில சமயம் தூக்கம் மிக ஆழ்ந்திருக்கும்போது கனவுகள் கூடத் தோன்றுவதில்லை. பதஞ்சலி இந்நிலையை சுஷுப்தி நிலை என்பார். இது கனவுகளற்ற உறக்கம். சில சமயங்களில் நீங்கள் கனவுகளில் மூழ்கி இருக்கிறீர்கள். சில சமயங்களில் விழிப்பின் விளிம்பிற்கு வந்து விடுகிறாய். ஏதோ ஓர்

## தம்மபதம் – II



அதிர்ச்சி அல்லது ஏதோ உடைந்து நொறுங்கும் உணர்வு இவை உன்னை திடுக்கிட்டு விழிக்கச் செய்கின்றன.

எல்லா புத்தர்களின் முயற்சியும் அதுதான்: விழிப்புக்கு வெகு அண்மையில் இருக்கும் கணத்திற்காக காத்திருத்தல். அந்த சமயம் கொஞ்சம் தள்ளிவிட்டால் போதும். உன் கண்கள் திறந்து கொள்ளும். உன்னால் பார்க்க முடியும்.

இறைவனைப் பார்க்க முடியும். விவரிக்க முடியாது. அனுபவிக்க முடியும். விளக்க முடியாது. இறைவனை விவரிப்பதெல்லாம் இறைவனை விட்டு விலகிப் போவதுதான். எனவே எத்தனைக்கெத்தனை பாதிரியார்கள், இறைநெறியாளர்கள், பேராசிரியர்கள் இருக்கிறார்களோ அத்தனைக்கத்தனை சமயம் இந்த உலகில் குறைந்து போகிறது.

எத்தனைக்கெத்தனை போப்புகள், சங்கராச்சாரியார்கள் இருக்கிறார்களோ அத்தனைக்கு அத்தனை சமயம் இல்லாமல் போகிறது. விளக்க முடியாத இறைவனை விளக்கிக் கொண்டே இருக்கிறார்களல்லவா - அதனால்தான்.

நிறைய விளக்கங்களை உன் மனதில் திணித்து வைத்திருக்கிறார்கள். அந்த விளக்கங்களுக்குள்ளேயே பல முரண்பாடுகள். எதையும் இதுவென்றோ இன்னதென்றோ தெரிந்து கொள்வதில் குழப்பம்தான் மிஞ்சுகிறது.

ஒரே குழப்பம்தான். மனிதன் இத்தகைய குழப்பத்தில் முன்னெப்போதும் இருந்ததில்லை. காரணம் முன்னெப் போதும் மனிதர்கள் இவ்வளவு நெருக்கமாக இருந்ததில்லை. உலகம் இன்று ஒரு கிராமமாகச் சுருங்கிப் போய்க் கிடக்கிறது.

முன்பெல்லாம் புத்தர் என்ன சொல்லியிருக்கிறார் என்பது மட்டுமே பௌத்தர்களுக்குத் தெரிந்திருந்தது.



முகம்மது சொல்லிப் போயிருந்தது மட்டுமே முகம்மதியர்களுக்குத் தெரிந்திருந்தது. கிறித்துவர்களுக்கு யேசுவை மட்டுமே தெரிந்திருந்தது. இப்போதோ மானுடம் முழுக்கச் சொல்லிப் போயிருப்பது அனைத்துக்கும் நாம் வாரிசாகிப் போயிருக்கிறோம். யேசுவைத் தெரியும். ஸாரதூஸ்ட்ராவைத் தெரியும். பதஞ்சலி, புத்தர், மகாவீரர், லாவோட் சூ என்று நூற்றுக்கணக்கானோர் சொல்லிப் போயிருக்கும் விளக்கங்கள் தெரியும்.

எல்லாமும் ஒன்றோடொன்று பிணைந்து போய்க் கிடக்கின்றன. இந்தக் குழப்ப வலையிலிருந்து உன்னை பிரித்து வெளியே கொண்டுவருவது முடியாத காரியமாகிப் போய்விட்டது. ஒரே வழி என்னவென்றால் இத்தனை இரைச்சலையும் ஒட்டு மொத்தமாக வீசி எறிந்துவிடுவது தான். பகுதி பகுதியாக இல்லாமல் ஒட்டு மொத்தமாகத்தான். அதுதான் என்னுடைய செய்தியே.

அப்படி அவற்றை விட்டொழித்து விடும்போது யேசுவை வீசி எறிந்து விடுவதில்லை. முகம்மதுவையோ புத்தரையோ விட்டு விலகிவிடுவதில்லை. மாறாக அவற்றை விடுவதன் மூலம் அவர்களுக்கு மிகவும் நெருக்கமாகவே செல்கிறாய். அப்படி விட்டொழித்து விடும்போது இந்தப் பூசாரிகள், சடங்குகள், சம்பிரதாயங்கள் இவற்றைத்தான் வீசிக் கழித்து விடுகிறாய். அவற்றோடு அவற்றின் பெயரால் நடக்கும் சுரண்டல்களில் இருந்தும் தப்பிக்கிறாய்.

இப்படி பைபிள், வேதங்கள், கீதை என்று எல்லாவற்றையும் மறந்துவிடும்போது உனக்கு ஒரு தெளிவு பிறக்கிறது. ஒரு பரிசுத்தம் கிடைக்கிறது.

ஆமாம், அப்படி ஓர் ஊற்று நீரின் பரிசுத்தம் கிடைக்கிறது. இதயத்தின் பளுவைத் துறந்து இலேசாகிவிடுகிறாய். அப்போது அந்த நிம்மதியான அமைதியில்தான் உன்னால் புரிந்து கொள்ளவே முடியும்.



புத்தர் சொல்கிறார்,

## நிம்மதியிழந்த மனது நெறியைத் தெரிந்து கொள்வது எப்படி?

என்னைச் சுற்றிச் சூழ்ந்திருக்கும் உங்களைப்போலப் பல ஆயிரவர் புத்தரைச் சூழ்ந்திருந்தனர். சத்தியத்தைத் தேடியவர்கள் பல்லாயிரக்கணக்கில் புத்தரிடம் போய் எல்லாவிதமான கேள்விகளையும் கேட்டார்கள்.

புத்தருக்கோ அவர்களது கேள்விகளின் மீதோ அவற்றுக்கு விடை அளிக்க வேண்டும் என்பதிலோ எந்த அக்கறையும் இருந்ததில்லை.

அவர்களுக்குச் சரியான நெறியைக் காட்ட வேண்டும் என்று அவருக்கு அக்கறை இருந்தது. அவரவர் கேள்விகளாலும் அவ்வவற்றுக்கான விடைகளாலும் சேர்த்து வைத்துக் கொண்டிருந்த .அறிவாலும் அலைக்கழிப்புக்கு ஆளாகிப் போயிருந்தார்கள். அவர்களுக்குத் தக்க நெறியைக் காட்டுவது என்பது ஏறக்குறையச் சாத்தியமே இல்லாத காரியமாகப் போய்விட்டது. அதனால்தான் நிம்மதியிழந்த மனது நெறியைத் தெரிந்து கொள்வது எப்படி என்ற சூத்திரம் சொல்லிப் போனார்.

எனவே மேலும் மேலும் பதில்களைத் தராமல், விளக்கங்கள் சொல்லாமல், அறிவு புகட்டாமல், அவர்கள் அறிந்து வைத்திருந்ததை அவர்களிடம் இருந்து நீக்க ஆரம்பித்தார். தயாராக இருந்த பதில்கள், காரண காரியங்கள் பாற்பட்ட கொள்கைகள், விருப்பு வெறுப்புகள் என்றிவற்றை நீக்க ஆரம்பித்தார்.

அதனாலேயே பாரதம் அவரை மன்னிக்கவே இல்லை. அவர் இறந்த உடனேயே அவர் விதைத்த மரங்கள் செடிகள் எல்லாவற்றையும் பிடுங்கி எறிந்தார்கள். ரோசாச் செடிகளை



எல்லாம் கொளுத்தி அழித்தார்கள். புத்தரை இந்த நாட்டை விட்டே அடித்துத் துரத்தினார்கள்.

இந்த நாட்டின் மிகச் சிறந்த மகனுக்கு இந்த நாட்டில் இடம் இல்லாமல் போய்விட்டது. அவருடைய போதனைகள் வேற்று நாடுகளில் அடைக்கலம் புகுந்தன.

இது தற்செயலாக நடந்ததல்ல. யேசுவை யூதர்கள் நிந்தித்தார்கள். சிலுவையில் அறைந்து கொன்றார்கள். அவர் இவ்வுலகத்தில் வந்திருக்க வந்த யூதர்களிலேயே மிகச் சிறந்தவர். யூதர்களின் உணர்வுகளிலிருந்து முகிழ்த்த மிகப் பெரிய மலர். யூத உணர்வுகளின் எவரெஸ்ட்.

பிறகேன் யூதர்கள் அவரை மறுத்து ஒதுக்கினார்கள்? அவர்கள் மகிழ்ந்து கொண்டாடியிருக்க வேண்டும். ஆனால் முடியவில்லை. ஏனென்கிறாயா? யேசுவுக்கு முன்னால் அவர்கள் மிகச் சாதாரணமானவர்களாகி விட்டார்கள். அதுதான் அவருடைய குற்றமாகிப் போய்விட்டது. அதற்காக அவரைத் தண்டித்தாக வேண்டி இருந்தது. அவ்வளவு உயர்ந்தவராக, அவ்வளவு சிறப்பானவராக, அவ்வளவு கருணை உடையவராக அவ்வளவு அன்பைக் கொண்டு வந்து அளித்ததற்காக அவரைத் தண்டிக்க வேண்டி இருந்தது. அவர் அவர்களோடு இருந்ததற்காகவே தண்டிக்க வேண்டியதாகி விட்டது. ஏனென்றால் அவரோடு ஒப்பிட மற்றவர் அசிங்கமாகத் தெரிந்தார்களே! அவரை அகற்ற வேண்டி வந்துவிட்டது. அப்போதுதான் சாதாரண மனிதர்கள் சௌகரியமாக உணர முடியும்!

யேசுவை யூதர்கள் கொல்லவில்லை. சாமானிய மானுட உணர்வே அவரைக் கொன்றது. யேசுவைப் பொறுத்த அளவில் அது யூதர்களின் சாமானியமாகிப் போனது. அதுதானே நடந்தது புத்தருக்கும்? இந்துக்கள் அவரை மன்னிக்கத் தயாராக இல்லை. இத்தனைக்கும் அவர் மிகச்

த (II)-2



சிறந்த இந்து. இந்து மதம் எந்த அளவுக்குப் பரிசுத்தமாக இருக்க முடியுமோ அந்த அளவுக்குப் பரிசுத்தமானவர். இந்து மதத்தின் அடிப்படைச் சாரமே அவர். உபநிஷத்துகள் சொன்னதை அப்பட்டமான நிஜமாக்கியவர். இந்த நாட்டின் ஆழ்ந்த ஆன்மிக தாகத்தின் வெளிப்பாடு அவர். ஆனால் அவரைத்தான் இங்கே இருந்து கெல்லி எறிந்தார்கள்.

பௌத்தம் இந்தியாவில் இருந்து மறைந்தே போய் விட்டது. சின்னஞ்சிறு அடையாளம் கூட வைக்காமல் மறைந்து போய்விட்டது. சுத்தமாக அடித்துப் போனதாகி விட்டது.

திபெத், சீனா, கொரியா, ஜப்பான், தாய்லாந்து, பர்மா, இலங்கை என்று பல நாடுகளிலும் மிக உயர்ந்தவராக மதிக்கப்பட்டார். ஆசியா முழுக்க நேசித்த மனிதராக ஆகும் அளவுக்கு அவரது போதனைகள் அவ்வளவு இனிமையாகவும் ஆழ்ந்தும் இருந்தன.

ஆனால் இந்தியா அவரை மறந்தே போய்விட்டது. இந்தியாவின் சாமானிய மனம்தான் அவரை மறந்தது. அந்த இந்தியரோடு இந்தச் சாமானிய இந்திய மனதுக்கு எந்தச் சங்காத்தமும் தேவைப்படவில்லை. சாதாரணமானவர்கள் மேதைகளை இருக்க விடமாட்டார்கள். சாமானியன் இன்னொரு சாமானியனோடு இருக்கும்போது சகஜமாக இருப்பான். முட்டாள்தனமான மக்கள் முட்டாள்தனமான தலைவனோடு மகிழ்ந்திருப்பார்கள். எந்த அளவுக்கு தலைவன் முட்டாளோ அந்த அளவுக்கு முட்டாள்தனமான மக்கள் மகிழ்ச்சியோடு இருப்பார்கள். ஏனென்றால் அவர்களைப்போலவே இருக்கிறானல்லவா?

கதை ஒன்று கேட்டிருக்கிறேன்.

## வெகுளித்தனத்தின் ஞானம்



ஒரு பைத்தியக்கார விடுதிக்குப் புதிதாக ஒரு சூப்பிரெண்டெண்டை அனுப்பி வைத்தார்கள். முன்பிருந்தவருக்கு வயதாகிவிட்டது. ஓய்வு பெறு கிறார். பிரிவுபசார விழா, பாராட்டு விழா, விருந்து, நன்றி நவிலல் - எல்லாமும்தான் இருந்தது. புதிதாக வருபவரையும் வரவேற்க வேண்டுமல்லவா? எனவே எல்லாப் பைத்தியங்களும் ஒன்றாகக் கூடிவிட்டார்கள்.

ஓய்வு பெற்றுப் போகிறவருக்கு ஒரே குழப்பம். அந்தப் பைத்தியங்கள் அவ்வளவு மகிழ்ச்சியாக இருந்து அவர் பார்த்ததே இல்லை. அடக்க முடியாத ஆச்சரியத்தோடு அவர்கள் அவ்வளவு மகிழ்ச்சியாக இருக்க என்ன காரணம் என்பதைக் கேட்டே விட்டார். உடனே வேறு போக வேண்டியிருந்ததால், அதனால் அந்த விழாவிலேயே கேட்டுவிட்டார். கேட்காமல் போய்விட்டால் விடை தெரியாமலேயே போய்விடும் அல்லவா?

''இது என்ன இவ்வளவு மகிழ்ச்சியாக இருக் கிறீர்களே?''

''எல்லாம் புதிய சூப்பிரெண்டெண்டால்தான். எங்களை மாதிரியே இருக்கிறார் பாருங்க. நீங்கள் எங்களுக்கு அயலானா இருந்தீங்க. புத்தி பேதலிக்காம இருந்தீங்க. அவரைப் பார்த்தாலே பைத்தியம்னு தெரியுதே!'' என்றார்கள் அந்தப் பைத்தியங்கள்.

அதுதான் நிஜமும் கூட. அந்தப் புதிய சூப்பிரெண்டெண்ட் ஏறக்குறைய பைத்தியம் பிடித்தவராகத் தான் இருந்தார். ஆனால் அந்தப் பைத்தியங்களுக்கு அவரைப் பார்த்ததில் மகிழ்ச்சியே. அவர்கள் பைத்தியக்காரர்கள் என்ற உணர்வை அவர்களுக்குத் தரமாட்டார் அல்லவா?

இதுதான் எல்லாவிடத்து நிலைமையும். இந்த உலகம் ஒரு பைத்தியக்கார விடுதி. புத்தி சுவாதீனமுள்ள ஒருவர்



வந்துவிட்டால் போதும் நாம் விஷமம் செய்ய ஆரம்பித்து விடுகிறோம். ஆயிரக்கணக்கானவர்கள் புத்தரிடம் வந்தார்கள். எல்லோரும் கடவுள் எங்கே? கடவுள் என்றால் என்ன? என்று கேட்டார்கள். குறிப்பாக பிராமணர்களும், பண்டிதர்களும், அறிஞர்களும் இந்தக் கேள்வியையே கேட்டார்கள். விவரம் தெரிந்தவர்கள், சாத்திரம் படித்தவர்கள், அவர்கள்தான் புத்தரிடம் வந்து ''கடவுளை நம்புகிறீர்களா? உங்களுடைய நம்பிக்கையை விளங்கச் சொல்லுங்கள். உங்களுடைய கொள்கையைச் சொல்லித் தாருங்கள்'' என்று கேட்டார்கள்.

புத்தரோ திரும்பத் திரும்ப, ''கலங்கிய மனம் எப்படி நெறியைத் தெரிந்து கொள்ளும்?'' என்று கேட்டுக் கொண்டே இருந்திருக்கிறார். அவர், ''கடவுளைப் பற்றி தயவு செய்து எதுவும் கேட்காதீர்கள். குருடன் வெளிச்சத்தைப் பற்றிக் கேட்பதைப்போலத்தான் நீங்கள் கடவுளைப் பற்றிக் கேட்பது.

நான் ஒரு மருத்துவன். உங்களுடைய கண்களுக்கு மருந்திட முடியும். உங்களுடைய பார்வையை மீட்டுத் தர முடியும். பிறகு நீங்களே பார்த்துக் கொள்ள வேண்டியதுதான். நீங்களாக வெளிச்சத்தைப் பார்த்து அது என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டும். நான் பார்க்கும் வெளிச்சம் நீங்கள் பார்க்கும் வெளிச்சமாக ஆக முடியாது. நான் வெளிச்சத்தைப் பார்க்கலாம். பரந்த வெளிச்சத்தை விளக்கிச் சொல்லலாம் என்றாலும் வெளிச்சம் என்பதைப் பற்றி எந்த அறிவையும் அது தரமுடியாது'' என்று சொல்வது வழக்கம்.

பார்க்கப் போனால் ஒரு குருடனுக்கு வெளிச்சம் என்பதை உணர வைக்கச் சாத்தியமான எந்த வழியும் இல்லை. வெளிச்சம் ஓர் அனுபவம். அது இருப்பது. அதை விவரிக்க முடியாது. கடவுள் வெளிச்சத்துக்கெல்லாம் வெளிச்சமானவர். முடிந்த வெளிச்சம். எல்லா வெளிச்சத்



துக்கும் பின்னால் இருக்கும் வெளிச்சம். எல்லா வெளிச்சத்துக்கும் ஆதியான வெளிச்சம். நீ ஒரு குருடனாக இருக்கும் வரை கடவுளை நீ விளங்கிக் கொள்ள எப்படி எடுத்துரைப்பது? அதனால்தான் புத்தர் கடவுளைப் பற்றிப் பேசவே இல்லை. பண்டிதர்களும் பிராம்மணர்களும் திரும்பிப் போகும்போது வதந்திகளைப் பரப்பிக் கொண்டு போனார்கள்.

''இவருக்குப் பதில் தெரியவில்லை என்பதால் பதில் சொல்வதில்லை. அப்படி இல்லையென்றால் ஆமாம் இல்லை என்று பதில் சொல்லியிருக்கலாமே. மிகச் சாதாரணமான கேள்விதானே கேட்டோம்! கடவுள் நம்பிக்கை இருக்கிறதா? ஆமாம் இல்லை என்று சொல்லியிருக்கலாமே. பதில் இருந்தால்தானே சொல்வதற்கு? சுற்றி வளைத்துப் பேசுகிறார். கடவுளைப் பற்றிக் கேட்டால் கதை சொல்கிறார். அதை எப்படிச் சொல்லி விளக்குவது என்கிறார். நிஜம் என்னவென்றால் இவருக்குத் தெரியாது என்பதுதான். காவி கட்டிய நாத்திகர் என்பதுதான் நிஜம். மக்களை ஏமாற்றுகிறார். மக்களைக் கெடுக்கிறார்.''

புத்தரைப் பற்றித் தந்திரமான கதைகள் கட்டி வைத்திருக்கிறார்கள் இந்துக்கள்.

கடவுள் இந்த உலகைப் படைத்த அதே நேரத்தில் சொர்க்கத்தையும் நரகத்தையும் படைத்தாராம். நரகம் பாவிகளைத் தண்டிக்க, சொர்க்கம் நல்லவர்களுக்குச் சன்மானம். ஆயிரக்கணக்கான வருடங்களாக யாரும் நரகத்துக்கே வந்து சேரவில்லையாம். யாரும் எந்தப் பாவமும் பண்ணவில்லையாம்.

காத்திருந்து காத்திருந்து களைத்துப் போய்விட்டதாம் நரகத்து அதிதேவதை. வேலையே இல்லையே. யாரும் வருவதாகத் தெரியவில்லையே. கோபத்தோடு கடவுளிடம்



போனதாம். "எதற்காக இந்த நரகத்தைப் படைத்து வைத்திருக்கிறீர்கள்? எதற்காக என்கிறேன்? எதற்கு என்னை அதற்கு அதிகாரியாக நியமித்து வைத்திருக்கிறீர்கள்? நானும் என்னோடிருக்கும் எல்லோரும் காத்திருந்து களைத்து விட்டோம். யாரும் வருவதாகத் தெரியவில்லை. கடை விரித்தோம் கொள்வாரில்லை என்பதுதான் எங்கள் பிழைப்பாகி விட்டது. கதவுகளைத் திறந்து வைத்திருக்கிறோம். யாரும் வருவதாகத் தெரியவே இல்லை. இது எதற்கு என்கிறேன். எங்களுக்கு வேறு ஏதாவது வேலையிருந்தால் தாருங்களேன்."

கடவுள் சொன்னாராம்,

"அடாடா! முன்னாடியே வந்திருக்கக் கூடாதா? மறந்தே போனேன். சரிதான். ஏற்பாடு செய்துடறேன். சீக்கிரத்திலேயே உலகத்துலே போய் கௌதம புத்தராகப் பிறப்பெடுக்கிறேன். மக்களுடைய மனதைக் கெடுத்துடறேன். அப்புறமென்ன? உங்களுக்கு ஏகப்பட்ட வேலை வந்து சேர்ந்துவிடும். ஒரே நெரிசலாகிப் போகும் நரகத்தில். நிம்மதியாகப் போய்க் காத்திருங்கள்."

கதை இப்படியாகப் போகிறது. அப்படியே கடவுள் கௌதமராக வந்தார். மக்கள் மனதைக் கெடுத்தார். நம்பிக்கையை எல்லாம் அழித்தார். சம்பிரதாயங்களைத் தோண்டி எறிந்தார். நம்பிக்கைகளை ஆட்டம் கொள்ள வைத்தார். மனதில் சந்தேகங்களைக் கிளப்பினார்.

அதிலிருந்து நரகத்தில் ஒரே ஜனசந்தடிதான். எந்த அளவுக்கு என்கிறாயா? நரகத்து அதிதேவதை கடவுளிடம் ஓடிப் போய், "போதும், போதும், தயவு செய்து இதை நிறுத்தி வையுங்களேன். ஓடியாடிக் களைத்துப் போனோம். இருபத்து நான்கு மணி நேரம் வேலை செய்தும் முடியவில்லை. பகலிலும் கதவை மூட முடியவில்லை.



இரவிலும் அப்படியே. சும்மா வந்து கொண்டே இருக்கிறார்கள்'' என்றதாம்.

தந்திரமான கதைதான். என்ன ஒரு மெல்லிய கேலி கதையில் இருக்கிறது பார்! ஒரு வகையில் புத்தரைக் கடவுளின் அவதாரம் என்று சொல்கிறார்கள். இந்த இந்துக்கள் இருக்கிறார்களே அவர்கள் யூதர்களை விடத் தந்திரசாலிகள். யேசு கடவுளின் மகன் அல்ல என்று சொல்லி அவர்கள் நிராகரித்தார்கள். இந்துக்கள் இன்னும் நாகரிகமாக நடந்து கொண்டார்கள். கொஞ்சம் கண்ணியமாக, கொஞ்சம் கனிவாக... பாரம்பரியமாகவே நாகரிகமானவர்கள் அல்லவா!

தந்திரத்தைப் பாருங்கள்: கடவுளின் பத்தாவது அவதாரமாம் புத்தர். ஆனால் அதே சமயம் கடவுள் இந்த அவதாரம் மக்களின் மனத்தைக் கெடுப்பதற்காக எடுக்கப்பட்டதாம். ஆகவே புத்தர் கடவுள்தான் என்றாலும் கூட, அவர் சொல்வதைக் கேட்கக் கூடாதாம்! இந்தச் சூழ்ச்சியை, சதித்திட்டத்தைப் பார்த்தீர்களா? அவர்கள் புத்தரின் கடவுள்தன்மையை மறுக்கவில்லை – உண்மையில் புத்தரின் கடவுள்தன்மையை மறுப்பது முடியாத காரியம்.

எச்.ஜி.வெல்ஸ் கௌதம புத்தரை ஒரு புரியாப் புதிர் என்பார். கடவுளை மறுத்தவர் என்றாலும் தெய்விகமானவர். கடவுளைப் பற்றி அவர் பேசவே இல்லை. கடவுளை நம்புங்கள் என்று சொல்லவே இல்லை. கடவுளை அவருடைய போதனைகளில் காணவே முடிவதில்லை. கடவுள் அவருக்கு அத்தியாவசியமான கோட்பாடாக இருக்கவே இல்லை. கடவுள் அவருடைய கொள்கைக்குத் தேவைப்படவே இல்லை. கடவுளே இல்லை எங்கும் என்றாலும் தெய்விகமானவராக இருந்திருக்கிறார். வேறு யாரும் அவரளவுக்குத் தெய்விகமானவராக இருந்ததாகத் தெரியவில்லை. வேறு எவரும் அவரளவுக்கு



நேர்த்தியானவராக இருந்ததாகத் தெரியவில்லை. ஒரு தாமரையாக... உணர்வுகளின் பரிசுத்த வடிவாக... காலை நேரத்தில் ஒளிரும் பனித்துளியைப்போலத் தூய்மையாக....

அவர்களால் அதை மறுக்க முடியவில்லை. அவரைக் கடவுளாக ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. ஆனால் அவருடைய செயல்முறையை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அப்படி ஏற்றுக் கொண்டால் ஆண்டாண்டுக் காலமாக ஸ்தாபித்து வைத்திருந்ததெல்லாம் நொறுங்கிப் போகும். ஒட்டு மொத்தமாக நொறுங்கி விழுந்துவிடும்.

எல்லா நம்பிக்கைகளையும் களைந்து எறிந்து விடுகிறார். அதுதான் அவருடைய செய்தியே. அவருடைய கோட்பாட்டின் அடிப்படைச் சாரமே அதுதான். நம்பிக்கை என்று எதையாவது பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறவன் எதையும் தெரிந்து கொள்ள முடியாது.

அதற்காக நாத்திகனாகிவிட வேண்டும் என்று சொல்கிறார் என்று பொருள் அல்ல. நாத்திகமும் ஒரு நம்பிக்கைதானே! எனவே ஆத்திகனாக இருக் க வேண்டாம். நாத்திகனாகவும் இருக்க வேண்டாம் என்கிறார்.

காணாப் பொருளை அறிய முடியாது என்கிறவர் புத்தர். கடவுளை மறுப்பவரோ கடவுளை நம்புகிறவரோ அல்ல. அவர் ஒரு தேடுதல் முனைப்புள்ளவர். எந்த ஆயத்தக் கொள்கையும் கையில் எடுத்துக் கொண்டு போக வேண்டியதில்லை என்கிறவர். அப்படி எந்த எண்ணத்தையும் கையோடு எடுத்துக் கொண்டு தேடுதலில் இறங்குகிறவர் அந்த எண்ணத்தை எதார்த்தத்தின் மேலேற்றிப் பார்க்க ஆரம்பித்து விடுகிறார்.

ஆழ்மனதில் ஏதாவது எண்ணம் வேர் கொண்டு விடுமானால் அதற்கு எதார்த்தத்தில் ஒரு வடிவம்



கொடுக்கத்தான் முனைப்பு இருக்கும். அப்படித் தந்து பெற்றுக் கொள்ளும் எந்த வடிவமும் ஒரு மருட்சியே. அவரவர் கொளுத்திப் பார்க்கும் கனவுதான்.

எதுவுமற்றவராகப் போய்ப் பார்க்க வேண்டும். சத்தியத்தைக் காண வேண்டுமானால் உள்ளே ஏதுமற்றவராகப் போக வேண்டும். எந்த எண்ணத்தையும் தூக்கிக் கொண்டு திரியக் கூடாது. எந்தக் கொள்கையையும் எடுத்துக் கொண்டு போகக் கூடாது. நிர்வாணமாக, காலியாகிப் போனவராகப் போக வேண்டும். எதையும் தெரிந்து கொண்டிராத நிலையில் இருந்து இயங்க வேண்டும். எதையும் தெரிந்து கொண்டிராத நிலையே எதையும் ஆச்சரியத்தோடு கவனித்துப் பெற்றுக் கொள்ளும் நிலை. யேசு ஒன்று சொல்லிப் போயிருக்கிறார். பைபிளில் அதைக் குறித்து வைக்கவில்லை. ஆனால் ஸுஃபிக்கள் அதைப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். யேசுவின் பிரமாதமான வார்த்தைகள் பலவற்றையும் ஸுஃபிக்கள் சிதையாமல் காத்து வைத்திருக்கிறார்கள். அவ்வளவு பிரமாதமான வார்த்தைகள் ஏன் பைபிளில் குறித்து வைக்கவில்லை என்று வியப்புத்தான் தோன்றும். ஆனால் ஆழ்ந்து பார்த்தால் ஏன் என்பது புரிந்துவிடும்.

மலைத்துப் போகிறவனே திருவருள் பெற்றவன். ஏனென்றால் அவனே கடவுளின் ராச்சியத்தில் இருக்கிறான். இதுதான் யேசுவின் அந்தக் கூற்று.

மலைத்துப் போகிறவனே திருவருள் பெற்றவன் - பைபிளில் இந்தக் குறிப்பு இல்லை. ஏன்? ஏனென்றால் பைபிள் ஒரு சமயத்தைத் தோற்றுவிக்க எழுந்தது. ஒரு வர்க்கத்தைத் தோற்றுவிக்க வந்த புத்தகம். ஒரு குறிப்பிட்ட கொள்கையைப் பரப்ப வந்த புத்தகம். மலைத்து நிற்பவன் எல்லாக் கொள்கைகளையும் கழித்துப் போட்டுவிட்டவன்.



மலைத்துப் போகிறவனே திருவருள் பெற்றவன். ஏனென்றால் ஆச்சரியத்தில் வாய் பிளப்பவனே குழந்தையாக இருக்க முடியும். குழந்தையாக, கள்ளம் தவிர்ந்தவனாக இருக்க முடியும். அந்தக் கள்ளம் தவிர்ந்த நிலையில்தான் எது இருக்கிறதோ அதைத் தெரிந்து கொள்ள முடியும்.

## கலங்கிய மனம் எப்படி நெறியைத் தெரிந்து கொள்ளும்?

எனவே எப்போது யாரொருவர் பெரிய பெரிய கேள்விகளோடு தன்னிடம் வந்தாலும் - அதுதான் வாழ்க்கை, வாழ்க்கையின் விசித்திரங்கள் என்று இவை பற்றிக் கேள்விகளோடு – புத்தர், ''பொறு. தியானி. முதலில் உன் கலங்கிய மனம் தெளிவடையட்டும். உன் மனதில் வீசும் புயல் கடந்து போகட்டும். அங்கே அமைதி இருக்க வரட்டும். அந்த அமைதியே காண்பதற்கு உனக்குக் கண்களைத் தர முடியும். எப்படி அமைதியாக இருப்பது என்பதை உனக்குக் காண்பிக்கிறேன். பிறகு உனக்கு யாரும் எதையும் சொல்லித் தர வேண்டியதில்லை. அமைதியடைந்துவிட்டால் நீயாக உனக்கான வழியைக் காண முடியும். உன் இலக்கை அடைய முடியும்.'' என்று சொல்வார்.

நமது மனங்கள் வாஸ்தவத்தில் கலங்கிதான் இருக்கின்றன. ஆயிரத்தொரு சிரமங்கள் அங்கே. முதலாவதாக யாரிடமும் எண்ணம், உணர்வு, செயல் என்று இவற்றுக்கிடையே ஓர் ஒருங்கிணைவு இருப்பதில்லை. ஒருவருக்கொருவர் அளவில்தான் வித்தியாசம். அடிப்படை ஒன்றுதான்.

ஒவ்வொருவரும் கூறுபட்ட மனத்தராகத்தான் இருக்கிறார்கள். அப்படி இருப்பதுதானே அரசியல்வாதிகளுக்கும் மதவாதிகளுக்கும் சௌகரியம். ஏய்த்துப் பிழைப்பதற்குத்



தான். மனித மனதைக் கூறு போட்டு வைத்திரு. ஒருங்கிணைப்பு இல்லாது வைத்திரு. அது போதும் அவனை அடிமையாக வைத்திருப்பதற்கு.

முரண்பட்ட பகுதிகளைக் கொண்ட வீடு பலவீன மாகத்தானே இருக்கும். அதனால்தான் இந்த உடலை எதிர்த்துப் போராடு என்று சொல்லித் தந்திருக்கிறார்கள். அதுதான் உன்னைக் கூறு போட்டு வைப்பதற்கான அடிப்படைத் தந்திரம். ''உடலை எதிர்த்து விடு. உடலே உனக்கு எதிரி. உடல்தான் உன்னை நரகத்துக்கு இழுத்துக் கொண்டு போவது. வாளெடுத்துப் போராடு. நாளும் இரவும் விடாது போராடு. ஒவ்வொரு வாழ்விலும் விடாது போராடு. அப்படிப் போராடினால்தான் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் நீ வெல்ல முடியும். உடலை வெற்றி கொள்ளாத வரை நீ கடவுளைச் சென்று சேர முடியாது.''

பல நூற்றாண்டுகளாகவே இந்த முட்டாள்தனமான பேச்சைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந் திருக்கிறார்கள். விளைவு? ஒவ்வொருவரும் தத்தமது உடலுக்கு எதிரியாகிப் போனார்கள். உடலை எதிர்த்துப் போராடப் போராட நிம்மதிக் குலைவுதான். நீயும் உன் உடலும் ஒரே சக்தியாக இருக்கும்போது அவற்றுக்கிடையே போராட்டம் என்றால் பிறகென்ன நடக்கும்?

கண்ணுக்குத் தெரியும் ஆன்மா உடல். கண்ணுக்குத் தெரியாத உடல் ஆன்மா. அவை எங்கும் எப்போதும் பிரிந்திருந்ததில்லை. ஒன்றின் இரண்டு பாகமாக இருக்கும் அவை பிரிந்திருப்பதேது? உடலை ஏற்றுக் கொள்ள வேண்டும். உடலை நேசிக்க வேண்டும். உடலை மதிக்க வேண்டும். உடலுக்கு நன்றி சொல்ல வேண்டும். அப்போதுதான் ஒரு விதமான ஒருங்கிணைவு இருக்க வரும். ஒரு ஸ்படிக நிலை வந்து சேரும். இல்லையேல்



கலக்கம்தான். உடல் உன்னை விட்டு அவ்வளவு சுலபத்தில் நீங்கிப் போகாது என்பதைத் தெரிந்து கொள். பல நூறு பிறவிகளில் அது உன்னைத் தொடர்ந்து கொண்டேதான் இருக்கும். உடலை நீ வெல்ல முடியாது.

உடலை வெல்ல முடியாது என்று நான் சொல்லவில்லை. கவனி, உடலை நீ தோற்கடிக்க முடியாது என்று சொல்கிறேன். வித்தியாசம் நிறைய இருக்கிறது. கவனி! உடலை உதாசீனம் செய்வதாலோ விரோதிப்பதாலோ அதை நீ தோற்கடிக்க முடியாது என்கிறேன். நட்புணர்வோடு, அன்போடு, மரியாதையோடு, நம்பிக்கையோடு உடலை நெருங்கும்போது நீ அதை வென்றெடுக்க முடியும் என்கிறேன் இதுதான் என் அணுகுமுறை. உடல் ஒரு கோயில். நீயே அதன் தேவன். உடல் உனக்கு உன் கோயில்.மழை, காற்று, வெய்யில் என்றிவற்றிலிருந்து உன்னைக் காப்பது உடல். உடல் உனக்குத் தாசன்.

பிறகேன் அதனோடு போராட்டம் என்கிறேன். டிரைவர் காரோடு சண்டை போடலாமா? எவ்வளவு முட்டாள் தனமாகிப் போகும்! அப்படியே சண்டை போட்டால் என்ன ஆகும், காரோடு தன்னையும் சேர்த்து அழித்துக் கொள்வான். உன்னைத் தூர தூரமான இடத்துக்கெல்லாம் அழைத்துப் போக முடியும் கார் ஓர் அருமையான வண்டிதானே!

உடல் ஒரு மிகச் சிக்கலான அமைப்புள்ளது. என்றாலும் அருமையானது. அந்த அருமையைச் சிலாகிக்கத் தெரிந்தவர் பாக்கியவான்கள்.

அருமையானதைக் கண்டு மலைத்துப் போகப் பிரமாதமான ஆரம்பம் இந்த உடல்தான். அதுதானே உனக்கு மிக அண்மையானது! இயற்கை உனக்கு வெகு அண்மையில் வருவது உன் உடலாகத்தான். இறைவன் உனக்கு மிக



அண்மையாக வந்து சேர்வது உன் உடல் மூலமாகத்தான்.

உடலில் சமுத்திரத்தின் நீர் இருக்கிறது. நட்சத்திரங்கள், சூரியனின் அக்னி இருக்கிறது. உன் உடலே காற்று. உன் உடல் மண்ணால் ஆனது. இப்படி உன் உடல் இயற்கையை எல்லாம் தன்னுள் கொண்டு பஞ்ச பூத வடிவாக இருக்கிறது.

அடாடா! அத்தனையும் அதில் நிலைமாற்றம் பெற்றிருப்பதுதான் என்ன விந்தை! மண்ணைப் பார். பின் உன் உடலைப் பார். அதுதான் இது என்று தெரிந்து கொள்ள முடியாத அளவுக்கான நிலைமாற்றம். இதை எப்போதாவது நீ உணர்ந்து பார்த்து மலைத்தது உண்டா? தூசே தெய்விகமாகிப் போனது. இதைவிட என்ன அதிசயம் வேண்டும் என்கிறாய்? இதை விட எந்த அதிசயத்துக்காகக் காத்திருக்கப் போகிறாய்?

இந்த அதிசயம் தினமும் அரங்கேறக் காண்கிறாய். சேற்றிலிருந்து செந்தாமரை. தூசி தும்பிலிருந்து அழகான உடல். அவ்வளவு சிக்கலான அமைப்பு என்றாலும் எவ்வளவு இயல்பான இயக்கம்! எந்தச் சத்தமும் போடுவதில்லை. என்றாலும் சிக்கலான அமைப்புதான்.

அறிவியல் பல சிக்கலான அமைப்புள்ள இயந்திரங்களைச் செய்து வைத்திருக்கிறது. ஆனால் எதையும் உடலோடு ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. உடலின் அக அமைப்போடு ஒப்பிடும்போது மிகச் சிக்கலான கம்ப்யூட்டர் கூட வெறும் விளையாட்டுப் பொம்மைதான்.

இத்தகைய உடலை மறுத்துப் போராடச் சொல்கிறார்களே பாவிகள்! அப்படிப் போராடினால் உன்னையே பிளந்து போட்டுக் கொள்கிறாய். பிறகென்ன?



நிம்மதியாயிருக்க முடியாது. உனக்குள்ளே முடிவில்லாத உள்நாட்டுப் போர்தான்.

உன்னோடு நீயே போராடுவதென்பது அநியாயத்துக்கு முட்டாள்தனம் என்பேன். அப்படிப் போராடும்போது உன் வாழ்க்கையில் என்ன புத்திசாலித்தனம் இருக்க முடியும்? அப்பட்டமான முட்டாள்தனம் தான் இருக்க வரும். அப்படி போராடி என்ன சாதிக்க வேண்டுமாம்? தலைகீழ் மாற்றம் வேண்டும் என்கிறாய். பொறாமை, கோபம், பேராசை எல்லாமும் இல்லாதவனாக இருக்க வேண்டும் என்கிறாய். அது எப்படிச் சாத்தியம்?

ஆரம்பமே இந்த தவறான புரிதல் என்றால் உன்னால் எப்படி நிலைமாற்றத்துக்கான களம் அமைத்துக் கொள்ள முடியும். கோபம் கருணையாகும் களம். வெறுப்பு அன்பாகும் களம். பேராசை பங்கிட்டுக் கொள்ளும் மனோபாவமாகும் களம். காமம் சமாதியாகும் களம். அப்படிப்பட்ட நிலைமாற்றம் நிம்மதியற்ற மனதில் நடைபெற வேண்டும் என்று எப்படி எதிர்பார்க்கலாம்?

அடிப்படைத் தேவையே அந்தப் பிளவை வென்றெடுப்பதுதான். பிளவுகளற்ற முழுமையாக உன்னை உணர்வதுதான். பிறகென்ன, எதுவும் சாத்தியமாகும். அசாத்தியமானதெல்லாம் சாத்தியமாகும்.

## கலங்கிய மனம் எப்படி நெறியைத் தெரிந்து கொள்ளும்?

நெறி மிக எளியதும் நேரிடையானதும் ஆகும். ஒரு குழந்தை கூடப் புரிந்து கொள்ள முடியும். இரண்டும் இரண்டும் நான்கு என்பதை விட எளிமையானது. ஒரு பறவையின் பாட்டைப்போல எளிமையானது. ஒரு ரோசாப் பூவைப்போல எளியதும் இனியதும் அழகானதும் என்றாலும் மிகக் கம்பீரமானது.



கலங்காத மனமே அதைத் தெரிந்து கொள்ள முடியும். சலனமற்ற மனதுதான் அதைப் பார்க்க முடியும். இல்லையேல் கோபமே வாழ்க்கையாகி விடும். ஆசையே வாழ்வாகிவிடும். பொறாமையே இயல்பாகிவிடும். என்னுடையது என்பதே இலக்காகிவிடும். வெறுப்பின் களத்தில் வாழ்வாய்.

பாசாங்குகள் வேண்டுமானால் சாத்தியமாகிவிடும். மகானாக வேஷம் கட்டிக் கொண்டு மகா பாவியாக இருப்பாய். பாவத்திலேயே மிகப் பெரிய பாவம் உன்னைக் கூறு போட்டு வைத்திருப்பதுதான். பிறருக்குச் செய்யும் எதிலும் உன் மிகப் பெரும் பாவம் இருப்பதில்லை. உனக்கு நீயே செய்து கொள்ளும் அநியாயத்திலேயே உன் மிகப் பெரும் பாவம் அடங்கிக் கிடக்கிறது. உனக்கும் உன் உடலுக்குமிடையே ஒரு பிளவை உண்டாக்கிக் கொள்வது தற்கொலை செய்து கொள்வதைப்போல. உடலை மறுக்கும் வரையிலும் நீ பசப்புக்காரனாகத்தான் இருக்க முடியும். உன் வாழ்வும் ஒரு பாசாங்காகத்தான் இருக்கும்.

ஒரு ரயில் பெட்டி இரண்டு பெண் பயணிகள். பிரமாதமான உடையில் நாகரிகத்தின் உருவங்களாக. உடைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு மூலையில் ஒருவன் தூங்கிக் கொண்டிருப்பதாக நடிக்கிறான். ஒருத்தி உடைகள் அநியாயத்துக்கு விலை அதிகமாக இருக்கின்றன என்கிறாள். இன்னொருத்தி அதை எப்படிச் சமாளிப்பது என்று சொல்கிறாள். கடைக்குப் போகும்போது தன் பாய்ஃபிரண்டைக் கூட அழைத்துப் போனால் போதுமே என்கிறாள். ''சின்ன ஒரு சமாச்சாரத்துக்கு அவன் மாதம் ஐந்நூறு டாலர் தருவானே!'' என்கிறாள். ''எந்தப் புருஷனாலும் முடியாதது...'' என்றும் சேர்த்துச் சொல்கிறாள்.



"சரிதான், ஐந்நூறு டாலர் கொடுக்க முடியாத பாய் ஃபிரண்டாக இருந்தால் என்ன செய்வது?"

"இருநூற்றைம்பது கொடுக்கக் கூடிய இரண்டு பேரை வைத்துக் கொள்ள வேண்டியதுதான்!"

அப்போது அவன் குரல் மூலையிலிருந்து கேட்டது, "அம்மணிகளே! நான் இப்போ தூங்கப் போறேன். இருபது டாலருக்கு வரும்போது என்னை எழுப்புங்கள்."

எல்லோரும் எல்லா வகையிலும்தான் பாசாங்குகள் செய்கிறார்கள். மகானாகத் தோன்றுகிறவன் அதற்கு நேர்மாறானவனாக இருப்பான். விழித்திருப்பதாகத் தெரிகிறவன் ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பான். தூங்கிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறவன் அதீத முழிப்பில் இருப்பான். எல்லாமும் பாசாங்குதான். இந்தச் சமுதாயம் அப்படிப்பட்ட வாழ்க்கைதான் வாழ வேண்டும் என்று சாபமிட்டு வைத்திருக்கிறது. ஒரு கிரிமினலாக அல்லது ஒரு பசப்புக்காரனாக அல்லது ஒரு வேஷம் கட்டியவனாக...

நேர்மையாக இருந்து கிரிமினலாக இருக்க வேண்டும். அல்லது நேர்மை கெட்டு இருக்க பிறர் மதிக்க இருக்க வேண்டும். மூன்றாவது வகையான வாழ்வை வாழ இந்தச் சமுதாயம் விடுவதில்லை. ஏனென்கிறாயா? அந்த மூன்றாவது வாழ்வுதான் ஒரு புத்தனுடையது. ஒரு யேசுவினுடையது. ஒரு கிருஷ்ணனுடையது. அப்படிப்பட்டவன் இருக்க வந்தால் இவர்கள் மிகச் சாதாரணமானவர்கள் ஆகிவிடுகிறார்களே! அவன் இருப்பதே இவர்களுக்குத் தலைகுனிவாகப் போய்விடுகிறதே!

எனவே யாரையும் தோற்றத்தைப் பார்த்து எடை போட்டுவிடாதே. தொண்ணூற்று ஒன்பது புள்ளி ஒன்பது சதவிகிதம் தோற்றம்போல உண்மை இருப்பதில்லை. இதைப் பற்றி நீ எந்தச் சந்தேகமும் கொள்ள வேண்டியதில்லை.



அப்படியே ஏதாவது தவறுதலாகப் புரிந்து கொண்டாலும் அது புள்ளி ஒரு சதவிகிதம்தான் என்பதை மனதில் வை.

ஏதோ அத்தி பூத்தாற்போல ஒரு புத்தரைக் காணப் போகிறாய். உள்ளும் புறமும் ஒன்றாயிருக்கும் ஒருவரைக் காணப் போகிறாய். சாதாரணமாகவோ தோற்றத்தில் ஒருவராகவும் உண்மையில் வேறொருவராகவும் இருப்பவர்களையே கண்டு கொண்டிருக்கிறாய். எனவே தோற்றத்தில் மயங்கிப் போய்விடாதே.

ஒரு நடிகை. வேலை வெட்டி இல்லாத ஒருவனைப் பார்க்கிறாள். அட, இது என்ன இவ்வளவு பெரிய காலணிகள்! வியக்கிறாள். அவளுக்கு யாரோ சொல்லியிருக்கிறார்கள். பாதம் எவ்வளவு பெரியதாக இருக்கிறதோ அவ்வளவு நீளமாக ஆண்குறியும் இருக்குமாம். தன் அபார்ட்மெண்டுக்கு அவனை அழைத்துப் போனாள். அருமையான சாப்பாடு. பிறகு படுக்கை அறை.

காலையில் அவன் விழித்தெழுகிறான். சன்னல் ஓரத்தில் பத்து டாலர் நோட்டு ஒன்று. ஒரு காகிதத்தில் ஒரு குறிப்பு. ''சரியான அளவில் ஷூக்களை வாங்கிப் போட்டுக்கோ!''

அவளைப்போலத்தான் நாமும் அனுமானங்களைச் செய்து கொள்கிறோம். கண்ணுக்குத் தெரிவதைப் பார்த்து முடிவுகள் செய்து கொள்கிறோம். வாஸ்தவத்தில் நமக்குள் என்ன இருக்கிறது என்பது கூட நமக்குத் தெரிவதில்லை. பிறகெப்படி பிறருக்குள் என்ன இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வது? ஊடுருவிப் பார்க்கும் கலையை நாம் கற்றுக் கொள்ளவே இல்லை.

முதலில் அந்தக் கலையை நம்மைப் பொறுத்த அளவில் நாம் பயன்படுத்திப் பார்க்க வேண்டும். உனக்குள் போய் அங்கே இருக்கும் அகவுலகைப் பார். உன்



ஒருவன் ஒரு நாள் நாடகம் பார்க்கத் தன் மனைவியோடு போனான். இடையே சிறுநீர் கழிக்க வெளியே போனான். கழிவறைக் கதவென்று நினைத்துக் கொண்டு வேறொரு கதவு வழியாகப் போய்விட்டான். போன இடத்தில் ஒரு தோட்டம் இருந்தது. நிலத்தில் சிறுநீர் கழிக்குமளவுக்கு அநாகரிகமானவன் அல்ல என்பதால் ஒரு பூத்தொட்டியிலிருந்து செடியை நகர்த்திப் பிடித்துச் சிறுநீர் கழிக்கிறான்.

அவன் திரும்பிப் போன நேரம் காட்சி மாறிப் போய்விட்டது. முந்தைய காட்சியில் என்ன நடந்தது என்று மனைவியிடம் கேட்கிறான். ''அட நீங்களே அந்தக் காட்சியில் வந்தீர்களே! உங்களுக்குத் தெரியாதா என்ன?'' என்றாளாம்.

மனிதன் பிரக்ஞையற்றுத்தான் வாழ்கிறான். அவனுக்கு என்ன நடக்கிறது என்று தெளிவு இருப்பதில்லை. யாரை வேண்டுமானாலும் கவனித்துப் பார். உன்னையே வேண்டுமானால் கவனித்துப் பார்த்துக் கொள். எந்தப் பிரக்ஞையும் இல்லாமல் எத்தனை காரியங்களைச் செய்கிறாய் என்பது தெரியும். அட இது எப்படி இத்தனை நாள் இப்படி வாழ்ந்தோம் என்றுதான் கேட்டுக் கொள்ளத் தோன்றும்.

காரணமே இல்லாமல் பொய்கள் சொல்கிறாய். கையும் களவுமாகப் பிடிபட்டுப் போகும் போதுதான் எதற்காக இந்தப் பொய்யைச் சொன்னோம் என்று நீயே ஆச்சரியப்பட்டுக் கொள்கிறாய். பொய்யால் எந்தப் பயனும் இருக்கப் போவதில்லை. பொய் சொல்லக் காரணமே இல்லாமல் பொய் சொல்லிக் கொண்டிருந்திருக்கிறாய். அது ஒரு வழக்கமாகிப் போயிருந்திருக்கிறது. இயந்திரத்தனமாகப் பொய் சொல்லிக் கொண்டிருந்திருக்கிறாய். அப்படியேதான் உன்னுடைய விசனங்களும் - காரண காரியம் பாற்பட்டவையாக இருப்பதில்லை.

## வெகுளித்தனத்தின் ஞானம்



சில ஆராய்ச்சியாளர்கள் நமது மனநிலைக்கு நாம் ஒரு காலண்டரை ஏற்படுத்திக் கொள்ளலாம் என்று சொல்கிறார்கள். அவர்களுடைய ஆராய்ச்சி மிக முக்கியமானது என்றுதான் நானும் நினைக்கிறேன். ஆமாம் அவரவர் மனநிலைக்கு அவரவர் தத்தமக்கு என்ற ஒரு காலண்டரை ஏற்படுத்திக் கொள்ளலாம்தான்.

ஒரு மாதத்துக்கு எப்படி எப்படி உன் மனநிலை மாறுகிறது என்று கவனித்துக் குறித்துக் கொள். திங்கள் கிழமை காலை, மதியம், மாலை, இரவு... என்று ஒவ்வொரு நாளையும் குறைந்தது எட்டுப் பகுதிகளாகப் பிரித்து வைத்துக் கொண்டு உன் மனநிலை எப்படி மாறுகிறது என்பதைக் கவனித்துக் குறிப்பெடுத்து வைத்துக் கொள். உனக்கே ஆச்சரியமாக இருக்கும். ஒரு திங்கள் கிழமை ஒரு குறிப்பிட்ட நேரத்தில் எப்படி உன் மனநிலை இருந்ததோ அப்படியே அடுத்த திங்கள் கிழமை அதே நேரத்தில் இருப்பதைக் காண்பாய். இதற்கு நீண்ட நாட்களைச் செலவிட வேண்டியதில்லை. இரண்டு மூன்று வாரங்களில் இதைத் தெரிந்து கொள்வாய்.

இதற்குப் புற உலகு சார்ந்த காரணிகள் பொறுப்பு என்று சொல்ல முடியாது. ஏனென்றால் ஒரு நாள் இருப்பதைப் போல மறு நாள் இருப்பதில்லை. ஒவ்வொரு திங்கள் கிழமையும் முந்தைய திங்கள் கிழமையை விட வித்தியாசமானதாகத்தான் இருக்கிறது. எனவே இதற்குக் காரணம் நமக்குள்ளேயே இருக்க வேண்டும். என்னதான் புற உலகில் இதற்கு ஆயிரம் காரணங்களைக் கற்பித்தாலும் அவரவர் துயரத்துக்கு அவரவரே அன்றி வேறு காரணங்களைக் கற்பித்துக் கொள்ளும் வழக்கம்தான் இதற்குக் காரணம் என்றுதான் சொல்ல வேண்டும். நமது துயரத்துக்கு அடுத்தவரே காரணம் என்று சொல்லும்போது



அவளோடு பேச வேண்டும் என்பதற்காக, ''ஒரு கோப்பை மது வாங்கித் தரட்டுமா?'' என்கிறான்.

அவள், ''வேண்டாமே! நன்றி! நான் குடிப்பதில்லை'' என்கிறாள்.

''சரிதான்! என்னறைக்கு வந்து சாப்பிடலாமே!'' என்கிறான்.

''வேண்டாம், வேண்டாம். அது அவ்வளவு சரியான காரியமாகத் தெரியவில்லை'' என்கிறாள்.

என்னென்னவோ சொல்லிப் பார்த்தும் அவளை வழிக்குக் கொண்டுவர முடியாமல் போகவே அவன் நேரிடையாகவே சமாச்சாரத்துக்கு வருகிறான். ''மேடம், உன்னுடைய பிரமாதமான அழகு என்னைப் பைத்தியமாக்கிவிட்டது. என்னோடு ஓரிரவு இருந்தால் உனக்கு என்ன வேண்டுமானாலும் தருகிறேன்'' என்கிறான்.

''ஓ... மிஸ்டர், நான் அப்படிப்பட்டவ இல்லே'' என்கிறாள்.

அவன் சிரித்துக் கொண்டே, ''சத்தியமாகச் சொல்லு. நீ எப்பவுமே இப்படி அப்படி ஒன்றுமே செய்ய மாட்டாயா?'' என்கிறான்.

அந்தப் பிரெஞ்சுக்காரி சிரித்துக் கொண்டே, ''அவ்வப்போது பொய் சொல்வதுண்டு'' என்கிறாள்.

ஒரு நாளைக்கு எத்தனை பொய்கள் சொல்கிறாய் என்பதைக் கவனித்துப் பார். அதுவும் எந்தக் காரணமும் இல்லாமல். அப்படியே எந்தக் காரணமும் இல்லாமல் எத்தனை தடவை கோபப்படுகிறாய் என்றும் கவனித்துப் பார். உனக்கே தெரிந்துவிடும் - நீ உன்னளவுக்கு ஓர் உலகத்தைப் படைத்துக் கொண்டு வாழ்கிறேன் என்று பெயர் பண்ணிக் கொண்டிருக்கிறாய் என்பது.

## வெகுளித்தனத்தின் ஞானம்



தெளிவது என்பது வாழ்வின் இந்த அடிப்படை இயல்புகளைத் தெரிந்து வைத்திருப்பது. இவற்றைத் தெரிந்து வைத்துக் கொண்டால் நிலைமாற்றம் எளிதாகிவிடும். பார்க்கப் போனால் இப்படித் தெரிந்து கொள்வதே ஒரு நிலைமாற்றம்தான்.

**கலங்கிய மனம் எப்படி**
**நெறியைத் தெரிந்து கொள்ளும்?**
**எவனொருவன் மனம் கலங்கியிருக்கிறானோ**
**அவன் அறிவால் நிறைக்கப்படான்.**

அறிவு என்ற பெயரில் எதை அறிந்து வைத்திருக்கிறாயோ அது அறிவாகாது. புத்தர் அறிவு என்று சொல்லும்போது தகவல் களஞ்சியத்தைக் குறிக்கவில்லை. ஞானத்தைக் குறிக்கிறார். அறிதலை அன்றி அறிவை அவர் குறிக்கவில்லை.

கலங்கிய மனதில் போராட்டம்தான் இருக்கும். குழப்பமும் பிளவுகளுமே இருக்கும். உள்ளே ஒரு கூட்டம் இரைச்சலிட்டுக் கொண்டிருக்கும் வரை அவன் அறிவால் நிறைக்கப்பட மாட்டான்.

ஞானம் பெற ஒருங்கிணைவு தேவை. ஞானத்துக்கு ஒருமைப்பாடு தேவை. பிரக்ஞையை ஸ்படிகமாக்கத் தெரியும்போதே ஞானம் பிறக்கும். அப்படியே உன் செயல்கள், மனநிலைகள், உணர்வுகள் என்று உனக்குள் நடக்கும் எல்லாவற்றையும் ஸ்படிகமாக்கிக் கவனிக்கும் போதுதான் ஞானம் காரிய சாத்தியமாகிறது. அப்படிக் கவனிக்கும்போது உனக்குள் ஓர் அற்புதம் நடக்கக் காண்பாய்.

எந்தக் காரணமும் இல்லாமல் பொய்கள் சொல்லிக் கொண்டிருக்கிறாய் என்பது நெரிந்துவிட்டாலே போதுமே. மேலும் பொய் சொல்வதற்கு அந்தத் தெளிவே தடையாகிப் போகும். மறுமுறை பொய் சொல்லத் துணிந்த உடனேயே



வேண்டாம் என்று சொல்லும் மனதோடு உன்னை அடையாளப்படுத்திக் கொள்வாய். எடுத்துக் கொள்ளும் மனத்திடமிருந்து உன்னைப் பிரித்துப் பார்த்துக் கொள்வாய். மனதின் அடி ஆழத்தில் இது அயோக்கியத்தனம் என்று சொல்லிக் கொள்வாய். ''இது சரியல்ல. இதைச் செய்யும் நான் என்னுடைய மோசமான பகுதி. கீழ்த்தரமான பகுதி. பாவி'' என்று சொல்லிக் கொள்வாய். அதிலிருந்து உன்னை வேறானவனாகக் கற்பித்துக் கொள்வாய். ''அப்படிச் செய்யக் கூடாது என்றுதான் இருந்தேன். என்றாலும் அனிச்சையாகவே அந்தக் காரியத்தைச் செய்துவிட்டேன். என்னுடைய மனது... என்னுடைய உடம்பு அதைச் செய்தது. நானல்ல. அது தவறு என்று எனக்குத் தெரியும். தவறு என்று தெரிந்து கொண்டிருப்பவன்தான் உண்மையான நான்.''

எப்போதுமே எது சரி என்று நினைக்கிறாயோ அதனோடு உன்னை அடையாளப்படுத்திக் கொள்வாய். எது ஒழுக்கம் என்று நினைக்கிறாயோ அதன்படிதான் உண்மையாக நீ இருப்பதாகக் கற்பித்துக் கொள்வாய். நீயே செய்கிறாய் என்றாலும் தவறான காரியத்துக்கும் உனக்கும் சம்பந்தமில்லை என்று சொல்லிக் கொள்வாய். இப்படித்தானே பாசாங்கு தோன்றி உருக் கொள்கிறது!

ஸெயிண்ட் அகஸ்டின் தன் பிரார்த்தனையில் சொல்வதைப் பார், ''இறைவா! என்னை மன்னித்துவிடு. எதைச் செய்யக் கூடாது என்று எனக்குத் தெரியுமோ அதைத்தான் செய்கிறேன். எதைச் செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரிகிறதோ அதைச் செய்யத் தவறிப் போகிறேன்.''

இதுதான் போராட்டமே. இப்படித்தான் கலங்கிய மனத்தவனாகிப் போவது. அதனால்தான் புத்தர் உனக்கென்று ரகசியமான ஒரு சாவியைக் கொடுத்துப் போயிருக்கிறார்.

## வெகுளித்தனத்தின் ஞானம்



இந்தச் சாவியைக் கொண்டு எல்லா அடையாளங்களையும் தாண்டிப் போக முடியும். ஒழுக்கமான மனது என்று எதைக் கருதுகிறாயோ அதனோடு உன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாதே. ஏனென்றால் அதுவும் உன்னுடைய ஒரு பகுதிதான்.

எப்படிப் பார்த்தாலும் நடப்பது ஒன்றுதான். ஒன்று சரியானதைச் சார்ந்து நிற்கிறது. இன்னொன்று சரியில்லாததைச் செய்கிறது. பிறகென்ன? போராட்டம்தான். ஒரே மனதில் இரண்டு பகுதிகள்தான் உனக்குள் போராட்டத்தை உருவாக்கி வைக்கிறது.

மனம் எப்போதும் இரட்டைத்தனமானது. நேர் எதிர்த் துருவங்களாகச் செயல்படுகிறது. ஒரே ஆளை ஒரு பக்கம் வெறுக்கிறது. மறுபக்கம் விரும்புகிறது. ஒரு செயலை செய்ய வேண்டும் என்கிறது. அந்தக் காரியத்தைப் பண்ண வேண்டாம் என்றும் தெரிகிறது. இதுதான் போராட்டம். கலக்கம். மனம் என்பதே இந்தப் போராட்டத்துக்கும் கலக்கத்துக்கும் களமாகிப் போகிறது. இரண்டில் எதனோடும் உன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாதே.

வெறுமனே கவனிப்பவனாக மட்டும் இரு என்கிறார் புத்தர். ஒரு பக்கம் ஒன்றையும் இன்னொரு பக்கம் இன்னொன்றையும் சொல்வதைக் கவனி. இரண்டுமே நானல்ல என்று சொல்லிக் கொள். ''நெதி! நெதி! நான் இதுவுமல்ல அதுவுமல்ல. நான் ஒரு சாட்சி மட்டுமே!'' அப்படிச் சொல்ல முடியுமானால் அறிதல் முகிழ்க்கச் சாத்தியம் இருக்கிறது.



மானுடத்துக்காகவே வாழ்ந்து மானுடத்துக்காகத் தன்னையே தியாகம் செய்தவர் யேசு. மகாவீரர் என்ன செய்துவிட்டார்? மகாவீரர் சுயநலமி. தன்னுடைய ஈடேற்றம் பற்றி மட்டுமே நினைத்துக் கொண்டிருந்தவர். மற்றவர்களைப் பற்றி அவருக்கு எந்த அக்கறையும் கிடையாது. ஒரு குருடனுக்குப் பார்வை கொடுத்திருப்பாரா? ஒரு செத்தவனை எழுப்பியிருப்பாரா? பன்னிரெண்டு வருஷம் மலையிலும் காட்டிலும் தியானம் செய்து கொண்டிருந்தார். என்ன சுயநலம்! உலகத்திலே ஒரே துயரம். மக்களுக்கெல்லாம் துன்பம். யாருக்கு என்ன ஆறுதல் சொல்லியிருக்கிறார்? இதை விட ஆடம்பரம் வேறு எதுவும் இருக்க முடியுமா? ஏழை எளியவர்க்கு அவர் என்ன செய்து விட்டார்? யேசு தன்னையே தியாகம் செய்தவர். மற்றவர்களுக்காக வாழ்ந்து மற்றவர்களுக்காகவே இறந்தவர். அவருடைய வாழ்க்கையே தியாகம் இல்லாமல் வேறு என்ன வாக இருந்திருக்கிறது? பிறகு எப்படி யேசுவையும் மகாவீரரையும் ஒன்றாகப் பார்ப்பது?'' என்றார்.

அவர் சொல்வதும் சரியாகத்தான் படுகிறது. எப்படி இந்தச் சிக்கலை விடுவிப்பது? புத்தர் எந்த வியாதியஸ்தரையும் குணப்படுத்தவில்லை. குருடனுக்குப் பார்வை தரவில்லை. செவிடனைக் கேட்க வைக்கவில்லை. ஊமையைப் பேச வைக்கவில்லை. சும்மா தியானம் பண்ணிக் கொண்டிருந்து விட்டார். சுயநலமிதானே?

மருத்துவமனைகளை ஸ்தாபித்திருக்க வேண்டும். அட ஒரு பள்ளிக்கூடமாவது கட்டியிருக்க வேண்டும். மருந்துகள் தந்திருக்க வேண்டும். வெள்ளம் வந்த இடத்துக்குப் போய்ச் சேவை செய்திருக்க வேண்டும். அப்படி எதுவும் செய்யவில்லையே. இது என்ன மாதிரியான ஆன்மிகம்? கிறித்தவர்களைப் பொறுத்த அளவில் இது அநியாயத்துக்குச் சுயநலம்தான்.

## வெகுளித்தனத்தின் ஞானம்



யார் சரியானவர்? எது சரியென்று யார் தீர்மானிப்பது? நமது விருப்பு வெறுப்பு பாற்பட்டுத்தானே நாம் வாழ்கிறோம்?

சமணத் துறவி சொல்வதும் தவறு. கிறித்துவப் பாதிரியார் சொல்வதும் தவறு. ஏனென்றால் இருவருமே சரி தவறு என்று தீர்மானிக்க முயல்கிறார்கள். அப்படித் தீர்மானிப்பதே தவறு.

யேசுவானவர் யேசு. புத்தரானவர் புத்தர். அவரவருக்கு அவரவர் வழி. இருவருமே கடவுளின் சிறப்பு வெளிப்பாடுகள். யாரும் யாருடைய பிரதியும் அல்ல. அப்படி இருக்க வேண்டிய அவசியமும் இல்லை. வித்தியாசமானவர்கள் இருப்பதுவே உலகத்துக்கு அழகு சேர்க்கத்தானே? யேசுவைப்போல இன்னொரு யேசு, இன்னுமொரு யேசு என்றிருந்தால் அசெம்பிளி லைனில் இருந்து போர்டு கார்கள் வருவதைப்போல இருந்திருக்கும். ஒவ்வொரு நொடியும் ஒவ்வொரு கார். ஒன்றைப்போலவே இன்னொன்று. யேசு ஒருவரே ஒருவர்தான் என்பதே அழகு. அவரைப்போல இன்னொருவர் இருக்காது போனதே அழகு. அப்படியே புத்தர் என்று ஒருவரே ஒருவர். இன்னொருவர் அவரைப்போல இல்லாது போனதே அழகு.

உண்மையான ஆன்மிகவாதி எதையும் தீர்மானிக்க முனைவதில்லை. ஒழுக்க நெறி பேசுகிறவரோ சரி தவறு என்பதை தீர்மானிக்கவே முயல்கிறார். அதை அவர் தவிர்க்கவே முடியாது. இந்தச் சமணத் துறவி - சாதாரணமான மனிதர் - முட்டாள்தனமாக யேசுவைப் பற்றித் தீர்மானமாக எதையோ சொல்ல வருகிறார். ராமகிருஷ்ணரைப் பற்றி, முகம்மதுவைப் பற்றித் தீர்ப்புச் சொல்ல இவருக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? ஒன்றுமே தெரியாதவர். எதையும் புரிந்து கொள்ளாதவர். தியானம் கூடச் சரியாகச் செய்யத்



தெரியாதவர். அவரைப் பற்றியே அவருக்குத் தெரியாது. அதனால்தான் என்னிடம் வந்து சேர்ந்திருக்கிறார்.

தியானம் என்றால் என்ன என்று புரிந்து கொள்ள, தியானப் பயிற்சிக்காக என்னிடம் வந்திருக்கிறார். தியானிக்கவே ஆரம்பிக்கவில்லை. அதற்குள் இவர் பெரியவர் அவர் சிறியவர் என்று தீர்மானமாகப் பேசுகிறார். தான் என்ன செய்கிறோம் என்பதைப் பற்றி எந்த வெட்கமும் இல்லாதவர். கூச்சம் எதுவும் இல்லாமல் யேசுவைப் போன்ற ஒருவரைப் பற்றிப் பேசுமளவுக்குத் திமிர் பிடித்தவர்.

கிறித்துவப் பாதிரியாரா? அவருக்குத் தியானம் பற்றி ஒன்றுமே தெரியாது. புத்தர், மகாவீரர் என்ன செய்து கொண்டிருந்தார்கள் என்பது பற்றி ஒன்றும் தெரியாது. ஒரு புத்தர் எவ்வளவு நுண்ணிய வழிகளில் செயல் புரிகிறார் என்பது அவருக்குத் தெரியாது. ஞானம் பெற்றதே அவர் மானுடத்துக்குச் செய்த மிகப் பெரிய தொண்டு. அதற்கு மேல் எதுவும் செய்யத் தேவையே இல்லை. ஊனக்கண்களை அவர் குணப்படுத்தவில்லைதான். ஆனால் ஆயிரவர் மனக்கண்களின் ஊனத்தைக் குணப்படுத்தி இருக்கிறார். அதுதான் உண்மையான தொண்டு. ஆயிரக்கணக்கான மக்களைப் பார்க்க, கேட்க வைத்திருக்கிறார். கவனிக்க வைத்திருக்கிறார். புரிந்து கொள்ள வைத்திருக்கிறார். அதுதான் உண்மையான தொண்டு.

இந்தக் கிறித்துவப் பாதிரியாரைப் பார். ஏதோ ஒரு பள்ளிக் கூடத்தையும் மருத்துவமனையும் நடத்துவதாலேயே யாரைப் பற்றி வேண்டுமானாலும் தீர்மானமாகப் பேசத் தனக்கு அதிகாரம் இருக்கிறது என்று நினைக்கிறார். ஒழுக்கவாதிக்குச் சரி தவறு என்று தீர்மானிப்பதே வேலை. ஆன்மிகவாதியோ சரி தவறு என்று பார்ப்பதே இல்லை. அவர் தீர்மானிக்க எத்தனிக்காத பிரக்ஞையில் வாழ்கிறார்.

**கருத்துக்களைத் தாண்டிய மனம்**
**கவனிக்கிறது. புரிந்து கொள்கிறது.**



அவர் வெறுமனே சாட்சியாக இருக்கிறார். புத்தர் யேசுவைச் சந்தித்திருந்தால் அவரைப் புரிந்து கொண்டிருப்பார். அப்படியே யேசு மகாவீரரைச் சந்தித்திருந்தால் அவரைப் புரிந்து கொண்டிருப்பார். கவனித்து, பார்த்து, புரிந்து கொண்டிருந்திருப்பார்.

**உடல் உடையும் பாண்டம் என்ற உணர்வோடு**
**மன மாளிகையை கட்டு.**

மனம் எனும்போது புத்தர் பிரக்ஞையைக் குறிக்கிறார். எண்ணங்கள் எல்லாவற்றையும் கழித்துவிட்ட மனத்தைக் குறிக்கிறார். இந்த உடல் அழியப் போகிறது என்பதால் உன் மனதை ஓர் மாளிகையாக்க வேண்டியிருக்கிறது. உடலைச் சார்ந்திருந்து விடாதே.

**ஒவ்வொரு சோதனையின் போதும்**
**புரிதல் உனக்காகப் போராடட்டும்**
**நீ வென்றதைக் காக்க**
**போராடட்டும்.**

இதை எப்போதும் நினைவில் வைத்திரு. ஏனென்றால் போராட்டம் நெடியது. யாத்திரையோ கடுமையானது. பல தடவையும் கீழே விழத்தான் செய்வாய். இதை மறந்து போய் சரி தவறு என்று தீர்மானிக்கத் தொடங்கிவிடுவாய். பல தடவையும் உன்னை இதனோடும் அதனோடும் அடையாளப்படுத்திக் கொள்ளத் தொடங்கிவிடுவாய். மீண்டும் மீண்டும் உன் அகந்தை தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும். அகந்தை நிலை பெற வரும் போதெல்லாம், அடையாளங்கள் இருக்க வரும்போதெல்லாம், தீர்மானங்கள் செய்ய வரும்போதெல்லாம், உடனே இதை நினைவுக்குக்



கொண்டு வந்து விடு. கவனி. வெறுமனே கவனி. புரிதல் தானே இருக்க வரும்.

புரிதலே நிலை மாற்றத்துக்கான ரகசிய வழி. கோபத்தைப் புரிந்து கொண்ட அந்தக் கணம் உன் மீது கருணை பொழியும். காமத்தைப் புரிந்து கொண்ட அதே கணம் சமாதி நிலை அடைவாய். புரிந்து கொள்ளுதல், தெளிதல் - இதுவே நினைவில் நிறுத்த வேண்டிய வாசகம்.

**விரைவில் உடலைக் கழிக்கப் போகிறோம்.**
**பிறகு உணர்வதற்கு என்ன**
**இருக்கப் போகிறது?**
**பயனற்ற கட்டையாக மண்ணில்**
**கிடக்கப் போகிறது.**
**அப்போது அதற்கு என்ன**
**தெரியப் போகிறது?**

உடலைச் சார்ந்திருக்காதே. இந்த உடலுக்குள் உறைந்து போயிருக்காதே. அதைப் பயன்படுத்து. மரியாதை செய். அதன் மீது அன்பு வை. அக்கறையாகக் கவனித்துக் கொள். ஆனால் மறந்து விடாதே. ஒரு நாள் இல்லையென்றால் ஒரு நாள் இதை விட்டு விட்டுப் போகப் போகிறாய். இது ஒரு கூண்டு. இதைப் பின்னால் நிறுத்தி விட்டு, பறவை ஒரு நாள் பறக்கத்தான் போகிறது. அப்படிப் நடப்பதற்கு முன்னால் பறவையையும் கவனித்துக் கொள். பிரக்ஞையைப் பரிசுத்தமாக்கு. ஏனென்றால் அதுதான் உன்னோடு வரப்போவது. உன்னுடைய தெளிவே உன்னோடு வரப்போவது. உன் உடல் அல்ல.

எனவே உடலுக்காக அதிக விரயங்கள் செய்து கழிக்காதே. ஒப்பனைகள், வாசனைகள், உடைகள், நகைகள் என்று அதிக நேரத்தை உடலுக்காகச் செலவழிக்காதே. மண்ணாலான உடம்பு ஒரு நாள் மண்ணுக்குப் போகப்



போகிறது. மண்ணோடு மண்ணாகப் போகிறது. நீயோ இந்த மண்ணுக்குச் சொந்தமானவன் அல்ல. இன்னதெனத் தெரியாததற்குச் சொந்தக்காரன் நீ. வேறிடத்திலிருந்து வந்தவன் நீ. உன் வாஸ்தவமான இருப்பிடம் வேறெங்கோ இருக்கிறது. இங்கே சும்மா சுற்றிப் பார்க்க வந்திருக்கிறாய். வந்த இடத்தில் சுகமாக அனுபவி. தெளிதலில் சிறக்க எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவுக்கு இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள். உன்னுடைய பக்குவத்தையும் தெளிவையும் ஞானத்தையும் போகும்போது உன்னோடு கொண்டு செல்லலாம்.

**கவனிக்காமல் சேர்த்துள்ள**
**உன்னுடைய எண்ணங்கள்**
**உன் மோசமான எதிரியை விட**
**உனக்கு ஆபத்தாகிப் போகும்.**

எண்ணங்களைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கா விட்டால், கவனித்து வைத்திருக்காவிட்டால், உன்னுடைய மனமே உனக்கு மாபெரும் எதிரியாகிவிடும்.

**ஆனால் கட்டுப்பாட்டில் வந்துவிட்டாலோ**
**அதனளவு யாரும் அவ்வளவு சகாயமாயிருக்க**
**முடியாது.**
**உன் தந்தை தாயும் கூடத்தான்.**

அதே மனம் - கட்டுப்பாட்டுக்குள் வந்துவிடும்போது - கவனிப்பதன் மூலம், தியானத்தின் வழியில் - கட்டுப் பாட்டுக்குள் வந்துவிடும்போது அது உன்னை உயர்த்திவிடுகிறது. ஒரு நிலைமாற்றம் நடக்க உன்னுடைய மிகச் சிறந்த தோழனாகிவிடுகிறது. வேறு யாரும் உனக்கு அவ்வளவு உதவ முடியாது.



கட்டுப்பாட்டுக்குள் வைக்காத மனமே கோபமாகிப் போகிறது. வெறுப்பாகிப் போகிறது. பொறாமையாகிப் போகிறது. கட்டுப்பாட்டுக்குள் இருக்கும்போது கருணையாகிறது. அன்பாகிறது. ஒளியாகிறது.

எனவே கவனித்திரு. விழிப்போடிரு. ஜாக்கிரதையாக இரு. தீர்மானத்தைத் தவிர்த்திரு. ஒழுக்கம் பேசாதே. சமயாதீதப் பிரக்ஞையைப் படைத்துவிடு. சமயாதீதப் பிரக்ஞை என்றால் சரி தவறு என்று தீர்மானிப்பதைத் தவிர்த்திருப்பது என்று பொருள். தீர்மானிப்பதைத் தவிர்த்திருப்பது என்ற வார்த்தை உன் மனத்தின் அடி ஆழத்தில் புதைந்து நிலைக்கட்டும். இதுதான் புத்தரின் போதனைகளின் சாரம். ஏஸ் தம்மோ சநந்தனோ.

இன்றைக்கு இது போதும்...



முதல் வினா

அன்பிற்குரிய குருவே,

> 'உங்களுடைய தொண்டின் புதிய போக்கைப்
> பற்றி இன்னமும் கொஞ்சம் சொல்ல வேண்டும்.
> ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ ராமன்,
> ஜே.கிருஷ்ணமூர்த்தி கூட ஒற்றைப்
> பருமானக்காரர்களாகத்தான் தெரிகிறார்கள்.
> குர்ட்ஜீஃப் பன்முக நோக்கின் பாற்பட்ட
> முயற்சிகளை மேற்கொண்டாரா? அதுதான்
> அவரைப் பெரும்பாலானோர் தவறாகப் புரிந்து
> கொண்டதற்குக் காரணமோ?'

**அஜித் சரஸ்வதி** உண்மையிலேயே மக்களுக்கு உதவி செய்ய விரும்பும்போது நீங்கள் தவறாக புரிந்து கொள்ள படுவது இயற்கையே. சகாயம் செய்ய வேண்டாம் என்று அவர்கள் வரும்போது தவறாகப் புரிந்து கொள்ள மாட்டார்கள். வழிபடுவார்கள். புகழ்வார்கள். வெறுமனே பேசிக் கொண்டிருந்து விட்டாலோ தத்துவ விளக்கங்கள் சொல்லிக் கொண்டிருந்து விட்டாலோ யாரும் உன்னைப்



பார்த்துப் பயப்பட மாட்டார்கள். நீதான் அவர்களுடைய வாழ்வை எப்படியும் பாதிப்பதில்லையே!

சிக்கலான கொள்கைகளையும் சித்தாந்தக் கோட்பாடுகளையும் தெரிந்து கொள்வது பிரமாதமான விஷயம்தான். அகங்காரத்துக்கு அது உதவியாக இருக்கிறது. அகங்காரத்தை ஊட்டி வளர்க்கிறது. விஷய ஞானம் அதிகமாகிறது. எல்லோருக்கும் அப்படி விஷய ஞான அபிவிருத்தியில் நாட்டம் இருக்கிறதுதானே? அகங்காரத்தின் வளர்ச்சிக்கான வெகு நுண்ணிய ஊட்டம் அது.

ஆனால் உண்மையாகவே மக்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று நினைத்தவுடனேயே பிரச்சனை தோன்றிவிடுகிறது. அவர்களுடைய வாழ்வை மாற்றியமைக்கிறாய். அவர்களுடைய அகங்கார தனிப்பட்ட வட்டத்துக்குள் அத்து மீறி நுழைந்தவனாகிறாய். பல நூறு ஆண்டுகளாக இருந்து வந்திருக்கிற பழக்கங்கள், அமைப்புகளில் குறுக்கிடுகிறாய்.

நீ விரோதியாகிவிடுகிறாய். உன்னைப் பார்த்துப் பயந்து போகிறார்கள். இந்த விரோத பாவத்தினாலேயே எல்லாச் சாத்தியமான வழிகளிலும் உன்னைத் தவறாகப் புரிந்து கொள்ள எத்தனிக்கிறார்கள். தவறாகப் பிறரிடம் உன்னைப் பற்றிச் சொல்ல முனைகிறார்கள்.

ஒற்றைப் பரிமாணக்காரர்கள் பிரமாதமானவர்கள்தான். அழகான ஒரு மலரைப் போல. என்றாலும் அவர்களால் எந்தப் பயனும் இருப்பதில்லை. நாற்பது வருடங்களுக்கு மேலாகக் கிருஷ்ணமூர்த்தி பேசிக் கொண்டிருக்கிறார். அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டும் இருக்கிறார்கள். கேட்டவர்களே நாற்பது வருடங்களாகத் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்றாலும அவர்களிடம் அணுவளவு கூட எந்த மாற்றமும் ஏற்படவில்லை.

## தம்மபதம் – II



நிச்சயமாக அவர்களுக்கு விஷயஞானம் கூடியிருக்க வேண்டும். வாதப் பிரதிவாதங்களில் சமர்த்தராயிருக்க வேண்டும். கலந்துரையாடுவதற்கு அவர்கள் மிகவும் இணக்கமானவர்கள். எதைப் பற்றி வேண்டுமானாலும் அறிவார்ந்து பேசுவார்கள். எண்ணங் களின் மிகத் துல்லிய மென்மையான தளங்களில் அருமையாக நடை போடுவார்கள். விழிப்பு, தியானம், பிரக்ஞை என்று எல்லாவற்றையும் பிரமாதமாகத்தான் நுணுகி ஆராய்வார்கள்.

திறமையானவர்கள்தான். புத்திசாலிகளும் கூட என்றா லும் அவர்கள் மிகச் சாமானியர்களாகவே இருக்கிறார்கள். மூடர்களாகவும்தான். ஒரே ஒரு வித்தியாசம். அவர்களுடைய முட்டாள்தனம் ஜே.கிருஷ்ணமூர்த்தியிடம் இருந்து அவர்கள் பெற்றுக் கொண்ட விஷய ஞானம் என்ற உடைகளைப் போட்டுக் கொண்டிருக்கிறது. கிருஷ்ணமூர்த்தி என்றைக்கும் ஓர் அறிவு ஜீவியாகவே இருந்து விட்டவர். மக்களுடைய நெஞ்சுக்குள் புக அவர் முயற்சிக்கவே இல்லை. பிறர் நெஞ்சத்துக்குள் புகுவது ஆபத்தான ஒரு விளையாட்டு - தீயோடு விளையாடுவதைப் போல.

ஸ்ரீராமன் அவரளவில் சரியானவர்தான். கோயிலில் உட்கார்ந்திருக்கிறார். மக்கள் அவரிடம் வருகிறார்கள். பூக்களால் அர்ச்சிக்கிறார்கள். வணங்குகிறார்கள். அவர் எல்லோரையும் வெறுமனே கவனித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். அவரிடம் ஓர் அழகு இருக்கிறது. ஒரு தேஜஸ் இருக்கிறது என்றாலும் அவர் ஒற்றைப் பரிமாணக்காரர். வாழ்வை ஒட்டு மொத்தமாக அது பாதிப்பதில்லை. அதிக பட்சம் மனம் நெகிழ வைக்கிறார். ஜே.கிருஷ்ணமூர்த்தி அறிவைத் தூண்டுவதைப் போல ஸ்ரீராமன் மனத்தை நெகிழ வைக்கிறார்.



ராமகிருஷ்ணரும் அப்படித்தான். மனத்தை நெகிழ் வைத்துப் பரவசத்தில் கண்ணீர் சொரிய வைத்தார். ஆனால் அதனால் எந்த நிலைமாற்றமும் ஏற்படப் போவதில்லை. அந்தப் பரவசக் கண்ணீருக்கு அற்ப ஆயுள். திரும்ப வீடு வந்து சேரும்போது நீ பழைய ஆளாகத்தான் இருப்பாய்.

குர்ட்ஜீஃப் நிச்சயமாக ஒரு முன்னோடி. ஆன்மிக வாழ்க்கைக்குப் புதியதொரு கோட்பாடு அவரிடமிருந்து தோன்றுகிறது. தன்னுடைய நெறியை அவர் நான்காவது நெறி என்பார். நானும் அப்படியே என்னுடைய நெறியை நான்காவது நெறி என்று சொல்கிறேன். விஷயஞானம் பரப்ப நினைக்காததால், ஆறுதல் சொல்ல முயற்சி செய்யாததால் அவரை மிகத் தவறாகப் புரிந்து கொண்டார்கள். அழகழகான கொள்கைகள், காட்சிகள், கனவுகள் ஆகியவற்றைக் கற்பித்துத் தருவதில் அவருக்கு எந்த அக்கறையும் இருந்ததே இல்லை. உன்னுடைய கண்ணீர், நெகிழ்ச்சி, உணர்வார்வம் ஆகியவை பற்றி அவருக்கு எந்த அக்கறையும் இருந்ததில்லை. நீ அவரை வணங்கவேண்டும் என்று அவருக்கு எந்த விருப்பமும் இல்லை. உன்னளவில் ஒரு நிலைமாற்றம் கொண்டு வர வேண்டும் என்பதே அவருடைய ஒரே காரியமாக இருந்தது.

அப்படி ஒரு நிலைமாற்றம் கொண்டு வர வேண்டும் என்றால் கையில் சுத்தியல் எடுக்க வேண்டும். இங்கும் அங்குமாக நிறையவே தட்டிக் கழிக்க வேண்டியிருக்கும். தலைகீழாகப் பலதும் கிடப்பதால் எதுவுமே சரியான நிலைமையில் இல்லை. எல்லாவற்றையும் தட்டிக் கொட்டிச் சரியாக்க வேண்டியிருக்கிறது.

ஆனால் ஒவ்வொருவரும் அவரவர் தவறான நெறிகளில் எக்கச்சக்கமான முதலீடுகளைச் செய்து வைத்திருக்கிறார்கள். ஆமாம் என்கிறேன். சுற்றுப்புறத்தில் மட்டுமன்றி



மையத்திலும்தான். தவறான சேகரிப்புகள்தான். தவறான கொட்டி வைப்புகள். எனவே இந்த வாழ்வின் போக்கை மாற்ற வேண்டும் என்றால் எல்லோருக்கும் பயமாகப் போய்விடுகிறது.

குர்ட்ஜீஃபின் உலகத்தில் நுழைய ஒரு சிலருக்கே தைரியம் இருக்கிறது. எந்த மாதிரியான தைரியம் என்கிறாயா? செத்துப் போவதற்கான தைரியம். செத்துப் போனால்தானே புதிய வாழ்வு சாத்தியமாகிறது?

குர்ட்ஜீஃப் ஒரு தாதியைப் போல. அவர் ஓர் ஆசிரியர் அல்ல போதிப்பதற்கு. அவர் ஒரு குரு. கிருஷ்ணமூர்த்தி ஆசிரியராகவே இருந்துவிட்டவர். ராமன் பிரமாதமான ஒருவராக இருந்தவர். ஞானிதான். என்றாலும் நம்மிடமிருந்து வெகுதூரம் விலகி நின்றவர். வெகு தூரத்து நட்சத்திரம். அதைக் காணலாம். சிலாகிக்கலாம். போற்றிக் கவிதை எழுதலாம். அவ்வளவுதான். எப்படியும் தூரத்து நிகழ்வாகவே நிலைத்துப் போன நட்சத்திரம் அவர். இடைப்பட்ட தூரம் கடக்க முடியாத தூரம். அவரைப் போய்ச் சேர்வது என்பது துர்லபம். அவரோ அந்த இடைவெளிக்குப் பாலமிட எந்த முயற்சியும் செய்யாதவராகவும் இருந்து விட்டவர்.

நீ என்ன செய்ய முடியும்? எப்படி ஒரு பாலத்தை அமைப்பது? ராமனைப் போல ஒருவரோடு இணைந்து கொள்ள ஒரு பாலத்தை நீ அமைக்க முடியும் என்றால் பாலமே அவசியம் இல்லை என்பேன். அந்த அளவுக்குத் திறனுடைய ஒருவன் நிலைமாற்றத்தைத் தானாகவே வகுத்துக் கொள்ள முடியும். அவனுக்கு எந்தக் குருவும் தேவையில்லை. ராமன் அப்படி ஒரு பாலத்தை அமைக்க விரும்பினால் ஒழிய அப்படி ஒரு பாலம் அமையும் சாத்தியமே இல்லை.



அவரோ ஒதுங்கியே நின்றிருக்கிறார். தூரத்தே, எந்த அக்கறையும் இல்லாமல் ஒதுங்கி நிற்கிறார். எல்லாத் துயரமும் மாயை என்பது அவருக்குத் தெரியும். அது நிச்சயமாக அப்படித்தான். ஆனால் துயரத்தில் இருப்பவனுக்கு அது அப்படித் தெரியாது. ஒருவன் விழித்திருக்கிறான் என்று வைத்துக் கொள். இன்னொருவன் தூங்கிக் கொண்டிருக்கிறான். தூங்குகிறவன் அழுதாலோ சிரித்தாலோ கனவில் கண்டதையும் கண்டு அவன் அழுகிறான் அல்லது சிரிக்கிறான் என்பது விழித்திருப்பவனுக்குத்தான் தெரியும். விழித்திருப்பவனைப் பொறுத்த அளவில் அதுதான் மெய்.

ஆனால் தூங்குகிறவனைப் பொறுத்த அளவில் எப்படி என்கிறாய்? அவனுக்கு அவன் காணும் கனவு மெய். மேலும் ஆழ்ந்த நித்திரையில் இருப்பவன் விழித்திருப்பவனோடு எந்தத் தொடர்பையும் ஏற்படுத்திக் கொள்ளவும் முடியாது. அதற்கான எந்த முயற்சியும் கூடச் செய்ய முடியாது. அவனவன் அவனவனுடைய தூக்கத்தின் பயங்கரத்துக்குள் கிடக்கும் வரையிலும் ஒருவன் விழித்திருக்கக் கூடும் என்பதைக் கூடத் தெரிந்து கொள்ள முடியாதுதான்.

விழித்திருப்பவன்தான் எந்த முயற்சியும் மேற்கொள்ள முடியும். ஆனால் கனவிடைப்பட்ட ஒருவனை எழுப்புவது ஆபத்தான விஷயம். யாரும் தூக்கத்தில் தொந்திரவை விரும்புவதில்லை. யாரும் தம் தூக்கத்தில் எந்த இடையூறும் இருக்கக் கூடாது என்றுதான் நினைக்கிறார்கள்.

பலரும் விநோதமான பல கருத்துக்களைத்தான் கொண்டிருக்கிறார்கள். தூக்கத்தின் வயப்பட்டவர்கள், மூடர்கள் ஒவ்வொருவரும் சுதந்திரத்தைப் பற்றி விநோதமான கருத்துக்களைத்தான் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்குப் பாவம் எந்தச் சுதந்திரமும் கிடையாது. இருக்க முடியாது. தூக்கத்தில் இருப்பவனுக்கு ஏது



சுதந்திரம்? ஆனால் சுதந்திரத்தைப் பற்றிப் பிரமாத மான எண்ணங்களை வைத்திருக்கலாம். அங்கேதான் குர்ட்ஜீஃப் குறுக்கிடுகிறார். ஜே.கிருஷ்ணமூர்த்தி, ராமன், ராமகிருஷ்ணரைவிட அதிக கருணை கொண்டவர் குர்ட்ஜீஃப்.

பாடுவதில், வணங்குவதில், நடனத்தில் ராமகிருஷ்ணர் மிக அருமையானவர். கடந்த நிலையில் இருப்பவர். இந்த வாழ்வில் இருக்கும் போதே இந்த வாழ்வில் இருப்பதை விடப் பிரமாதமான நிலைகளை அனுபவிக்க முடியும் என்பதற்கு அவர் சாட்சியாகிறார். அந்த அளவில் நின்று விடுகிறார்.

ராமகிருஷ்ணர் ஏதோ கொஞ்சத்தை உனக்கு நினை வூட்டுகிறார். ஆனால் அந்த நினைவூட்டல் தானாகப் பெருகிப் பரவப் போவதில்லை. அதைச் சீக்கிரமே மறந்து போய்விடுவாய். அது சுகானுபவம் என்பதால் இந்த மனிதரை அடிக்கடி தேடிப் போய் அவர் பாடுவதிலும் ஆடுவதிலும் துடிப்பதிலும் ஒரு சுகத்தைக் காண்கிறாய்.

இதைத்தான் புத்தர் மற்றவன் ஆட்டை எண்ணிப் பார்ப்பது என்கிறார். அவர் அருமையான மலரைப் போல. ஆனால் ரோஜாப் பூவைப் பார்த்துக் கொண்டே இருப்பதால் ரோஜாப் பூவாக ஆகிவிட முடியாது. ராமகிருஷ்ணரைப் பார்த்துக் கொண்டே இருப்பதால் நீ ராமகிருஷ்ணர் ஆகிவிட முடியாது. அதற்குப் பெரு முயற்சி தேவை. மலை ஏற வேண்டுமானால் எல்லாவிதமான ஆபத்துக்களையும் எதிர் கொண்டாக வேண்டும்.

குரு ஒருவர் நீ ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும் போது உன்னிடம் வராவிட்டால், வந்து உன்னை உசுப்பி விடாவிட்டால், உன்னை இறுக்கிப் பிடித்து அந்த அறியாமையில் இருந்து வெளியே இழுத்துவிடாவிட்டால்



எதுவும் நடக்கப் போவதில்லை. நடக்கவும் முடியாது. ஆனால் உனக்கோ அப்படி எழுப்பிவிடுகிறவர் மீது கோபம்தான் வரும். யார்தான் தொந்திரவுபடத் தயார்?

அவரவர் அவரவரது பழக்கங்களுக்கு அடிமையாகிப் போனவர்தான். இந்த மனமும் பழகிப் போனதை, தெரிந்ததை, பரிச்சயமானதை விரும்புகிறது. பழகிப் போனது எவ்வளவு மோசமானதாக இருந்தாலும் புதியதைக் கண்டு பயப்படுகிறது. ஏனென்றால் புதியதை ஏற்றுக் கொண்டால் அதற்கேற்பத் தன் நடவடிக்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டுமே. புதிதாக மாறிப் போக வேண்டுமே. யாருக்குப் புதியதைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்றிருக்கிறது? புதியதைப் பற்றி யாருக்கு என்ன கவலை? பழைய வாழ்வில் அவரவர் சாமர்த்தியமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்களே! அதில் ஒரு திருப்தியும் இருக்கிறதே!

குர்ட்ஜீஃப் போன்ற ஒருவரைச் சந்திக்கும்போது நீ சேர்த்து வைத்திருக்கிற அத்தனை முட்டாள்தனத்தையும் நொறுக்கி விடுகிறார். ஈவு இரக்கமில்லாமல் அதை நொறுக்கிப் போடுகிறார். சில சமயங்களில் நீ திரட்டி வைத்திருக்கும் முட்டாள்தனமான எண்ணங்களை உடைத் தெறிய உண்மைக்குப் புறம்பானதைக் கூடச் சொல்கிறார்.

நண்பர் ஒருவர் கேட்டார், ''குர்ட்ஜீஃப் போன்ற புரிதல் உள்ள ஒருவருக்கு ஏன் குண்டலினி சக்தி பற்றித் தெரியாமல் போய்விட்டது? இது எப்படிச் சாத்தியம்?''

குர்ட்ஜீஃப் இதைக் குண்டகுப்பை என்பார். குண்டலினி கொள்கையைக் குர்ட்ஜீஃப் மறுத்தார். குண்டலினியை எழுப்புவதே ஒருவனுக்கு ஏற்படக் கூடிய மிக மோசமான விஷயம் என்றார். கேள்வி கேட்டவருக்கு உண்மையில் குழப்பம்தான் மிஞ்சியது.

## தம்மபதம் – II



குர்ட்ஜீஃப் சொன்னதன் உண்மையான பொருள் உனக்கு விளங்கவில்லை. குண்டலினி என்ற சொல்லைச் சுற்றி முட்டாள்தனமான பல கருத்துக்களையும் கற்பித்துவிட்டார்கள் என்பதாலேயே அதைக் குண்டகுப்பை என்றார். குண்டலினி என்றும் சர்ப்ப சக்தி என்றும் ஏதேதோ சொல்லிச் சொல்லி உளறிக் கொண்டிருந்துவிட்டார்கள். அவர்களுக்கு அதைப் பற்றி ஏதும் தெரிந்திருக்கவே இல்லை. சும்மா கதை பண்ணிக் கொண்டிருந்துவிட்டார்கள். எல்லாமும் கற்பனை விரித்த கோட்பாடுகளும் கொள்கைகளும்தான்.

குண்டலினியைப் பற்றி எழுதப்பட்ட நூறு புத்தகங்களுக்குத் தொண்ணூற்று ஒன்பதில் முட்டாள்தனமான விஷயங்கள்தான் நிறைந்திருக்கின்றன. குர்ட்ஜீஃபிடம் வந்தவர்கள் தியசாபிகல் தத்துவம், கோட்பாடுகள், நெறிகள் பற்றி எல்லாம் தெரிந்த பின்னர்தான் அவரிடம் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்குத் தெரியும் என்று எதையெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தார்களோ அதையெல்லாம் அவர் நொறுக்கித் தள்ள வேண்டியிருந்தது.

குண்டலினிக்கு எதிராக அவர் ஏதும் சொல்ல வரவில்லை. அவர் சொல்லியிருக்கவும் முடியாது. ஏனென்றால் ப்ளாவாட்ஸ்கி, அன்னிபெஸண்ட், ஆல்காட், லெட்பீட்டர் என்பவர்களுக்குத் தெரிந்திருந்ததை விட அதிகம் தெரிந்தவர் குர்ட்ஜீஃப். இவர்கள் எல்லோரும் கோட்பாடுகளை வகுப்பதில் விற்பன்னர்கள். அதில் பிரமாதமான விற்பன்னர்கள்தான். ஒளி வட்டங்கள், நிறங்கள், குண்டலினி என்ற வார்த்தைகளைக் கொண்டு உலகளாவிய இயக்கம் ஒன்றைத் தோற்றுவித்தவர்கள். பழைய சித்தாந்தங்களில் இருந்து புதிய வார்த்தைகளைப் படைத்துக் கொண்டு வியாபாரம் செய்தவர்கள். இந்த வார்த்தைகளை வைத்துக்



கொண்டு அவர்கள் கற்பனா லோகங்களைப் படைத்தவர்கள்.

இதைக் குண்டகுப்பை என்று குர்ட்ஜீஃப் சொன்னதும் சரிதான். குண்டலினியை எழுப்புவதுதான் ஒருவனுக்கு ஏற்படக்கூடிய மிகப் பெரிய பாதகம் என்று அவர் சொன்னதும் சரிதான். ஆனால் அவர் எப்போதும் தன் சீடர்களை ஒரு குறிப்பிட்ட சூழலில் வைத்து அவர்களைப் பற்றிப் பேசியிருக்கிறார் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அவர்களுடைய குண்டலினி பற்றிய கருத்துக்களை அவர் நீக்க வேண்டியிருந்தது. அதனால்தான் அப்படிச் சொன்னார். ஒரு நல்ல குரு முதலில் செய்ய வேண்டியது அதுதான். அடிப்படையில் தவறானதும் வெறுமனே இரவல் வாங்கி வைத்துக் கொண்டிருப்பதுமான அறிவை நொறுக்கிவிடுவது.

சத்தியத்தை உனக்குப் பரிச்சயம் செய்து வைக்குமுன் பொய்மைக்கும் உனக்குமான பரிச்சயத்தை நீக்க வேண்டும். சில நேரங்களில் குருவானவர் இரக்கமற்றுக் கூட நடந்து கொள்ள வேண்டி இருக்கும். ஒன்றைப் பற்றிப் பேசும்போது இல்லாததைக் கூடச் சொல்ல வேண்டியிருக்கும். குண்டலினி பற்றிய கருத்துக்கள் தவறானவை அல்ல. ஆனால் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத்தினருக்குக் குர்ட்ஜீஃப் சொன்னது சரிதான்.

மேலும் கோபி கிருஷ்ணா போன்ற சிலர் இருக்கிறார்கள். இவர்கள் குண்டலினி பற்றியும் சர்ப்ப சக்தி பற்றியும் எழுதுகிறார்கள். குண்டலினி மூலம் வெளிப்படும் சிறப்பான மேதைமை பற்றி எழுதியிருக்கிறார்கள். அப்படி ஒன்று கோபி கிருஷ்ணாவுக்கு நடந்ததில்லை. என்ன மாதிரியான மேதை அவர்? அதிகம் போனால் அவருடைய மேதைமை கவிதைகளில் வெளிப்பட்டு இருக்கிறது. அதுவும் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் எழுதிய கவிதைகளைப்



போன்றவை. வாழ்க்கை முழுக்கக் குமாஸ்தாவாகக் குப்பை கொட்டியவர் அவர். அவருடைய கவிதையிலும் குமாஸ்தா வீச்சம்தான் இருக்கிறது. அதில் அழகில்லை. எந்தப் பிரமாதமும் இல்லை. அதில் சீர்மையானது என்று சொல்ல ஏதும் இல்லை.

இப்போது அவர் குண்டலினியை எழுப்பும்போது அடங்கிக் கிடக்கும் மேதமை வெளிப்படுகிறது என்று உலகம் முழுக்கப் போய்ச் சொல்லிக் கொண்டிருக்கிறார். எத்தனை யோகியர் நோபல் பரிசு வாங்கியிருக்கிறார்கள்? எத்தனை யோகியர் விஞ்ஞானம், கலை, கவிதை, ஓவியம், சிற்பம் என்றிவற்றுக்குத் தம் பங்களிப்பை அளித்திருக்கிறார்கள்? இந்த உலக மேம்பாட்டுக்கு இந்தக் குண்டலினி சக்தியை எழுப்ப முடிந்தவர்கள் என்னதான் செய்திருக்கிறார்கள்?

கோபி கிருஷ்ணா பேசுவது குண்டலினி பற்றி அல்ல. குண்டகுப்பை பற்றித்தான் பேசுகிறார். ஒரே அடியில் குர்ட்ஜீஃப் அவரை வீழ்த்தி விடுவார். என்றாலும் அவரால் மக்களை வசீகரிக்க முடிகிறது. ஆன்மிக முட்டாள்தனம், மாயமந்திரம், எத்தகம் இவை மக்களை ஈர்க்கத்தான் செய்கின்றன. சக்கரங்கள், சக்தி மையங்கள், அவற்றின் வழியாகப் போகும் குண்டலினி இவற்றைப் பற்றிப் பேசிப் பார். எல்லோரும்தான் கவனிக்கிறார்கள். எதுவும் தெரிந்திருக்க வேண்டும் என்பதில்லை. வெறுமனே அதைப் பற்றிப் பேசிப் பார். எத்தனை பேர் நீ பேசுகிற அனர்த்தத்தைக் கேட்கக் கூடுகிறார்கள் என்று பார்.

சமணத் துறவிகள் குண்டலினி பற்றிப் பேசுவதில்லை. பௌத்தத் துறவிகள் அதைப் பற்றிப் பேசுவதில்லை. இந்திய யோக சாஸ்திரம் மட்டுமே அதைப் பற்றிப் பேசுகிறது.

அதில் ஏதோ ஒன்று இருக்கிறது. ஆனால் அது இவர்கள் சொல்வது அல்ல. குண்டலினி பற்றி எல்லோரும் பேசித்



திரிவது உளறல்தானே தவிர மற்றொன்றில்லை. அதனால்தான் குர்ட்ஜீஃப் அதைத் தாக்குவதில் தவறில்லை என்றாகிப் போகிறது. அவர் தியஸாபிகல் இயக்கத்தை மொத்தமாக நிராகரித்து ஒதுக்குகிறார். தியஸாபிஸ்டுகளும் அவருக்கு எதிரானவர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. என்றாலும் உலகளாவிய ஓர் இயக்கத்தைத் தோற்றுவித்துவிட்டார்கள். அவர்கள் அரசியல்வாதிகள், அறிஞர்கள், தர்க்கவாதிகள் - அவர்கள் எந்த விதத்திலும் ஞானிகள் அல்லர்.

குர்ட்ஜீஃப் பல நம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்தார். மக்களின் மிக அடிப்படையான கோட்பாடுகளில் ஒன்றைத் தகர்த்திருக்கிறார். ''ஆன்மா என்ற ஒன்று இல்லவே இல்லை. நீ ஆன்மாவோடு பிறக்கவே இல்லை. மிகுந்த பிரயாசைக்குப் பின்னரே ஆன்மா என்ற ஒன்றை உருவாக்கிக் கொள்ள முடியும். மிக அரிய மனிதர்களில் ஒரு சிலரே ஆன்மாவை உருவாக்கிக் கொள்ள முடியும். உலகில் திரியும் பல்லாயிரம் கோடி மக்களும் ஆன்மாவின்றியே திரிகிறார்கள்.''

இதை விட அதிர்ச்சி தரக்கூடிய ஒன்றை யார் சொல்ல முடியும், ''உனக்கு ஆன்மா என்று ஒன்று இல்லை. உள்ளே காலியாகத்தான் இருக்கிறாய். உனக்குள் யாரும் எதுவும் இல்லை. நீ இன்னும் பிறக்கவே இல்லை. நீ வெறும் உடல். ஓர் இயந்திரம். உண்மைதான். நீ ஓர் ஆன்மாவாகப் பரிமளிக்க முடியும். ஆனால் அதற்குப் பிரம்மப் பிரயத்தனம் பண்ண வேண்டும். அதன் பின்னரே உனக்கு ஆன்மா என்று ஒன்று இருக்க வரும். ஆன்மா என்ற ஒன்றைப் பெற்றுக் கொள்வதுதான் முடிவான வளமையாக இருக்கும்.''

வழிவழியாக ஆன்மிகம் என்ற பெயரில் நீ ஆன்மாவோடுதான் பிறக்கிறாய் என்று சொல்லிக் கொண்டு இருந்துவிட்டார்கள். அது மிகத் தவறான நிலைமைக்கே



கொண்டு சென்றிருக்கிறது. ஆன்மாவோடேயே பிறந்திருக்கிறாய் என்று சொல்லியிருக்க ஒவ்வொருவரும், "பிறகென்ன கவலை? ஏற்கெனவே நான் நித்தியமான ஓர் ஆன்மா. இந்த உடல் அழிந்து விடும். ஆன்மாவாகிய நான் அழியாதிருக்கப் போகிறேன்" என்று நினைத்துக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள்.

குர்ட்ஜீஃப் "நீ உன் உடலைத் தவிர வேறு எதுவும் அல்ல. இந்த உடல் இறக்கும்போது நீயும் இல்லாமல் போய் விடுவாய். ஏதோ ஒரு மிகச் சிலரே பிழைத்திருக்கிறார்கள். அப்படிப் பிழைத்தவர்கள் வாழும்போதே தம் ஆன்மாவை ஆக்கி வைத்தவர்கள். எல்லோருக்கும் அது சாத்தியமில்லை. ஒரு புத்தர் நிலைத்திருக்கிறார். ஒரு யேசு நிலைத்திருக்கிறார். நீ நிலைத்திருக்கப் போவதில்லை. நீ அப்படியே சாகப் போகிறாய். நீ இருந்ததற்கு எந்த அடையாளமும் இருக்கப் போவதில்லை" என்றார்.

என்ன செய்ய முயன்றார் இந்தக் குர்ட்ஜீஃப்? உன்னுடைய அடி ஆழத்தை ஆட்டம் காண வைத்துவிட்டார். உன் மேன்மைக்கென நீ செய்ய வேண்டிய காரியங்களை எந்த ஆறுதல்களின் பேரில் எந்தக் கோட்பாடுகளின் பேரில் தள்ளிப் போட்டுக் கொண்டே இருந்தாயோ அவற்றை அறவே நீக்கிவிட்டார்.

"உங்களுக்கு ஆன்மா என்ற எதுவும் இல்லை. நீங்கள் மரஞ்செடிகளைப் போல. முட்டைக் கோஸ் அல்லது காலிபிளவர். காலிபிளவர் என்பது காலேஜ் படிப்பு படித்த முட்டைக்கோஸ். இதற்கு மேல் நீங்கள் யாரும் அல்ல. எதுவும் அல்ல."

இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் உண்மையில் சிறந்ததொரு குருவே. உன் காலடி நிலத்தை அப்படியே உருவி விட்டுவிட்டார். அவர் தந்த அதிர்ச்சியால் உன் வாழ்வை முழுக்க மறு பரிசீலனை செய்ய வேண்டிய



கட்டாயம் உனக்கு வந்து விட்டது. முட்டைக் கோஸாகவே இருக்கப் போகிறாயா? அவர் விவரித்த சூழலைப் புரிந்து கொள்ளும் எவரும் அவரவர் ஆன்மாவுக்கெனத் தேடுதலில் இறங்கியே ஆகவேண்டிய கட்டாயம் வந்துவிட்டது. யார்தான் யாருமில்லாமல் போகத் துணிவது?

ஆன்மா நித்தியமானது என்ற கோட்பாடு ஓர் ஆறுதலைத் தருகிறது. இறக்கப் போவதில்லை. இறப்பு ஒரு மயக்கம். ஒரு நீண்ட தூக்கம். அமைதியான ஒரு தூக்கம். மறுபடி பிறக்கத்தான் போகிறோம் என்றிவ்வாறு ஏமாற்றிக் கொள்ள வழி செய்யும் ஒரு கோட்பாடுதான் இது. குர்ட்ஜீஃப், ''இதுவெல்லாம் முட்டாள்தனம். செத்துப் போனாயா, ஒரேயடியாக இல்லாமல் போகப் போகிறாய். அதாவது ஆன்மா என்ற ஒன்றை நீயே உருவாக்காத பட்சத்தில்...'' என்கிறார்.

வித்தியாசத்தைக் கவனி. நீ ஏற்கெனவே ஓர் ஆன்மா என்று சொல்லியிருக்கிறார்கள். குர்ட்ஜீஃப் அதை முழுக்க மாற்றிவிடுகிறார். ''நீ ஏற்கெனவே ஓர் ஆன்மாவாக இருப்பவனல்ல. நீ ஆன்மாவாவதற்கு ஒரு சந்தர்ப்பம்தான் நீயாக இருப்பது. அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம் அல்லது தவற விட்டுவிடலாம்.''

ஒன்று சொல்லத்தான் வேண்டும். குர்ட்ஜீஃப் ஓர் உபாயத்தைக் கையாள்கிறார். அவர் சொல்வது நிஜமல்ல. நீ ஆன்மாவோடுதான் பிறக்கிறாய். ஆனால் இந்தச் சத்தியத்தை ஓர் ஆறுதலாகக் கொண்டு திரியும் மக்களை வைத்துக் கொண்டு என்ன செய்வது? உன் தூக்கத்திலிருந்து உன்னை இழுத்துப் போட மிக உயர்வான குரு சில சமயம் பொய் சொல்ல வேண்டியிருக்கிறது. மிக உயர்வான குருவுக்கே அப்படிப் பொய்களை உபாயமாகக் கைக் கொள்ளும் உரிமை உண்டு.



உதாரணமாக நீ தூங்கிக் கொண்டிருக்கிறாய் என்று வைத்துக் கொள். உன்னை எழுப்பி எழுப்பிப் பார்க்கிறேன். அசைத்துப் பார்க்கிறேன். நீ எழுந்திருப்பதாகத் தெரியவில்லை. உடனே, ''தீ! தீ!'' என்று கத்துகிறேன். உடனே நீ எழுந்து வீட்டை விட்டு ஓட ஆரம்பிக்கிறாய். வெளியே வந்தவுடன் நான் நடந்ததைச் சொல்லி உன்னைச் சமாதானப்படுத்துகிறேன்.

உன் ஆன்மா உனக்குப் பரிச்சயமாகிப் போனபின் குர்ட்ஜீஃப் உன் காதுகளில் கிசுகிசுத்துச் சொல்லப் போகிறார். ''கவலைப்படாதே! நான் சொன்னதை எல்லாம் மறந்துவிடு. அது தேவையாக இருந்தது. அது ஓர் உபாயம். நான் தீ! தீ! என்று கத்த வேண்டி இருந்தது. இல்லாவிட்டால் நீ எழுந்திருக்கப் போவதில்லை.''

ஆனால் இப்படிப்பட்டவர்களைத் தவறாகத் தான் புரிந்து கொள்வார்கள். குர்ட்ஜீஃப் போன்ற ஒருவரைப் புரிந்து கொள்வது முடியாத காரியம். அவரோடு அவருக்குச் சரியாகப் போனால்தான் அவரைப் புரிந்து கொள்ள முடியும்.

குர்ட்ஜீஃப் செய்து வந்த காரியமும் மிக ரகசியமான காரியம். வேறு எவ்வகையாகவும் அது இருந்திருக்க முடியாது. உண்மையான காரியங்கள் என்றும் புதிர்களே. அவை மறை பொருட்கள். அது எல்லோருக்கும் பொதுவானதல்ல. அப்படி இருக்கவும் முடியாது.

இடைக்காலத்தில் மெய்ஞானிகள் ரசவாதிகளைப் போலத் திரிந்தார்கள். கிறித்துவர்களை நம்பச் செய்வதற்காக அப்படி இருக்க வேண்டி இருந்தது. கிறித்தவக் கொள்கைகளுக்கு மாறுபாடான எல்லாவற்றையும் அவர்கள் அழித்து ஒழித்துக் கொண்டிருந்தார்கள். கிறித்துவத்தைத் தவிர வேறு எதையும் கடைப்பிடிக்க யாரையும் அவர்கள் விடவில்லை. வேறு கொள்கைகள் பற்றிப் பேசுவதைக் கூட



அவர்கள் அனுமதிக்கவில்லை. ''கிறித்துவும் கிறித்துவமும் மட்டுமே நெறி!'' என்றிருந்தார்கள்.

ஞானிகள் மறைந்து கொள்ள வேண்டும். ஆகவே அவர்கள் ஓர் அழகான மாயையை உருவாக்கினார்கள். அதுவே ரசவாதம் எனும் கருத்து. அவர்கள் தங்களை ரசவாதிகள் எனவும், ஆன்மிகத்திற்கும் தங்களுக்கும் சம்பந்தம் எதுவுமில்லை எனவும் கூறிக் கொண்டனர். தாங்கள் அழியா வாழ்வையும், அழியா இளமையையும் தேடுவதாகக் கூறிக் கொண்டனர். தாங்கள் எதையும் தங்கமாக மாற்றும் வழியைக் கண்டுபிடிக்க முயற்சிப்பதாக கூறிக்கொண்டனர்.

மக்களை ஏமாற்றுவதற்கே அவர்கள் ரசாயனக் கூடங்களை அமைத்தார்கள். ரசவாதி இருக்குமிடத்துக்குப் போனால் சாடிகள், மருந்துகள், மூலிகைகள், சோதனைக் குழாய்கள் என்றிவற்றைத்தான் பார்க்க முடியும். என்னவோ ஏகப்பட்ட ரசாயன ஆய்வுகள் செய்யும் இடத்தைப் போலத்தான் இருக்கும். ஆனால் உண்மையாக அங்கே நடந்து கொண்டிருந்த காரியம் அது அல்ல. உண்மையான காரியம் வெகு ஆழத்தில் நடந்து கொண்டிருந்தது.

ஒருமைப்பட்ட ஸ்படிகமாகிப் போனவர்களை உரு வாக்குவதுதான் உண்மையான காரியம். விழிப்புணர்வைக் கொண்டு வருவது தியானம். கிறித்துவம் தியானத்தை ஏற்றுக் கொள்ளாது. பிரார்த்தனைகள் போதும் என்கிறது. அகத் தேடலை ஏற்றுக் கொள்வதில்லை. கடவுளைத் துதிப்பது போதும் என்கிறது. ஞாயிற்றுக் கிழமை சர்ச்சுக்குப் போனால் போதும் என்கிறது. பைபிளைப் படித்தால் அது போதும் என்கிறது. இப்படி விளையாடுவதற்குப் பொம்மைகளைத் தருகிறது. உலகம் முழுக்க நடப்பதும் அதுவேதான்.

## தம்மபதம் – II



இந்தியாவிலும் மெய்ஞானிகள் மறைந்து இருந்து இருக்கிறார்கள்.

ஒரு ஸூஃபி கதையொன்றைப் படித்தேன். குர்ட்ஜீஃப் ஸூஃபி சம்பிரதாயத்தில் ஊறியவர். அடிப்படையில் அவர் ஒரு ஸூஃபியேதான். ஸூஃபிக்களிடமிருந்துதான் அவர் பலதையும் கற்றுக் கொண்டார்.

இனி க்தை:

ஒரு சீடன் குருவிடம் வந்தான். ''அய்யா நான் சங்கடத்தில் மாட்டிக் கொண்டேன். நகரத்தில் இருக்கும் மிகப் பெரிய பணக்காரர் ஒருவர் யாத்திரை போகப் போகிறார். அவருடைய மகள் கொள்ளை அழகு. என்னுடைய நல்ல ஒழுக்கத்துக்காக என்னை எல்லோரும் மதிக்கிறார்கள். அதனால்தான் இந்த வம்பே. யாத்திரை போகிற பணக்காரர் தான் திரும்பி வரும் வரை தன் மகளை நான் பார்த்துக் கொள்ள வேண்டும் என்கிறார். என்னிடமே அவளை விட்டுவிட்டுப் போகிறேன் என்கிறார். எனக்கோ பயமாக இருக்கிறது. அவள் அவ்வளவு அழகாக இருக்கிறாள். மெய்யாலுமே மிகச் சிறந்த அழகிதான். எனக்கு அவள் மேல் எப்போதுமே ஒரு கண் இருந்து கொண்டே இருந்திருக்கிறது. ஆறு மாதமாக அவளைப் பார்ப்பதையே தவிர்த்து வந்திருக்கிறேன். இப்போது சோதனைதான். ஆறு மாதத்துக்கோ அல்லது ஒன்பது மாதத்துக்கோ அவள் என்னோடேயே இருந்தால் நான் என்ன செய்வேன் என்பது எனக்கே தெரியாது. என் மீதே எனக்கு நம்பிக்கை இல்லை. என்ன செய்வது குருவே?'' என்கிறார்.

அவர், ''எனக்குத் தெரிந்த ஒருவர் உன் சங்கடத்துக்கு ஒரு தீர்வு வைத்திருக்கிறார். அவரைப் போய்ப் பார்'' என்கிறார்.



ஒரு பைத்தியக்காரர் வாழ்ந்த பக்கத்துக் கிராமத்துக்கு அவரைப் போகச் சொல்கிறார். இவரோ, ''அந்தப் பைத்தியம் என்ன செய்யப் போகிறது? அவரைப் பற்றி நிறையவே கேள்விப்பட்டிருக்கிறேன். முழுப் பைத்தியம். அவரால் எனக்கு என்ன சகாயம் செய்ய முடியும்?'' என்கிறார்.

குருவோ, ''போய்ப்பார். ஆனால் நன்கு கவனி. அங்கே நடக்கும் ஒவ்வொன்றையும் மிகக் கவனமாகப் பார்!'' என்கிறார்.

அவரும் அப்படியே போகிறார். அழகிய பையனொருவன் அவர் குடிப்பதற்குக் கோப்பையில் மது ஊற்றிக் கொண்டிருக்கக் காண்கிறார். முகம்மதியர்கள் காலங்காலமாகவே ஓரினச் சேர்க்கைப் பழக்கம் உடையவர்கள். முகம்மதியர்களின் சொர்க்கத்தில் கூட இந்தப் பழக்கம் இருக்கிறது. இந்துக்களின் சொர்க்கத்திலோ கிறித்துவர்களின் சொர்க்கத்திலோ அதற்கு இடமில்லை. யூதக் கடவுள் கூட இதற்கு எதிரானவர். முகம்மதியர்களின் கடவுள் இந்த வகையில் சற்றே நீக்குப் போக்குத் தெரிந்தவர். குணவான்களுக்கு நல்ல நல்ல அழகிகளைத் தவிர அழகான இளைஞர்களையும் தருகிறவர்.

இந்தப் பைத்தியக்காரனுக்கு அழகிய இளைஞன் மது ஊற்றிக் கொடுக்க அவரும் அதைக் குடித்துக் கொண்டிருந்தார். அதைப் பார்த்தவருக்கு ஒரே வெறுப்பு. ஆனால் குரு நடப்பதை எல்லாம் கவனிக்க வேண்டும் என்று சொல்லியிருந்ததால் கவனித்தார். அப்படிக் கவனித்த பின் அவரிடம் போய் ஆலோசனை கேட்க வேண்டும் என்று சொல்லியிருந்தார். இவரோ தன் பிரச்சனையையே மறந்து போனவராக அவரிடம் போய், ''என்னதான் நடக்கிறது இங்கே? என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.



அவர் சிரித்துக் கொண்டே, ''இவன் என் மகன். பக்கத்தில் வந்து பார். என் கோப்பையில் இருப்பது வெறும் தண்ணீர்தான்!'' என்றார்.

இவரோ, ''பிறகேன் மதுவைக் குடிப்பது போலப் பாசாங்கு செய்கிறீர்கள்? யாரும் தண்ணீரை மது குடிப்பதைப் போல மெல்ல மெல்ல குடிப்பதில்லையே. அப்படியே அவன் வைத்திருக்கும் பாத்திரமும் தண்ணீர் ஊற்றும் பாத்திரமல்ல. மது ஊற்றி வைத்திருக்கும் கலயமாகத்தானே இருக்கிறது?'' என்கிறார்.

அந்தப் பைத்தியக்காரர் சிரித்துக் கொண்டார். ''அப்படி இருந்தால்தானே யாரும் அவருடைய அழகிய மகளை என்னிடம் ஒப்படைத்துவிட்டு யாத்திரை கிளம்ப மாட்டார்கள்! இது ஓர் உபாயம்!'' என்றார்.

அவருக்கு டெலிபதி தெரிந்திருக்க வேண்டும். வந்தவரை ஊடுருவிப் பார்த்து விவரம் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். ''எனவே யாரும் தங்கள் அழகிய மகளை என்னிடம் ஒப்படைப்பதில்லை. யாரும் என்னைத் தொல்லைப் படுத்துவதில்லை. நான் பாட்டுக்கு நிம்மதியாக இருக்கிறேன். இல்லையோ நான் நாடோடியாகத் திரிய வேண்டியதுதான். என்னுடைய பைத்தியக்காரத்தனம் நானே என்னைப் பற்றிக் கிளப்பி விட்டிருக்கிற ஒரு வதந்தி. நான் நல்லவன் அல்ல என்பது நானே உருவாக்கி வைத்திருக்கும் ஒரு வதந்தி. நீ உன்னைக் கவனித்து ஆன்ம வளர்ச்சி அடைய வேண்டுமானால் நீயும் இதைத்தான் செய்ய வேண்டும். திரும்பிப் போ. முட்டாள்தனமாக நடந்து கொள். பைத்தியமாக நடந்து கொள். ஒழுக்கமில்லாதவனைப் போல நடந்து கொள். பாசாங்காவது செய். யாரும் உன்னைத் தொந்தரவு செய்ய மாட்டார்கள்.''



குர்ட்ஜீஃபின் வாழ்வு ஒரு புதிராகத்தான் இருந்திருக்கிறது. யாருக்கும் அதைப் பற்றி ஒன்றும் தெரிந்திருக்கவில்லை. அவருடைய குடில் ரகசியமான குடிலாக இருந்திருக்கிறது. அங்கே என்னதான் நடக்கிறது என்று எல்லோருமே ஊகித்துக் கொண்டே இருந்திருக்கிறார்கள்.

அதுவேதான் என்னுடைய காரியங்களின் புதிய தளத்தில் நடக்கப் போகிறது. எனது கம்யூனில் மறைவான ஓரிடம் இருக்கப் போகிறது. வெளியே வேறு மாதிரியாகத் தெரியும். தச்சர்கள், குயவர்கள் என்று அவரவர் ஒவ்வொரு காரியத்தைப் பண்ணிக் கொண்டிருக்கப் போகிறார்கள். பார்வையாளர்களாக வருகிறவர்கள் அழகான ஒரு ஷோரூமைத்தான் பார்க்கப் போகிறார்கள். வேண்டியதை வாங்கிக் கொள்ளலாம். நமது சன்னியாசிகளின் படைப்புகள்தான். ஓவியங்கள், புத்தகங்கள், மரச் சிற்பங்கள் என்று... சுற்றிக் காண்பிக்கும் போது அழகான குளம், நீச்சல் குளங்கள், ஐந்து நட்சத்திர ஓட்டல் என்றுதான் பார்ப்பார்கள். என்ன நடக்கிறதோ அது மறைவாகத்தான் நடக்கும். அப்படி மறைவாக இருந்துதான் ஆக வேண்டும். இல்லையேல் அது நடக்கவே முடியாது.

உங்களுக்குச் சொல்லித் தர என்னிடம் சில ரகசியங்கள் இருக்கின்றன. அவற்றை உங்களுக்குச் சொல்லித் தராமல் நான் போய்விட விரும்பவில்லை. ஏனென்றால் அந்த ரகசியங்களை உங்களுக்குப் போதிக்க யாரையும் நான் இதுவரை கண்டேனில்லை. தாவோ, தந்த்ராவின் ரகசியங்கள், யோகாவிலிருந்து ரகசியங்கள், ஸூஃபிக்களின் ரகசியங்கள். ஜென் ரகசியங்கள் இவையெல்லாம் என்னிடம் இருக்கின்றன. நான் உலகின் எல்லாச் சம்பிரதாயங்களிலும் வாழ்ந்திருக்கிறேன். பல பிறவிகளில் நான் சுற்றி



அலைந்திருக்கிறேன். பல மலர்களில் இருந்து நிறையவே தேன் சேகரித்து வைத்திருக்கிறேன்.

நானும் போய்ச் சேர வேண்டிய காலம் வரத்தான் போகிறது. மீண்டும் நான் உடலெடுத்து வர முடியாது. இதுதான் என்னுடைய கடைசிப் பிறவியாக இருக்கப் போகிறது. நான் சேர்த்து வைத்திருக்கும் தேனை உங்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும். பிறகு நீங்களும் அதை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும். இப்படியாக அது மறையாது நின்று நிலவ வேண்டும்.

இது ரகசியமான காரியமாகத்தான் இருக்கப் போகிறது அஜீத் சரஸ்வதி. எனவே அதைப் பற்றி நான் பேச முடியாது. ஏற்கெனவே தேவைக்கு மேல் சொல்லி விட்டேன் என்று நினைக்கிறேன். இந்த அளவுக்குக் கூட நான் பேசியிருக்கக் கூடாது. முழுக்கத் தம்மை அர்ப்பணித்தவர்க்கே அந்த ரகசியங்களைத் தெரிந்து கொள்ளும் உரிமை இருக்கிறது.

இப்போதைக்கு இங்கே பெரிய அச்சகம் ஒன்று இருக்கிறது. இங்கே நடக்கும் நிகழ்வை எத்தனை பேருக்கு முடியுமோ அத்தனை பேருக்குத் தெரியப்படுத்துவதற்குத் தான். ஆனால் அசலான கம்யூனில் நடக்கும் உண்மையான தொண்டு பிறர் கண்களிலிருந்து மறைந்துதான் இருக்கும். அச்சகம் வேறு காரியங்களுக்காகப் பயன்படும். நிறையப் பேர் வந்து போய்க் கொண்டிருப்பார்கள். வருகிறவர்களிட மிருந்து நாங்கள் சரியானவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கிறது. இங்கே நடக்கும் காரியத்தில் பங்கு கொள்ளக் கூடியவர்களை நாங்கள் அழைக்க வேண்டும். இந்தக் கம்யூனில் தங்களைக் கரைத்துக் கொள்ளக் கூடியவர்களை நாங்கள் இனம் காண வேண்டும். உண்மையான காரியம் முழுக்க முழுக்க ரகசியமாகவே இருக்கப் போகிறது. அது எனக்கும் உனக்கும் இடையே நடக்கும் ஒரு தனிப்பட்ட காரியம்.



நமக்கிடையே கூட அதிகம் பேச்சு இருக்காது. மேலும் மேலும் நான் மௌனமாகத்தான் இருக்கப் போகிறேன். ஏனெனில் உண்மையான தொடர்பு வார்த்தைகளாலன்றி சக்தி வழியாக நடக்கப் போகிறது. சக்தியை மௌனமாகப் பெற்றுக் கொள்ள நீ தயாராகும்போது நான் மேலும் மேலும் மௌனித்துப் போய்விடுவேன். மறந்து விடாதே. உனக்கென என்னிடம் மிகப் பெரிய பொக்கிஷம் இருக்கிறது. பெற்றுக் கொள்ளத் தயாராக இரு.

என் காரியம் பிறருக்குத் தெரியாததாக ஆகிப் போகும்போது, ரகசியமானதும் புதிரானதாகவும் ஆகிப் போகும்போது என்னைப் பற்றி பல வதந்திகளும் அலசல்களும் உலகம் முழுக்கத் தோன்றத்தான் போகின்றன. கண்ணுக்குத் தெரியாத எதைப் பற்றியும் யாரும் சந்தேகப்படத்தான் செய்வார்கள். எந்தக் குறிப்பும் கிடைக்காமல் போகும்போது இங்கே நடப்பதைப் பற்றி தாமாகவே எதையாவது இட்டுக்கட்டிப் பேசத்தான் போகிறார்கள். எனவே அதற்கும் தயாராகவே இரு.

ஆனால் அதைப் பற்றி எந்தக் கவலையும் வேண்டியதில்லை. நமது குழு ரகசியமானதாகத்தான் இருக்கப் போகிறது. ஸாரதூஸ்ட்ரா உயிரோடிருந்தபோது அப்படியான குழுக்கள் இருந்தன. அப்படி ரகசியமான பல குழுக்கள் இன்றும் எகிப்து, இந்தியா, திபெத் என்று பல இடங்களிலும் இருக்கத்தான் செய்கின்றன. பிதகோரஸ் இந்த நாட்டுக்கு வந்தபோது இப்படியான ரகசியக் குழுக்கள் இருந்ததைக் கண்டிருக்கிறார். இந்தியாவிலும் எகிப்திலும் பல ரகசியக் குழுக்களில் அவரைச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். யேசு கூட யெஸ்ஸெனியர்கள் என்று அழைக்கப்பட்ட ரகசியக் குழுவில் பயிற்சி பெற்றிருக்கிறார்.



அகத்தினுள்ளே ஆழ்ந்து தம் சக்திகளைக் குவித்த ஒரு சிலர் மட்டுமே மனிதச் சரித்திரத்தில் அருமையானதும் சிறப்பானதுமான பலவற்றைச் சாதித்து இருக்கிறார்கள். என்னுடைய கம்யூன் அகத்தினூடே ஒரு ரகசியக் குழுவாக இருக்கப் போகிறது. அதுவே மிகச் சிறந்த துணிகரச் செயலாக இருக்கப் போகிறது. மிகச் சிறந்த நடனமாக இருக்கப் போகிறது.

இனி இரண்டாவது கேள்வி

அன்புக்குரிய குருவே,

இந்தப் புதிருக்குத் தீர்வு தாருங்கள்.
புத்தர்
''குறைவாகவே பேசு. மௌனம் அருமையானது.
சொல்ல என்ன இருக்கிறதென்கிறாய்?
கழிந்து போனதன் கதைகள்...
வர இருப்பதன் கனவுகள்...
மயக்கும் கிசுகிசுப்பு...
தர்க்கத்தில் சிறந்த வாதம்...
அத்தனையும் போலியாகத்தானே தெரிகின்றன!
மௌனம் அருமையாகத் தெரிகிறது''
என்கிறார்.
இருந்தாலும்...
தேத் தண்ணீர்க் கோப்பைகள் ஏந்திய கைகளோடு
அரட்டையடித்துக் களிக்கும்போது
பறவைகளின் குரலின் எதிரொலி கேட்கிறதே-
ஆனந்தமயமான பிரபஞ்சத்தில்
சக்தி பாய்வதைப் போல.

அன்புக்குரிய குருவே!
இந்தப் புதிருக்குத் தீர்வு தாருங்கள்.



**நிர்குண்,** கௌதம புத்தருடைய வார்த்தைகளை மிக பெரிதாக எடுத்துக் கொள்ளாதே. மௌனம் அருமையானதுதான். நிச்சயமாக மௌனம் அருமையானதுதான். யாரது அரட்டையடித்துக் களிப்பதில் அருமை இல்லையென்று உனக்குச் சொன்னது? பார்க்கப் போனால் எவ்வளவுக்கு அரட்டை அடிக்கிறாயோ அந்த அளவு உன் மௌனம் ஆழமானதாகிப் போகிறது.

இவை நேர் எதிரிடையானவை. ஒன்றை மற்றொன்று சமப்படுத்துகிறது. பகலில் நன்கு உழைத்தால் இரவில் நன்கு தூங்குகிறாய். ஆழ்ந்த தூக்கமாகத்தான் அது இருக்கப் போகிறது. நேர்எதிரிடையானவை. கடும் உழைப்பு அருமையான தூக்கம்.

எங்கோ தர்க்கம் இடிக்கிறதோ? தர்க்கப் பூர்வமாகப் பார்த்தால் எந்த அளவுக்கு ஓய்வெடுப்பதில் பயிற்சி எடுக்கிறாயோ அந்த அளவுக்குத் தூங்கி ஓய்வெடுக்க முடியும் என்றிருக்க வேண்டும். ஆனால் கடவுள் தர்க்கத்துக்கு அப்பாற்பட்டவர்தானே!

நாள் முழுக்க ஓய்வெடுக்கப் பயிற்சி செய்தால் இரவில் நன்கு ஓய்வெடுக்க முடியும் என்பது தர்க்க ரீதியாகச் சரியாகத் தெரிகிறது. ஆனால் நிலத்தை உழுகிறவனைப் பார். மண்ணைத் தோண்டி எடுத்து உழைக்கின்றவனைப் பார். தோட்டத்தில் வேலை செய்கிறவனைப் பார். விறகு பிளக்கிறவனைப் பார். தண்ணீரைக் கிணற்றில் இருந்து சேந்தி எடுத்துக் கொண்டு வருகிறவனைப் பார். வியர்வை சொட்டுகிறது. நாள் முழுக்கக் கடும் உழைப்பு மிகவும் சோர்ந்து விடுகிறான். சாதாரண தர்க்க வாதப்படி பார்த்தால் அவன் உறங்குவதற்குப் பயிற்சி எடுக்கவில்லை, அதனால் உறங்க முடியாது என்று சொல்லத் தோன்றும். ஆனால் நேர் எதிரிடையானதுதான் நடக்கிறது. அப்படித்தான் வாழ்வில் நடக்கிறது.



வாழ்க்கை நேர் எதிரானவற்றின் பாற்பட்டு நடை போடுகிறது. வாழ்க்கை தர்க்க ரீதியானதல்ல. அது வாதஞ்சார்ந்ததாக இருக்கிறது. வாதம் - பிரதிவாதம் - இரண்டும் ஒன்றை ஒன்று இட்டு நிரப்பிச் சமப்படுத்து கின்றன. அதன் கூட்டுறவில் பிறப்பது இன்னுமொரு வாதம், அந்த வாதத்துக்கு இன்னுமொரு பிரதி வாதம் என்று இப்படியே வாழ்க்கையின் போக்கு அமைகிறது. வாழ்க்கை அரிஸ்டாட்டிலின் கொள்கைப்படி அமையாமல் ஹெகிள்ஸ் கோட்பாட்டின்படியே அமைகிறது.

வெறுமனே கதைப்பதும் நல்லதுதான். அப்படி வெறுமனே கதைப்பதும் ஒரு தியானமாக முடியட்டும். அரட்டை என்று தெரிந்து கொண்டே அதை அனுபவிக்க முடியும். பார்க்கப் போனால் அரட்டை என்று தெரிந்து கொண்டால் அதை இன்னமும் சிறப்பாக அனுபவிக்க முடியும். அதற்குப் பிறகு மௌனம்தானே!

பறவைகள் கத்துவது கேட்பதற்கு இனிமையாக இருக்கிறது என்றாலும் திடீரென அவை மௌனித்து விடும்போது ஒரு மாபெரும் மௌனம் வந்து இருப்பதைக் கவனித்து இருக்கிறாயா? பறவைகளின் பாடல்களின் சத்தமே அதன் பிந்தைய மௌனத்தை ஆழ்ந்ததாக்குகிறது. புயலுக்குப் பிந்தைய மௌனமே மிக ஆழ்ந்ததும் அருமையானதும் ஆகிறது.

நிர்குண், புத்தரின் வார்த்தைகளை மிக பெரிதாக எடுத்துக் கொள்ளாதே. அவரை அப்படி எடுத்துக் கொள்ளச் சாத்தியங்கள் அதிகம்தான். ஏனென்றால் அவர் ஒற்றைப் பரிமாணக்காரர்.

இதே கேள்வியைப் புத்தரிடம் நீ கேட்டிருந்தால், ''நிர்குண்! நீ சரியான பாதையை அடைந்துவிட்டாய். அரட்டையை விட்டுவிட்டுப் பேச ஆரம்பித்துவிடு.



தேவையான அளவுக்கு மட்டும் பேசு. மிகக் குறைவான வார்த்தைகளில் சொல்ல வேண்டியதைச் சொல்லத் தேவையான வார்த்தைகளை மட்டுமே பேசு'' என்று சொல்லியிருப்பார். தந்தி பாஷை பேசச் சொல்லியிருப்பார். பத்து வார்த்தைகளில் ஒன்றைச் சொல்ல முடியுமானால் பதினொரு வார்த்தைகளைப் பயன்படுத்தாதே. எவ்வளவுக்கெவ்வளவு வார்த்தைகளைக் குறைக்க முடியுமோ அவ்வளவுக்கு நல்லது.

ஆனால் என்னுடைய அனுபவமே வேறு. அரட்டையை நிறுத்திவிடும்போது, பேசுவதை விட்டு விடும்போது, உன் மௌனம் மேலோட்டமானதாகிப் போய்விடும். உன் மௌனம் ஒருவகைச் சோகமாகிப் போகும். அதில் ஆழம் இருக்காது. எங்கிருந்து ஆழம் கிடைக்கும் என்கிறாய்? அதற்கு நேர் எதிரிடையானது எதுவோ அதிலிருந்துதான்.

ஓய்வெடுக்க வேண்டும் என்று நீ உண்மையாகவே விரும்பினால் முதலில் நடனமாடு. எல்லாவற்றையும் ஒதுக்கிக் கழித்துவிட்டு ஆடும் நடனம். உடலின் ஒவ்வொரு நரம்பும் நடனமாடட்டும். அதற்குப் பின் ஒரு தணிவை அனுபவிப்பாய். முழுமையான ஓய்வை உணர்வாய். அதை உணர நீ எதுவும் செய்ய வேண்டியதில்லை. தானாகவே அது நடக்கும்.

வம்பு பேசிப் பிறரைத் துன்புறுத்து என்று சொல்லவில்லை. அப்படிச் செய்தால் அது அரட்டையாக இருக்காது. வன்முறையாகிப் போகும். அரட்டையாக இல்லாமல் வேறு ஏதோ ஒன்று அரட்டையைப் போலத் தோன்றுவதாக ஆகிவிடும்.

அரட்டையடிப்பதும் ஒரு கலை. எந்த நோக்கமும் இல்லாமல் வேடிக்கைக்காக மட்டுமேயான வேடிக்கைப் பேச்சு - வெறுமனே பேசுவதற்காகவே பேசும் பேச்சு - அப்படி



அமையும் பேச்சு உன்னை மகிழ்வாக வைத்திருக்கும். அது நின்றுவிடும்போது - தொடர்ந்து பேசிக் கொண்டே இருக்க முடியாதல்லவா?' எதற்கும் ஒரு முடிவு இருக்கிறதல்லவா? தேத்தண்ணீர்க் கோப்பைகளைக் கைகள் ஏந்தியிருக்கப் பேசும் பேச்சு முடிவில்லாது இருக்க முடியாதல்லவா? கோப்பைகள் காலியாக, அரட்டையும் ஒரு முடிவுக்கு வந்து விடுமல்லவா? அப்படி அது நின்றுவிடும்போது ஆழ்ந்த மௌனம் வந்து சேரும்.

பறவைகள் புத்தர் சொல்வதை கேட்கவில்லை என்பதும் நல்லதற்குத்தான். மரங்களுக்கு புத்தரோடு பரிச்சயம் இல்லையென்பதும் நல்லதற்குத்தான். நிர்குண்! நீ ஒரு பௌத்தனாக வேண்டும் என்று நான் சொல்ல மாட்டேன். இந்தப் பௌத்த பிக்ஷுக்கள் எப்படிப்பட்டவர்கள் என்பது எனக்கு நன்றாகவே தெரியும். அவர்கள் ரொம்ப சீரியஸ் பேர்வழிகள். அந்த சீரியஸ்நெஸ் அவர்களைப் பொறுத்த அளவில் ஒரு வியாதியாகக் கூடப் போய்விட்டது. அவர்களால் சிரிக்க முடியாது. ஒரு வேடிக்கைப் பேச்சுப் பேச முடியாது. புத்தரைப் பற்றிய என் பேச்சுக்களை அவர்கள் படிக்கும்போது நான் சொல்லும் அப்படி இப்படியான ஜோக்குகளைக் காணும்போது அவர்கள் கண்களை மூடிக் கொள்கிறார்கள். அவர்களால் அதைப் படிக்க முடிவதில்லை. அப்படியே சுருங்கிப் போய் விலகிப் போய்விடுகிறார்கள். என்னை மன்னிக்கவே மாட்டார்கள்.

சீரியஸாக இருந்துவிடாதே. நான் சொல்வதே வாழ்க்கை ஒரு கொண்டாட்டமாக அமைய வேண்டும் என்பதுதான். அதனால்தான் புத்தரிடம் இருந்து நான் வேறுபட்டு இருக்கிறேன். புத்தர் சீரியஸானவர். அவர் சிரித்துக் கொண்டிருப்பதைப் போல ஏதாவது சிலை இருக்கிறதா பாரேன். புன்சிரிப்புக் கூட இருப்பதில்லை.



சீன ஜப்பானிய புத்தர் சிலைகள் சிரித்துக் கொண்டிருக்கின்றன. சிரிப்பு, புன்முறுவல், சமயத்துக்கு வெடிச்சிரிப்பு சிரிப்பதைப் போலக் கூட சீன ஜப்பானிய புத்தர் சிலைகள் இருக்கின்றன. வயிறு குலுங்கச் சிரிப்பதைப் போன்ற புத்தர் சிலைகளைக் கூட வடித்திருக்கிறார்கள். ஆனால் அவை எல்லாமே சீன ஜப்பானிய புத்தர் சிலைகள்தான்.

பார்க்கப் போனால் சீன அல்லது ஜப்பானிய புத்தர் சிலையோடு இந்திய புத்தர் சிலையை வைத்துப் பார்த்தால் அவை ஒருவருடைய சிலைகள்தான் என்பதை நம்புவது சிரமமாக இருக்கும். அவை அந்த அளவுக்கு வித்தியாசமாக இருக்கின்றன. இந்திய புத்தர் சீரியஸாக இருக்கிறார். உடலமைப்பில் ஒரு விளையாட்டு வீரனின் கட்டுறுதி இருக்கும். அகன்ற தோள்களோடும் குழிந்த வயிற்றோடும் இருப்பார். வயிறு இருப்பதே தெரியாது.

சீன ஜப்பானிய சிலைகளைப் பார். நேர் எதிரிடையானதாக இருக்கும். அகன்ற தோள்களா? இருக்கவே இருக்காது. தொப்பை அவ்வளவு பெரியதாக இருக்கும்போது தோள்கள் எப்படி அகன்றிருக்க முடியும்? பளிங்குச் சிலைகளில் கூடக் குலுங்கும் தொப்பையைக் காண்பாய். முகமோ ஒரு குழந்தையின் முகத்தைப் போல வட்டமாக இருக்கும். இந்திய புத்தரின் முகம் ரோமானிய முகத்தைப் போல வடிவு நேர்த்தியோடு இருக்கும். புத்தருடைய சிலைகள் இந்தியாவுக்கு அலெக்ஸாண்டர் வந்து போனதன் பின் வடிவமைக்கப்பட்டவை. அந்த முகத்தின் லட்சணங்கள் இந்திய லட்சணங்களே அல்ல. நன்கு கவனித்துப் பார்த்தால் உனக்கே தெரியும். அலெக்ஸாண்டரின் அங்க லாவண்யங்கள் மக்களை அந்த அளவுக்குக் கவர்ந்திருக்க வேண்டும். அதனால்தான்



அவரைப்போல புத்தரை வடித்து வைத்திருக்கிறார்கள். புத்தரின் உடல் . அலெக்ஸாண்டரின் முகம்.

மிகவும் சீரியஸானவர். அவர் சிரித்துக் கொண்டிருப்பதைப் போல நினைத்துப் பார்க்கக் கூட முடியாது. ஆனால் பௌத்தம் சீனாவை அடைந்தபோது அதற்கு நேர் எதிரான மாற்றத்தை அடைந்தது. இரண்டு துருவங்கள் சந்தித்துக் கொண்டதைப் போல. அங்கே ஒரு வாதப் பிரதிவாதம் நடந்தது. பௌத்தம் வாதமாக தாவோ பிரதிவாதமானது. புத்தரும் லாவோட் சூவும் சந்தித்துக் கொண்டார்கள்.

சீன புத்தர் சிலை ஒரு கலப்பு வடிவம் கொண்டது. பாதி கௌதமர் - மறுபாதி லாவோட் சூ. அந்தத் தொப்பையும் சிரிப்பும் லாவோட்சூவினுடையது. மௌனம் புத்தருடையது. இந்தச் சந்திப்புத்தான் உலகில் நடந்த சந்திப்புகளிலேயே மிகப் பிரமாதமான சந்திப்பு. இதிலிருந்து தோன்றியதுதான் சரித்திரத்தில் மிக ஆழமானதும் மிக முக்கியமானதும் ஆன ஜென் தத்துவத்தின் தோற்றம்.

ஜென் பௌத்தம் சார்ந்ததல்ல. தாவோ சார்ந்ததும் அல்ல. இரண்டும் ஒன்றாக இணைந்து போனது. மிக விநோதமான சந்திப்புத்தான். பார்க்கப் போனால் லாவோட் சூவும் புத்தரும் சந்தித்துக் கொண்டிருந்தால் அவர்களுக்கு இடையே பெரும் பேதங்கள்தான் இருந்திருக்கும். எந்த வகையிலும் இருவரும் ஒத்து வந்திருக்க மாட்டார்கள்.

லாவோட் சூ சிரிப்பையே வாழ்க்கையாக்கிக் கொண்டவர். எருமை மேல் சவாரி செய்தவர். ஒரு கோமாளியைப் போல இருந்திருப்பார். எப்போதுமே சிரித்துக் கொண்டிருந்தவர். விழுந்து விழுந்து சிரிக்கிறவர். வாழ்வின் வேடிக்கையை முட்டாள்தனத்தை எண்ணி எண்ணிச் சிரித்தவர்.

## முழுக்க அனுபவித்து நடனமிடு



புத்தரும் லாவோட்சூவும் இரு துருவங்கள். அதனால்தானோ என்னவோ அவர்களுடைய தத்துவங்கள் ஒன்றை ஒன்று ஈர்த்திருக்க வேண்டும். இரண்டுமே தம்மளவில் முழுமையாகாதவை. இரண்டும் சேர்ந்தபோது ஒரு முழுமை வந்து சேர்ந்தது. லாவோட் சூவோ புத்தரோ ஜென்னை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

கதை ஒன்று கேட்டிருக்கிறேன்.

சொர்க்கத்தில் ஒரு கஃபேயில் புத்தர், கன்ஃப்யூஸியஸ், லாவோட் சூ ஆகிய மூவரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக் கிறார்கள். கடையின் சொந்தக்காரி - பிரமாதமான அழகி - வருகிறாள். வாழ்வின் ரசத்தைக் கொண்டு வருகிறாள்.

புத்தர் உடனே கண்களை மூடிக் கொள்கிறார். ''அதை நான் ஏறெடுத்துப் பார்க்க மாட்டேன். வாழ்க்கை ஒரு பெரும் துயரம். கண் கொண்டு பார்க்க முடியாதது. பிறப்பு ஒரு துயரம். வாழ்க்கை ஒரு துன்பம். இறப்பு ஒரு துன்பம். அதை அந்தப் பக்கம் கொண்டு போய் விடு. அப்போதுதான் நான் கண்ணைத் திறக்க முடியும்'' என்றார்.

கன்ஃப்யூஸியஸ் கண்களைப் பாதி திறந்து அதைப் பார்க்கிறார். அவர்தான் எதிலும் நடுவழியைக் கடைப் பிடிக்கிறவர் ஆயிற்றே! அது ஒரு பாதி என்பது வேறு கதை. அரைக் கண்ணைத் திறந்து அதைப் பார்த்து, ''சுவைத்துப் பார்க்காமல் அதை மறுத்து ஒதுக்க முடியாது'' என்கிறார். அவர்தான் விஞ்ஞான பூர்வமானவர் ஆயிற்றே! ''சோதனை செய்யாமல் எதைப் பற்றியும் எதுவும் சொல்ல முடியாதல்லவா? போகிற போக்கில் வந்ததும் போனதும் சொல்லிவிட்டுப் போய்விடக் கூடாது. அதனால் ஒரு மிடறு கொடு'' என்றார். குடித்துப் பார்த்துவிட்டு, ''புத்தர்



சொன்னது சரிதான். கசக்கிறது. துயரம்தான் இதில். புத்தர் சொன்னதற்கு நான் சாட்சி என்றாலும் புத்தர் செய்தது தவறு என்றுதான் சொல்வேன். அது எப்படி அதைக் குடித்துப் பார்க்காமல் ஒதுக்குவது? என்னதான் அவர் சொல்வது சரியென்றாலும் அவர் சொன்ன விதம் தவறு'' என்றார்.

லாவோட் சூ பாத்திரத்தோடு அதைத் தன் வாய்க்குள் கவிழ்த்துக் கொண்டார். கடைக்காரி எதுவும் சொல்வதற்குள் அதைக் குடித்து முடித்துவிட்டார். அத்தனையும் குடித்து விட்டாரா! நடனமாட ஆரம்பித்து விட்டார். ஒரு வார்த்தை சொல்லவில்லை. கசப்பா? இனிப்பா? துயரமா? பரவசமா? ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. ஓரளவுக்கு அவர் நிதானத்துக்கு வந்த பின் புத்தரும் கன்ஃபியூஸியஸும் அவரிடம், ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார்கள்.

''சொல்வதற்கு ஒன்றுமேயில்லை. வாழ்வை ஒட்டு மொத்தமாக அருந்திவிட வேண்டும். அப்போதுதான் அது என்ன என்று தெரியும். தெரிந்து கொண்டால் சொல்வதற்கு ஒன்றும் இருப்பதில்லை. அதை எப்படியும் வகைப்படுத்த முடியாது. துயரம் பரவசம் இரண்டும் ஒவ்வொரு வகைப்பட்டவை. வாழ்க்கை எந்த வகைப்பாட்டையும் சேர்ந்ததல்ல. ஆனால் அதை முழுக்க ஒருவர் தெரிந்து கொள்ள வேண்டும். நான்தான் அதை முழுக்கத் தெரிந்து கொள்ள முடியும். நீங்கள் குடிக்கவே இல்லை. கன்ஃபியூஸியஸ் சுவைத்து மட்டுமே பார்த்தார். பகுதியைத் தெரிந்து கொண்டு முழுவதை இப்படித்தான் என்று சொல்லக் கூடாது. நான் மட்டுமே அது எப்படிப்பட்டது என்று சொல்ல முடியும். நானோ சொல்லப் போவதில்லை. ஏனெனில் அது சொற்களுக்கு அப்பாற்பட்டது. உங்களுக்கும் அது எப்படி



என்று தெரிந்து கொள்ள வேண்டுமானாலும் இன்னுமொரு பாத்திரம் ஆர்டர் பண்ணுகிறேன். குடித்துப் பார்த்து நடனமிடுங்கள். அதுதான் ஒரே வழி'' என்றார்.

எதைப் பற்றியும் தெரிந்து கொள்வதற்கு அது ஒன்றுதான் வழி.

பௌத்தமும் தாவோவும் சந்தித்துக் கொண்டது மிக விநோதமான நிகழ்ச்சிதான். ஆனால் அது அப்படித்தான் நடந்திருக்க வேண்டும் என்றிருக்கிறது. அது தவிர்க்க முடியாதது. வெவ்வேறு துருவங்கள் சந்தித்துக் கொண்டுதான் ஆக வேண்டும். மின்சாரத்தின் அல்லது காந்தத்தின் நேர் எதிர் முனைகள் ஒன்றை ஒன்று ஈர்ப்பதைப் போலத்தான்.

பௌத்தம் இந்தியாவில் இருந்து சீனாவுக்குப்போய்ச் சேர்ந்தது. தாவோ இந்தியாவுக்குப் போகவில்லை. தாவோ பரவசப் போதையில் இருந்ததால் யாருக்கும் எந்தக் கவலையும் இல்லாதிருந்தது. பௌத்தம் பரவியது. பரவியாக வேண்டியிருந்தது. அதனுடைய சீரியஸ் இயல்பே சுமையாகிப் போய்விட்டது. பௌத்தத்தின் ஒளியாக இருந்த புத்தர் மறைந்த பின்னர் அவரைப் பின்பற்றியவர்களுக்கு அந்த நெறி ஒரு பெரும் சுமையாகிப் போனது. தாங்க முடியாத சுமை. எனவே சீரியஸ் அல்லாத ஒன்றைத் தேடி ஒரு மாற்றைத் தேடி அவர்கள் போக வேண்டியிருந்தது. அப்போதுதானே சமநிலை அடைய முடியும்!

நிர்குண், பௌத்தத்தை மிக பெரிதாக எடுத்துக் கொள்ளாதே. உன்னுடைய அரட்டையை அனுபவி. வாழ்வின் சின்னச் சின்ன விஷயங்களை, சின்னச் சின்ன மகிழ்ச்சிகளை அனுபவி. அவை எல்லாமும் உன் ஜீவிதத்தின் உயர்வுக்குத் தம் பங்கைத் தருகின்றவை. ஒன்றை மட்டும்



*மறந்து விடாதே! ஜாலியாக இருப்பது உண்மையான ஆன்மிகவாதியின் அடிப்படைத் தேவைகளில் ஒன்று.*

ஓர் உண்மையுள்ள இளைஞன் யூதப் பாதிரியாரிடம் போனான். ''என்னுடைய பிரச்சனையே அதீதக் காமக் கிளர்ச்சிதான் அய்யா! ஒரு பெண்ணோடு கைகுலுக்கினால் போதும். நான் உணர்ச்சி வசப்பட்டு விடுகிறேன். வழியில் அழகான ஒரு பெண் என்னைக் கடந்து போனால் போதும். அப்படியே நான் கிடந்து தவிக்கிறேன். எனக்கு இது மிகவும் சிரமமாக இருக்கிறதே. என் மனைவியை நான் உள்ளன்போடு நேசிக்கிறேன்.

''ஒன்றும் பயந்து கொள்ளாதே மகனே! உன் பசியை எங்கே தூண்டிவிட்டுக் கொண்டால் என்ன? வீட்டுக்கு வந்து சாப்பிட்டால் அது போதும்...'' என்றார் அந்தப் பாதிரியார்.

அவர்தான் மிகச் சரியான ஆன்மிகவாதி. எதையும் சீரியஸாக எடுத்துக் கொள்ளாதவர். வாழ்வை விளையாட்டாக எடுத்துக் கொள்கிறவர். என்னுடைய சன்னியாசிகளும் அப்படி வாழ்வை ஒரு விளையாட்டாக எடுத்துக் கொள்ள வேண்டும். பிறகென்ன? இரண்டு உலகங்களும் உங்களுடையதாகிப் போகும். கையில் பணியாரம் - வயிறும் நிரம்பிவிடும்.

அதுதான் உண்மையான வாழும் கலை. இந்த உலகமும் அந்த உலகமும் உன்னுடையதாகிப் போகிறது. இரைச்சலும் மௌனமும் காதலும் தியானமும், பிறரோடு உன்னைச் சம்பந்தப்படுத்தி வாழ்வது - தனிமையை அனுபவிப்பது. இவை எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் சாதிக்க வேண்டும். அப்போதுதான் உன்னுடைய ஜீவிதத்தின் அடி ஆழத்தைச் சென்று சேர முடியும். உன் ஜீவிதத்தின் உச்சத்துக்குப் போய்ச் சேர முடியும்.

## மூன்றாவது கேள்வி



அன்புக்குரிய குருவே,

**பிரெடெரிக் நீட்ஷேயின் புகழ் பெற்ற வாக்கியம் கடவுள் இறந்துவிட்டார் என்பது. அதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?**

**நீரஜ்,** பிரெடெரிக் நீட்ஷே கடவுள் இறந்துவிட்டார் என்று சொன்னார். அப்படிச் சொன்னால் கடவுள் இருந்திருக்கிறார் என்றாகிப் போகிறது. எனக்குத் தெரிந்த வரையில் கடவுள் இருந்ததே இல்லை. கடவுள் இருந்திருக்கவே இல்லை என்றால் அவர் இறப்பதேது? கடவுள் ஆளல்ல - இருப்பதற்கும் இறப்பதற்கும். எனவே வாழ்வே கடவுள். கடவுள் என்றாலும் இருத்தல் என்றாலும் ஒன்றுதான். எனவே கடவுள் இருக்கிறார் என்றோ அல்லது இறந்து விட்டார் என்றோ சொல்ல முடியாது. கடவுள் வாழ்க்கையேதான். வாழ்க்கை என்றைக்கும் இருந்து கொண்டே இருந்திருக்கிறது. அது ஒரு தொடர் நிகழ்வு. நித்தியமான அதற்கு ஆதியும் இல்லை. அந்தமும் இல்லை.

நீட்ஷே சொல்ல வந்தது என்னவென்றால் அதுவரை யாரைக் கடவுள் என்று கற்பித்து மக்கள் வணங்கிக் கொண்டு இருந்தார்களோ அந்தக் கடவுள் ஏற்புடையவராக இல்லாமல் போய்விட்டார் என்பதுதான். அவர் எப்போதுமே திடுக்கிட வைக்கும் கூற்றுக்களைச் சொல்வதற்குப் பழகிப் போனவர். ''இதுவரை யாரைக் கடவுள் என்று கற்பித்து மக்கள் வணங்கிக் கொண்டு இருந்தார்களோ அந்தக் கடவுள் ஏற்புடையவராக இல்லாமல் போய்விட்டார்'' என்று சொல்வதற்குப் பதிலாக, ''கடவுள் இறந்துவிட்டார்'' என்று சொல்லி விட்டார்.



ஒரு வகையில் பார்த்தால் திடுக்கிடும்படி ஒன்றைச் சொல்லும்போது மக்களுடைய உணர்வைச் சுலபமாக ஊடுருவ முடிகிறது. இதையே தத்துவார்த்தமாகச் சொல்லியிருந்தால் இதன் தாக்கம் இந்த அளவுக்கு இருந்திருக்காது. சென்ற நூற்றாண்டில் சொல்லப்பட்டதில் மிக முக்கியமான வார்த்தைகளாக இவை அமைந்து விட்டதற்குக் காரணம் இந்தத் திடுக்கிடும் வகையில் சொன்னதுதான். வேறு எந்தக் கூற்றும் இதைப் போல முக்கியமானதாக அமைந்துவிடவில்லை. வேறு எந்தக் கூற்றும் மனித சிந்தனை, நடவடிக்கைகள், வாழ்க்கை மேல் இந்த அளவுக்குத் தாக்கத்தை ஏற்படுத்தவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

கிறித்துவக் கடவுள் இறந்துவிட்டார். யூதக் கடவுள் இறந்துவிட்டார். இதைத்தான் நீட்ஷே சொன்னார். இன்னும் பல கடவுளர் இருந்திருக்கிறார்கள். அனைவரும் அடித்துப் போய் இல்லாமல் போய் விட்டார்கள். பட்டியல் போட்டுப் பார்த்தால் இத்தனை கடவுளர் இருந்திருக்கிறார்களோ என்று அதிசயித்துப் போய்விடுவாய்.

அப்படிப்பட்ட பட்டியல் ஒன்றை நான் பார்த்திருக்கிறேன். ஒரு பெயர் கூடத் தெரிந்த பெயராக இல்லை. ஏறக்குறைய ஐம்பது கடவுளர் பெயர்கள் அதில் இருந்தன. எகிப்தியக் கடவுளர் இல்லை. எகிப்தியருக்கே அவர்களுடைய கடவுளர் பெயர்கள் மறந்து போய்விட்டன. ஒரு காலத்தில் அந்தக் கடவுளர் பெயரில் நரபலி கூடக் கொடுத்திருக்கிறார்கள். போர்கள் புரிந்திருக்கிறார்கள். சிலுவைப் போர்கள், கொலைகள், கற்பழிப்பு, தீயிட்டுக் கொளுத்திய கிராமங்கள் - இந்தக் கடவுளர் பெயரால் எல்லாமும்தான் நடந்திருக்கின்றன.

ஆனால் இப்போதோ அவர்கள் பெயர்கள் கூட யாருக்கும் நினைவில் இல்லை. பட்டியல் முழுக்கப் படித்துப்



பார்த்தேன். ஐம்பது பெயர்களில் ஒன்றைக் கூட யாருக்கும் தெரியவில்லை.

நிறையத்தான் கடவுளரைக் கற்பித்து வைத்துக் கொண்டிருந்தார்கள். அந்தக் கடவுளர் மீது சலிப்புத் தோன்றியபோது புதிய கடவுளரைக் கற்பித்துக் கொள்கிறார்கள். பழைய பொம்மைகளுக்குப் பதிலாகப் புதிய பொம்மைகள்.

இந்தக் கடவுளர் பிறக்கிறார்கள். இறக்கிறார்கள். ஆனால் இவர்கள் உண்மையான கடவுள் அல்ல. உண்மையான கடவுள் வாழ்க்கைதான். ஏஸ் தம்மோ சனந்தனோ - இருத்தலின் வற்றாத நெறி. அது எப்படி இறக்க முடியும்? வழியே இல்லை. வடிவங்கள் மாறலாம். அவ்வளவே.

ஒரு முறை கடவுள் நியூயார்க் நகரின் பூமிக்கடியில் செல்லும் ரயில் நிலையத்துக்குப் போனாராம். யாரோ ஒருவர் ''கடவுள் இறந்து விட்டார்'' என்று எழுதி நீட்ஷேயின் பெயரைக் கீழே எழுதி வைத்திருந்தாராம். அதற்குக் கீழே, ''நீட்ஷே இறந்து விட்டார்'' என்று எழுதிக் கடவுள் என்று அதற்கும் கீழே எழுதி வைத்திருந்ததாம்.

பின்னது முன்னதைவிட நிஜம்தான் என்றாலும் உனக்கு இன்னமும் பொருத்தமான ஒன்றைச் சொல்ல வேண்டும். லண்டன் ரயில் நிலையத்தில் இப்படி எழுதியிருந்ததாம், ''கடவுள் இறந்துவிட்டார். ஆனால் கவலைப்படாதே. மேரி மறுபடியும் கர்ப்பிணி.''

கடைசிக் கேள்வி

அன்புக்குரிய குருவே,

**குற்றம் மற்றும் பயம் பற்றிக் கொஞ்சம் சொல்கிறீர்களா?**



**லத்தீஃபா**, பயம் இயல்பானது. குற்றம் பூசாரிகளின் கண்டுபிடிப்பு. குற்றத்தைக் கற்பித்தவன் மனிதன். பயம் என்பது நம்மோடு தோன்றியது. அத்தியாவசியமானதும் கூட. பயம் இல்லையென்றால் பிழைத்திருக்கவே முடியாது. பயம் இயல்பானது. பயத்தால்தான் நீ தீக்குள் விரலை வைப்பதில்லை. பயத்தால்தான் இடது பக்கமோ வலது பக்கமோ அந்தந்த நாட்டின் விதிகளின்படி சாலையில் நடக்கிறாய். பயத்தால்தான் விஷத்தைத் தவிர்க்கிறாய். பயத்தால்தான் லாரி டிரைவர் ஹார்ன் அடிக்கிறார். நீயும் வழி விட்டு விலகி நிற்கிறாய்.

குழந்தைக்குப் பயமே இல்லையென்றால் பிழைத்துப் பெரிதாக முடியாது. பயம் என்பது வாழ்வுக்குக் காப்பாக அமைகிறது. உன்னைப் பாதுகாத்துக் கொள்வதில் எந்தத் தவறும் இல்லையே. இந்தப் பாதுகாப்பு கிடைத்ததே பயத்தால்தான். வாழ்க்கை மிக மதிப்புயர்ந்தது. பயம் அதைப் பாதுகாக்க உதவியாக இருக்கிறது. பயம் புத்திசாலித்தனம். முட்டாள்களும் மூடர்களுமே பயமின்றி இருப்பார்கள். எனவே அவர்களைப் பாதுகாப்பாக வைத்துக் கொண்டிருக்க வேண்டி இருக்கிறது. இல்லையென்றால் தீ வைத்துக் கொள்வார்கள். அல்லது கட்டிடத்தில் இருந்து குதித்து விடுவார்கள். நீச்சல் தெரியாமல் கடலுக்குள் இறங்கிவிடுவார்கள். அல்லது பாம்பை எடுத்து முழுங்கிவிடுவார்கள். எதை வேண்டுமானாலும் செய்து விடுவார்கள்.

பயம் புத்திசாலித்தனம். ஒரு பாம்பைப் பார்த்தவுடன் துள்ளிக் குதித்து ஓடுகிறாய் அல்லவா? இதில் கோழைத்தனம் ஏதும் இல்லை. புத்திசாலித்தனம் தான் வெளிப்படுகிறது என்றாலும் இதிலும் இரண்டு சாத்தியங்கள் இருக்கின்றன.



பயம் அசாதாரணமானதாகிப் போய்விடலாம். அப்போது அது வியாதியாகிப் போகிறது. என்னதான் அசாதாரணமான பயத்துக்கும் ஒரு காரணம் கற்பிக்கலாம் என்றாலும் பயப்பட வேண்டாததைப் பார்த்துப் பயப்படும்போது பயம் வக்கரித்துப் போய்விடுகிறது.

உதாரணமாக ஒருவனுக்கு ஒரு வீட்டுக்குள் போவதற்குப் பயம். வாதப் பிரதிவாதங்கள் மூலம் இந்தப் பயம் தவறானது என்று காண்பிக்க முடியாது. ''இந்த வீடு இடிந்து விழுந்து விட்டால் என்ன செய்வது?'' என்று அவன் கேட்டால் நீ பதில் சொல்ல முடியாது. வீடுகள் இடியத்தான் செய்கின்றன. வீடுகள் இடியக் கூடியவை என்றால் அந்த வீடும் இடிந்து விழலாம்தானே? அப்படி வீடுகள் இடிந்து விழும்போது அடியில் சிக்கி மக்கள் இறந்திருக்கிறார்கள். அந்த வீடு இடியவே இடியாது என்று யாரும் உத்திரவாதம் கொடுக்க முடியாது. பூகம்பம் வரலாம். எது வேண்டுமானாலும் நடக்கலாம்.

இன்னொருவன் ரயிலில் போவதற்குப் பயந்து கொள்கிறான். போனால் விபத்து நடந்துவிடும் என்கிறான். இன்னுமொருவனுக்குக் காரில் போவதற்குப் பயம். சாலை விபத்துகள் நடக்கின்றன அல்லவா? அடுத்தவனுக்கு விமானத்தில் போவதற்குப் பயம்.

இப்படி எல்லாம் பயந்து கொண்டிருந்தால் அது புத்திசாலித்தனம் ஆகாது. அப்படியானால் படுக்கையைப் பார்த்துக் கூடப் பயந்து கொள்ளத்தான் வேண்டும். தொண்ணூற்று ஏழு சதவிகிதம் படுக்கையில்தான் இறக்கிறார்கள். எனவே அதுதான் மிக ஆபத்தான இடமாக இருக்க வேண்டும். தர்க்கரீதியாகப் பார்த்தால் நீ படுக்கையில் இருந்து எவ்வளவு விலகி இருக்க முடியுமோ அவ்வளவு



விலகி இருக்க வேண்டும். ஆனால் அப்படி இருந்தால் வாழ்க்கை இயலாததாகிப் போகும்.

பயம் அதீதமானதாகிப் போகும்போது அது வியாதியாகிப் போகிறது. இந்தச் சாத்தியத்தைத்தான் பூசாரிகளும் அரசியல்வாதிகளும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார்கள். எல்லாக் கொடுங்கோலர் களும் பயன்படுத்திக் கொண்டார்கள். பயத்தை ஒரு வியாதியாக்கி விடும்போது உன்னைச் சுரண்டுவது சுலபமாகிப் போகிறது.

பூசாரிகள் நரகத்தைக் காட்டிப் பயமுறுத்துகிறார்கள். சாத்திரங்களைத்தான் பாரேன். எப்படியெல்லாம் நரகத்துச் சித்திரவதைகளை விலாவாரியாக விவரித்திருக்கிறார்கள்! அனுபவித்து விவரித்திருக்க வேண்டும். ஒவ்வொரு சித்திரவதையும் வெகு நுணுக்கமாக விவரித்திருக்கிறார்கள்.

அடால்ஃப் ஹிட்லர் இந்தச் சாத்திரங்களை எல்லாம் படித்திருக்க வேண்டும். அதிலிருந்து நிறையத் தெரிந்து வைத்திருக்க வேண்டும். கான்சன்ட்ரேஷன் கேம்புகளையும் அங்கு நடந்த சித்திரவதைகளையும் தானே கண்டுபிடிக்கும் அளவுக்கு அவன் மேதையல்ல. மதச் சாத்திரங்களில் படித்துத் தெரிந்து கொண்டிருந்திருக்க வேண்டும். அத்தனையும் அங்கே இருக்கின்றன. பூசாரிகள் எல்லா வற்றையும் ஏற்கனவே கற்பனை செய்து பார்த்துவிட்டார்கள். அவர்கள் சொன்னதைத்தான் இவன் செய்து பார்த்திருக்கிறான். ஹிட்லர் உண்மையாகவே மதத்தைப் பின்பற்றுகிறவனாகத்தான் இருந்திருக்கிறான்.

பூசாரிகள் இறப்புக்குப் பின்னால் உனக்காகக் காத்திருக்கும் நரகத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்திருக்கிறார்கள். ஹிட்லரோ, ''அதற்காக ஏன் காத்திருக்க வேண்டும்? இதோ இங்கேயே நரகத்தை



உருவாக்கி வைக்கிறேன். அனுபவியுங்கள்'' என்றுதான் அத்தனையும் செய்திருக்க வேண்டும்.

ஒருவன் செத்துப் போனானாம். நரகத்துக்குப் போய்ச் சேர்ந்தவன் கதவைத் தட்டியிருக்கிறான். எமலோகக் காவலர் அவனைப் பார்த்தான். ஜெர்மானியனைப் போல இருக்கிறதே என்று நினைத்தான். ''எங்கே இருந்து வருகிறாய்?'' என்று கேட்டு வைத்தான்.

இவன், ''ஜெர்மனியில் இருந்து...'' என்று சொன்னான்.

''சரிதான். நீ இங்கே வந்திருக்கவே வேண்டியதில்லை. ஏற்கெனவே நீ இதை அனுபவித்து விட்டாய். நீ நேராக சொர்க்கத்துக்குப் போகலாம். இந்த இடத்தில் உனக்குச் சலிப்புத்தான் வந்து சேரும். இதை விடச் சிறந்த பதிப்பை நீ ஏற்கெனவே பார்த்தவன். நாங்கள் இன்னும் கட்டைவண்டிக் காலத்துச் சித்திரவதையில் இருக்கிறோம். உனக்கு இன்னும் உயர்ந்த கருவிகள், வழிகள், உபாயங்கள் எல்லாம் தெரியுமே!'' என்றான்.

நரகத்தில் விஷ வாயு இல்லை. ஒரு விஷவாயுக் கூடத்தில் ஒரு விநாடி நேரத்தில் பத்தாயிரம் பேர் புகையாகிப் போக முடியும். என்னதான் இருபதாம் நூற்றாண்டில் வாழ்கிறோம் என்றாலும் மனிதன் இன்னமும் விலங்காகத்தான் இருக்கிறான். ஆயிரக்கணக்கில் அப்படி இறந்தவர்களை வேடிக்கை பார்க்கப் போனார்கள். கண்ணாடிச் சுவர்களுக்குப் பின்னால் ஆயிரக்கணக்கில் இறப்பவர்களைப் பார்க்க இந்தப் பக்கம் ஆயிரக் கணக்கானோர் நின்று கொண்டிருந்தார்கள். வெளியே இருப்பவர்கள் உள்ளே நடப்பதைப் பார்க்க முடியும். உள்ளே இருப்பவர்கள் வெளியே இருப்பவர்களைப் பார்க்க முடியாது.



ஆயிரக்கணக்கானோர் விநாடி நேரத்தில் புகையாகிப் போவதை வேடிக்கை பார்க்க ஒரு கூட்டம். அப்படி அதை அனுபவித்து வேடிக்கை பார்த்தவர்களை மனிதர்கள் என்றா சொல்வாய்? ஆனால் ஒன்றை நினைவில் வைத்துக் கொள். இது ஒன்றும் ஜெர்மானியர்களுக்கு மட்டுமே உரித்தான குணம் அல்ல. எல்லா இடத்திலும்தான் இந்தக் குரூரம் நடக்கிறது. மனிதன் எல்லாவிடத்திலும் ஒரே மாதிரித்தான் இருக்கிறான்.

பய உணர்ச்சியைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதைப் பூசாரிகள் தெரிந்து வைத்திருந்தார்கள். தம் காலில் விழுமளவுக்கு ஒருவனைப் பயமுறுத்தி வைக்க முடியும் என்பதைத் தெரிந்து வைத்திருந்தார்கள். அப்படிக் காலில் விழுந்து, ''காப்பாற்றுங்கள். உங்களைத் தவிர வேறு யாரும் எங்களைக் காப்பாற்ற முடியாது'' என்று கதற வைத்திருக்கிறார்கள்.

அப்படிக் கதறியவர்களிடம் தங்களுக்கு அடிபணிந்து நடந்தால் காப்பாற்றுகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லிய சடங்குகளைப் பின்பற்ற வேண்டும். இப்படியாகப் பயத்தாலேயே மக்கள் பூசாரிகள் சொன்னதை எல்லாம் கேட்டு நடந்திருக்கிறார்கள்.

அரசியல்வாதிகளும் இதைத் தெரிந்து கொண்டார்கள். பயப்பட வைத்தால் அடக்கி வைக்க முடியும். பயம் என்ற அஸ்திவாரத்தின் மேல்தான் நாடு என்ற கட்டிடம் நிற்கிறது. அமெரிக்கர்களைக் கண்டு பயந்த ரஷ்யர்கள் கம்யூனிசத்துக்கு அடிமையாக இருக்கிறார்கள். ரஷ்யாவைக் கண்டு பயந்து அமெரிக்கர்கள் அரசாங்கத்துக்கு அடிமையாக இருக்கிறார்கள்.

ஒருவரைக் கண்டு மற்றொருவருக்குப் பயம். இந்தியாவுக்குப் பாகிஸ்தானைக் கண்டு பயம்.



பாகிஸ்தானியருக்கு இந்தியரைக் கண்டு பயம். எவ்வளவு முட்டாள்தனமான உலகம் என்று பார். நாம் ஒருவரை ஒருவர் கண்டு பயந்து கொள்வதால் அரசியல்வாதி முக்கியமானவனாகிப் போனான். அரசியல்வாதி ''இங்கே உங்களை நான் காப்பாற்றுகிறேன்'' என்று சொல்ல, பூசாரி ''உங்களை நான் அடுத்த உலகில் காப்பாற்றுகிறேன்'' என்கிறான். இருவருமாகச் சேர்ந்து சதி செய்கிறார்கள்.

பயம் குற்றத்தை உருவாக்குகிறது. ஆனால் பயம் மட்டுமே அதைச் செய்வதில்லை. பூசாரிகள், அரசியல் வாதிகள் மூலமாகப் பயம் குற்றத்தை உருவாக்குகிறது. அவர்கள் ஒரு வியாதியைப் பரப்புகிறார்கள். ஒரு நடுக்கத்தைத் தோற்றுவிக்கிறார்கள். இயல்பாகவே மென்மையானவனாக இருக்கும் மனிதன் பயந்து போகிறான். உடைந்து போகிறான். அப்போது அவனை எது வேண்டுமானாலும் செய்யத் தூண்டலாம், முட்டாள்தனமாக இருக்கிறது என்று நன்றாகத் தெரிந்து கொண்டே அவன் எதை வேண்டுமானாலும் செய்யத் தயாராகிவிடுகிறான். இது சரியான முட்டாள்தனம் என்று தெரிந்திருந்தாலும் என்ன நடக்குமோ யாருக்குத் தெரியும்? இப்படி நினைக்கிறவனை எது வேண்டுமானாலும் செய்ய வைக்கலாம்.

ஓர் இளம் நடிகை. ஒரே இருமல் தும்மல். முதல் காட்சிக்குப் போவதற்கு முன் டாக்டரிடம் போய் எதாவது மருந்து தருமாறு கேட்கிறாள். டாக்டரும் குடிக்கச் சொல்லி எதையோ கொடுக்கிறார். ஒரே கசப்பு. முகத்தைச் சுளித்துச் சிரமப்பட்டுக் குடித்துவிடுகிறாள். பிறகு அது ஏதோ இருமலுக்கான கஷாயமாக இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு அது என்ன மருந்து என்று டாக்டரையே கேட்கிறாள்.



டாக்டர் ''இது ப்ளூடோ வாட்டர். டபுள் டோஸ்!'' என்கிறார். இனி தும்மவோ இருமவோ உனக்குத் திராணியிருக்காது என்கிறார்.

புரியவில்லையா? ப்ளூடோ வாட்டரைக் குடித்துப் பார். தும்மவோ இருமவோ திராணியில்லாமல் போய்விடும். சோதனை பண்ணிப் பார்க்க வேண்டுமா? அஜீத் சரஸ்வதியிடம் போய்க் கேள். பிறகுதான் உனக்கு நான் சொன்ன வேடிக்கை என்னவென்று புரியும். உனக்குப் புரியவில்லை என்பதால் இன்னொரு கதை சொல்கிறேன்.

ஒருநாள் காலை நேரம். ஒரு பெட்டைக் கரடி ஜோவின் குடிசைக்குள் புகுந்து ஏகப்பட்ட அட்டகாசம் செய்துவிட்டது. பிறகு வெளியேறியது. அதைத் தொடர்ந்து போனான். சுட்டுக் கொன்றான். பிறகுதான் அது எந்த அளவுக்கு ஒரு பெண்ணைப் போலவே இருந்தது என்பதைக் கவனித்தான். அடக்க முடியாமல் செத்துக் கிடந்த அதைப் புணர்ந்தான். பிறகுதான் பக்கத்தில் இருந்த மரத்தின் மீதிருந்து ஒரு வேட்டைக்காரன் இதைப் பார்த்துவிட்டான் என்பதை உணர்ந்தான். தன் துப்பாக்கியை அவனை நோக்கிப் பிடித்துக் கொண்டு அவனை இறங்கி வர வைத்து, ''கரடியைப் புணர்ந்திருக்கிறாயா?'' என்று கேட்டான். அவனோ, ''இதுவரை இல்லை. ஆனால் இப்போது தயாராகி விட்டேன்'' என்றான்.

ஒருவனை என்ன வேண்டுமானாலும் செய்யக் கட்டாயப்படுத்தி விடலாம். தன்னைக் காப்பாற்றிக் கொள்ள எதையும் செய்வான். பூசாரிகள் உன் இயல்புக்கு மாறான பயத்தை உன்னிடம் உருவாக்கி வைத்திருப்பதால் உன் இயல்பு அதை எதிர்க்கிறது. ஒரு சில சமயங்களில் உன் இயல்பின் பாற்பட்டுப் பயத்தை மீறி எதையாவது செய்து விடுகிறாய். அதுவே குற்றமாகிப் போகிறது.

## முழுக்க அனுபவித்து நடனமிடு



லத்தீஃபா! வாழ்க்கை என்பது என்ன என்பதைப் பற்றியும் எதைச் செய்ய வேண்டும் என்பதைப் பற்றியும் இயல்புக்கு மாறான கருத்தை வைத்துக் கொண்டிருக்கிறாய். ஒரு நாள் இயல்பைத் தொடர்ந்து ஏதோ ஓர் இயல்பான காரியத்தைச் செய்து விடுகிறாய். அப்போது குற்றம் புரிந்து விட்டதாக நினைத்துக் கொள்கிறாய். கோட்பாட்டுக்கு எதிராக நடந்து கொண்டாய் என்பதாலேயே நீ செய்தது குற்றம் என்று எடுத்துக் கொள்கிறாய். வெட்கம் வருகிறது. மிக இழிந்தவன் என்று உன்னையே எடுத்துக் கொள்கிறாய்.

இப்படி இயல்புக்கு மாறான எண்ணங்களை விதைத்து வைப்பதால் அவர்களைச் சீர்திருத்த முடியாது. எனவே மக்களை ஏமாற்றத் தெரிந்த பூசாரிகளுக்கு அவர்களைச் சீர்திருத்த முடியவில்லை. அவர்களுக்கு உன்னைச் சீர்திருத்த வேண்டும் என்று எந்த அக்கறையும் இல்லை. அவர்களுடைய ஒரே நோக்கம் உன்னை அடிமையாக வைத்திருப்பதுதான். அவர்கள் உனக்கென்று ஒரு மனச்சாட்சியை உருவாக்கி வைக்கிறார்கள். உன் மனச்சாட்சி உண்மையில் உன்னுடையதே இல்லை. அது பூசாரிகள் உனக்காகக் கற்பித்து வைத்திருப்பது. இது தவறு என்கிறார்கள். ஆனால் உனக்கு நன்றாகத் தெரிகிறது. அதில் ஏதும் தவறில்லை என்பது. ஆனால் அவர்களோ அது தவறு என்கிறார்கள். சிறு வயதில் இருந்தே உன்னை மனோவசியப்படுத்தி வைத்திருக்கிறார்கள். இந்த வசியம் மிக ஆழமாக வேரூன்றிப் போய்விடுகிறது. உனக்குள் வெகு ஆழத்துக்குப் போய் உன் ஒரு பகுதியாகவே ஆகி விடுகிறது. அது உன்னைப் பிடித்து நிறுத்திவிடுகிறது.

காமம் தவறு என்கிறார்கள். ஆனால் காமம் மிக இயல்பானது என்பதால் நீ வசீகரிக்கப்படுகிறாய். ஒரு பெண் அல்லது ஓர் ஆண் வசீகரிப்பதில் எந்தத் தவறும் இல்லை.



அது மிக இயல்பானது. ஆனால் உன் மனச்சாட்சியோ இது தவறு என்கிறது. எனவே உன்னை நீ அடக்கி வைக்கிறாய்.

உன்னில் பாதி அவளை நோக்கிப் பாய்ந்து விடுகிறது. மறுபாதியோ உன்னை அவளிடமிருந்து இழுத்து நிறுத்துகிறது. இடையில் மாட்டிக் கொண்டு விழிக்கிறாய். இப்படியாக நீ பிளவுபட்ட மனத்தனாகி விடுகிறாய். அவளோடு போய்விடுவது என்று முடிவெடுத்தால் மனச்சாட்சி உறுத்துகிறது. பாவம் செய்துவிட்டாய் என்கிறது. அவளோடு போகாமல் இருந்து விட்டாலோ உன் இயல்புக்குத் துரோகம் செய்து விடுகிறாய். என்னைப் பட்டினி போடுகிறாயே என்கிறது.

இப்படியாக இரண்டு பக்கமும் தளைப்பட்டுப் போனவனாக இருக்கிறாய். எதைச் செய்தாலும் சிரமம்தான். இது இந்தப் பூசாரிகளுக்குச் சாதகமாகிப் போகிறது. எந்த அளவுக்குக் கஷ்டப்படுகிறாயோ அந்த அளவுக்கு அவனுக்கு லாபம். அப்போதுதானே என்ன செய்வது என்று அவனிடம் போய் நிற்பாய்! எந்த அளவுக்குச் சிரமப்படுகிறாயோ அந்த அளவுக்கு விடுபட வேண்டும் என்ற வேட்கை மிகுபட்டுப் போகிறது.

பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் சொன்னது சரிதான். மனச்சாட்சி, ஒழுக்கம் இவற்றிலிருந்து விடுதலை என்றாகி, ஒருமித்தவனாகிப் போனால், இயல்பாகப் புத்திசாலியாக, புரிதல் கொண்டவனாக, தன் வாழ்வைத் தான் சரியென்று நினைத்தபடி வாழ்ந்தால், மற்றவர் சொன்னதன் படியில்லாமல் தான் சொல்வதன்படி தான் இருப்பவனாகிப் போனால், இந்த உலகில் இருந்து எல்லா மதங்களும் மறைந்து போகும் என்று பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் சொன்னது சரிதான்.



அவர் சொன்னதை முழுக்க ஏற்றுக் கொள்கிறேன். மக்களுக்குக் கஷ்டம் இல்லையென்றால் மதங்கள் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போகும். யாரும் விமோசனம் தேடி ஓட மாட்டார்கள்.

ஆனால் மதங்கள் மறைந்து போகும் என்று அவர் சொன்னதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. மதங்கள் என்று சொல்லிக் கொண்டு திரிகின்றவை இல்லாமல் போய் முதல் முறையாக உண்மையான மதம் வாழும் என்றுதான் சொல்வேன்.

கிறித்துவர்கள் என்று யாரும் இருக்கமாட்டார்கள். இந்துக்கள் என்று யாரும் இருக்க மாட்டார்கள். முகம்மதியர்கள் என்று யாரும் இருக்கமாட்டார்கள். ஒரு புதிய சமயம் தோன்றி, எல்லோரும் அவரவர் உணர்வு வழி வாழ்வார்கள். அந்த உலகில் குற்றம் இருக்காது. வருத்தம் இருக்காது. குற்றமும் வருத்தமும் யாரையும் சீர்திருத்தப் போவதில்லை. மக்கள் என்றைக்கும் மாற மாட்டார்கள். ஆனால் புறத்தில் நிறைய மாற்றங்கள் இருக்கத்தான் செய்யும். எதுவும் குற்றம், நரகம், சொர்க்கம் என்ற கோட்பாடுகளின் வழியாக மாறிவிடப் போவதில்லை. இவையெல்லாம் முழுக்கத் தோற்றுப் போன கோட்பாடுகள்.

எனவே பழைய மதங்கள் தோற்றுப் போய்விட்டன என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டிய தருணம் வந்துவிட்டது. என்னதான் அவை பிரமாதமான புத்தர், இயேசு போன்றோரைப் படைத்துத் தந்திருக்கின்றன என்றாலும் எத்தனையோ கோடிக்கணக்கானவர்களில் ஒருவர்தானே அவர்கள்? அவர்கள் தப்பிப் பிறந்தவர்கள். அவர்களைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது. விரல் விட்டு எண்ணும் எண்ணிக்கையில்தானே புத்தர்கள் இருந்திருக்கிறார்கள்.



ஒரு தோட்டக்காரன் கோடிக்கணக்கான மரங்களை நட்டு வைக்க அதில் ஓரிரு மரங்கள் மட்டுமே முளைத்து வருமானால் அவனை நல்ல தோட்டக்காரன் என்று சொல்வாயா என்ன? முளைக்காமல் போன பிற மரங்கள் என்னாவது? இந்த மரம் மட்டும் மலர்கள் தருகிறது என்றால் அதில் தோட்டக்காரனுக்கு எந்தப் பங்கும் இல்லை. அவனின்றியும் இந்த மரம் பூத்துக் குலுங்கியிருக்கும்.

மேம்போக்காக மட்டுமே மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. இந்து கிறித்துவனாகிறான். கிறித்துவன் முகம்மதியனாகிறான். ஆனால் எதுவும் எங்கேயும் மாறுவதில்லை. எல்லாமும் அப்படி அப்படியே இருக்கின்றன.

இன்றைக்கு இது போதும்!





# போய்க் கொண்டே இரு

இந்த உலகையும்
அதன் அத்தனை கடவுளரோடு
இறப்பின் உலகையும்
வென்றெடுப்பார் யார்?
விதியில் ஒளிரும் சாலையைக்
கண்டுபிடிப்பவர்தான் யார்?

உன்னால் முடியும்.
மலர்களைத் தேடுகிறவன்
மிக அழகான அருமையான மலரைக்
கண்டு கொள்வதைப் போலத்தான்.

அலையின் நுரையே உடல் -
நிழலின் நிழல் -
இதைப் புரிந்திருப்பாயாக.
ஆசையின் மலர்க்கணைகளை ஒடித்துப் போடு.
பிறகு கண்ணுக்குத் தெரியாமல்



இறப்பிடமிருந்து தப்பித்து விடுவாய்.
போய்க் கொண்டே இருப்பாய்.
அலைபாயும் மனத்தோடும்
தாகமெடுத்த உணர்வுகளோடும்
உலகத்து இன்பங்களில்
மகிழ்வைத் தேடுகிறவன் -
மலர்களைச் சேகரிப்பவன் -
இவர்களை இறப்பு வென்றெடுக்கும்.

தூக்கத்தில் கிடக்கும் ஒரு கிராமத்தை
வெள்ளம் அடித்துச் செல்வதைப் போல
இறப்பு அவனைக் கொண்டு சென்றுவிடும்.
அலைபாயும் மனத்தோடும்
தாகமெடுத்த பொறிகளோடும்
மலர்களைச் சேகரிப்பவனை
இறப்பு தோற்கடிக்கும்.
உலகத்து இன்பங்களில்
அவனுக்கு நிறைவேதும் கிடைக்காது.

மலரின் அழகையோ மணத்தையோ
கெடுக்காதுதானே வண்டு மதுவைச்
சேகரிக்கிறது!
அப்படியே குருவானவர் அசையாமல் போய்
வந்து
கொண்டிருக்க அனுமதித்துவிடு.

செய்ய வேண்டியதைச் செய்யாது விடுத்த
செய்யக் கூடாததைச் செய்துவிட்ட
உன் பிழைகளை எண்ணிப் பார்.
பிறர் பிழைகளைக் கண்டு கொள்ளாதே.



சொல்வது அர்த்தமற்றுப் போகும் போது
வார்த்தைகள் வெற்று வார்த்தைகளே!
அழகிய ஒரு மலர்
பிரகாசமாக ஜொலித்தும்
மணம் இன்றி இருத்தல் போல.

சொல்வதே பொருளுமாகிப் போகும்
அருமையான உண்மையான வார்த்தைகள்
மணமும் ஒளியும் ஒன்றாய்ப் பொருந்திய
அழகான மலர்களைப் போல.

மலர்கள் ஒரு மாலையாவதைப் போல
நற்செயல்களின் மாலையாகட்டும் உன் வாழ்வு.

**சமயத்** தேடல் கடவுளை மையமாகக் கொண்டிருக்கவில்லை. இறப்பையே தன் மையமாகக் கொண்டு நிற்கிறது. இறப்பு இல்லையென்றால் சமயம் இருந்திருக்காது. இறப்பே அதைத் தாண்டி என்ன இருக்கிறது என்பதையும் இறப்பில்லாத நித்தியத்தையும் தேடி மனிதனை ஓட வைக்கிறது.

ஒரு சிறிய தீவைக் கடல் சூழ்ந்திருப்பதைப் போல இறப்பு நம்மைச் சூழ்ந்திருக்கிறது. தீவை வெள்ளம் எப்போது வேண்டுமானாலும் மூழ்கடித்து விடும். அடுத்த கணம் என்பது வராமலேயே போய்விடும். நாளை என்பது இல்லாமலேயே போய்விடும்.

இறப்பைப் பற்றிய சிந்தனை இல்லாததால்தான் மிருகங்களுக்குச் சமயம் இல்லாமல் போய்விட்டது. மற்ற விலங்குகள் சாவதைப் பார்க்கின்றன என்றாலும் தாமும் சாகப் போகிறோம் என்பதை அவற்றால் உணர முடிவதில்லை. ஒருவர் சாவதைப் பார்த்து நானும்தான் சாகப்



போகிறேன் என்ற உணர்வைப் பெறுவதென்பது மிகப் பெரிய சாதனை. விலங்குகள் அம்மாதிரியான ஒரு முடிவுக்கு வருமளவுக்கு விழிப்புணர்வு பெற்றவையல்ல. சூட்டிகையானவை அல்ல.

மனிதர்களிலும் பெரும்பான்மையானோர் மனித நிலையை விடத் தாழ்ந்தவர்களாகவே இருக்கிறார்கள். மரணம் எல்லோருக்கும் நிகழ்கிறது என்றால் நான் அதிலிருந்து விலக்குப் பெற்றவன் அல்ல என்று தெரிந்து கொண்டவனே உண்மையில் மன முதிர்ச்சி அடைந்தவன். இந்த உணர்வு உனக்குள் ஆழப் புகுந்துவிடுமானால் உன் வாழ்க்கை மீண்டும் முன்னிருந்ததைப் போல இருக்க முடியாது. முன்னைப் போல வாழ்வில் பற்றுக் கொண்டவனாக இருக்க முடியாது. நம்மிடமிருந்து எடுத்துக் கொள்ளப்படுவதுதான் அது எனும்போது அதற்குச் சொந்தம் கொண்டாடுவதில் என்ன பயன்? ஒரு நாளைக்கு அது திடுமென மறைந்து போகப் போகிறது என்றால் அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு துயரம் அடைவது எதற்கு? அது என்றைக்கும் இருக்கப் போவதில்லை என்றால் துயரத்திலும் கவலையிலும் துடிப்பிலும் ஏன் இருக்க வேண்டும்? போகத்தான் போகிறது என்றால் எப்போது போனால் என்ன? நேரம் முக்கியமில்லை. இன்று அல்லது நாளை அல்லது நாளை மறுநாள் - வாழ்க்கை உன் பிடியில் இருந்து நழுவிப் போகத்தான் போகிறது.

வாழ்வில் சர்வ நிச்சயமான சமாச்சாரம் மரணம்தான். வேறு எதுவும் அந்த அளவுக்கு நிச்சயமானதல்ல. சாகத்தான் போகிறோம் என்ற நிச்சயத்தைத் தெரிந்து கொள்ளும் போது, சாவு சர்வ நிச்சயம் என்பதைத் தெரிந்து கொள்ளும்போது...

ஏனோ நாம் இந்தக் கேள்வியைத் தவிர்த்துக் கொண்டே இருக்கிறோம். சாவைப் பற்றிய இந்தக் கேள்வியைத்தான்.



என்னென்னவோ விஷயங்களில் நம்மைத் திசை திருப்பி வைத்துக் கொண்டு இறப்பைப் பற்றிய கேள்வியைத் தவிர்த்துக் கொண்டே இருக்கிறோம். கடவுள், சொர்க்கம், நரகம் என்று பெரிய பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசி அசலான பேச்சைத் தவிர்க்கிறோம்.

அசலான பேச்சு கடவுளைப் பற்றியதாக இருக்க முடியாது. கடவுளைப் பற்றி நமக்கு என்ன தெரியும் அவரைப் பற்றிப் பேசுமளவுக்கு? கடவுளோடு நமக்கு என்ன பரிச்சயம் இருக்கிறது அவரைப் பற்றிப் பேசுவதற்கு? உனக்கு ஒன்றுமே தெரியாத ஒன்றைப் பற்றிய விசாரம் எப்படிச் சாத்தியம்? அது வெற்றுத் தேடலாகத்தான் இருக்கும். அதிகபட்சம் அது ஓர் ஆர்வத்தின் வெளிப்பாடாகத்தான் இருக்கும். குழந்தைத்தனமான, முட்டாள்தனமான ஓர் ஆர்வம். அவ்வளவுதான்.

முட்டாள்கள் கடவுளைப் பற்றிப் பேசுகிறார்கள். புத்திசாலிகளோ இறப்பைப் பற்றி நினைக்கிறார்கள். கடவுளைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பவன் கடவுளைக் காணப் போவதில்லை. இறப்பைப் பற்றிப் பேசுகிறவன் கடவுளை நிச்சயம் தெரிந்து கொள்ளப் போகிறான். ஏனென்றால் இறப்பு உனக்கு ஒரு நிலைமாற்றம் தரப் போகிறது. உன் திருஷ்டி மாறிவிடப் போகிறது.

அசலானதொரு கேள்வியைக் கேட்டிருக்கிறாய் என்பதால், மிகச் சரியானதொரு கேள்வியைக் கேட்டிருக் கிறாய் என்பதால், மிக முக்கியமானதொரு கேள்வியைக் கேட்டிருக்கிறாய் என்பதால் உன் உணர்வுகள் கூர் தீட்டப்படுகின்றன. இனி தூக்கமில்லை என்று சொல்லு மளவுக்கு ஒரு சவாலைக் கேள்வியாக்கி இருக்கிறாய். விழித்திருந்தே ஆக வேண்டி இருக்கிறது. இறப்பு என்ற



எதார்த்தத்தை எதிர்கொள்வதற்குத் தயாராக சூட்டிகையாக இருக்க வேண்டி இருக்கிறது.

அப்படித்தான் புத்தருடைய தேடுதல் தொடங்கியது.

புத்தர் பிறந்த நாள். நாடு முழுக்க ஒரே கொண்டாட்டம். ஒரு பெரிய அரசனின் மகன். ஒரே மகன். அவருக்கு வயதாகிக் கொண்டிருக்கும்போது பிறந்த மகன். வெகு நாட்கள் காத்திருப்புக்குப் பின் பிறந்த மகன். அந்த அரசரும் மக்களால் மிகவும் நேசிக்கப்பட்டவர். அவர்களுக்குப் பெரும் தொண்டாற்றியவர். கருணையே வடிவானவர். அன்பானவர். இருப்பதை எல்லாம் அவர்களோடு பகிர்ந்து கொண்டவர். தன் நாட்டை மிகச் செழிப்பான பிரமாதமான நாடுகளில் ஒன்றாக ஆக்கி வைத்தவர்.

அவருக்கு வாரிசு இல்லையென்பதால் அவருக்கு ஒரு மகன் பிறக்க வேண்டும் என்று எல்லோரும் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். பிறகு பிறந்தவர் புத்தர். இத்தனை வயதானதற்குப் பின் ஒரு மகன் பிறப்பான் என்று யாரும் எதிர்பார்க்காதபோது பிறந்தவர். பெரும் கொண்டாட்டம் தான்.

நாட்டில் இருந்த ஜோசியர்கள் எல்லோரும் அவருடைய எதிர்காலத்தைக் கணிக்கக் கூடிவிட்டார்கள். அவருடைய பெயர் சித்தார்த்தா. அதுதான் அவருக்கு இட்ட பெயர். நிறைவு என்று பொருள். அரசரின் ஏக்கம் நிறைவேறிவிட்டது. சித்தார்த்தா என்று பெயரிட்டார். ஆழ்ந்த ஆசையின் நிறைவேற்றம் என்று பொருள்.

இந்த மகன் அரசரின் வாழ்வுக்கு அர்த்தம் கொடுத்தான். முக்கியமாக்கினான். பெரிய பெரிய ஜோசியக்காரர்கள் எல்லோரும் அந்த மகனுடைய எதிர்காலம் பற்றி ஒத்தக் கருத்துக் கொண்டிருந்தார்கள். ஓர் இளைஞனைத் தவிர;



அவருடைய பெயர் கோதண்ணா. ''என் மகனுடைய வாழ்வில் என்ன நடக்கப் போகிறது?'' என்று அரசர் கேட்கிறார். எல்லா ஜோசியர்களும் இரண்டு விரல்களை உயர்த்த கோதண்ணா மட்டும் ஒற்றை விரலை உயர்த்துகிறார்.

அரசர், ''தயவு செய்து சைகைகளை விட்டுவிட்டுச் சாதாரணமாகச் சொல்லுங்கள். எனக்கு அந்தச் சைகை களுக்குப் பொருள் தெரியாது. எனக்கு ஜோசியம் பற்றி ஒன்றும் தெரியாது. இரண்டு விரல்களை உயர்த்துகிறீர்களே அதற்கு என்ன பொருள்?'' என்கிறார்.

''உன் மகன் ஒரு சக்கரவர்த்தியாக வேண்டும். அல்லது ஒரு புத்தராக வேண்டும். இதில் ஏதாவது ஒன்றுதான் நடக்கப் போகிறது. அதனால்தான் இரண்டு விரல்களை உயர்த்திக் காண்பித்தோம்'' என்றார்கள்.

இரண்டாவதைப் பற்றி அரசருக்கு ஒரே கவலையாகிப் போய்விட்டது. துறவியாகிவிடுவானோ? ''மறுபடியும் பழைய பிரச்சனைதான். அவன் சன்னியாசியாகிப் போனால் எனக்கு யார் வாரிசாவது?'' பிறகு கோதண்ணாவைப் பார்த்து, ''ஒரே ஒரு விரலைக் காண்பித்தாயே , ஏன்?'' என்று கேட்டார்.

''அவர் ஒரு புத்தராகத்தான் ஆகப் போகிறார். எனக்கு எந்தச் சந்தேகமும் இல்லை. ஞானம் பெறப் போகிறார்.''

அரசருக்கு கோதண்ணாவின் மேல் கோபம் வந்தது. உண்மையை ஏற்றுக் கொள்வது சிரமம்தானே! அவர் கோதண்ணாவின் வார்த்தைகளை உதாசீனம் செய்தார். கோதண்ணாவுக்கு தட்சிணை கொடுக்கவில்லை, சத்தியத்துக்கு இந்த உலகில் எந்தத் தட்சிணையும் கிடைக்காதுதான். சத்தியத்தை இந்த உலகம் தண்டிக்கிறது. பல ஆயிரம் வழிகளில் தண்டிக்கிறது.

அன்றிலிருந்து கோதண்ணாவின் புகழ் சரிந்தது. அரசர் தட்சிணை கொடுக்காததால் அவர் ஒரு முட்டாள் என்று எல்லோரும் எடுத்துக் கொண்டார்கள். எல்லா ஜோசியர்களும் ஏற்றுக் கொண்டதை அவர் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டாரே!



அரசர் மற்றவர்களைப் பார்த்து, ''சரி என்ன ஆலோசனை சொல்கிறீர்கள்? அவன் சன்னியாசியாகாமல் இருக்க நான் என்ன செய்ய வேண்டும். அவனை ஒரு பிச்சைக்காரனாக ஒரு சன்னியாசியாகப் பார்க்க நான் துணியமாட்டேன். அவன் ஒரு சக்கரவர்த்தி ஆக வேண்டும். ஆறு கண்டங்களுக்கு அதிபதியாக... என்கிறார்.

என்னே பெற்றோரின் பேராசை! யார்தான் தன் மகன் துறவியாகி மலைகளில் தவம் செய்து தனக்குள்ளேயே எதையோ தேடிக் கொண்டு ஆத்மாவைத் தேடி ஓடி இளைக்க ஒப்புக் கொள்வார்கள்?

எல்லோரையும் போலத்தான். அதே ஆசைகள்... அதே லட்சியங்கள். ஜோசியர்கள், ''அதற்குச் சரியான ஏற்பாடு செய்து விடலாம். சாத்தியமான எல்லா இன்பத்தையும் அவன் அனுபவிக்க வேண்டும். எந்த அளவுக்கு மனித சக்தியால் சாத்தியமோ அந்த அளவுக்குச் சௌகரியமாக ஆடம்பரமாக அவனை வைத்திருக்க வேண்டும். பிணி, மூப்பு, இறப்பு பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியக் கூடாது. முக்கியமாக இறப்பைப் பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியக் கூடாது. பிறகேது அவன் சன்னியாசியாவது?'' என்று சொன்னார்கள்.

ஒரு வகையில் அவர்கள் சொன்னது சரிதான். இறப்பு தானே மையமான கேள்வியே! அதைப் பற்றிய நினைப்பு உன் மனதில் தோன்றிய உடனே உன் வாழ்க்கையின் போக்கே மாறிப் போகிறது. பழைய மாதிரியான முட்டாள்தனமான



வாழ்வை வாழ முடியாமல் போகிறது. இந்த வாழ்க்கை இறப்பில் முடியப் போகிறது என்றால் இது அசலான வாழ்வாக இருக்க முடியாது. இந்த வாழ்க்கை ஒரு மாயையாகத்தான் இருக்க வேண்டும்.

சத்தியம் நித்தியமாக இருந்தால்தான் சத்தியமாக முடியும். பொய்கள்தான் அநித்தியமானவை. வாழ்க்கை அநித்தியமானது என்றால் அது ஒரு மாயையாகத்தான் இருக்க வேண்டும். ஒரு பொய்யாக, தவறான கொள்கையாக, ஒரு முடிவுக்குக் கொண்டு வரும் வகையில்தான் வாழ்வை வாழ வேண்டி இருக்கிறது.

ஆனால் வேறொரு வகையில் வாழ்ந்தால் இருத்தலின் நித்திய ஓட்டத்தின் ஒரு பகுதியாக நம் வாழ்வை நாம் மாற்றிவிட முடியும். மரணம் மட்டும் அந்த மன மாற்றத்தைத் தர முடியும்.

எனவேதான் ஜோசியர்கள், ''மரணத்தைப் பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரிந்துவிடக் கூடாது'' என்றார்கள். அரசரும் எல்லா ஏற்பாடுகளும் செய்தார். ஒவ்வொரு பருவத்துக்கும் ஒன்று என மூன்று அரண்மனைகளை சித்தார்த்தருக்கு என்று கட்டினார். பருவ மாறுபாடுகளின் அசௌகரியம் அவருக்குத் தெரியக் கூடாதல்லவா! கோடைக் காலத்துக்கு மலைமேல் ஓர் அரண்மனை. குளிர் காலத்துக்கு என நதிக்கரையோரம் ஓர் அரண்மனை. அவர் எந்த அசௌகரியத்தையும் தெரிந்து கொள்ளக் கூடாது என்பதற்காக எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைத்தார்.

அவர் இருந்த அரண்மனைக்குள் வயதானவர் யாரும் நுழைந்துவிடக் கூடாது. இளைஞர்கள் மட்டுமே போகலாம். நாட்டில் இருந்த அழகிகள் எல்லோரையும் அங்கே திரட்டி வைத்தார். அவர்களுடைய மயக்கத்தில் ஆழ்ந்து அவர்கள் தரும் மகிழ்வில் திளைத்து கனவுலகில் ஆசைகளில்



திளைக்க வைத்தார். இனியதொரு கனவுலகத்தை அவருக்காகப் படைத்து வைத்தார்கள்.

தோட்டக்காரர்கள் உதிர்ந்த இலைகளை இரவோடு இரவாக அப்புறப்படுத்தி விட வேண்டும். உதிர்ந்த பூக்களை வாரிக் கொட்டிவிட வேண்டும். இல்லையென்றால் சித்தார்த்தன் எதையாவது கேட்க யாராவது எதையாவது சொல்லப் போக சாவைப் பற்றிய பேச்சு வந்துவிடலாம் அல்லவா? வாடிப்போன ஒரு ரோஜாப் பூவைப் பார்த்து, ''இதற்கென்ன ஆகிவிட்டது?'' என்று கேட்டுவிடலாம். பிறகு சிந்தனை வயப்பட்டு சாவைப் பற்றிய நினைவில் ஆழ்ந்துவிடலாம்.

இருபத்து ஒன்பது வருடங்களுக்கு இறப்பைப் பற்றி ஒன்றுமே தெரியாமல் அவரை வைத்திருந்தார்கள். ஆனால் எத்தனை நாட்களுக்குத்தான் தவிர்க்க முடியும்? சாவு மிக முக்கியமான விஷயம் அல்லவா? எத்தனை நாட்களுக்குத் தான் ஏமாற்ற முடியும்? அவரும் உலகைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமே!

அரசருக்கும் வயதாகிக் கொண்டு வந்தது. உலக விஷயங்கள் பற்றி மகன் தெரிந்து கொள்ள வேண்டி இருக்கிறது. எனவே மெதுமெதுவாக அவருக்கு உலகைக் காண்பிக்க ஆரம்பித்தார்கள். ஆனால் அவர் எந்த வீதியில் போனாலும் அங்கே வயதானவர்களோ நோயுற்றவர்களோ பிச்சைக்காரர்களோ இருந்தால் அவர்களை அப்புறப்படுத்தி வைத்தார்கள். எந்தச் சன்னியாசியும் அவர் போகும் வழியில் இருக்காமல் பார்த்துக் கொண்டார்கள். அப்படி ஒரு சன்னியாசி யாராவது கண்ணில் பட, 'யார் இவர்? ஏன் காவி உடை போட்டிருக்கிறார்? என்னவாயிற்று இவருக்கு? மற்றவர்களை விட வித்தியாசமாக இருக்கிறாரே! எதிலும் ஒட்டாதவராக... தூரத்தில் இருப்பவரைப் போல... இவருடைய கண்கள் வித்தியாசமாக இருக்கின்றன.



இவருடைய மனம் வித்தியாசமாக இருக்கிறது. இவர் இருப்பதிலேயே ஏதோ ஒரு வித்தியாசம் தெரிகிறதே! என்னவாகிப் போய்விட்டது இவருக்கு?'' என்று கேட்டால் பிறகு துறவு, சாவு பற்றிக் கேள்விகள் வந்து விடுமே. ஆனால் ஒரு நாள் அதுவும் நடக்கத்தான் வேண்டியிருந்தது. அதை என்றைக்கும் தவிர்க்க முடியாதல்லவா?

நாமும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறோம். யாராவது ஒருவர் இறந்து விட்டால், பிண ஊர்வலம் ஒன்று போய்க் கொண்டிருந்தால் தாய் குழந்தையை வீட்டுக்குள் இழுத்துப் போட்டுக் கதவைச் சாத்தி விடுகிறாள்.

இந்தக் கதை மிக முக்கியமானது. குறியீடாகக் கொள்ளத் தக்கது. எந்தப் பெற்றோரும் தமது குழந்தைகள் சாவைப் பற்றித் தெரிந்து கொள்வதை விரும்புவதில்லை. தெரிந்து கொண்டால் அசௌகரியமான கேள்விகளைக் கேட்க ஆரம்பித்து விடுவார்கள். அதனால்தான் சுடுகாடுகளை நாம் நகரங்களில் ஒதுக்குப்புறமான ஓரிடத்தில் வைத்திருக்கிறோம். யாரும் அங்கே போய்விடக் கூடாது என்பதற்காக.

இறப்பு மையமான ஓர் உண்மை. சுடுகாடு நகரத்து நடுவே இருக்க வேண்டும். எல்லோரும் அதன் வழியே போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருக்க வேண்டும். அலுவலகத்துக்குக் காலையில் அதன் வழியே போய் மாலையில் வீட்டுக்கு அதன் வழியே திரும்ப வேண்டும். தொழிற்சாலைக்கு, பள்ளிக்கூடத்துக்கு, கல்லூரிக்கு என்று எல்லா இடத்துக்கும் அதன் வழியே போய்வர வேண்டும். மறுபடி மறுபடி இறப்பைப் பற்றி நினைவூட்டல் இருந்து கொண்டே இருக்க வேண்டும்.

ஆனால் நாமோ சுடுகாட்டை ஒதுக்குப்புறமாக வைத்துவிடுகிறோம். தவிரவும் அந்த இடத்தை அழகாக



இருக்கச் செய்ய பூச்செடிகளும் மரங்களும் வளர்க்கிறோம். சாவை மறைக்க விரும்புகிறோம். முக்கியமாக மேற்கத்திய நாடுகளில் இறப்பைப் பற்றிப் பேசுவது தீட்டாகிப் போகிறது. ஒரு காலத்தில் செக்ஸ் பற்றிப் பேசுவது அப்படி இருந்தது. இப்போது இறப்பைப் பற்றிப் பேசுவதே தீட்டு என்றாகிப் போய்விட்டது.

இப்போது சிக்மண்ட் பிராய்டு போன்ற ஒருவர் தேவை. மரணத்தை மீண்டும் உலகத்துக்குக் கொண்டு வரக் கூடிய சிக்மண்ட் பிராய்டு. மரணம் என்ற சம்பவத்தை மக்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்ட வேண்டும்.

மேற்கத்திய நாடுகளில் ஒருவர் இறந்துவிட்டால் அவருக்கு ஏகப்பட்ட அலங்காரங்கள் செய்துவிடுகிறார்கள். குளியல் என்ன... செண்ட் என்ன.... வண்ணப் பூச்சு என்ன... செத்துப் போன ஆணையோ பெண்ணையோ பார்த்தால் ஆச்சரியப்படுவாய். உயிரோடு இருந்ததைவிடக் களையாக இருக்கக் காண்பாய். முகத்துக்குச் சிவப்புப் பூச்சு... ஒளிரும் முகம்... அமைதியும் நிம்மதியும் மிக்க இடத்தில் தூங்கிக் கொண்டிருப்பவன் போலத் தெரியும்.

நாம் நம்மையே ஏமாற்றிக் கொண்டிருக்கிறோம். இறந்தவனை நாம் ஏமாற்றுவதில்லை. அவன்தான் இல்லாமல் போய்விட்டானே! யாருமில்லை. ஒரு பிணம்தான் இருக்கிறது. ஆனால் அவன் முகத்துக்கு வர்ணம் பூசி, அழகாக உடை போட்டுவிட்டு, அவன் உடலை விலையுயர்ந்த காரில் வைத்து ஊர்வலமாக எடுத்துக் கொண்டு போய்... அடாடா... உயிரோடு இருந்த போது ஒரு நல்ல வார்த்தை அவனைப் பற்றிச் சொல்லாமல் செத்த பின் இத்தனையும் செய்கிறோம். யாரும் அவனைக் குறை சொல்வதில்லை. ஒரே பாராட்டு மயம்தான்.



நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம். சாவை அழகாகத் தோன்றச் செய்து அதைப் பற்றி எந்தக் கேள்வியும் வரக் கூடாது என்று தவிர்க்கப் பார்க்கிறோம். மேலும் மற்றவர்கள்தான் சாகப் போகிறார்கள் என்ற மயக்கத்தையும் தோற்றுவித்துக் கொள்கிறோம். அதுவும் சரிதான். உன் இறப்பை நீ எங்கே பார்க்கப் போகிறாய்? மற்றவன் சாவதைத்தான் நீ பார்க்க முடியும். மற்றவன்தானே இறக்கிறான்! எனவே ஏன் சாவைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? உனக்கென்று கடவுள் சிறப்பாக ஒரு விதிவிலக்கு வகுத்திருக்கிறார் என்கிறாய்.

நினைவில் வை. யாருக்கும் எந்த விதிவிலக்கும் கிடையாது. ஏஸ் தம்மோ சனந்தனோ. எல்லோருக்கும் ஒரே விதிதான். அது நித்தியமானது. எறும்புக்கு என்ன நடக்கிறதோ அதுவே யானைக்கும் நடக்கும். பிச்சைக் காரனுக்கு என்ன நடக்கிறதோ அதுவேதான் பேரரசனுக்கும் நடக்கிறது. ஏழை பணக்காரன், அறியாதவன் அறிந்தவன், பாவி மகான் - விதி எல்லோருக்கும் ஒன்றுதான். யாருக்கும் எந்த விதிவிலக்கும் கிடையாது. விதி வெகு நியாயமானது.

சாவு கம்யூனிசத்தைப் போல. அது எல்லோரையும் சமனாக்கி வைத்திருக்கிறது. நீ யார் என்பதைப் பற்றி அக்கறையே இல்லை. பிரபலங்கள் பற்றிய விவரப் புத்தகங்களைப் படித்துப் பார்ப்பதில்லை. நீ திவாலாகிப் போன பேர்வழியா அல்லது மாவீரன் அலெக்ஸாண்டரா என்றெல்லாம் பார்ப்பதில்லை.

ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் சித்தார்த்தனும் விவரம் தெரிந்தவனாக வேண்டுமே. அப்படியே நடந்தது. இளைஞர்கள் கொண்டாட்டம் ஒன்றை ஆரம்பித்து வைக்க ஒரு நாள் போனார். இளவரசன் அல்லவா, அவர்தானே இளைஞர்கள் திருவிழாவைத் தொடங்கி வைக்க வேண்டும்!

மிக அருமையான மாலை நேரம். இரவு முழுக்க நடனமாடி, பாடிக் கொண்டாட நாட்டின் எல்லா இளைஞர்களும் கூடியிருந்தார்கள். வருடத்தின் முதல் நாள். சித்தார்த்தர் தொடங்கி வைக்கிறார்.



அவர் தந்தை எதையெல்லாம் அவர் பார்த்துவிடக் கூடுமோ என்று பயந்து கொண்டிருந்தாரோ அதை எல்லாம் பார்க்க நேர்கிறது. முதலில் ஒரு நோயாளியைப் பார்க்கிறார். அவருக்குப் பிணி பற்றிய முதல் அனுபவம். ''என்ன ஆயிற்று?'' என்று கேட்கிறார்.

அருமையான கதை. தேரோட்டி பொய் சொல்ல வேண்டும் என்று நினைக்கிறான். ஆனால் ஏதோ ஒரு மகானுடைய ஆவி அவனுக்குள் புகுந்து கொள்கிறது. பொய் சொல்ல விடாமல் தடுக்கிறது. தானன்றியும் அவன் ''இவர் ஒரு நோயாளி!'' என்று உண்மையைச் சொல்லிவிடுகிறான்.

புத்தர் உடனடியாகப் புத்திசாலித்தனமான ஒரு கேள்வி கேட்கிறார். ''அப்படியானால் நானும் ஒரு நோயாளி ஆகக் கூடும்?''

தேரோட்டி மீண்டும் பொய் சொல்ல நினைக்கிறான். ஆனால் அவனுக்குள் புகுந்து கொண்ட ஆவி, ஒரு தேவதையின் ஆன்மாவோ? அல்லது ஒரு ஞானியின் ஆன்மாவோ? அவனைப் பேச வைக்கிறது. ''ஆமாம்'' என்கிறான். சொல்ல வந்தது ஒன்று சொல்வது ஒன்று என்று ஆகிப் போனதைக் கண்டு அவனுக்கு ஒரே குழப்பம் என்றாலும் அவன் சொன்னதென்னவோ, ''ஆமாம். நீங்களும் நோயாளியாகக் கூடும்'' என்பதுதான்.

பிறகு ஒரு வயோதிகரைச் சந்திக்கிறார்கள். மறுபடியும் அதே கேள்வி. பிறகு ஒரு பிணத்தைப் பார்க்கிறார்கள். மறுபடியும் அதே கேள்வி. பிணத்தைப் பார்த்துப் புத்தர் ''நானும் ஒரு நாள் இறக்கப்போகிறேனா?'' என்று கேட்க,



தேரோட்டி ''ஆமாம் அய்யா! யாரும் விதிவிலக்கு இல்லை. சொல்வதற்கு மன்னிக்க வேண்டும். யாரும் விதிவிலக்கு இல்லை. நீங்களும் கூடத்தான் சாகப் போகிறீர்கள்'' என்கிறான்.

புத்தர், ''அப்படியானால் தேரைத் திருப்பு. இளைஞர்கள் திருவிழாவுக்குப் போவதில் எந்தப் பிரயோஜனமும் இல்லை. ஏற்கெனவே எனக்கு வியாதி வந்துவிட்டது. ஏற்கெனவே நான் வயதானவனாகிப் போனேன். ஏற்கெனவே நான் இறப்பின் ஓரத்துக்கு வந்துவிட்டேன். ஒரு நாள் இறக்கப் போகிறேன் என்றால் இதிலெல்லாம் என்ன பொருள் இருக்கிறது? வாழ்வதே இறப்புக்காகக் காத்திருப்பதாகிப் போகிறது. அது வருவதற்கு முன்னால் இறப்பே இல்லாதது எது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். என் வாழ்நாள் முழுவதையும் இறப்பற்றதைத் தெரிந்து கொள்ள அர்ப்பணிக்கப் போகிறேன். இறப்பே இல்லாதது ஏதாவது இருக்குமானால் அதைத் தெரிந்து கொள்வதுதான் சிறந்தவற்றுள் எல்லாம் சிறந்ததாக இருக்கும்'' என்கிறார்.

இதைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே நான்காவது காட்சியைக் காண்கிறார்கள். ஒரு சன்னியாசி. காவி உடையில் ஆழ்ந்த சிந்தனையில் நடந்து போய்க் கொண்டிருக்கிறார். புத்தர், ''இவருக்கு என்ன ஆயிற்று?'' என்கிறார். தேரோட்டி ''அய்யா! இதைப் பற்றித்தான் நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். இறப்பைக் கண் கொண்டு பார்த்திருக்கிறார். அதனால் இறப்பில்லாததைத் தேடிப் போய்க் கொண்டிருக்கிறார்'' என்றான்.

அன்றிரவே புத்தர் உலகைத் துறந்தார். இறப்பில்லா ததைத் தேடி வீட்டை விட்டுக் கிளம்பிவிட்டார். சத்தியத்தைத் தேடிக் கிளம்பிவிட்டார்.

இறப்பைப் பற்றிய கேள்விதான் வாழ்வில் மிக முக்கியமான கேள்வி. இறப்பின் சவாலை ஏற்றுக் கொள்கிறவர் அபரிமிதமாகச் சன்மானம் பெறுகிறார்.



**இனி சூத்திரங்கள்.**

> **இந்த உலகையும்**
> **அதன் அத்தனை கடவுளரோடு**
> **இறப்பின் உலகையும்**
> **வென்றெடுப்பார் யார்?**
> **விதியில் ஒளிரும் சாலையைக்**
> **கண்டுபிடிப்பவர்தான் யார்?**

உனக்கு ஒரு சவாலிடுகிறார். உன் நெஞ்சில் ஒரு கேள்வியைக் கிளப்புகிறார். ''இந்த உலகையும் அதன் அத்தனை கடவுளரோடு இறப்பின் உலகையும் வென்றெடுப்பவர் யார்?''

இந்த உலகம் இறப்பைச் சார்ந்தது. உன் கற்பனையில் உதித்த கடவுளர் இந்த உலகைச் சார்ந்தவர்கள். அவர்களும் இறக்கப்போகிறார்கள். நீ, உன் உலகம், உன் கடவுளர் எல்லோருமே சாகப் போகிறவர்கள்தான். ஏனென்றால் இந்த உலகம் உன் ஆசையின் ஆக்கம். கடவுளர் கூட உன் கற்பனையாலும் ஆசையாலும் ஆக்கப்பட்டவர்கள்.

நீ யாரென்பதே உனக்குத் தெரியாது. நீ எப்படி உண்மையான கடவுளைத் தெரிந்து கொள்வது? உண்மை யான உலகம் எது என்று எப்படித் தெரிந்து கொள்வது? உனக்குத் தெரிந்ததெல்லாம் நீயே இட்டுக் கட்டி வைத்திருப் பதுதான். ஒரு கனவுக் காட்சிதான். சரிதான். கனவு காணும் வரை கனவு நிஜமாகத் தெரிகிறது. ஒவ்வோர் இரவும் கனவுகள் காண்கிறாய். காணும்போது அதைப் பற்றி எந்த



அவநம்பிக்கையும் உன்னிடம் இருப்பதில்லை. எந்தக் கேள்வியும் கேட்பதில்லை.

குர்ட்ஜீஃப் தன் சீடர்களிடம் சொல்வதுண்டு. ''தூங்குவதற்குச் சற்று முன் விழிப்புமற்ற தூக்கமுமற்ற ஒரு நிலையில் இருப்பாய். தூக்கத்தின் விளிம்பில்... தூக்கத்தின் திரை உன்னைச் சுற்றிக் கவிழ இருக்க... கொஞ்சம் நினைவு இருக்கிறது. இன்னமும் தூக்கமெனும் இருட்டில் மூழ்கவில்லை. கொஞ்சம் விழிப்பு இருக்கிறது. தூக்கமோ துரத்திக் கொண்டு வருகிறது. அந்தக் கணங்கள் மிக முக்கியமானவை. தூக்கத்துக்கும் விழிப்புக்குமிடையே யான அந்தக் கணங்களில் ஒரு கேள்வியை மனதில் எழுப்பிவிடு. தூங்கும்போது அதையே நினைத்துக் கொண்டிரு. ஓர் எளிதான கேள்வி. இது நிஜம்தானா? நிஜமாலுமே இது நடக்கிறதா? தூக்கத்தில் ஆழ்ந்து கொண்டிருக்கும்போது இந்தக் கேள்வியைத் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொள். ஒரு நாள் தூக்கத்திலும் இந்தக் கேள்வியை நீ கேட்டுப் பார்ப்பாய்.'' அந்த நாள் ஒரு பொன்னாள்.

கனவில் ''இது நிஜம்தானா?'' என்று கேட்க முடிந்தால் கனவு உடனே மறைந்து போகிறது. இப்படி நீ கேட்டிருக்க அப்படிக் கனவு கலைந்து போகிறது. திடீரென உனக்குள் பிரமாதமான ஒரு விழிப்பு ஏற்படுகிறது. தூக்கத்திலும் சாக்கிரதையாகிப் போகிறாய். தூக்கமோ தொடர்கிறது. அதுதான் அதன் பிரமாதமே!

உடல் தூங்கிக் கொண்டிருக்க மனம் தூங்கிக் கொண்டிருக்க உடல் மனம் இரண்டையும் கடந்து ஏதோ ஒன்று விழித்துக் கொள்கிறது. உனக்குள் ஒரு சாட்சி இருக்க வருகிறது. ''இது நிஜம்தானா?'' என்று கனவில் கேட்க முடியுமானால் - அப்படிக் கேட்டு அதை நினைவில்



வைத்திருப்பதும் சிரமம்தான். கனவு என்பதால் முழுக்க உன்னை மறந்திருக்கிறாய். எனவேதான் தூக்கத்தில் விழப் போவதற்கு முன் கேள்வி கேட்டுப் பயிற்சி எடுத்துக் கொள் என்பது. இது நிஜம்தானா? இது நிஜம்தானா என்று கேட்டுக் கொண்டே தூங்கிப் போய்விடு.

மூன்று முதல் ஒன்பது மாதங்களுக்குள் ஒரு நாள் அது நடந்து விடுகிறது. தூக்கத்தில் திடீரென ஒரு கேள்வி எழுகிறது. ''இது நிஜம்தானா?'' அந்த அனுபவம் வாழ்வின் மிக ஆழ்ந்த அனுபவங்களில் ஒன்று. அந்தக் கேள்வி எழுந்த அந்தக் கணமே கனவு கலைந்து விடுகிறது. முழுக்க ஒரு வெறுமை உணர்வு தோன்றிவிடுகிறது: மௌனம் ஆட்சி செய்கிறது. தூக்கம் தொடர்ந்தாலும் விழிப்பின் ஒரு சிறு ரேகை தோன்றிவிடுகிறது.

அதன் பின்னரே இந்த வாழ்வின் இயல்பு பற்றிய உணர்வு தோன்றுகிறது. அது ஒரு மாயை என்பது தெரிகிறது. ஆசை, பொறாமை, லட்சியங்கள் என்று இவை பாற்பட்ட வாழ்வு கண்களைத் திறந்து கொண்டு பார்க்கும் ஒரு கனவு என்பது தெரிந்து விடுகிறது. இந்த உலக வாழ்வும் ஒரு கனவுதான் என்பதைத் தெரிந்து கொள்ளும் போது ஞானத்தின் தலைவாயிலில் நிற்கிறாய்.

ஆனால் ஒன்றை மறந்து விடாதே. நம்பிக்கை மட்டும் போதாது. வாழ்வே மாயம் என்று நம்பலாம். இந்தியாவில் பல கோடி மக்கள் அப்படித்தான் நம்புகிறார்கள். உலகே மாயம், வாழ்வே மாயம் என்று கிளிப் பிள்ளைகளைப் போலச் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். அப்படி அவர்கள் சொல்வது சரியான குப்பை. ஏனென்றால் அவர்களுடைய தனிப்பட்ட அனுபவத்தின் விளைவாக அப்படிச் சொல்லவில்லை அவர்கள். பிறர் சொல்லக் கேட்டிருக்கிறார்கள். இவர்களும் சொல்கிறார்கள்.



அவர்களாகவே உணர்ந்து அனுபவித்துச் சொல்வதில்லை. அந்த மாயா லோகத்துக்கு அவர்கள் சாட்சியாவதில்லை. எனவே நம்பிக்கை மட்டும் அவர்களது வாழ்வை எந்த விதத்திலும் மாற்றுவதில்லை. வாழ்வே மாயம் என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள் என்றாலும் இந்த உலகம் நிஜம் என்றே வாழ்கிறார்கள். இப்படிப்பட்ட வாழ்வில் எந்தக் குணபேதமும் இருப்பதில்லை.

லோகாயவாதிக்கும் ஆன்மிகவாதிக்கும் இடையே என்ன வித்தியாசம் என்கிறாய்? ஞாயிற்றுக் கிழமையானால் சர்ச்சுக்குப் போவதும் போகாததும் அவ்வப்போது கோயிலுக்குப் போவதும் போகாததும்தான் இவர்களுக்கு இடையிலான வித்தியாசமா? நீ சொல்வதும் சரிதான். அதைத் தவிர அவர்களுக்கிடையே எந்த வித்தியாசமும் இருப்பதில்லை. சில சமயம் மத நம்பிக்கை இல்லாதவன் மற்றவனை விட நேர்மையானவனாக இருக்கிறான். நம்பகத்தன்மை அதிகம் கொண்டவனாக இருக்கிறான். உண்மையானவனாக இருக்கிறான். எந்தச் சொந்த அனுபவமும் இல்லாமல் நானும் ஆன்மிகவாதி என்று சொல்லிக் கொள்கிறவன் தன் நேர்மையைக் காற்றில் பறக்க விட்டுவிட்டவன். பிறகு எப்படி அவன் வாழ்வில் நேர்மையானவனாக இருக்க முடியும்?

அவனுடைய மதம் நேர்மையின்மையின் மேல் எழுந்தது. ஒருவன் எந்த அளவுக்கு நேர்மையில்லாதவனாக இருக்க முடியுமோ அந்த அளவுக்கு நேர்மையற்றுப் போய் விட்டவன் கடவுளை நம்புகிறான். ஆனால் அவனுக்குக் கடவுளைப் பற்றி ஒன்றுமே தெரியாது. நித்திய வாழ்வின் மேல் நம்பிக்கை வைத்திருக்கிறான். ஆனால் அதன் சுவையை அவன் ருசித்ததில்லை. எதையுமே பார்த்ததில்லை. என்றாலும் எல்லாவற்றையும் பார்த்தவன் போலப் பாசாங்கு



செய்கிறான். அவனுடைய மதத்தில் அடிப்படையிலேயே நேர்மையற்ற தன்மைதான் இருக்கிறது. எனவே ஆன்மிக நாடு என்று சொல்லப்படுகிற இந்தியா போன்ற நாடுகளில் லோகாயத நாடுகள் என்று சொல்லப்படுகிற மேற்கத்திய நாடுகளில் இருப்பதை விட அதிகம் பேர் நேர்மையற்றவர்களாகவே இருப்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை.

மேற்கத்திய லோகாயவாதி உண்மையானவன். இந்திய ஆன்மிகவாதி இழிந்தவன், நேர்மையற்றவன், ஏமாற்றுப் பேர்வழி. கடவுளையே ஏமாற்றுகிறவன் யாரை ஏமாற்றாமல் விடப் போகிறான்? உன் மதம் போலியானது என்றால் உன் வாழ்வே போலியானது. ''கடவுளைத் தெரிந்து கொள்ளும் வரை நான் கடவுள் மேல் நம்பிக்கை வைக்கப் போவதில்லை'' என்று சொல்லும் தைரியம் உடையவன் நேர்மையானவன். உண்மையானவன். எனக்குத் தெரிய ஒரு நாத்திகனுக்கு ஆத்திகனைவிடக் கடவுளை அறிந்து கொள்ளும் சாத்தியம் அதிகம்.

இந்த உலகையும் அதன் அத்தனை கடவுளரோடு இறப்பின் உலகையும் வென்றெடுப்பார் யார்? விதியில் ஒளிரும் சாலையைக் கண்டுபிடிப்பவர்தான் யார்?

ஏஸ் தம்மோ சனந்தனோ. யார் நித்திய நெறியை வற்றாத நெறியைக் காணப் போகிறார்? ஏஸ் மாக்கோ விசுத்யா - யார் பரிசுத்தமான நித்திய வெகுளித்தனத்தைக் காணப் போகிறார்கள்? யார்? புத்தர் இந்தச் சவாலை விடுக்கிறார்.

**உன்னால் முடியும்.**
**மலர்களைத் தேடுகிறவன்**
**மிக அழகான அருமையான மலரைக்**
**கண்டு கொள்வதைப் போலத்தான்.**



ஆம். இறப்பை நீ வென்றெடுக்க முடியும். ஏனென்றால் உன்னுடைய அடி ஆழத்தின் மையத்தில் நீ நித்தியத்தின் ஒரு பகுதி. நீ காலத்தின் பகுதியல்ல. நீ காலத்தில் வாழ்கிறாய். ஆனால் நித்தியத்தோடு சம்பந்தப்பட்டிருக்கிறாய். நித்தியம் காலத்துக்குள் நுழைந்ததுதான். உனக்கு மரணமில்லை. மரணிக்கக் கூடிய உடலில் வாழ்கிறாய். உன்னுடைய பிரக்ஞைக்கு இறப்போ பிறப்போ இல்லை. உன் உடல் மட்டுமே பிறக்கிறது. இறக்கிறது. ஆனால் அந்தப் பிரக்ஞையை நீ அறிந்தவனாக இருப்பதில்லை.

தியானம் என்ற கலை முழுக்க அதைப்பற்றியதுதான். பிரக்ஞையைப் பற்றிய பிரக்ஞையோடு இருத்தல். இந்த உடலுக்குள் இருப்பது யார், நீ என்பது யார் என்பதைத் தெரிந்து கொண்ட அதே கணத்தில் நீ மரணத்தைக் கடந்தவனாகிப் போகிறாய். மரணத்தின் உலகைக் கடந்து போய் விடுகிறாய். நிலையில்லாதது அனைத்தையும் கடந்துவிடுகிறாய்.

**உன்னால் முடியும். மலர்களைத் தேடுகிறவன் மிக அழகான மலரைக் கண்டு கொள்வதைப் போலத்தான்.**

**யேசு "தேடுங்கள் கிடைக்கும். கேளுங்கள் தரப்படும். தட்டுங்கள் திறக்கப்படும்" என்கிறார்.**

மிகச் சிறந்த ஒரு தேடுதல் தேவை. விஞ்ஞானம் புற உலகில் தேடுகிறதல்லவா? அப்படியே சமயம் அக உலகில் தேட வேண்டும். விஞ்ஞானம் பார்ப்பதைப் பற்றிக் கேள்விகள் கேட்கிறது. சமயமோ பார்ப்பவனைப் பற்றிக் கேள்விகள் கேட்கிறது. சமயம் விஞ்ஞானத்துக்கெல்லாம் விஞ்ஞானமாகிப் போகிறது.

விஞ்ஞானம் சமயத்தை விட என்றைக்கும் முக்கியமானதாக ஆகிவிடாது. அது முடியாத காரியம். ஏனென்றால்



விஞ்ஞானம் எதுவாகத்தான் இருந்தாலும் மனிதன் ஆக்கியதுதானே! ஆக்குகிறவன் யார்? உனக்குள் இருந்து ஆக்குகிறவன் யார்? ஆக்குகிறவன் ஆக்கப்படுவதை விட என்றைக்கும் குறைந்தவனாக முடியாது. ஓவியன் ஓவியத்தை விடக் குறைந்தவனாக முடியுமா? கவிஞன் கவிதையை விடக் குறைந்தவனா? விஞ்ஞானத்துக்கு உலகத்தைப் பற்றி எல்லாமும்தான் தெரியும். ஆனால் விஞ்ஞானியைப் பற்றி ஒன்றும் தெரியாது.

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் தன் கடைசி நாட்களில், ''சில நேரங்களில் என் வாழ்க்கை வீணாகிப் போய்விட்டதோ என்று நினைப்பதுண்டு. தூரத்து நட்சத்திரங்களைப் பற்றியெல்லாம் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்து விட்டேன். ஆனால் எனக்குள் தேடிப் பார்க்க மறந்துவிட்டேன். நான்தானே எனக்கு மிக நெருக்கமான நட்சத்திரம்!'' என்று சொல்வது வழக்கம்.

உணர்வோடு இருப்பதால் பிரக்ஞையை வெகு சாதாரணமாக எடுத்துக் கொண்டோம். தியானிப்பவன் அப்படி எடுத்துக் கொள்வதில்லை. தனக்குள் போகிறான். தனக்குள் இருக்கும் கதவைத் தட்டுகிறான். தேடுகிறான். தனக்குள் தேடி அலைகிறான். எதையும் விட்டுவிடாமல் தேடிக் கொண்டே இருக்கிறான்.

தன் ஜீவிதத்துக்குள் நுழைந்து பார்க்கிறான். அவனுடைய நிறைவு மிக உயர்ந்த நிறைவு. ஏனென்றால் அரியதைக் காண்கிறானே! ஆமாம் நிறையத்தான் மலர்கள் இருக்கின்றன. ஆனால் பிரக்ஞை எனும் மலரைவிடச் சிறந்த மலர் எதுவும் இல்லை. அது மிக அரியது. அது ஆயிரம் இதழ்த் தாமரை. தங்கத் தாமரை. அதைத் தெரிந்து கொள்ளாதவன் எதையும் தெரிந்து கொள்ளாதவன்தான். அதைக் காணாதவனுக்குச் செல்வம் எல்லாம் வியர்த்தம். சக்தி எல்லாம் வியர்த்தம்.



அலையின் நுரையே உடல் -
நிழலின் நிழல்-
இதைப் புரிந்திருப்பாயாக.
ஆசையின் மலர்க்கணைகளை ஒடித்துப் போடு.
பிறகு கண்ணுக்குத் தெரியாமல்
இறப்பிடமிருந்து தப்பித்து விடுவாய்.

இந்த உடல் அநித்தியமானது. ஒரு நாள் இல்லாமல் இருந்தது. ஒரு நாள் இல்லாமல் போகப் போவது. நுரையைப் போல இப்போதைக்கு இருப்பது. கடற்கரையில் இருந்து பார்க்கும்போது அவ்வளவு அழகாகத் தெரிகிறது. அலைகளின் வெண்ணிற நுரை. சூரியன் உதிக்கும்போது அலைகளைச் சுற்றி அழகான வானவில் தோன்றுகிறது. வைரங்களைப் போல ஜொலிக்கிறது. அவ்வளவு அழகாகவும் பரிசுத்தமாகவும் இருக்கிறது. ஆனால் கையில் எடுத்துப் பார்த்தால் இல்லாமல் போய்விடுகிறது. கைகளில் ஈரம் மட்டுமே மிஞ்சுகிறது. அவ்வளவுதான்.

அப்படியேதான் இந்த உடலும், அழகாகத் தெரிகிறது. ஆனால் இதற்குள் இறப்பு வளர்ந்து கொண்டே இருக்கிறது. மரணம் இதற்குள் மறைந்து நிற்கிறது. முதுமை காத்திருக்கிறது. நேரம் வரவேண்டியதுதான் பாக்கி.

ஒரு குறிப்பிட்ட நாளில் நீ இறக்கிறாய் என்பது அல்ல. வாஸ்தவத்தில் நீ பிறந்த அன்றே நீ இறக்க ஆரம்பித்து விடுகிறாய். ஒரு நாள் வயதான குழந்தை ஒன்று சிறிது மரணித்து விட்டது. ஒரு நாளை இழந்துவிட்டது. ஒவ்வொரு நாளும் மரணித்துக் கொண்டே இருக்கப் போகிறது.

பிறந்த நாள் என்பது பிறந்த நாளே அல்ல. அதை இறக்கத் தொடங்கும் நாள் என்றுதான் சொல்ல வேண்டும். தன் ஐம்பதாவது பிறந்த நாளைக் கொண்டாடுகிறவன் தன் ஐம்பதாவது மரண நாளைக் கொண்டாடுகிறான். இறப்பு



அருகே வந்துவிட்டது. எழுபது வருடங்கள் வாழப் போகிறான் என்றால் இனி இருப்பது இருபது வருடங்களே. ஐம்பது வருடங்களை ஏற்கெனவே இறந்துவிட்டான்.

உடலைப் பொறுத்த அளவில் நாம் தொடர்ந்து இறந்து கொண்டே இருக்கிறோம். எழுபது வருடங்கள் என்ற எண்ணம் உன்னை ஏமாற்ற விடாதே. எழுபது வருடங்கள் என்பது நித்தியத்தின் அணுக்கூறுதான். எழுபது வருடங்கள் எனப்படும் காலத்தின் பொருள் என்ன என்கிறாய்? அது அலையின் நுரை. நிலையில்லாதது.

**அலையின் நுரையே உடல் - நிழலின் நிழல் - இதைப் புரிந்திருப்பாயாக.**

அது ஒரு நிழல் கூட அல்ல. நிழலின் நிழல். அதன் நிலையாமையை வலியுறுத்தவே புத்தர் விரும்புகிறார். அது எதிரொலியின் எதிரொலி. யதார்த்தத்தில் இருந்து வெகு தொலைவில் இருப்பது.

கடவுளே நிஜம். அதைச் சத்தியம் என்று சொல்லிக் கொள். புத்தர் அதைத் தம்மா என்று சொல்கிறார். நெறி என்று பொருள். கடவுளே அனைத்தையும் கடந்த நிஜம். ஆன்மா அவருடைய நிழல். உடல் நிழலின் நிழல். உடலில் இருந்த ஆன்மாவுக்கும் ஆன்மாவில் இருந்து தம்மாவுக்கும் போய்ச் சேர். இறைவனிடம், நித்திய நெறியிடம்...

இந்த நித்திய நெறியைச் சாதிக்கும்வரை துவண்டு விடாதே. இன்றைக்கு இங்கே இருக்கும் நீ, நாளைக்கு இங்கே இருக்கப் போவதில்லை. இந்த மதிப்பு மிக்க நாட்களை அற்ப விஷயங்களை நாடுவதில் கழிக்கவோ? குப்பைகளைச் சேர்த்து வைப்பதில் வாழ்க்கையைக் கழிக்கிறார்கள். திடீரென ஒரு நாள் இல்லாமல் போய்விடுகிறார்கள். அவர்கள் சேர்த்து வைத்த குப்பையை எல்லாம்



விட்டுவிட்டுப் போய்விடுகிறார்கள். அதில் ஒரு துரும்பைக் கூட அவர்களால் எடுத்துப் போக முடியாது.

அலெக்ஸாண்டர் இறக்கும்போது தன் அமைச்சர்களிடம் சவப் பெட்டியில் இருந்து தன் கைகள் வெளியே தொங்கியிருக்கத் தன்னை எடுத்துப் போய் அடக்கம் செய்யுமாறு சொன்னதாகச் சொல்வார்கள்.

''ஏன்? அப்படிப்பட்ட காரியத்தை யாரும் கேள்விப் பட்டது கூடக் கிடையாதே. யாரும் செய்ததும் கிடையாதே. அது அசம்பிரதாயமான காரியமாயிற்றே. விநோதமாக இருக்கிறதே. எதற்கு உங்கள் கைகளை வெளியே தொங்க வைத்திருக்க வேண்டும் என்கிறீர்கள்?'' என்று அவர்கள் கேட்டார்கள்.

அலெக்ஸாண்டர், ''மாவீரன் அலெக்ஸாண்டர் கூட போகும்போது வெறுங்கையோடுதான் போகிறான் என்பதை மக்கள் தெரிந்துகொள்ள வேண்டும். என்னோடு எதையும் நான் எடுத்துப் போகவில்லை. என் வாழ்க்கை முழுக்க வீணாகிப் போய்விட்டது. கடுமையாகத்தான் உழைத்தேன்...'' கடுமையாகத்தான் உழைத்திருக்கிறான்தான். லட்சிய புருஷன். அதிகாரப் பைத்தியம். உலகப் பேரரசனாக வேண்டும் என்று விரும்பினான். ஏறக்குறைய சாதித்து விட்டான். என்றாலும் ''நான் இறந்து கொண்டிருக்கிறேன். என்னோடு எதையும் நான் எடுத்துக் கொண்டு போக முடியாது. எனவே என் முயற்சிகள் எல்லாமும் விழலுக்கு இறைத்த நீர்தான். எல்லோரும் என் முட்டாள்தனத்தைத் தெரிந்து கொள்ளட்டும். அப்படியாவது அவர்களுடைய வாழ்வின் வகைமாதிரிகளையும் லட்சணத்தையும் தெரிந்து கொள்ளட்டும்'' என்றான்.

**ஆசையின் மலர்க்கணைகளை ஒடித்துப் போடு**
**பிறகு கண்ணுக்குத் தெரியாமல்**
**இறப்பிடமிருந்து தப்பித்து விடுவாய்.**



ஆசையற்றுப் போனவனாகிப் போகும்போது இறப்பு உன்னை எப்படியும் அலைக்கழிக்க முடியாது. ஆசையுள்ள மனமே இறப்பின் வலையில் சிக்கிக் கொள்கிறது. நமக்கோ ஏகப்பட்ட ஆசைகள் - பணத்தின் மீது ஆசை. அதிகாரத்தின் மீது ஆசை. மதிப்பு மரியாதை வேண்டுமென்று ஆசை. ஆயிரத்தோர் ஆசைதான். ஆசை பேராசையாகிறது. பேராசை போட்டியாகிறது. போட்டி பொறாமைக்குக் கொண்டு போகிறது.

ஒன்று இன்னொன்றுக்கு என்று நம்மை இட்டுச் செல்ல எதிலெதிலோ கசமுசவென்று விழுந்து விடுகிறோம். உலகியல் சுழலில் மாட்டிக் கொள்கிறோம். ஆனால் ஒன்று நிச்சயம் - பைத்தியக்காரத்தனத்துக்குக் காரணம் ஆசைதான்.

ஆசை என்பது இன்னும் வேண்டுமென்று விரும்புவது. ஓரளவுக்குப் பணம் இருக்கிறதென்றால் அதைப் போல இரண்டு மடங்கு வேண்டும். ஆசை என்பது இன்னமும் இன்னமும் வேண்டும் என்று ஏங்குவது. அப்படியே இரண்டு மடங்கு கிடைத்து விட்டாலும் திருப்தி இருக்கப் போகிறதா? பத்தாயிரம் ரூபாயில் திருப்தி இல்லையென்றால் இருபதாயிரம் ரூபாயில் எப்படித் திருப்தி வரும்? பணம் இரட்டிப்பாகிவிடுகிறது. ஆனால் பத்தாயிரம் ரூபாய் எந்தத் திருப்தியும் தரவில்லையென்றால் இல்லாத திருப்தி எப்படி இரட்டிப்பாகும்? பார்க்கப் போனால் பத்தாயிரம் ரூபாய் இருக்கும்போது உனக்கென்று சில கவலைகள், கலக்கங்கள் இருந்தன. அவைதான் இரட்டிப்பாகக் கூடிப் போகும். முப்பதாயிரம் ரூபாய் வந்தால் அது மூன்று மடங்காகிப்



போகும். அப்படியே அது அதிகமாகிக் கொண்டுதான் போகும். பெருக்கிக் கொண்டே போவாய்.

இந்த உலகம் மிகப் பெரியதப்பா. உன்னிடம் எவ்வளவு இருக்கிறதோ அதைவிட அதிகம் வைத்திருப்பவன் என்றைக்கும் இருந்து கொண்டேதான் இருப்பான். எனவே பொறாமைதான் மிஞ்சும். பொறாமை ஆன்மாவைப் பீடிக்கும் காய்ச்சல். தியானத்தை தவிர அதற்கு வேறு மருந்து இல்லை. உடற் காய்ச்சலுக்கு மருத்துவர் மருந்து கொடுக்க முடியும். ஆன்மாவின் காய்ச்சலுக்கு ஒரு குரு மட்டுமே மருந்திட முடியும். ஒரு புத்தர் மட்டுமே அதைக் குணப்படுத்த முடியும். வெகு சிலருக்கே உடற்காய்ச்சல். ஆனால் ஒவ்வொருவருக்கும் ஆன்மாவில் காய்ச்சல் இருந்து கொண்டேதான் இருகுகிறது. அதுதான் பொறாமை.

உன்னிடம் உள்ளதைவிட இன்னொருவனிடம் அதிகம் இருக்கிறது என்பதே பொறாமைக்குப் பொருள். எல்லாவற்றிலும் முதலாவதாக இருப்பதென்பது இயலாத காரியம். உலகத்திலேயே பெரும் பணக்காரனாக இருக்கிறவனுக்கு உலகத்திலேயே அழகான முகம் இருக்காமல் போகலாம். ஒரு பிச்சைக்காரனின் அழகு அவனைப் பொறாமைப்பட வைக்கலாம். அவனுடைய உடல், முகம், கண்கள் - இதைப் பார்த்துப் பொறாமைப் படலாம். ஒரு பிச்சைக்காரன் ஒரு பேரரசனைப் பொறாமைப்பட வைக்கலாம்.

நெப்போலியன் ஐந்தடி ஐந்தங்குல உயரம். அதில் எதுவும் தவறாக இருப்பதாக எனக்குப் படவில்லை. நானும் ஐந்தடி ஐந்தங்குல உயரம்தான். அதனால் எனக்கு எந்தத் துன்பமும் இருந்ததில்லை. ஆறடி இருந்தால் என்ன - ஐந்தடி



இருந்தால் என்ன - கால்கள் நிலத்தின் மீதுதானே நிற்கின்றன! எனவே இதில் என்ன பிரச்சனை இருக்கிறதென்கிறாய்? ஐந்தடி உயரத்தவன் பூமியிலிருந்து ஓரடி உயரத்தில் தொங்கிக் கொண்டிருக்கிறான் என்றால் அது பிரச்சனைதான்.

என்றாலும் நெப்போலியன் அதனால் மிகுந்த வேதனைப்பட்டான். தான் உயரமாக இல்லையே என்று அவனுக்கு எப்போதுமே வருத்தம். ஆனால் அவன் உயரமான வர்கள் மத்தியில் இருந்தான். போர்வீரர்கள், தளபதிகள் என்று அவனைச் சுற்றி இருந்தவர்கள் எல்லோருமே அவனைவிட உயரமானவர்களாக இருந்தார்கள். அதனால் அவன் குள்ளமாக இருந்தான்.

எப்போதுமே உயரமான ஒன்றின் மீது ஏறியே நிற்பான். அப்படியேதான் இந்தியாவின் முதல் பிரதமரான ஜவஹர்லால் நேருவும். அவரும் ஐந்தடி ஐந்தங்குல உயரம். இந்த ஐந்து - ஐந்து என்பதில் ஏதோ விஷயம் இருக்க வேண்டும்.

இந்தியாவின் கடைசி வைஸ்ராயான மௌண்ட் பேட்டன் பிரபு உயரமானவன். அவன் மனைவியோ அவனை விட உயரமானவர். முதல் பிரதம மந்திரியாக ஜவஹர்லாலுக்கு மௌண்ட் பேட்டன் பிரமாணம் செய்து வைக்கும்போது - அந்தப் புகைப்படத்தை எங்கே வேண்டு மானாலும் பார்க்கலாம். நேரு ஒரு படியின் மேல் நின்று கொண்டிருக்க மௌண்ட் பேட்டன் தளத்தில் நின்று கொண்டிருப்பான். அவனை விட உயரமாகத் தெரியவில்லை என்றாலும் ஒரே உயரம்தான் என்று நினைக்க வைக்கத்தான் அப்படி நிற்க வைத்தார்கள். அப்படியானாலும் மௌண்ட் பேட்டனைவிடத் தான் உயரமாக இல்லை என்ற தாழ்வு மனப்பான்மைதான்.



நெப்போலியன் எப்போதுமே இந்த உணர்வுக்கு ஆட்பட்டவன். ஒரு நாள் ஒரு கடிகாரத்தைச் சரிசெய்ய முயன்றான். சுவற்றில் கொஞ்சம் உயரத்தில் மாட்டியிருந்த கடிகாரம் கைக்கு எட்டவில்லை. அவனுடைய மெய்க்காப்பாளன் ஒருவன் - மெய்க்காப்பாளர்கள் வழக்கமாகவே உயரமானவர்களாக இருப்பார்கள் - ''பொறுங்கள். நான் சரி செய்கிறேன். உங்களை விட நான் சற்றே உயர்ந்தவன்'' என்றான்.

நெப்போலியனுக்குச் சரியான கோபம் வந்துவிட்டது. ''முட்டாளே! மன்னிப்புக் கேள். நீ என்னை விட உயர்ந்தவன் அல்ல. என்னை விட உயரமானவன். சரியான வார்த்தையைச் சொல். உயர்ந்தவனாம் உயர்ந்தவன்! என்ன அர்த்தத்தில் பேசுகிறாய்?'' என்று கடிந்து கொண்டான்.

நெப்போலியனால் அதைத் தாங்க முடியவில்லை பார்த்தாயா? மெய்க்காப்பாளன் அவனை எந்த விதத்திலும் அவமரியாதை செய்ய நினைத்தானில்லை. உயர்ந்தவன் என்று சொல்வதில் ஏதும் தவறிருப்பதாக அவனுக்குத் தெரியாது. நெப்போலியனிடம் எல்லாமும் இருந்தன. மெய்க்காப்பாளனின் உயரம் தவிர.

உலகத்தில் எல்லாம் தனதென்று கொண்டு அதில் எல்லாவற்றிலும் முதலாவதாக இருக்க வேண்டும் என்பது முடியாத காரியம். எனவே பொறாமை நிலைத்துப் போய்விடுகிறது. தொடர்கதையாகிப் போகிறது. ஒருவனிடம் உன்னைவிட அதிகம் பணம் இருக்கிறது. இன்னொருவனிடம் அதிக அழகு. இன்னுமொருவனிடம் அதிக ஆரோக்கியம். மற்றொருவனிடம் அதிக அறிவு. நீ முடிவே இல்லாமல் பிறரோடு உன்னை ஒப்புநோக்கிக் கொண்டே இருக்கிறாய். ஆசை இருக்கும் வரை இப்படி ஒப்புநோக்கிக் கொண்டேதான் இருக்கப் போகிறாய்.

கோல்ட்ஸ்டீய்ன், வெய்ன்பெர்க் என்று இரண்டு வியாபாரப் பங்காளிகள். அவர்களுக்குள் புரிதல் கொஞ்சம் கெட்டுப் போயிருந்தது. ஒரு நாள் கோல்ட்ஸ்டீய்ன் மரங்களுக்கிடையே உலாவிக் கொண்டிருந்தபோது ஒரு தேவதை அவனுக்குக் காட்சியளித்தது. ''உன்னுடைய மூன்று விருப்பங்களை நிறை வேற்றிக் கொள்ள வரம் தருகிறேன். ஆனால் ஒன்று, அப்படி உனக்கு என்ன கிடைக்கிறதோ அதைப் போல இரண்டு மடங்கு வெய்ன்பெர்க்குக்குக் கிடைக்கும்'' என்று சொன்னது.

திரும்பி வரும்போது கோல்ட்ஸ்டீய்ன் ஒரே சிந்தனை வயப்பட்டவனாக இருந்தான். ''பெரியதொரு மாளிகை இருந்தால் நன்றாக இருக்கும்!'' நினைத்தானோ இல்லையோ ஒரு பெரிய மாளிகை தோன்றியது. ஆனால் சாலைக்கு அந்தப் பக்கம் தன் இரண்டு மாளிகைகளுக்கு நடுவே நின்று கொண்டு வெய்ன்பெர்க் கையசைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

கோல்ட்ஸ்டீய்ன் தன் பொறாமையை அடக்கிக் கொண்டு மாளிகைக்குள் நுழைந்து என்ன இருக்கிறது என்று பார்க்கப் போனான். படுக்கை அறைக்குள் நுழைந்தவுடன் அவனுக்கு இன்னுமோர் ஆசை தோன்றியது. ''ஸோபியா லோரேனைப் போல ஒரு பெண் இருந்தால்...'' அட ஆச்சரியம்தான். அப்படியே அவளைப் போல ஒரு பெண் இருந்தாள். ஆனால் சன்னல் வழியாகப் பார்த்தவனுக்கு வெய்ன்பெர்க் அப்படிப்பட்ட இரண்டு அழகிகளோடு இருப்பது தெரிந்தது. ''சரிதான்'' பெருமூச்சு விட்டுக் கொண்ட அவன், ''என் ஒரு விரைகொட்டையை வெட்டிவிடு!'' என்றான்.

பொறாமை பொறாமைதான். உனக்கு எல்லாமும் இல்லை எனும்போது மற்றவனுக்கும் எதுவும் இருக்கக் கூடாது என்று நினைக்கிறாய். பொறாமை அழிக்க



முற்படுகிறது. பொறாமை வன்முறையாகிப் போகிறது. பொறாமை ஆசையின் நிழல். பொறாமை எப்போதும் ஒப்பு நோக்கிக் கொண்டே இருக்கிறது. ஒப்புநோக்குவதில் துயரம்தான் மிஞ்சுகிறது. ஆசைப்படுவதில் பொறாமைப்பட்டுக் கொள்வதில், ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்வதில் அனைவரும் தம் வாழ்வை வீணடித்துக் கொண்டிருக்கிறார்கள். மதிப்பிட முடியாத நேரம் இப்படியாக வீணாகிப் போகிறது. உனக்கு மூன்று விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள வரம் தந்தால் நீயும்தான் கோல்ட்ஸ்டீய்ன் ஆகிப் போவாய். பேராசைக்காரன் எல்லோரிடமும்தான் இருக்கிறான். புத்தர் மட்டுமே அப்படி இல்லாதவர். மற்றபடி எல்லோரும் பேராசைக்காரர்கள்தான்.

ஆசையின் இயல்பே பேராசையாகிப் போவதுதான். இன்னும் வேண்டும் என்கிறது. இன்னமும் இன்னமும் என்று பைத்தியம் பிடித்து அலைகிறது. ஆசையில் வாழ்கிறவர்கள் இறப்புக்குப் பலியாகத்தான் வேண்டும். ஆசைப்படுவதில் இருக்கும் வியர்த்தம், பேராசையின் வியர்த்தம், ஏக்கத்தின் வியர்த்தம், பொறாமையின் வியர்த்தம், ஒப்பிடுவதன் வியர்த்தம் - இதைத் தெரிந்து கொண்டவன். இந்த முட்டாள்தனத்தைப் புரிந்து கொண்டவன் - அதை விட்டுவிட்டு இறப்பைத் தாண்டிப் போனவனாகிவிடுகிறான். புத்தர் அருமையான ஒரு வார்த்தையைப் பயன்படுத்துகிறார். கண்ணுக்குத் தெரியாமல் இறப்பிடமிருந்து தப்பித்து விடுவாய்.

ஆசையெனும் உடை உடுத்தியவனே இறப்பின் பார்வைக்குள்ளாவான். இறப்புக்கு ஆசை மட்டுமே கண்ணுக்குத் தெரியும். ஆசையை விட்டுவிடும்போது இறப்பின் கண்ணுக்குத் தட்டுப்படாது போவான். ஆசை இல்லாதவன் பரிசுத்தமான பிரக்ஞையாக மாறிவிடுகிறான்.



எனவே அவனை இறப்பு தீண்ட முடியாது. உடலோடும் மனதோடும் அவனை அடையாளப் படுத்த முடியாது. நீ ஒரு சாட்சி என்பது மட்டுமே உனக்குத் தெரியும். இறப்பு உன்னைக் காண முடியாது. நீ இறப்பைக் காண முடியும்.

சாதாரணமாக இறப்பு உன்னைக் காண முடியும். நீ இறப்பைக் காண முடியாது. ஏனெனில் ஆசை மாசடைந்தது. இறப்பு அதைக் காண முடிகிறது. பிரக்ஞை பரிசுத்தமான சக்தி, உருவமற்றது, கண்ணுக்குத் தெரியாதது. அது ஓர் ஒளி. இறப்பைக் காண முடியும். இறப்பு அதைக் காண முடியாது.

இறப்பைக் காண முடிகிறது என்பது அவ்வளவு பிரமாதமான ஓர் அனுபவம் ஆகும். அது ஒரு கொண்டாட்டம். இறப்பைக் காண முடியும் எனும்போது சிரிப்பு தானாக வரும். அந்த அளவுக்கு இறப்பு ஏதும் இயலாது போனதாகிவிடும்.

இறப்புக்கென்று ஏதும் சக்தி இல்லை. அதன் பலம் உன்னுடைய பலவீனம்தான். ஆசைப்படும் உன் மனதுதான். நீதான் அதற்குப் பலம் கொடுக்கிறாய். எந்த அளவுக்கு ஆசை அதிகமாகிறதோ அந்த அளவுக்கு இறப்பைக் கண்டு பயம் வருகிறது. எந்த அளவுக்குப் பேராசை இருக்கிறதோ அந்த அளவுக்குப் பயந்தவனாகிப் போகிறாய். எந்த அளவுக்குச் செல்வம் உன்னிடம் இருக்கிறதோ அந்த அளவுக்குக் கவலைகள் வந்து சேர்கின்றன. சாவு அத்தனையையும் எடுத்துக் கொண்டு போய்விடும் என்ற கவலைதான்.

**ஆசையின் மலர்க்கணைகளை ஒடித்துப் போடு.**
**பிறகு கண்ணுக்குத் தெரியாமல்**
**இறப்பிடமிருந்து தப்பித்து விடுவாய்.**
**போய்க் கொண்டே இருப்பாய்.**

இதை நினைவில் வை - போய்க் கொண்டே இரு.



அப்போது அசலான யாத்திரை தொடங்கிவிடுகிறது. ஒரே வட்டத்தில் போய்க் கொண்டு எங்கேயும் போய்ச் சேராமல் இருந்திருக்கிறாய். ஒரே விதமான ஆசைகளின் சக்கரம். மேலும் பணம் மேலும் மேலும் பணம். இன்னும் அதிகாரம் இன்னமும் அதிகாரம். விஷ வட்டங்கள். எங்கேயும் போய்ச் சேர முடிவதில்லை. ஆசைப்படுவதை விட்டு விடும்போது ஆசையெனும் மாசிலிருந்து உன் பிரக்ஞை விடுபட்டு விடுகிறது. இனி போய்க் கொண்டே இருக்க வேண்டியதுதான். முடிவில்லாத இருத்தலுக்குள் போய்க் கொண்டே இருப்பாய். அற்புதங்கள் மேலும் அற்புதங்கள் என்று பார்த்துக் கொண்டே போய்க் கொண்டிருப்பாய். இருத்தல் முழுக்க உனக்குக் கிடைக்க இருக்கிறது. அதன் மொத்தத்தில் அது உனக்குக் கிடைக்க இருக்கிறது. எனவே போய்க் கொண்டே இரு.

**அலைபாயும் மனத்தோடும்**
**தாகமெடுத்த உணர்வுகளோடும்**
**உலகத்து இன்பங்களில்**
**மகிழ்வைத் தேடுகிறவன் –**
**மலர்களைச் சேகரிப்பவன் –**
**இவர்களை இறப்பு வென்றெடுக்கும்.**

**தூக்கத்தில் கிடக்கும் ஒரு கிராமத்தை**
**வெள்ளம் அடித்துச் செல்வதைப் போல**
**இறப்பு அவனைக் கொண்டு சென்றுவிடும்.**

ஆசை, இன்பம் அவற்றின் அனுபவிப்பு என்று இவற்றால் மிகவும் அலைக்கழிக்கப்படும்போது, பொறி களின் கிளர்ச்சியில் மெய்சிலிர்க்க ஆசைப்படும்போது புற உலகில் இன்பத்தை முட்டாள்தனமாகத் தேடும்போது இறப்பு



உன்னைக் கொண்டு போய்விடும் - வெள்ளம் தூங்கும் கிராமத்தைக் கொண்டு செல்வதைப் போல.

புற உலகில் மகிழ்வைத் தேடுகிறவன் தூக்கத்தில் கிடக்கிறவன். என்ன செய்கிறோம் என்பதே அவனுக்குத் தெரியாது. ஏனென்றால் வெளியே எங்கும் மகிழ்ச்சியைக் காணவே முடியாது. எதுவெல்லாம் இன்பத்தை அளிப்பதாகத் தோன்றுகிறதோ அதுவெல்லாம் முடிவில் துன்பத்தையே அளிக்கிறது.

புறவுலகில் வாக்குறுதிகள் நிறையத்தான் இருக்கின்றன. கொடுப்பதற்கு அதில் ஏதுமில்லை. தூரத்தில் இருக்கும் போது எல்லாமும் அழகாகத்தான் தெரிகின்றன. அருகே போகப் போக அவை மறைந்துவிடுவதைக் காண்பாய். வெகு பிரயாசைக்குப் பின் அவற்றை அடையும் போது உனக்கு எதுவும் விளங்குவதில்லை. என்னதான் நடந்தது என்பதே தெரிவதில்லை. எல்லாமும் கானல் நீராகிப் போகிறது. தூரத்தில் இருக்கும்போது எல்லாமும் அழகாகத்தான் இருக்கின்றன. கையில் கிடைக்கும்போது அவற்றில் ஏதுமில்லாதிருக்கக் காண்பாய். பணம் இல்லாதவனுக்குத் தான் பணம் முக்கியமாகிறது. பணமிருப்பவனுக்குப் பணத்தின் வியர்த்தம் இன்னதெனத் தெரியும். புகழ் இல்லாதவனுக்குத்தான் அது முக்கியமானதாகத் தெரியும். புகழ் பெற்றவனைக் கேட்டுப் பார். அதில் ஒரு சலிப்புத்தான் இருக்கிறதென்பான். யாருக்கும் தெரியாதவனாக இருக்கக் கூடாதா என்றுதான் ஏங்குவான். இன்னாரென ஒருவராக இல்லாமல் இருக்கக் கூடாதா என்றுதான் விரும்புவான்.

வால்டேர் தன்னுடைய நினைவுகளைப் பற்றி எழுதும்போது தான் புகழ் பெறாதவராக இருந்தபோது புகழ் பெறுவதே ஆசையாக இருந்தது என்கிறார். புகழுக்காக எதை வேண்டுமானாலும் தியாகம் செய்யத் தயார் என்றிருந்தார்.



ஒன்றைத் தேடிக் கொண்டே இருக்கும்போது அதைப் பெறத்தான் போகிறாய். ஒருநாள் அவரும் புகழ் பெற்றவர் ஆனார். பிறகு, ''என் தனிமையை முழுக்க இழந்து விட்டேன். புகழ் பெற்றவனாக இருப்பதில் சலிப்புத்தான் மிச்சம். நெருங்கிய உறவுகள் அற்றுப் போய்விட்டன. எப்போதும் பலரும் சூழ்ந்திருக் கிறார்கள். எங்கே போனாலும் தனியாக இருப்பதற்கு வழியில்லாமல் யாரோ சிலர் கூட இருக்குமளவுக்குப் புகழ். மரங்களின் நிழலில் காலாற நடக்கலாம் என்றால் எனக்குப் பின்னே ஒரு கூட்டமே வருகிறது. காட்சிப் பொருளாகிப் போனேன். நடமாடும் சர்க்கஸ்தான்'' என்கிறார்.

புகழின் உச்சத்தில் உயிருக்கே ஆபத்து வந்து சேர்ந்தது. ஒரு முறை எங்கோ போய்விட்டு வரும்போது ஏறக்குறைய நிர்வாணமாக வீடு வந்து சேர்ந்தார். பிரான்சில் ஒரு மூட நம்பிக்கை. புகழ் பெற்ற ஒருவருடைய துணியின் ஒரு துண்டை எடுத்துக் கொண்டால் புகழ் பெற்றுவிடலாம். வால்டேர் அன்று ஏகப்பட்ட நகக்காயங்களோடு ஏறக்குறைய நிர்வாணமாக வீடு வந்து சேர்ந்திருக்கிறார்.

அன்று கண்ணில் நீர் வழியக் கதறியிருக்கிறார். ''என்ன ஒரு முட்டாள்தனம். புகழை விரும்பினேனே! யாருக்கும் என்னைத் தெரியாதிருந்தபோது என் வாழ்க்கை எவ்வளவு அருமையாக இருந்திருக்கிறது! இனி எனக்கு எப்போதும் சுதந்திரமே இல்லை.''

பிறகு தான் யாருமற்றுப் போக வேண்டும் என்று விரும்பினார். அப்படியே அவருடைய புகழ் மங்கியது. இந்த வாழ்வில் எதுவும் சாசுவதமில்லை. ஒரு நாள் புகழ் பெற்றவன் - மறுநாள் யாருக்கும் உன்னைத் தெரியாது. அவர் இறந்தபோது அவருடைய இறுதி ஊர்வலத்தில் நான்கே பேர். அதிலும் ஒரு ஜீவன் அவருடைய நாய். எனவே அவரது இறுதி ஊர்வலத்தில் மூன்றே பேர்தான். மக்கள் அவரை



மறந்தே போனார்கள். அவர் உயிரோடு இருந்ததே அவர்களுக்கு மறந்து போய்விட்டது. செய்தித்தாள் கள் அவருடைய இறப்பை அறிவித்தபோதுதான் வால்டேர் இறந்துவிட்டார் என்று தெரிந்து கொண்டார்கள். அப்போதுதான் அவர்கள், அவர் இவ்வளவு நாள் உயிரோடு தான் இருந்தாரா?'' என்று ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டார்கள்.

புகழ் சலிப்பைத் தருகிறது. பணம் இருந்தால் அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று தெரியாது. பிறர் மதிக்க வாழ்வது ஒரு வகையில் அடிமைத்தனம்தான். அவர் களுடைய எதிர்பார்ப்புகளை எல்லாம் நிறைவேற்ற வேண்டி யிருக்கிறது. இல்லையேல் உன் மதிப்பு இல்லாமல் போய்விடுகிறது.

புகழ் பெற்றவனாக இல்லாத போதுதான் புகழில் ஏதோ இருக்கிறது என்று தோன்றுகிறது. உன்னை யாரும் மதிக்காத போது அதற்காக ஏங்குகிறாய். உன்னைப் பிறர் மதிக்கும்போது அதற்கு ஒரு விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. எந்த அளவுக்கு மதிக்கிறார்களோ அந்த அளவுக்கு உன்னை நெருக்கமாகக் கவனிக்கிறார்கள். அவர்களுடைய எதிர்பார்ப்பு கள் நிறைவேறுகின்றனவா இல்லையா என்று கூர்ந்து கவனிக் கிறார்கள். உன்னுடைய சுதந்திரம் முழுக்க இல்லாமல் போய் விடுகிறது. ஆனால் அப்படித்தானே எல்லோரும் வாழ்கிறார்கள்!

புத்தர் இதைத் தூங்கும் கிராமம் என்கிறார். வெள்ளம் வந்து அனைத்தையும் அடித்துப் போய்விடுகிறது மரணமெனும் வெள்ளம்.

**அலைபாயும் மனத்தோடும்**
**தாகமெடுத்த பொறிகளோடும்**
**மலர்களைச் சேகரிப்பவனை**
**இறப்பு தோற்கடிக்கும்.**



## உலகத்து இன்பங்களில் அவனுக்கு நிறைவேதும் கிடைக்காது.

இந்த உலகில் யாரும் திருப்தியடைய முடியாது. அது முடியாத காரியம். மேலும் மேலும் அதிருப்திதான் அடைவாய். ஏனென்றால் திருப்தி என்பது அகத்தில் இருக்கிறது. திருப்தி என்பது உன் அகத்தின் நடுமத்தின் இயல்பு. திருப்தி பொருள் சார்புடையதல்ல. அழகான வீடு. அலங்காரத் தோட்டம். பணத்தைப் பற்றிய கவலையே இல்லை - இதிலெல்லாம் ஒரு சௌகரியம் இருக்கிறது. ஆனால் நீ அப்படியே இருக்கிறாய். சௌகரியமாக ஆனால் திருப்தியின்றி உண்மையில் எல்லாச் சௌகரியங்களும் இருந்து சம்பாதிக்கவென்று எதையும் செய்ய வேண்டிய அவசியம் இல்லையெனும்போது உன் அதிருப்தி அதிகமாகித்தான் போகும். ஏனென்றால் இருபத்து நான்கு மணி நேரமும் உன் அதிருப்தியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு காரியம் எதுவும் இல்லாமல் போகிறதல்லவா?

அதனால்தான் பணக்காரர்கள் ஏழைகளை விட அதிகம் அதிருப்தி கொண்டவர்களாக இருக்கிறார்கள். தர்க்க ரீதியாக பார்த்தால் அப்படி இருக்கக் கூடாது. ஆனால் உண்மையில் அப்படித்தானே இருக்கிறார்கள்! அதுதான் வாழ்க்கை. அது அரிஸ்டாட்டிலின் கொள்கையோடும் தர்க்க வாதத்தோடும் ஒத்துப்போவதில்லை.

ஐரோப்பாவில் இருந்து இந்தியா வரும் பணக்காரர்கள் இங்கே ஏழைகளின் முகத்தில் நிலவும் திருப்தியைப் புரிந்து கொள்ள முடியாமல் குழம்புகிறார்கள். இவர்களிடம் ஏதுமில்லை. என்றாலும் எப்படித் திருப்தியாக இருக்கிறார்கள்? இந்தியாவின் முனிவர்கள், மகாத்மாக்கள், அரசியல் தலைவர்கள் என்று எல்லோருமே "எங்கள் நாடு ஆன்மிக நாடு.



பாருங்கள். என்னதான் ஏழைகள் என்றாலும் எம் மக்கள் திருப்தியோடு இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் அகத்தில் செல்வந்தர்கள்'' என்று பெருமையாகப் பேசுகிறார்கள்.

இது முட்டாள்தனமான பேச்சு. அவர்களுக்குள்ளே எந்தச் செல்வமும் இல்லை. அவர்கள் முகத்தில் தெரியும் திருப்தி ஆன்ம தரிசனத்தின் விளைவானதல்ல. எந்நேரமும் பணம், சாப்பாடு என்ற கவலையில் கிடக்கும் அவர்களுக்கு அதிருப்தி கொள்ள நேரம் இருப்பதில்லை. தங்களுடைய துன்பங்கள் பற்றி உட்கார்ந்து சிந்திக்க அவர்களுக்கு முடியாது. துயரத்தை ஓர் அனுபவமாக உணர முடியாத அளவுக்கு மீறிய துயரம் அவர்களுடையது. துயரமே வாழ்வு என்றாகிப் போனவர்கள். அவர்களுக்கு இன்பம் என்றால் என்னவென்றே தெரியாது. எனவே துயரத்தை இன்பத்தோடு ஒப்புநோக்கிப் பார்க்க முடிவதில்லை.

ஒரு சமுதாயம் செல்வச் செழிப்புடையதாகும்போது சிந்திக்க நேரம் கிடைக்கிறது. ''இனி அடுத்து என்ன?'' அடுத்து ஒன்றும் இருப்பதாகத் தெரிவதில்லை. புற உலகில் எல்லாமும் கிடைக்கும்போது ''நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் இங்கே? எல்லாமும் இங்கே இருக்கவும் எனக்குள்ளே ஏதும் இல்லாத வெறுமைதான்!'' என்று நினைக்க ஆரம்பிக்கிறான். அதுவே உள்முகத் திருப்பலுக் கான ஆரம்பம்.

செல்வத்தைச் சுவைத்துப் பார்த்திராத பிச்சைக்காரன் மகிழ்ச்சியாகத்தான் இருப்பான். ஆனால் ஒரு செல்வந் தனுக்கோ அதிருப்திதான். தன்னுடைய செல்வத்தின் பயனின்மை அவனுக்குத் தெரியவருகிறது. அலைபாயும் மனதோடும் தாகமெடுத்த பொறிகளோடும் மலர்களைச் சேகரிப்பவனை இறப்பு தோற்கடிக்கும். உலகத்து இன்பங்களில் அவனுக்கு நிறைவேதும் கிடைக்காது.



கிடைக்காதுதான். அது சாத்தியமே இல்லை. பொருட்களைக் கொண்டு திருப்தி கொள்ளவே முடியாது. இன்னமும் இன்னமும் வேண்டும் என்று இந்த மனம் கேட்டுக் கொண்டே இருக்கும். எவ்வளவுக்கெவ்வளவு உன்னிடம் இருக்கிறதோ அவ் வளவுக்கவ்வளவு பிரச்சனைகளை உருவாக்கிக் கொண்டே இருப்பாய். உனக்குத்தான் பிரச்சனைகளுக்கென நேரம் இருக்கிறதே.

இவ்வளவு நேரத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று தெரியாத அளவுக்கு அவ்வளவு நேரம் இருக்கிறது. அலைபாய ஆரம்பிக்கிறாய். மேலும் மேலும் துயரங்களையும் ஆக்கிக் கொண்டே இருப்பாய். உள்ளத்தில் திருப்தியே இல்லை என்பதைத் தெரிந்து கொள்ளும்போது தற்கொலை கூடச் செய்து கொள்ளலாம்.

ஏழை நாடுகளில் நடப்பதை விடச் செல்வந்த நாடுகளில் தற்கொலைகள் அதிகம். அல்லது அதிருப்தி பைத்தியத்துக்கு இட்டுப் போகலாம். ஏழைநாடுகளை விடச் செல்வந்த நாடுகளில் பைத்தியமாகி விடுகிறவர்கள் அதிகம் பேர்.

செல்வந்தனாக இருப்பது ஒரு வகையில் ஆபத்தான விஷயம். தற்கொலைக்கு அல்லது பைத்தியத்துக்கு இட்டுச் செல்லும் சாத்தியம் அதிகம். வேறொரு வகையிலும் அது முக்கியமானது. செல்வச் செழிப்பு ஆன்மிகத்துக்கும் இட்டுச் செல்லலாம். உன் அகத்தின் ஆழத்துக்கு இட்டுப் போய் அங்கே ஒரு புரட்சிகரமான மாற்றத்தைத் தோற்றுவிக்கலாம்.

இது உன்னைப் பொருத்தது. இரண்டு சாத்தியங்களுமே சாத்தியமே. செல்வந்தன் பைத்தியக்காரனாகலாம் அல்லது தற்கொலை செய்து கொள்ளும் மனப்பாங்குடையவனாக மாறிப் போகலாம். அல்லது தியானத்தின் வசப்படலாம். இவை தவிர மூன்றாவது சாத்தியம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.



ஏழை தற்கொலை பற்றி நினைக்க மாட்டான். அவனுக்குப் பைத்தியமும் பிடிக்காது. சாப்பிடுவதற்காக ஒன்றுமே இல்லை எனும்போது சிந்திப்பதற்கு மனம் எங்கே இருக்கப் போகிறது? சாயங் காலமானால் சிந்திப்பதற்கு அவனுக்குச் சக்தியேது? அவன்தான் வெகுவாகக் களைத்துப் போகிறானே! தூங்கிப் போய்விடுகிறான். விடிந்ததும் அன்றைய பொழுதுக்கான போராட்டம் துவங்கிவிடுகிறது.

பிழைத்திருப்பதற்கென ஒவ்வொரு நாளும் அவன் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. பைத்தியம் பிடிக்கும் அளவுக்குச் சிந்திப்பது அவனுக்கு ஓர் ஆடம்பரமாகிப் போகிறது. அவனுக்கு அது சாத்தியப்படுவதில்லை. தன் மனதை அவன் ஆராய்ச்சி செய்ய முடியாது. பணக்காரர் களுக்கு மட்டுமே அது சாத்தியம்.

அவன் தியானிப்பவனாகவும் இருக்க முடியாது. கோயிலுக்குப் போவான். ஆனால் வாழ்வின் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள இது வேண்டும் அல்லது அது வேண்டும் என்றுதான் பிரார்த்திப்பான். அவன் மனைவிக்கு உடல்நிலை சரியாக வேண்டும். குழந்தைக்குப் பள்ளியில் இடம் கிடைக்க வேண்டும். தனக்கு வேலை கிடைக்க வேண்டும். கோயிலுக்குப் போய் இதைத்தான் கேட்கிறான். ஏழையின் ஆன்மிகம் மிகவும் ஏழைப்பட்டதுதான்.

இந்த உலகில் இரண்டு வகையான ஆன்மிகம் இருக்கிறது. ஏழையின் ஆன்மிகம் லோகாயதமானது. பணக்காரனின் ஆன்மிகம் இந்த உலக விஷயங்களைக் கடந்தது. பணக்காரனின் பிரார்த்தனை பணத்துக்காக இருக்காது. பணத்துக்காகப் பிரார்த்தனை செய்கிறான் என்றால் அவன் இன்னும் பணக்காரனாகவில்லை என்றுதான் பொருள்.



ஃபரித் என்றொரு ஸூஃபி துறவி இருந்தார். ஒரு முறை அவருடைய கிராமத்தினர் அவரிடம் வந்தார்கள். ''ஃபரித்! பேரரசர் அக்பர் உங்களிடம் அடிக்கடி வருகிறாரே நம் கிராமத்து ஏழை சனங்களுக்கு ஒரு பள்ளிக்கூடம் கட்டிக் கொடுக்கச் சொல்லி அவரிடம் கேட்கக் கூடாதா?'' என்றார்கள்.

அவர், ''சரிதான். அவர் இங்கே வரவேண்டும் என்று ஏன் காத்திருக்க வேண்டும். நான் போய்க் கேட்டுப் பார்க்கிறேன்'' என்று கிளம்பிவிட்டார்.

டெல்லி போய்ச் சேர்ந்த அவருக்குச் சிறப்பான வரவேற்பு. அக்பருக்கு அவர் மேல் அளவற்ற மரியாதை என்பது எல்லோருக்கும் தெரியும். அக்பர் அப்போது மசூதியில் தொழுகையில் இருந்தார். ஃபரித் மசூதிக்குள் போனார். உள்ளே போனவர் அக்பர் பிரார்த்தித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அக்பருக்குப் பின்னால் ஃபரித் நின்றிருந்ததால் அவருடைய பிரார்த்தனை என்ன என்பதைக் கேட்க முடிந்தது. கைகளை விரித்து வைத்து அக்பர் அப்போதுதான் தன் பிரார்த்தனையை முடித்துக் கொண்டிருந்தார். நமாஸில் ''கருணை கொண்ட கடவுளே! இன்னும் செல்வத்தை என் மேல் வர்ஷிப்பாய்! எனக்கு இன்னமும் பெரிய ராச்சியத்தைத் தருவாய்!'' என்று கேட்டுக் கொண்டிருந்தார்.

ஃபரித் உடனே அங்கிருந்து திரும்பிவிட்டார். பிரார்த்தனை ஏறக்குறைய முடிந்துவிட்டதால் யாரோ வந்து போவதை அக்பர் உணர்ந்தார். திரும்பிப் பார்க்க ஃபரித் போய்க் கொண்டிருப்பதைக் கண்டார். அவர் படியிறங்கிக் கொண்டிருக்க அக்பர் ஓடிப் போய் அவர் காலில் விழுந்தார். ஃபரித் முதல்முதலாக அக்பரைத் தேடி வந்திருக்கிறார். எனவே அக்பர், ''எதற்கு வந்தீர்கள்? ஏன் திரும்பிப் போகிறீர்கள்?'' என்று கேட்டார்.



''நீ செல்வந்தன் என்று நினைத்து உன்னிடம் வந்தேன். உன் பிரார்த்தனையைக் கேட்டபின்தான் தெரிந்தது நீ இன்னமும் ஏழை என்பது. கிராமத்தில் ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப் பணம் கேட்கலாம் என்று வந்தேன். நீயோ இன்னமும் பணமும் அதிகாரமும் வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறாய். எனவே உன்னிடம் போய் நான் கேட்பது பொருத்தமாக இருக்காது. ஏழையிடம் யாசிப்பது முடியாது. உனக்கே இன்னமும் வேண்டும். அதனால் கிராமத்தில் கொஞ்சம் நிதி வசூல் செய்து உனக்கு அனுப்புகிறேன். பள்ளிக்கூடத்தைப் பொறுத்த அளவில் நீயே கடவுளிடம் கேட்கும்போது நான் ஏன் கேட்கக் கூடாது? எதற்கு எனக்கும் கடவுளுக்கும் இடையே ஓர் இடைத்தரகர்?'' என்றார்.

தன்னுடைய சுயசரிதையில் அக்பர் இந்தக் கதையைச் சொல்லியிருக்கிறார். ''வாழ்வில் முதன்முதலாக நான் செல்வந்தன் அல்ல என்பதைத் தெரிந்து கொண்டேன். என்னிடம் இருப்பதில் எனக்குத் திருப்திதான். என்றாலும் இது எனக்கு எதையும் தந்துவிடவில்லை. எனவேதான் இன்னமும் வேண்டும் என்று கடவுளிடம் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறேன். ஏறக்குறைய உணர்வு தப்பிய நிலையில் இப்படிக் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறேன். இதை ஒரு முடிவுக்குக் கொண்டு வரவேண்டும். வாழ்க்கை கடந்து போய்க் கொண்டே இருக்கிறது. நானோ குப்பை கூளமெல்லாம் எனக்கு வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். நிறையத்தான் சேர்த்து வைத்திருக்கிறேன். என்றாலும் அது எனக்கு எதையும் தந்துவிடவில்லை'' என்று புலம்பினாராம்.

ஆனால் அனைவரும் இயந்திரத்தனமாக இன்னும் வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டே இருக்கிறார்கள். இந்த உலகில் வாழ்ந்து அதைப் பற்றித் தெரிந்து கொண்டு அதன் வியர்த்தத்தைப் புரிந்து கொண்டபின் வரும் ஆன்மிகம்



ஒருவனுடைய உடல் தேவைகள் பூர்த்தி அடையாததால் வரும் ஆன்மிகத்திலிருந்து மிக வித்தியாசமானது என்பதை நினைவில் வைக்க வேண்டும்.

ஏழையின் சமயம் ஏழ்மையானதுதான். செல்வந்தனின் சமயம் செழிப்பானதுதான். நான் இந்த உலகில் செழுமையான சமயம் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். எனவே தொழில் நுட்பத்துக்கும் தொழில்மயமாதலுக்கும் நான் எதிரியல்ல. செல்வந்தர்கள் நிறைந்த சமுதாயத்துக்கு நான் எதிரானவன் அல்ல. அவை வேண்டுமென்று நினைப்பவன் நான். ஏனென்றால் இந்த உலகத்தின் பாற்பட்ட செல்வத்தில் விரக்தியடையும்போது சமயம் தன் உச்ச நிலையை அடைகிறது. அப்படி அவர்களை அதில் சலிப்புக் கொள்ள வைக்க வேண்டுமானால் அவற்றை அனுபவிக்க விட்டுவிட வேண்டும்.

**மலரின் அழகையோ மணத்தையோ**
**கெடுக்காதுதானே வண்டு மதுவைச்**
**சேகரிக்கிறது!**
**அப்படியே குருவானவர் அசையாமல்**
**போய் வந்து கொண்டிருக்க விட்டுவிடு.**

புத்தர் தன் சன்னியாசிகளை மதுகாரி என்பார். பிச்சை எடுப்பவர்கள். மதுகாரி என்றால் தேனைச் சேகரிக்கும் வண்டுகளைப் போன்றவர்கள் என்று பொருள். புத்த பிக்கு வீடுவீடாகப் போகிறார். ஒரே வீட்டில் தனக்கு வேண்டியதைப் பிச்சையாக இடுமாறு கேட்பதில்லை. அப்படிக் கேட்டால் அந்த ஒரு வீட்டாருக்கு அது பாரமாகிப்போகும். ஒவ்வொரு வீட்டிலும் கொஞ்சம் கொஞ்சம் என்று கேட்டு வாங்கிக் கொள்கிறார். யாருக்கும் பாரமாகாதல்லவா! ஒரு வீட்டுக்கு இரண்டாவது தடவை போகவே மாட்டார். அதனால்தான் மதுகாரி என்பது. தேனீயைப் போல ஒரு மலரில் இருந்து



இன்னொரு மலருக்கு என்று போய்க் கொண்டே இருப்பதால் எந்த மலரோடும் எந்தப் பந்தமும் ஏற்படுவதில்லை.

மலரின் அழகையோ மணத்தையோ கெடுக்காதுதானே வண்டு மதுவைச் சேகரிக்கிறது! ஒவ்வொரு மலரில் இருந்தும் மிகக் கொஞ்சமாகவே எடுத்துக் கொள்வதால் மலரின் மணம் கெட்டுப் போவதில்லை. வண்டு வந்துவிட்டுப் போனது கூட மலருக்குத் தெரிவதில்லை. அவ்வளவு மௌனமாக வந்துவிட்டு அவ்வளவு மௌனமாகப் போய்விடுகிறது.

''ஞானி ஒரு தேனீயைப்போல இந்த உலகில் வாழ்கிறார். இந்த உலகின் அழகை அவர் எப்போதும் சிதைப்பதில்லை. இந்த உலகின் மணத்தை அவர் என்றும் சிதைப்பதில்லை. மௌனமாக வாழ்கிறார். மௌனமாகவே போய்வருகிறார். எந்த அளவுக்குத் தேவையோ அந்த அளவுக்கே தேடுகிறார். அவர் வாழ்வு மிக எளிமையானது. அதில் எந்தச் சிக்கலும் இருப்பதில்லை. நாளைக்கென்று எதையும் சேர்த்து வைத்துக் கொள்வதில்லை. நாளைக்கென்று தேனீ தேடுவதில்லை. இன்றைக்கு இப்போதைக்கு என்று வாழ்கிறது'' என்கிறார் புத்தர்.

அதனால்தான் ''அப்படியே குருவானவர் அசையாமல் போய் வந்து கொண்டிருக்கிறார்'' என்கிறார். விநோதமான வார்த்தைகள்தான். அசையாமல்... போய் வந்து கொண்டிருந்தல்... தமக்குள் அவிந்து அடங்கியவர். தம் அகத்தை மையமாகக் கொண்டவர். புறத்தே அங்குமிங்குமாகப் போய்க் கொண்டிருக்கிறவர். உள்ளே ஆழ வேர் பிடித்து நிற்கிறவர். புறத்தே எதிலும் எங்கும் எவரோடும் தங்காதவர். பற்று வந்துவிடக் கூடாதல்லவா! தன்னுடையது என்ற உணர்வு வந்துவிடக் கூடாதல்லவா! எனவே நீயும் ஒரு தேனீயைப் போல இரு.



இரண்டொரு நாட்களுக்கு முன் ஒரு கவிஞரின் நினைவுச் சிதறல்களைப் படித்துக் கொண்டிருந்தேன். அவர் ''விநோதம்தான்! நான் ஓர் அழகானவளைக் காதலிக்கும்போது அவளை என்னுடையவளாக்கிக் கொள்ள முடிவதில்லை. அப்படியே என்னுடையவளாக்கிக் கொண்டால் அந்த அழகைச் சிதைக்கிறேன். அவளிடம் பற்றுக் கொண்டால் அவளுடைய சுதந்திரத்தைக் காயப்படுத்தி விடுகிறேன்'' என்கிறார்.

கவிஞர்கள் உணர்ச்சி மயமானவர்கள். சாதாரண மக்கள் உணர முடியாத பலவற்றையும் அவர்கள் அனுபவமாகப் பெறுகிறவர்கள். அவர்களுடைய உள் நோக்கில் ஓர் அருமையான ஆழம் இருக்கிறது. அழகான ஒருத்தியைக் காதலித்து அவளை உன்னுடையவளாக்கிக் கொள்ளும்போது அவளுடைய அழகைச் சிதைத்துத்தான் விடுகிறாய். எவ்வளவு உண்மை. தன்னுடையது என்றாக்கிக் கொள்வதே அழித்துவிடுவதுதானே!

ஒரு தேனீயாக இருக்கும்போதோ அவளுடைய அணுக்கத்தின் மகிழ்வை அனுபவிக்கிறாய். நட்பைச் சுவைக்கிறாய். காதலைப் பகிர்ந்து கொள்கிறாய். ஆனால் அவளை உன்னுடையவளாக்கிக் கொள்ள மாட்டாய். உன்னுடையவளாக்கிக் கொள்வதென்பது அவளை ஒரு நுகர் பொருளாக்கி விடுவதைப்போல. அவளுடைய ஆன்மாவைச் சிதைப்பதாகிப் போகிறது. அவள் மேல் உனக்கு உண்மை யான காதல் இல்லையென்றால்தான் அவளைக் கடைச்சரக் காக்குவாய். அப்படிச் செய்தால் வெறுப்பு காதலாக வேடம் பூண்டு திரிவதாகத்தான் உன் காதல் அமைந்துவிடும்.

ஒரு தேனீயைப்போல வாழ்வில் இயங்கு என்கிறார் புத்தர். அனுபவி. கொண்டாடு. நடனமாடு. பாடு. என்றாலும் ஒரு தேனீயைப் போல ஒரு மலரில் இருந்து இன்னொரு



மலருக்கென்று போய்க் கொண்டே இரு. எல்லா அனுபவங்களும் உன்னுடையதாகட்டும். அனுபவங்கள் வழியாகத்தானே நீ முதிர்ச்சியடைய முடிகிறது!

ஆனால் எதையும் உன்னுடையதாக்கிக் கொள்ளாதே. எதிலும் போய்ச் சிக்கிக் கொள்ளாதே. ஓர் ஆற்றைப் போலப் பாய்ந்து கொண்டே இரு. தேங்கிவிடாதே. உள்ளே அடங்கிப் போனவனாக உள்ளே ஸ்படிகமாகிப் போனவனாக வெளியே இங்குமங்கும் போய்க் கொண்டிருப்பவனாக இரு.

**செய்ய வேண்டியதைச் செய்யாது விடுத்த**
**செய்யக் கூடாததைச் செய்துவிட்ட**
**உன் பிழைகளை எண்ணிப் பார்.**
**பிறர் பிழைகளைக் கண்டு கொள்ளாதே.**

வழக்கமாக எல்லோரும் தத்தமது குறைகளைக் கண்டு கொள்ளாமல் பிறர் பிழைகளைப் பற்றிப் பெரிதுபடுத்திப் பேசுகிறார்கள். அதுதான் அகங்காரத்தின் போக்கு. ''பார்... பார்... எல்லோரிடமும் எவ்வளவு பிழைகள்! என்னிடமோ ஏதுமில்லை!'' என்று சொல்லி சௌகரியமாக இருக்கத்தான் அகங்காரம் விரும்புகிறது. உன்னுடைய பிழைகளை உதாசீனம் செய்து பிறர் பிழைகளைப் பெரிது படுத்தும்போது பிறர் எல்லோருமே ராட்சசர்களாகத் தெரிய உனக்கு நீ மட்டுமே மகானாகத் தெரிகிறாய்.

புத்தர் இதைத் தலைகீழாக மாற்று என்கிறார். உண்மையாகவே உனக்கு ஒரு நிலைமாற்றம் தேவை என்றால் பிறர் பிழைகளை உதாசீனம் செய். பிறர் பிழைகளோடு உனக்கு எந்தத் தொடர்பும் இல்லை. நீ யார் அவர்களைப் பொறுத்த அளவில்? குறுக்கிடக் கேட்கிறார்களா என்ன? அவர்கள் வாழ்வில் குறுக்கிட உனக்கு எந்த உரிமையும் இல்லை. நீ உன் காரியத்தைக் கவனி. ஆனால் அதே சமயம் உன் பிழைகளை உதாசீனம் செய்துவிடாதே. ஏனென்றால்



அவற்றை மாற்ற வேண்டியிருக்கிறது. அவற்றை வென்றெடுக்க வேண்டியிருக்கிறது.

**செய்ய வேண்டியதைச் செய்யாது விடுத்த**
**செய்யக் கூடாததைச் செய்துவிட்ட**
**உன் பிழைகளை எண்ணிப் பார்.**

புத்தர் அப்படிச் சொல்லும்போது செய்ததையும் செய்யாததையும் எண்ணி எண்ணி வருந்து என்று சொல்கிறார் என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. நல்ல காரியம் ஒன்றைச் செய்துவிட்டாய் என்றால் நீயே உன்னைத் தட்டிக் கொடுத்துக் கொண்டு பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டும் என்று சொல்லவில்லை. அப்படி எண்ணிப் பார்த்துக் கொள்ளும் போது பிழைகளைத் திரும்பச் செய்ய மாட்டாய் என்கிறார். செய்த நல்லதைப் போல இன்னும் சிறந்த நல்ல காரியங்களைச் செய்வாய் என்கிறார். அல்லதை ஓட்டி நல்லதை நாட்டுவாய் என்கிறார். எண்ணிப் பச்சாதாபப் படுவதற்கு அல்ல - எண்ணிச் செயல்படுவதற்காக...

இதுதான் கிறித்துவ மனப்பாங்குக்கும் பௌத்த மனப்பாங்குக்கும் இடையே உள்ள வேற்றுமை. கிறித்துவன் வருந்துவதற்காகவே நினைக்கிறான். எனவே கிறித்துவம் குற்றக் குறுகுறுப்பைத்தான் ஏற்படுத்துகிறது. பௌத்தத்திலோ குற்றத்தின் குறுகுறுப்பு இல்லை. எண்ணிப் பார்ப்பது வருந்தி அழுவதற்காக அல்ல. நினைவில் நிறுத்துவதற்காக மட்டுமே.

போனது போயாகிவிட்டது. அதைப் பற்றிக் கவலைப் பட்டு என்னாகப் போகிறது? செய்த தவறுகளை மறுபடி செய்யாமல் இருக்க அவற்றை மனதில் வைத்திரு. இன்னும் கொஞ்சம் பிரக்ஞையோடிரு. அவ்வளவுதான்.



**சொல்வது அர்த்தமற்றுப் போகும்போது**
**வார்த்தைகள் வெற்று வார்த்தைகளே!**
**அழகிய ஒரு மலர்**
**பிரகாசமாக ஜொலித்தும்**
**மணம் இன்றி இருத்தல் போல.**

சாத்திரங்களில் சொல்லியிருப்பதை எல்லாம் இயந்திரத் தனமாகப் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்ப வர்களுடைய வார்த்தைகள் சிறப்பாக ஒலிக்கலாம். ஆனால் அவை உள்ளீடற்றுத்தான் இருக்கும். அழகான ஒளிர்கிற மலர்கள் - ஆனால் மணமற்ற மலர்கள். காகிதப் பூக்களைப் போல. அல்லது பிளாஸ்டிக் பூக்களைப் போல. அவற்றுக்கு மணம் இருக்க முடியாது. அவற்றில் உயிர்த்துடிப்பு இருக்காது. நீயாக ஏதாவது சொல்ல வேண்டியிருந்து, அதைச் சொல்லும் போதுதான் வார்த்தைகளில் ஓர் உயிர்த்துடிப்பு இருக்க முடியும். சாத்திரங்களை மேற்கோளிட்டுப் பேசுவதில் எந்த உயிரும் இருக்க முடியாது. சத்தியத்துக்குச் சாட்சியாக அனுபவ வெளிப்பாடாகப் பேசும்போது ஒரு பண்டிதராக அன்றி, ஒரு அறிஞராக அன்றி ஞானியாக நின்று பேசும்போதுதான் வார்த்தைகளில் உயிர்த்துடிப்பு இருக்க முடியும்.

**சொல்வதே பொருளுமாகிப் போகும்**
**அருமையான உண்மையான வார்த்தைகள்**
**மணமும் ஒளியும் ஒன்றாய்ப் பொருந்திய**
**அழகான மலர்களைப் போல.**

பிறருடைய வார்த்தைகளைத் திருப்பிச் சொல்லாதே. வார்த்தைகளை அனுபவமாக்கு. அப்படி அனுபவப்பட்ட வார்த்தைகளைப் பேசு. அப்போது உன் வார்த்தைகளில் உயிர்த்துடிப்பு இருக்கும். நம்பகத்தன்மை இருக்கும். ஒரு கனம் இருக்கும். ஒளியும் மணமும் இருக்கும்.



உன் வார்த்தைகள் பிறரைக் கவரும். கவர்வதோடு நின்றுவிடாமல் தாக்கங்களை ஏற்படுத்தும். சிறந்த பொருளைச் சூல் கொண்ட வார்த்தைகளாகிப் போகும். அவற்றைக் கேட்பவர்கள் ஒரு நிலைமாற்றம் பெறுவர். உன் வார்த்தைகள் மூச்சுக் காற்றைப் போல அவர்களிடம் உயிரை ஓடவிடும். அவர்களுடைய நெஞ்சத் துடிப்பில் எதிரொலிக்கும்.

**மலர்கள் ஒரு மாலையாவதைப் போல**
**நற்செயல்களின் மாலையாகட்டும் உன் வாழ்வு.**

உன் வாழ்வு ஒரு மாலையாகட்டும். நற்செயல்களின் மாலை. அப்படிப்பட்ட நற்செயல்கள் விழிப்புணர்விலிருந்தே தோன்ற முடியும். கவனித்து பிரக்ஞையோடிருந்து விழிப்புறும் மனத்திலிருந்தே நற்செயல்கள் தோன்றிப் பாயும். நற்செயல்களை ஒரு வழக்கமாகப் பயிரிட்டு வளர்க்க முடியாது. நற்செயல்கள் பிரக்ஞையின் வழித் தோன்றும் துணைக் காரியங்களாக இருக்க வேண்டும்.

பௌத்தம் ஒழுக்கத்தைச் சிலாகிக்கவில்லை. பிரக்ஞையோடிருத்தலைச் சிலாகிக்கிறது. அதுதான் மானுடத்தின் பரிணாமத்துக்கு மனிதனின் பங்களிப்பாக இருக்க முடியும்.

இன்றைக்கு இது போதும்...



முதல் வினா

அன்புக்குரிய குருவே,

எல்லாமும் முரண்பட்டே தெரிகின்றனவே.! முழுமையாக இருக்க வேண்டும் என்றாலும் சாட்சியாக, கவனிப்பவனாக இருக்க வேண்டும். அன்பில் மூழ்கியவனாக என்றாலும் தனிமையில் இருக்கவேண்டும். அதிரகசியமாகத் தெரிகிறதே! ஒரே குழப்பமாக இருக்கிறது எனக்கு. ஏதோ ஒரு வகையில் நான் ஏமாற்றப்பட்டுக் கொண்டிருக்கிறேனோ?

**பிரேம் ஊர்ஜா**, முரண்பாடுகள் இருப்பதால்தான் வாழ்க்கை அழகானதாக இருக்கிறது. வெறும் இனிப்பாக மட்டுமே இல்லாமல் உப்பின் உறைப்போடும் இருப்பதுதான் அதன் அழகு. வெறும் இனிப்பாக மட்டுமே இருக்குமானால் அதில் சாக்கரின் தெவிட்டல்தான் இருக்கும்.

முரண்பாடுகளின் அடிப்படையில் எழுந்தது என்பதால் வாழ்வு ஓர் அதிரகசியமானதாக இருக்கிறது. வாழ்க்கை



எப்படி இருக்கிறதோ அப்படியே அதை எடுத்துக் கொள்ளாமல் அதைப் பற்றிய ஒரு அபிப்பிராயத்தை அனுமானங்களை வைத்துக் கொண்டிருப்பதால்தான் உனக்கு இந்தக் குழப்பம். உன்னுடைய அனுமானங்களை வாழ்வின் மீது திணிக்கப் பார்க்கிறாய். அதில் தர்க்க ஒழுங்கு இருக்க வேண்டும் என்கிறாய். இந்தக் குழப்பம் நீயாக வரவழைத்துக் கொண்டதுதான்.

உன்னுடைய தர்க்க ஒழுங்குக்கு உட்பட்டு இருக்க வேண்டும் என்ற எந்தக் கட்டாயமும் வாழ்க்கைக்கு இல்லை. எனவே உன் தர்க்கத்தின் பாற்பட்ட வகை மாதிரிகளை வாழ்வின் மீது திணித்தால் குழப்பம்தான் மிஞ்சும்.

வாழ்க்கை எப்படி இருக்கிறதோ அப்படியேதான் இருக்கிறது. அதைக் கவனித்துப் பார்க்க வேண்டும். அதில் எல்லா நிறங்களும் இருக்கின்றன. ஒரு வானவில்லைப் போல. ஆனால் நீயோ அது நீலமாகவோ அல்லது பச்சையாகவோ அல்லது சிவப்பாகவோ மட்டுமே இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறாய். ஆனால் அதிலோ ஏழு நிறங்களும் இருக்கின்றன.

உன்னுடைய அனுமானத்தின்படி ஒரு குறிப்பிட்ட நிறத்தில்தான் இருக்க வேண்டும் என்றால் மீதி ஆறு நிறங்களை என்ன செய்வது? கண்டு கொள்ளாமல் ஒதுக்கி வைக்க வேண்டும். அல்லது தடை செய்துவிட வேண்டும். அல்லது மறுத்து அமுக்கிக் கிடப்பில் போட வேண்டும். அல்லது அப்படியே அவற்றை மறுத்துவிட வேண்டும். ஆனால் நீ என்னதான் செய்தாலும் வாழ்வின் இயல்பு மாறப் போவதில்லை. தன் நிறங்களை அது கழித்துவிடப் போவதில்லை. அவை அங்கே இருந்து கொண்டேதான் இருக்கும் - நீ மறுத்தாலும் சரி, தள்ளி வைத்தாலும் சரி, அமுக்கி வைத்தாலும் சரி - அவை அங்கே இருந்து



கொண்டே உன் பிரக்ஞைக்குள் வெடித்துக் கிளம்பச் சரியான தருணத்தை எதிர்நோக்கி இருந்து கொண்டேதான் இருக்கும்.

அப்படி அவை வெடிக்கும் போதெல்லாம் நீ குழப்பத்தின் வசப்படுகிறாய். அந்தக் குழப்பத்துக்கு நீதான் பொறுப்பு. வாழ்க்கையில் உன்னைக் குழப்புவதற்கென்று ஏதுமில்லை. வாழ்க்கை அதிரகசியமானது. ஆனால் குழப்புவதல்ல.

அதிரகசியமாக இருக்கக்கூடாது என்று நினைப்பதால் வாழ்வில் கணிதத்தின் நுண்மை இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறாய். கணக்கிட்டு அளக்கத் தோதுவாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறாய். அதனால்தான் அத்தனை சிரமங்களும்.

வாழ்க்கை சிரமங்களை ஆக்கி வைப்பதில்லை. உன்னுடைய அனுமானங்களைக் கழித்துப் போட்டுவிட்டு வாழ்வைப் பார். அப்போது அமைதியைக் கொண்டு வரும் ஒரு புயலைப் பார்ப்பாய். தர்க்கத்துக்கு அப்பாற்பட்டதுதான். புயலுக்குப்பின் வரும் அமைதியே ஆழ்ந்த அமைதியாக இருக்கிறது. புயல் இல்லையென்றால் அமைதி மேலோட்டமானதாகிப் போய் விடுகிறது. அதில் சுவாரசியமோ ஆழமோ இருப்பதில்லை. புயல் எவ்வளவு வலியதோ அவ்வளவு ஆழ்ந்ததாக அமைதி இருக்கிறது. இதுதான் உனக்கு முரண்பாடாகத் தெரிகிறது.

அப்படி அது முரண்பாடாகிப் போனதற்குக் காரணம் நீ ஒரு தர்க்க ஒழுங்கை அதன் மீது திணிக்க முயற்சிப்பதுதான். புயலானது அமைதியைத் தருவதாவது என்கிறாய். உன்னுடைய அனுமானங்களுக்கு முரணாகத் தெரிகிறது. எனவே குழம்பிப் போகிறாய்.



உன்னுடைய அனுமானத்துக்கு ஒத்துப்போக வேண்டிய அவசியம் என்ன? வாழ்வை உணர வேண்டுமே ஒழிய வாழ்வைப் பற்றிய சிந்தனைகளை வளர்த்துக் கொள்ளலாகாது. அப்படியே அனுமானங்களின் பாற்பட்டு வாழ்வின் இயல்பு பற்றிய கேள்விகளைக் கேட்டுப் பார். என்ன நடக்கிறது? ஆயத்தமான பதில்கள் கிடைப்பதில்லை.

விருப்பு வெறுப்பின் பாற்பட்டு வாழ்வை அணுகிப் பார்க்காதே. விருப்பு வெறுப்பு பாற்பட்டு முன்கூட்டியே தீர்மானங்களைச் செய்துகொண்டு வாழ்வைப் பார்க்காதே. கள்ளங்கபடமற்று, நிர்வாணமாக, ஏதும் அறியாதவனாக வாழ்வைப் பார். ஏதும் தெரியாத நிலையில் இருந்து இயங்கு. பிறகு வாழ்க்கையில் குழப்பம் ஏதுமில்லை என்பதைத் தெரிந்து கொள்வாய். அதில் அளப்பரிய பரவசத்தைக் காண்பாய். இன்று குழப்பமாகத் தெரிவதற்காக நன்றி தான் சொல்வாய். வாழ்க்கையில் தர்க்க ஒழுங்கு இல்லை என்பதைக் குறித்து நன்றியுடையவனாக இருப்பாய்.

அரிஸ்டாட்டிலின் கொள்கைப்படி வாழ்வை இறைவன் அமைத்திருந்தால் அதில் சலிப்புத்தான் மிஞ்சியிருக்கும். அரிஸ்டாட்டிலைப் பற்றிக் கடவுளுக்கு ஒன்றும் தெரியாது என்பது வெகு நல்லதற்குத்தான். அவருடைய புத்தகங்களைப் படித்ததில்லை. தர்க்கத்தில் கடவுளுக்கு நம்பிக்கை இல்லை. அவர் வாதப் பிரதிவாதங்களுக்கிடையேயான முரண் பாட்டை நம்புகிறவர். அதனால்தான் இத்தனை முரண்பாடுகளும்.

ஒருவர் ஆழ்ந்த காதல் வசப்பட்டிருந்தும் தனிமையில் இருக்கலாம். பார்க்கப் போனால் ஆழ்ந்த காதல் வசப்படுகிறவன்தான் தனிமையிலும் இருக்க முடியும். காதலின் ஆழம் உன்னைச் சுற்றி ஒரு கூடலைப் பண்ணி



வைக்கிறது. ஆழமான கடல்தான். நீ ஒரு தீவாகிப் போகிறாய். கடல் உன் கரைகளில் அலைகளை வீசி எறிந்து கொண்டேதான் இருக்கிறது. ஆனால் எத்தனை அலைகளை உன் மீது வீசி எறிகிறதோ அந்த அளவுக்கு நீ கெட்டித்துப் போகிறாய். ஒருமைப் பட்டவனாக, வேர் பதித்தவனாக, மையப்பட்டவனாக ஆகிப் போகிறாய்.

உனக்குத் தனிமையைத் தருகிறது என்பதாலேயே காதல் உயர்ந்ததாகிப் போகிறது. நீ நீயாக இருப்பதற்குத் தேவையான விசாலமான இடம் தருகிறது.

ஆனால் நீ உனக்கென்று காதலைப் பற்றிய கருத்து வைத்துக் கொண்டு திரிகிறாய். காதல் அல்ல. காதலைப் பற்றிய உன் எண்ணம்தான் அத்தனை பிரச்சனைக்கும் காரணமாகிறது. காதலில் காதலர்கள் கரைந்து போக வேண்டும் என்று கருதுகிறாய். ஒருவருக்குள் ஒருவராகக் கரைந்து போய்விட வேண்டும் என்கிறாய்.

சில கணங்களில் அந்தக் கரைதல் இருக்கிறதுதான். ஆனால் ஒருவருக்குள் ஆழ்ந்து போய்க் கரைந்து போகும் போதுதான் அவர்கள் தம்மைப் பற்றிய உணர்வையும் அதீதமாகக் கொள்ள வருகிறார்கள். உணர்வுகள் கூர் தீட்டி நிற்கக் காண்கிறார்கள்.

அந்தக் கரைதலில் குடியின் போதை இல்லை. அதில் உணர்வின்றிப் போவதில்லை. அதில் ஒரு பெரும் பிரக்ஞையை அவர்கள் பெறுகிறார்கள். ஒரு பெரும் விழிப்பு தூண்டப்பட்டிருக்கக் காண்கிறார்கள்.

ஒரு வகையில் ஒருவருக்குள் ஒருவராகக் கரைந்து போயிருக்கிறார்கள். இன்னொரு வகையில் தாம் தாமாக இருப்பதில் இருக்கும் அருமையை உணர்கிறார்கள்.



ஒருவருக்கொருவர் இதற்காக நன்றியுடையவர்கள் ஆகிப் போகிறார்கள். ஒருவர் மற்றவருக்கு விளக்கமாகிறார். அவரவர் தனித்தனி இருத்தலுக்கு ஒருவருக்கொருவர் சாட்சியாகிப் போகிறார்கள். காதலனால் காதலியும் காதலியால் காதலனும் தம்மைத் தாமே உணர்ந்து உய்த்துத் தெரிந்து கொள்ள முடிகிறது. ஒருவர் மற்றவரைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகிப் போகிறார். காதலர் ஒருவருக்கு மற்றவரைக் காட்டும் கண்ணாடிகளே. காதல் மட்டுமே நமக்கு நம் உண்மையான முகத்தைக் காட்டுகிறது.

எனவே இது முரண்பாடாகத் தெரிகிறது. ''காதல் தனிமையைத் தருகிறது'' என்று சொன்னால் அது முரணாகத்தானே தெரிகிறது! காதல் இருவரை இணை சேர்க்கிறது என்றுதான் இத்தனை நாளும் நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஒன்று சேர்ப்பதில்லை என்று நான் சொல்ல மாட்டேன். ஆனால் தனியாக இருந்தால்தானே ஒன்றிணைக்க முடியும்? யார் ஒன்றாக முடியும் என்று நினைத்துப்பார். இருவர் தனித்தனியாக இருக்கும் வரையில்தான் அவர்களை ஒன்றாக்கும் சாத்தியம் இருக்க முடியும்? இருவரும் தாம் தாமாக இருக்கும் வரையிலும் கூடுதலில் இன்பம் கூடிக் கொண்டே போகும். கூட இருந்தும் தாம் தாமாக இல்லாத வரையிலும் அவர்கள் கூடியிருப்பவர்கள் அல்ல - பிணைக்கப்பட்டு இருக்கிறவர் கள்தான்.

ஒருவரை ஒருவர் சார்ந்தவராக, கட்டிப் பிடித்துக் கொண்டு, தான் தனது என்று கொண்டு மற்றவருக்குத் தனிமையைத் தராமல் ஒட்டிக் கொண்டே இருப்பவர்கள் அருகருகே வளர இடம் தராமல் போகிறவர்கள். அவர்கள் எதிரிகள் - காதலர்கள் அல்ல. அவர்கள் ஒருவரை ஒருவர்



அழித்துக் கொள்கிறவர்கள். அவர்கள் தத்தமது ஆன்மாக்களைக் கண்டுகொள்ள ஒருவருக்கொருவர் துணையாக மாட்டார்கள்.

இது என்ன காதல் என்கிறாய்? தனிமையைக் கண்டு பயந்து போய் இன்னொருவரைக் கூட வைத்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு எதுவும் இல்லை. அதனால்தான் எப்போதும் ஒருவரை ஒருவர் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் உண்மையான காதலில் எந்தப் பயமும் இருப்பதில்லை. உண்மைக் காதலர் தாம் தாமாகவே இருக்கத் தெரிந்தவர்கள். அந்தத் தனித்த அடையாளம் இல்லையானால் காதல் அனுபவமாக முடியாது. கூட இல்லாமலிருந்தும் கூடி இருப்பதுதான் உண்மைக் காதல்.

காதலர் இருவரும் ஒரு கோயிலின் இரண்டு தூண்களைப்போல என்பார் கலீல் ஜிப்ரான். ஒரே கூரையைத் தாங்கிப் பிடித்தாலும் அவை தனித்தனியாகவே நிற்கின்றன. கூரையைத் தாங்குவதில் கூடி இருக்கின்றன. ஆனால் தத்தம் அளவில் தனித்து நிற்கின்றன.

கோயிலைத் தாங்கும் தூண்களாக இருங்கள். காதலெனும் கோயிலைத் தாங்கும் தூண்களாக. ஒரே கோயிலின் கூரையைத் தாங்கும் தூண்களாக. என்றாலும் அவரவர் ஜீவிதத்தில் ஆழ்ந்து நில்லுங்கள். அதிலிருந்து அகன்றுவிடலாகாது. பிறகுதான் இருவருடைய அழகும் பரிசுத்தமும் தூய்மையும் ஆரோக்கியமும் தத்தம் முழுமையும் உணர்கிறவர் ஆகிறீர்கள். கூடி இருப்பதன் நடனம், பரவசம், லயம் உங்களுக்கு அனுபவம் ஆகிறது.

தனியாக ஓர் இசைக் கருவியை இசைப்பதில் ஓர் அழகு இருக்கிறது. வேறு எந்த இசைக் கருவியும் கூட இல்லாமல்



புல்லாங்குழல் மட்டும் ஒருவர் வாசிக்கக் கேளுங்கள். ஆஹா எவ்வளவு இனிமையாக இருக்கிறது! அதே சமயம் ஆர்க்கெஸ்ட்ராவுக்கு என்று ஓர் இனிமை இருக்கிறது. காதலுக்குத் தனிமையின் இனிமையும் கூடி இருப்பதன் பரவசமும் ஒன்றாகத் தெரியும். தனியாக ஒரு புல்லாங்குழல் இசையாக இருக்கத் தெரியும். கூடி இருக்கும்போது ஆர்க்கெஸ்ட்ராவின் தாளச் சுருதி லயமாகவும் இருக்கத் தெரியும்.

எதார்த்தத்தில் எந்த முரண்பாடும் இல்லை. நீ உனக்கென்று ஒரு கருத்தை வைத்துக் கொண்டிருப்பதால் தான் இல்லாத முரண்பாடுகள் இருப்பதாக உனக்குத் தெரிகின்றன. அந்தக் கருத்துக்களைக் கழித்துவிட்டுப் பார். எங்கே இருக்கிறது முரண்பாடு?

முடிவுகளை அனுமானித்துக் கொள்வதால்தான் குழப்பங்கள் தோன்றுகின்றன. ஏற்கெனவே ஒரு சில முடிவுகளைச் செய்து கொண்டு அவற்றை வாழ்வில் தேடும்போதுதான் உனக்குக் குழப்பமே வருகிறது. வாழ்க்கை அதுவன்றி வேறு எதுவாகவோ தோன்றுகிறது. வாழ்வுக்கு ரிப்பேர் பார்ப்பதை விட்டுவிட்டு உன் தீர்மானங்களைக் கழித்து விட வழியைப் பார்.

தீர்மானங்களின் அடிப்படையில் இயங்கவே கூடாது. அதைத்தான் நான் தினமும் சொல்லிக் கொண்டே இருக்கிறேன். அறிவின் தளத்தில் இருந்து கொண்டு வாழ வேண்டும் என்று வந்து விடாதே. அறிவு என்றாலே தீர்மானங்கள், முடிவுகள் என்று பொருள். தீர்மானங்களுக்குள் அடக்கி வைக்க முடியாத அளவுக்கு அகன்றது வாழ்வு. எல்லாத் தீர்மானங்களும் பின்னங்களே. பின்னம் முழுமை என்று தன்னைச் சொல்லிக் கொள்ளும்போது வெறித்



தனமும், சம்பிரதாயமும் சலிப்பும் முட்டாள்தனமும் ஆட்சிக்கு வந்து விடுகின்றன.

ஊர்ஜா! ''முழுமையாக இருக்க வேண்டும் என்றாலும் சாட்சியாக, கவனிப்பவனாக இருக்க வேண்டும். இது முரணாகத் தெரிகிறதே!'' என்கிறாய்.

முரணாகத் தெரிகிறதே ஒழிய அதில் முரணேதும் இல்லை. முழுமையானவனாக இருப்பதே சாட்சியாக இருப்பதுதான். எதிலும் ஆழ்ந்துவிடும்போது அங்கே நடப்பதற்கு நீ அருமையான சாட்சியாகிப் போகிறாய். அந்த அளவுக்கு உன் பிரக்ஞை கூர்மையானதாகிவிடுகிறது. இது திடீரென நிகழ்வதல்ல. இதைப் பயிற்சி மூலம் சாதிக்கவும் முடியாது. அதற்குள் ஆழ்ந்து ஆழ்ந்து இருந்து கொண்டே இருக்கும்போது ஒருநாள், திடீரென அது நிகழ நீ பரவசத்தில் நடனமாட ஆரம்பித்து விடுகிறாய். பொறுத்திருந்து பார்.

நான் இதுவரை சொன்னதில் தர்க்க ஒழுங்கு இல்லைதான். இவை வாழ்வின் இயல்பின் அடையாளங்கள். குறிப்புகள். பரவசத்தில் நடனமாடு. பிறகு உனக்கே ஆச்சரியமாகத்தான் இருக்கும். புதிதாக ஏதையோ ஒன்றை உணர்வாய். நடனம் முழுமையானதாகிவிடும் போது, நடனத்தில் நடனமாடுகிறவன் தன்னை இழக்கும் போது, நடனமாடுகிறவன் மறைந்து போய் நடனம் மட்டுமே இருக்க வரும்போது, புதியதொரு பிரக்ஞை உனக்குள் முகிழக் காண்பாய். என்றாலும் உணர்விழந்து போவதில்லை. உணர்வுகளின் வெகு எதார்த்தத்தில் இருந்து கொண்டிருக் கவும் பரவசம் மெய்யாக அனுபவமாகிப் போவதைக் காண்பாய். முன்னெப்போதையும் விட பிரக்ஞையோடு பரவசத்தை அனுபவிப்பாய்.

ஆனால் அதைப் பற்றி நினைத்துப் பார்க்க ஆரம்பித்தால் முரண்பாடுகள் உன்னைத் தாக்கும். அதைச் சரியாகக் கையாள முடியாமல் குழம்பித் தவிப்பாய்.



அனுபவி. இப்போது சொன்னதெல்லாம் உனக்கு அனுபவிக்க உதவி செய்யத்தான். நான் ஏதும் தகவல்களை உன் மீது திணிக்கவில்லை. வாழ்வின் பன்முகக் கூறுகளைத் தரிசித்துச் சுவைக்க நான் தரும் குறிப்புகள்தான் இவை.

அன்பில் மூழ்கியவனாக என்றாலும் தனிமையில் இருக்க வேண்டும். முரண்பாடாகத் தெரிகிறதே! என்று சொல்கிறாய். அப்படித் தெரிகிறது. ஆனால் அப்படி இல்லை. ஆனால் நீயோ உன்னுடைய தீர்மானங்களை விடாப்பிடியாகப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறாய். அதனால்தான் வாழ்க்கை உன்னை ஏமாற்றுகிறதோ என்று படுகிறது.

ஒருவகையில் நீ ஏமாற்றப்பட்டவன்தான். உன் தீர்மானங்கள், விருப்பு வெறுப்புகள், உன் தகவலறிவு என்று இவை உன்னை என்றும் ஏமாற்றியே வந்திருக்கின்றன. கள்ளங்கபடமற்ற உலகத்துக்கு உன்னை மறுபடி இட்டுச் செல்லவே நான் வந்திருக்கிறேன். மறுபடியும் ஒரு குழந்தையாக மறுபிறவி எடுக்க உனக்குத் துணையாக நான் வந்திருக்கிறேன். ஆச்சரியத்தையும் வியப்பையும் இயல்பாகக் கொண்ட குழந்தையாக உன்னை மாற்ற வந்திருக்கிறேன்.

குழந்தை எதிலும் எந்த முரண்பாட்டையும் காண்பதில்லை. அதுதான் குழந்தையாக இருப்பதன் அருமையே. உன்மீது எக்கச் சக்கமான பாசத்தைப் பொழிந்து ''ஒரு கணம் கூட நீ இல்லாமல் நான் வாழ முடியாது'' என்று சொல்ல ஒரு குழந்தைக்குத்தான் முடியும். அடுத்த கணமே ஏதோ ஒரு கோபத்தில், ''உன் முகத்தில் இனி எப்போதுமே



முழிக்க மாட்டேன்'' என்றும் ஒரு குழந்தைதான் சொல்ல முடியும். கொஞ்ச நேரம் கழித்து உன் மடியில் உட்கார்ந்து கொண்டு ஆனந்திக்கவும் அந்தக் குழந்தையால்தான் முடியும். இதில் எல்லாமும் முழுமையான உணர்வுகளே என்பதை நினைவில் வை.

குழந்தை தன் ஒவ்வொரு கணத்திலும் ஒட்டு மொத்தமாக வாழும் ஜீவன். குழந்தைக்கு எதிலும் எந்த முரண்பாடும் இல்லை. கோபமா? கலப்படமில்லாத கோபம்தான். பாசமா? அப்பழுக்கற்ற பாசம்தான். எந்தக் குழப்பமும் இல்லாமல் ஒரு கணத்திலிருந்து இன்னொரு கணத்துக்குப் போகக் குழந்தைக்கு முடிகிறது. எந்தக் குழப்பமும் ஏற்படுவதில்லை. எந்த முரண்பாட்டையும் காண்பதில்லை. காரணம் எந்தத் தீர்மானத்தின் பேரிலும் எதையும் பார்ப்பதில்லை. ஒருவன் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதெல்லாம் குழந்தைக்குத் தெரியாது. அப்போதைக்கு என்னவாக இருக்கிறதோ அப்படி இருக்க விட்டு இருக்கிறது குழந்தை. வாழ்வின் போக்கோடு போகும் குழந்தை.

ஊர்ஜா! நீ எங்கேயோ தேங்கிப் போய்விட்டாய். ஏகப்பட்ட விஷய ஞானம் வந்துவிட்டது. அதுதான் ஒரு தடையாக நிற்கிறது. என்னோடு சேர்ந்து பாய்ந்தோட உன்னை விடமாட்டேன் என்கிறது. பிறரோடு சேர்ந்து பாய உன்னை விடமாட்டேன் என்கிறது. கடவுளோடு சேர்ந்து பாய உன்னை விட மாட்டேன் என்கிறது.

கடவுள் இரவும் பகலுமானவர். கோடையும் குளிர்காலமும் ஆனவர். பிறப்பும் இறப்பும் ஆனவர். இப்படியான முரண்பாடுகளை ஏற்றுக் கொள்ள உன்னைப் பாக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். அப்படிக்

குழப்பமின்றி இருக்க முடியுமானால் ஞானம் உன்னிடமிருந்து வெகு தூரத்தில் இருக்க முடியாது.



ஞானம் அடைந்த நிலையில் எல்லா முரண்பாடுகளும் இல்லாமல் போய்விடுகின்றன. வாழ்க்கை எப்படி இருக்கிறதோ அப்படியே அதை ஏற்றுக் கொள்கிறான். ஒப்பிட்டுப் பார்ப்பதற்குத் தீர்மானங்கள் இருப்பதில்லை. தீர்ப்புகள் சொல்வதற்கு கருத்துக்கள் இருப்பதில்லை. பிறகெப்படி நீ குழப்பத்தைக் காண்பது? என்னை நீ எந்த விதத்திலும் குழப்பம் கொள்ள வைக்க முடியாது. என்னிடம் தான் எந்தத் தீர்மானமும் இல்லையே. எந்தத் தீர்மானமும் இல்லாமல், எந்த விஷய ஞானமும் இல்லாமல் வாழ்வை அப்படியே சுவைத்துப்பார். அது ஒரு அதிரகசியம்தான் - என்றாலும் குழப்புவதற்கு அதில் ஏதுமில்லை.

இரண்டாவது வினா

அன்புக்குரிய குருவே,

**அதிரகசியம் என்று சொல்வதைப் பற்றி எனக்கு எந்த நம்பிக்கையும் இல்லை. அதைப் போன்ற ஒன்று இருப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை. உங்களுடைய கம்யூனைப் பிரபலப்படுத்த நீங்கள் சொல்வதுதான் அது. இங்கே இருக்கும் பொதுத் தொடர்புத் துறையில் எல்லோரும் சோம்பேறித்தனமாக இருக்கிறார்கள். அவர்கள் உங்கள் அளவுக்குப் புத்திசாலிகளும் அல்ல. அதனால் நீங்கள் விளம்பரம் செய்கிறீர்கள் என்றுதான் நான் நினைக்கிறேன்.**

**சர்ஜனோ,** நம்புவது அல்லது நம்பாதது பற்றியது அல்ல அது. அதன் இயல்பு அதுதான். அதைத் தெரிந்து



கொள்ளாததால்தான் நீ நம்புவதைப் பற்றிப் பேசுகிறாய். எதார்த்தத்தை உன்னால் புரிந்துகொள்ள முடியாதபோது நம்பிக்கை முக்கியமானது. அவநம்பிக்கை கூட அதே அளவுக்கு முக்கியமானது. பிறகு நீ நம்புகிறாய் அல்லது நம்பாமல் போகிறாய்.

நான் பேசும் அதிரகசியத்தை நீ நம்ப வேண்டும் என்று நான் சொல்லவில்லையே. நம்ப வேண்டாம் என்றும் சொல்லவில்லை. என்னோடு வா என்கிறேன். அது அப்படித்தான் என்கிறேன். விழித்துக் கொள்ளலாம் வா என்கிறேன்.

அதிரகசியம் பற்றி நீங்கள் சொல்லும் ஒரு வார்த்தையைக் கூட நான் நம்பத் தயாராக இல்லை என்கிறாய். அதுவும் நல்லதுதான். நம்ப வேண்டாம். அப்படி நம்ப ஆரம்பித்து விட்டால் நீயாக அனுபவிக்க முடியாது போய்விடும். நம்புகிறவர்களைப் பற்றி எனக்கு எந்த அக்கறையும் இல்லை. தேடுகிறவர்களைப் பற்றித்தான் எனக்கு அக்கறை.

ஆனால் யூகங்கள் செய்து கொள்ளாதே. ஏனென்றால் ஒரு யூகம் யூகமே அன்றி வேறு எதுவாகவும் இருக்க முடியாது. அது எந்த வகையிலும் உதவாது. அது இன்னுமொரு நம்பிக்கையாகிப்போகும். ஒரே யூகத்தை நீண்ட காலத்துக்கு மீண்டும் மீண்டும் செய்யும்போது அது நம்பிக்கையாகி விடுகிறது. உனக்கென ஒரு நம்பிக்கையை உருவாக்கி வைத்துக் கொள்கிறாய். அதுவும் ஒரு தடையாகித்தான் போகும்.

நம்பிக்கைகளானாலும் சரி நம்பாமல் இருப்பதும் சரி வெகு நுட்பமான தடைகளாகிப் போகும்.



நான் நம்பிக்கை என்று சொல்லும்போது நம்பிக்கை இல்லாததையும் இணைத்துக் கொண்டு தான் பேசுகிறேன். ஒரே நாணயத்தில் இரண்டு பக்கங்கள் போல என ஞாபகத்தில் கொள்.

நம்புவதும் நம்பாததும் இரண்டுமே தடைகள்தான். பைபிளில் இருந்தோ அல்லது தாஸ் கேப்பிடலில் இருந்தோ அல்லது பகவத் கீதையில் இருந்தோ அல்லது நீயாக உருவாக்கிக் கொண்டதாகவோ ஒரு நம்பிக்கையைக் கைக்கொள்ளும் போது - இரவல் வாங்கிக் கொண்டதோ நீயே வகுத்துக் கொண்டதோ எப்படியானாலும் - நம்பிக்கை ஒரு தடையாகிப் போகிறது. கண்ணுக்குத் தெரியாத ஒரு தடை. அந்த நம்பிக்கை அதைத் தாண்டிய எதையும் பார்க்க முடியாமல் செய்து விடுகிறது.

ஒரு பரிசோதனை பற்றிப் படித்தேன். சர்ஜனோ! அதைப் பற்றித் தீவிரமாகச் சிந்தித்துப் பார்.

ஓர் உயிரியல் விஞ்ஞானி - ஒரு கண்ணாடித் தொட்டியை இரண்டு பகுதிகளாகப் பிரித்து இடையே ஒரு கண்ணாடித் தடுப்பை வைத்தார். ஒரு பக்கத்தில் பைக் என்ற மீனை விட்டு வைத்தார். அது பிற மீன்களைப் பிடித்துச் சாப்பிடும் மீன். மறுபக்கத்தில் சின்ன மீன்கள் சிலவற்றை விட்டு வைத்தார்.

நடுவில் கண்ணாடித் தடுப்பு இருந்தது அந்த பைக்குக்குத் தெரியவில்லை. தன் இரையை நோக்கிப் பாய்ந்தது. மூக்கை உடைத்துக் கொண்டதுதான் மிச்சம். பல தடவையும் இப்படி மூக்குடைபட்டுக் கொண்டது. ஒவ்வொரு முறையும் வலிதான் மிச்சம் என்று தெரிந்து கொண்டபின் முயற்சிகளைக் கைவிட்டுவிட்டது. சில நாட்களில் அந்தக் கண்ணாடித் தடுப்பு அகற்றப்பட்ட பின்னும் தானிருந்த பகுதிக்குள்ளேயே வளைய வந்ததே



ஒழியத் தன் இரை இருக்கும் பக்கம் போகத் துணியவில்லை. இதுதானே நமக்கும் நடக்கிறது?

தடுப்பு இல்லை. எடுத்து விட்டாயிற்று. ஆனால் ஒரு நம்பிக்கையை பைக்கிடம் எழுப்பியாகிவிட்டது. அங்கே ஒரு கண்ணுக்குத் தெரியாத தடை இருப்பதாக அந்த பைக் நம்புகிறது. அந்த நம்பிக்கை ஒன்று போதுமே. இல்லாத தடையை இருப்பதாக நம்பிக் கொண்டிருப்பதற்கு. இப்போது அந்த மீன் போக முடியும். அதனுடைய நம்பிக்கை தவிர அதைத் தடுக்க ஏதுமில்லை. அதுவும் அனுபவத்தின் மீதான நம்பிக்கை - மறந்து விடாதே. மறுபடி மறுபடி முயன்று ஒவ்வொரு முறையும் மூக்கு உடைபட்ட அனுபவம் ஒரு நம்பிக்கையாக ஆகிப்போய்விட்டது.

அந்த மீனைப் புரிந்து கொள்ள முடிகிறது. வியர்த்தம் என்று தெரிந்து கொண்டு முயற்சியைக் கைவிட்டு விட்டது. கண்ணுக்குத் தெரியாத ஒரு தடை இருக்கிறது என்ற நம்பிக்கை. முயற்சியை என்றைக்குமாகக் கைவிட்டாயிற்று. சாகும் வரை முயற்சிக்கப் போவதில்லை. போக முடியும். போய் தன் இரையைக் கொள்ள முடியும். அவையும் அங்கேயே இருக்கின்றன. ஆனால் அந்தக் கோடுவரை போய்விட்டுத் திரும்பிவிடும்.

இதுதான் மனித வாழ்வில் நிலவும் சூழலும். இந்துவுக்கு என்று ஒரு தடை. முகம்மதியனுக்கு என்று ஒரு தடை. சமணருக்கு ஒரு தடை. ஒவ்வொருவரும் கண்ணுக்குத் தெரியாத ஒரு தடைக்கு அப்பால் மறைந்து வாழ்கிறார்கள். அந்தத் தடைகள் இருப்பதால் அதைத் தாண்டி அவர்களால் எதையும் பார்க்க முடிவதில்லை.

வாழ்க்கை ஓர் அதிரகசியம் சர்ஜனோ. வாழ்வைப் பூரணமாக வாழ்வதற்கான சோதனைக்கு என்னுடைய கம்யூன்



ஒரு களமாக இருக்கப் போகிறது. தடைகளைத் தாண்டிய வாழ்வை வாழும் பரிசோதனை. கோட்பாடுகளால் ஆன தடைகள். கத்தோலிக்க கம்யூனிஸ்டு போன்ற வார்த்தைகளில் அடங்கிப் போகும் கோட்பாடுகள், சித்தாந்தங்கள், நம்பிக்கைகள் ஆகிய தடைகளைத் தாண்டிய வாழ்வு.

எப்படி இருக்கத் தோன்றுகிறானோ அப்படிப்பட்டவன் மட்டுமல்ல மனிதன். அதைக் கடந்தவன். மலர்கள் கூட அவை எப்படித் தோன்றுகின்றனவோ அது மட்டுமல்ல. அதையும் கடந்தவை. உன்னைப் பொருத்து அவை வேறுபடுகின்றன. ஒரு விஞ்ஞானி ஒரு மலரைக் காணும்போது அதன் ஒரு பகுதியை, ஒரு விஞ்ஞானப் பகுதியாகப் பார்க்கிறான். அதைக் கடந்து போக முடிவதில்லை. அவனுக்கென்று ஒரு தடை - கண்ணுக்குத் தெரியாத தடை - அது அவனைத் தடுத்து நிறுத்தி விடுகிறது. மலரின் பௌதிகத் தன்மையைக் கடந்து அவன் போவதில்லை. ரோசாப்பூவில் அவனுக்கு அழகில்லை. ஏனென்றால் அழகு அவனுடைய நோக்கத்துக்குள் வருவதில்லை. அதை எடை போட்டுப் பார்ப்பான். அறுத்துப் பார்ப்பான். எவ்வளவு நிறமிகள், என்னென்ன பாகங்கள், எவ்வளவு நீர் இப்படி... ஆனால் அழகைப் பற்றி நினைத்துக் கூடப் பார்க்க மாட்டான்.

ஒரு கவிஞன் பார்க்கும்போது அதன் எடை, அளவு, அதில் இருக்கும் நீர், மண் இவற்றைப் பார்க்க மாட்டான். அவனுக்கு ரோசாப்பூ அழகின் வடிவம். எங்கேயோ இருந்து பூமிக்கு வந்து சேர்ந்த அழகு. அவனுடைய பார்வை வேறுபட்டது. விஞ்ஞானியின் பார்வையை விட விசாலமானது. முக்கியமானது.



ஒரு மெய்ஞ்ஞானி அதே மலரைக் காணும்போது நடனமாடுவார். பரவசத்தில் நடனமாடுவார். ஏனென்றால் அவருக்கு ரோசாப்பூ கடவுளைத் தவிர வேறொன்றில்லை. ஒரு ரோசாப்பூவில் பிரபஞ்சம் முழுக்க இருக்கிறது. எல்லா நட்சத்திரங்களும், சூரியன்களும், நிலவுகளும், சாத்தியமான சாத்தியமற்ற எல்லா உலகங்களும் அந்த ரோசாப்பூவில் தெரிகின்றன. எந்த வகையிலும் குறைவுபடாமல் விஞ்சிப் போகாமல் ஒரு மலர் கடவுளே. கண்டவுடன் தொழ ஆரம்பித்து விடுவார். தலை வணங்கித் தொழ ஆரம்பித்துவிடுவார்.

விஞ்ஞானிக்குச் சிரிப்பு வரும். கவிஞனுக்கோ குழப்பமாக இருக்கும். மெய்ஞ்ஞானியின் முட்டாள் தனத்தைக் கண்டு விஞ்ஞானி சிரிப்பான். ''என்ன செய்கிறார் இவர்? ஒரு ரோசாப்பூவை வணங்குகிறாரே... ஒரு மரத்தை, ஓர் ஆற்றை, ஒரு மலையைப் பார்த்துக் கடவுள் என்கிறாரே... முட்டாள்தனம். மூடத்தனம்.'' என்பான். மறுத்துப் பேசுவான். மெய்ஞ்ஞானியின் உலகத்தை ஏற்றுக்கொள்ள மாட்டான்.

கவிஞனுக்கோ கொஞ்சம் குழப்பமாக இருக்கும். மலரின் அழகை அனுபவிப்பதை அவனால் புரிந்து கொள்ள முடியும். ஆனால் அதை வணங்குவதா? ரோசாப்பூவுக்கு முன்னால் மண்டி போட்டு அல்லேலூயா சொல்லுவதா? அவனுடைய பார்வைக்கு அப்பாற்பட்ட விஷயம். கவிஞன் குழம்பிப் போகிறான். அவனுக்கு மெய்ஞ்ஞானி பித்தராகத் தெரிகிறார்.

விஞ்ஞானிக்கு அவர் மூட நம்பிக்கை வைத்திருப்பவர். மடையன். கவிஞனுக்கு அவர் கோமாளி - சற்றே புத்தி பேதலித்தவர். ஏனென்றால் மெய்ஞ்ஞானி விஞ்ஞானி மற்றும்



கவிஞனுடைய எல்லை தாண்டிப் போகிறார். மெய்ஞ்ஞானி எல்லா எல்லைகளையும் தாண்டிப் போகிறார். அதனால்தான் அவர் மெய்ஞ்ஞானி ஆகிறார். அவர் அதிரகசியத்துக்குள் ஜீவிப்பவர்.

சர்ஜனோ! நமது புதிய கம்யூனைப் பற்றி நான் சொல்வதெல்லாம் சத்தியம். அதிகமாக ஒன்றும் சொல்வதில்லை. அப்படிச் சொல்லிவிடுவது ஆபத்தானது. தவறானவர்களை ஈர்த்துவிடக் கூடாது. குறிப்புகளைப் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு சிலருக்காகச் சில குறிப்புகளைத் தருகிறேன். அதி அற்புதத்தையும் அதிரகசியத்தையும் தேடுகிறவர்களுக்கு என ஒரு குழூஉக்குறியில் பேசுகிறேன். மற்றவர்களுக்கு அங்கே அனுமதி இல்லை. நானல்ல அந்த அனுமதியை மறுப்பது. அவர்களே அவர்களுடைய தடைகளைக் கடந்து அங்கே வர முடிவதில்லை. அவர்களுடைய விருப்பு வெறுப்புகளைக் கடந்து...

உனக்கு அது நன்றாகத் தெரியும். உலகம் முழுக்க இருந்து இங்கே வருகிறார்கள். ஆனால் இந்தப் பூனாக் காரர்கள் யாரும் வருவதில்லை. யார் அவர்களைத் தடுத்து வைத்திருப்பது? அவர்களும் வரலாம். ஆனால் அவர்களாக வரமாட்டார்கள். அவர்களுக்கு அவர்களுடைய கண்ணுக்குத் தெரியாத தடைக்கு அப்பாற்பட்ட உலகமே போதும்.

அவர்கள் வராதிருப்பதும் நல்லதுதான். உபத்திரவமாகத் தான் இருப்பார்கள். கடந்து நிற்பதைப் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு சிலர் - புரிந்து கொள்ள முடியாததைப் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு சிலர் மட்டுமே வருகிறார்கள்.

நம்புகிறாயோ இல்லையோ இதைக் கேட்டுக் கொள்.

இரண்டு ஓரினச் சேர்க்கைக்காரர்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ''மிகச் சமீபத்தில் ஒரு விஞ்ஞானக்



கண்டுபிடிப்பு. சாதாரணமாகக் காமம் துய்ப்பவர்களுக்கு கேன்சர் வருகிறதாமே!'' என்கிறான் ஒருவன்.

இன்னொருவன், ''அப்படியா?'' என்கிறான்.

இவன், ''அப்படியில்லைதான். என்றாலும் இந்த வதந்தியைப் பரப்பிவிடு'' என்கிறான்.

சர்ஜனோ, நீ நம்புகிறாயோ இல்லையோ - இந்த வதந்தியைப் பரப்பி விடு. உலகின் மூலை முடுக்கெல்லாம் இந்த வதந்தி போய்ச் சேர வேண்டும். அது வதந்தியாகவே இருக்கட்டும். அதைப் பற்றிக் கவலைப்படாதே. அதைச் சத்தியமாக்குவது என் காரியம். சரியானவர்களைக் கண்டு பிடிக்க முடியுமானால் - கண்டுபிடித்துக் கொண்டுதான் இருக்கிறேன் - அது சாத்தியமானதாகப் போகிறது.

நான் பேசிக் கொண்டிருக்கிறேனே இந்த அதிரகசியம் சாத்தியமான உண்மையாகத்தான் போகிறது. ஆனால் தங்க ளுடைய விருப்பு வெறுப்புகளைப் பணயம் வைக்கத் தயாராக இருப்பவர்களுக்கு, தங்களுடைய தீர்மானங்களைத் தியாகம் செய்யத் தயாராக இருப்பவர்களுக்கு மட்டுமே அது சாத்தியம். சர்ஜனோ அவர்களில் ஒருவன். நான் அவனை நம்புகிறேன். இந்தக் கேள்வியை அவன் தனக்காகக் கேட்கவில்லை. பிறருக்காகக் கேட்டிருக்கிறான். ஏனென்றால் அவனுக்கு முழுப் பைத்தியம் என்று எனக்குத் தெரியும். அவன் வெறும் கவிஞன் அல்ல. மெய்ஞ்ஞானத்தின் விளிம்பில் நிற்கிறான். மற்றவர்களுக்காக இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கிறான். இது அவனுடைய நெஞ்சிலிருந்து வந்த கேள்வி அல்ல. அவனுடைய நெஞ்சம் என்னோடு இசைந்திருக்கிறது.

உங்களுடைய நெஞ்சங்களை என்னிடமிருந்து மறைத்து வைத்துக் கொள்ள முடியாது. என்னிடம் நெருங்கி வந்த



கணம் என் அக்கறை முழுக்க உங்கள் நெஞ்சங்கள் மீதுதான். உங்களுடைய புத்தியைப் பார்த்துப் பேசும் நான் உங்களுடைய நெஞ்சங்களையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். முதல் முதலாகப் பார்த்த வுடனே உங்களுக்கு எது சாத்தியம் எது சாத்தியமல்ல என்பது எனக்குத் தெரியும்.

சர்ஜனோவின் மீது எனக்கு முதலில் இருந்தே வெகு பிரியம். அவன் புத்தியில் ஆயிரம் கொள்கைகள் கோட்பாடுகள் இருக்கலாம். அதைப் பற்றி எனக்கு எந்த அக்கறையும் இல்லை. என் அக்கறையெல்லாம் அவனுடைய அழகிய நெஞ்சத்தின் பாற்பட்டதுதான். மெய்ஞ்ஞானியின் நெஞ்சமாக மாறச் சாத்தியம் உள்ள நெஞ்சம்.

மூன்றாவது வினா

**அன்புக்குரிய குருவே,**

**நான் என்னைப் புரிந்து கொண்ட அளவில் என் செயல்கள் அனைத்தும் என்னை வெளிப்படுத்திக் கொள்ளும் ஆசையின் வடிவங்களாகத் தெரிகின்றன. என்னுடைய மிக நுட்பமான எண்ணங்கள் கூட ஒருவகை சம்பாஷணையாகத்தான் எனக்குத் தெரிகிறது. நான் இருப்பதைப் பிறர் கண்டு உணர வேண்டும் என்ற முயற்சியாகத் தெரிகிறது.**

**என்னுடைய ஜீவிதமானது நான் மட்டுமே அனுபவித்து நான் மட்டுமே மதிப்பீட்டுக் கொள்ள வேண்டியது எனும்போது என்னுடைய இந்தப் பயனற்ற செயல்கள் இல்லாமல் போய்விட வேண்டும். வெகு நன்றாகவே இது தெரிகிறது. ஆனால் இந்த உணர்வு ஏன் என் அடி ஆழத்துக்குப் போய்ச் சேர மாட்டேன் என்கிறது?**



**பிரேம் ஸ்டீவன்**, அது இன்னமும் ஒரு மெய் அனுபவமாகவில்லை. இன்னமும் தகவலாகத்தான் இருக்கிறது. இன்னமும் ஒரு யூகமாகத்தான் இருக்கிறது. இன்னமும் ஒரு எண்ணமாகத்தான் இருக்கிறது. சரியான பாதையில் போய்க் கொண்டிருக்கிறாய். என்றாலும் இன்னமும் நீ அதை ஒரு மெய் என்று உணரவில்லை.

மெய்யனுபவம் என்பது மிகப் பெரிய விஷயம். அந்த வார்த்தையை மிக சாக்கிரதையாகப் பயன்படுத்த வேண்டும். பிரமாதமான கருத்துகள் உன்னிடம் இருக்கலாம். ஆனால் அவற்றை எண்ணிக் கொண்டிருப்பதால் மட்டுமே மெய்யனுபவமாக மாற்றிவிட முடியாது. கடவுளைப் பற்றிச் சிந்திக்கலாம். கடவுள் இருக்கிறார் என்ற முடிவுக்கு வரலாம். கடவுள் இருக்கிறார் என்பதைப் பற்றி உனக்கு எந்தச் சந்தேகமும் இல்லை என்பதை ' நிச்சயப்படுத்திக் கொள்ளலாம். ஆனால் அதுவே இறைவனை உணர்ந்து விட்டதாக ஆகாது.

உணர்தல் என்பது மெய்யனுபவம். அது ஓர் எதார்த்தமாகிப் போய்விட வேண்டும். ஒரு கருத்தாக மட்டுமே இருந்துவிடக் கூடாது. என்னதான் பிரமாதமான கருத்து என்றாலும் அது கருத்தளவில் நின்று போய்விடுகிறது. கருத்து உன்னை மாற்றி அமைக்க முடியாது. அது உன் இருத்தலின் மையத்திற்குப் போய்ச் சேர்வதில்லை. விளிம்பிலேயே நின்று விடுகிறது.

எல்லாக் கருத்துகளும் விளிம்பில் கிடப்பவைதான். எல்லா அலைகளும் நீரின் மேல் மட்டத்தோடு நின்று விடுவதைப் போல. அலை ஆழ்கடலுக்குள் போக முடியாது. அப்படிப் போவதற்கு எந்த வழியும் இல்லை. ஆழ்கடலில் எந்த அலையும் இல்லை. மேல் மட்டத்தில் சூறைக்காற்று



வீசிக் கொண்டிருக்கலரம். ஆனால் அடி ஆழத்தில் கடல் அமைதியாகத்தான் இருக்கிறது. எப்போதும் அப்படித்தான். மேலேதான் அத்தனை ரகளையும்.

எல்லா நினைவுகளும் உன் இருத்தலின் விளிம்புகளில் ஏற்படும் ரகளைகள்தான். மோசமான எண்ணங்கள், நல்ல எண்ணங்கள். எல்லாமும் விளிம்பில் தான். கீழ்த்தரமான எண்ணங்கள் விளிம்புக்கானவை. உயர்ந்த எண்ணங்கள் மையத்தில் இருப்பவை என்று தவறாக நினைக்கிறார்கள். நல்லது அல்லது என்பது இதில் இல்லை. எண்ணம் எண்ணம்தான். அது எண்ணமாக இருக்கும் வரை விளிம்பில்தான் நிற்கிறது.

மையத்தில் சாட்சியாக இருப்பது மட்டுமே சாத்தியம்.

எனவே முதலில் நீ புரிந்து கொள்ள வேண்டியது இன்னமும் நீ உணர்ந்தவனாகிப் போகவில்லை என்பதுதான். ஏதோ ஒன்றை உணர்ந்தவனாகிப் போகும்போது உன்னிடம் மாற்றங்கள் வந்தே ஆக வேண்டும். உடனடியான மாற்றம். பிறகு, ''வெகு நன்றாகவே இது தெரிகிறது. ஆனால் இந்த உணர்வு ஏன் என் அடி ஆழத்துக்குப் போய்ச் சேர மாட்டேன் என்கிறது?'' என்று கேட்க வேண்டிய அவசியமே இருக்காது. ''ஏன்?'' என்பது அப்போது சாத்தியமே இல்லை. ஏதோ ஒன்றை உணர்ந்தவனாகும் போது உன்னுடைய இயல்பே உடனடியாக மாறிப் போய்விடுகிறது. உன்னுடைய இயல்பு உன்னுடைய உணர்வின் நிழல். உணர்வு புதிதாகப் பரிமளிக்கும்போது இயல்பு முழுக்கப் புதிதாகிப் போகிறது.

ஏன், எப்படி என்று கேட்கும்போது உன் மெய்யுணர்வு ஒரு கருத்தாகிப் போகிறது. கருத்துக்களை நம்பிவிடாதே. அது உன்னை ஏமாற்றிவிடும். அவை கள்ள நாணயங்கள். பணக்காரன் ஆகிக் கொண்டிருக்கிறேன் என்று நம்பிக் கள்ள



நாணயங்களைச் சேர்த்து வைத்துக் கொண்டே இருந்தால் ஒரு நாள் நீ தகர்ந்து போய் விடுவாய். அப்போது அதன் வருத்தமும் சோகமும் அதீதமாகத்தான் இருக்கும். அந்த நாணயங்களைச் சேகரித்துக் கொண்டிருந்த அத்தனை காலமும் வீண் என்பதை உணர்ந்து கொள்வாய். போன நேரம் போய்விட்ட நேரம்தானே. அதை எப்படி மறுபடி பெறுவது?

இரண்டாவதாக, ''நான் என்னைப் புரிந்து கொண்ட அளவில் என் செயல்கள் அனைத்தும் என்னை வெளிப்படுத்திக் கொள்ளும் ஆசையின் வடிவங்களாகத் தெரிகின்றன. என்னுடைய மிக நுட்பமான எண்ணங்கள் கூட ஒருவகை சம்பாஷணையாகத்தான் எனக்குத் தெரிகிறது. நான் இருப்பதை பிறர் கண்டு உணரவேண்டும் என்ற முயற்சியாகத் தெரிகிறது'' என்கிறாய்.

எதற்காக உன்னுடைய இருத்தலுக்குப் பிறர் சாட்சியாக வேண்டும் என்று நினைக்கிறாய்? உன்னுடைய இருப்பைப் பிறர் உறுதி செய்ய வேண்டும் என்று ஏன் நினைக்கிறாய்? நீ அதைப் பற்றிய சந்தேகம் கொண்டவனாக இருக்க வேண்டும். உன்னுடைய இருத்தல் பற்றி உனக்கே நிச்சயம் இல்லாமல் இருக்க வேண்டும். நீ இருப்பதை நீயே உணர்ந்திருக்கவில்லை என்றாகிறது. பிறர் அதை உறுதிப்படுத்த வேண்டியிருக்கிறது.

அவர்கள் நீ அழகாக இருக்கிறாய் என்று சொன்னால் நீ அழகுதான் என்று சொல்லிக் கொள்கிறாய். நீ புத்திசாலி என்று சொன்னால் நீ புத்திசாலிதான் என்று சொல்லிக் கொள்கிறாய். எனவே எப்போதும் ஏதாவது ஒன்றை வைத்துக் கொண்டு - உன் அழகு, உன் புத்திசாலித்தனம் என்று ஏதாவது ஒன்றை வைத்துக் கொண்டு பிறருடைய கவனத்தைக் கவர வேண்டும் என்று நினைக்கிறாய்.



அவர்களுடைய கண்களில் தெரியும் ஏதோ ஒன்று உனக்கு அவர்களுடைய அங்கீகரிப்பாகத் தெரிகிறது.

அதனால்தான் ஒருவர் உன்னை அவமதிக்கும்போது கோபப்படுகிறாய். முட்டாள் என்று யாராவது சொல்லிவிட்டால் நீ கட்டி வைத்திருக்கும் மாளிகை நொறுங்கிப் போகிறது. அப்படி இல்லையானால் அதைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? அவர்கள் சொல்வதற்கும் உனக்கும் எந்தச் சங்காத்தமும் இல்லை என்று போவதுதானே? அவன் உன்னை முட்டாள் என்று சொன்னால் அது அவனுடைய பிரச்சனை. முட்டாள் என்று ஒருவன் சொல்லிவிட்டதாலேயே நீ முட்டாளாகிப் போகிறாயா என்ன? ஆனால் மற்றவருடைய கருத்தையே சார்ந்திருப்பதால் நீ முட்டாளாகத்தான் ஆகிப் போகிறாய்.

அப்படித்தான் நாம் இந்தச் சமுதாயத்தில் வாழ்கிறோம். ஒருவரை ஒருவர் மதிக்க வேண்டும் என்று தொடர்ந்து முயற்சி செய்து கொண்டே இருக்கிறோம். அதனால்தான் நாம் அடிமைகளாக இருக்கிறோம். நம்மை ஒருவர் மனதில் பதிய வைக்க வேண்டுமானால் அவருடைய எதிர்பார்ப்புக்குத் தகுந்தபடி நாம் இருக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் எப்படிப்பட்டவர் நல்லவர் என்று நினைக்கிறார்களோ அப்படிப்பட்டவராக இருக்க வேண்டி இருக்கிறது. அவர்கள் மரக்கறி உணவு சாப்பிடுகிறவர்களா? நீயும் அப்படியே இருக்க வேண்டி இருக்கிறது. அப்போதுதானே அவர்கள் உன்னை மகான் என்பார்கள்! அவர்களுடைய வாழ்க்கை முறையை நீயும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. அப்போதுதானே அவர்களில் ஒருவனாக முடியும்!

மற்றவர்களுடைய கருத்து வழி நடந்து கொண்டால்தான் உனக்கு மதிப்பும் மரியாதையும் கிடைக்கும். அவர்களுடைய



எண்ணங்கள் சரியானவைதான் என்று நீ ஏற்றுக் கொண்டு அவர்கள் சரியானவர்கள்தான் என்பதை உறுதிப்படுத்தச் செய்து கொள்ளும் ஓர் ஏற்பாடுதான் இது. அப்படியே நீ செய்யும்போது அவர்களும் உன்னை அங்கீகரித்துச் சரியான கருத்துக்களை வைத்திருக்கிறவர் என்று சொல்லி உன்னை மிக நல்லவர், சிறந்தவர் என்கிறார்கள்.

உன்னைப் பாராட்டுகிறார்கள். மதிப்பு மரியாதை செய்கிறார்கள். மகான் என்கிறார்கள். ஞானி என்கிறார்கள். உனக்கும் திருப்தியாக இருக்கிறது. அவர்களுடைய சித்தாந்தத்துக்கு உன்னுடைய அங்கீகாரம் - அது அவர்களுக்குத் திருப்தி. உன்னை அவர்கள் மதித்துப் போற்றுகிறார்கள் - அது உனக்குத் திருப்தி. இது ஒருவருக்கொருவர் செய்து கொள்ளும் சௌகரியமான ஏற்பாடு.

ஆனால் இருவருமே மாயையில் இருக்கிறவர்கள்தான். நீ அவர்களுடைய மாயைக்குத் துணை போக அவர்கள் உன் மயக்கத்துக்குத் துணை போகிறார்கள். இருவருமே ஒரே மாயத் தோற்ற மயக்கம் கொண்ட வியாபாரத்தில் பாகஸ்தர்கள்.

மற்றவர் ஏன் அங்கீகரிக்க வேண்டும்? மற்றவர் எதற்கு நம்மைச் சரியானவர்தானா என்று உரசிப் பார்க்க வேண்டும்? உனக்கே தெரியும் என்றால், நீயாக உன் ஜீவிதத்தின் அழகையும் பரவசத்தையும் கம்பீரத்தையும் பிரமாதத்தையும் அனுபவித்தவன் என்றால், மற்றவர் என்ன சொல்கிறார் என்பதைப் பற்றி யாருக்கு என்ன கவலை?

புத்தர் ஒரு கிராமத்தின் வழியாகப் போனார். அந்தக் கிராமத்து ஜனங்களுக்கெல்லாம் புத்தரைக் கண்டாலே ஆகாது. ஏனென்கிறாயா? புத்தர் அங்கேதான் பிறந்தார். பல



வருடங்கள் அங்கேயே வாழ்ந்திருக்கிறார். தங்களோடு ஒருவராக இருந்தவர் ஞானியாகி விட்டார் என்பதை அவர்களால் ஏற்றுக் கொள்ளவே முடியவில்லை. அவர்களுடைய அகங்காரத்துக்கு அது ஒரு பெரிய அடியாக இருந்தது.

அதனால்தான் தீர்க்கதரிசியை அவருடைய மக்களே மதிக்க மாட்டார்கள். அவரிடம் அன்பு வைக்க மாட்டார்கள் என்று யேசு சொல்வார். அவரையே அவர் ஊரிலிருந்து துரத்தித்தானே அடித்தார்கள்! ஞானம் பெற்றபின் ஒரே ஒரு முறை அங்கே போயிருக்கிறார். ஒரே ஒரு தடவைதான். ''எனக்கு ஞானம் சித்தித்து விட்டது. நான் கடவுளின் மகன்!'' என்று அவர் அழுத்தம் திருத்தமாகச் சொன்னதைக் கேட்டு அவர்களுக்கு அடக்க முடியாத கோபம்தான் வந்தது. மலையிலிருந்து தள்ளிக் கொன்றுவிட முயற்சித்தார்கள். எப்படியோ அவர் தப்பித்துப் போக வேண்டி இருந்தது. மறுபடி அவர் அங்கே போகவே இல்லை.

இந்திய நேப்பாள எல்லையில் தாம் பிறந்த ஊருக்கு ஒரு முறை புத்தர் போனார். மக்கள் கூட்டமாகக் கூடி அவரை இகழ்ந்து பேசினார்கள். அவமரியாதை செய்தார்கள். திட்டித் தீர்த்தார்கள். அரை மணி நேரம் பொறுமையாக இருந்த புத்தர், ''வெய்யிலாகிப் போய்விட்டது. நான் அடுத்த கிராமத்துக்குப் போய்ச் சேர வேண்டும். மக்கள் எனக்காகக் காத்திருக்கிறார்கள். இதற்கு மேல் என்னால் இங்கே இருக்க முடியாது. இன்னமும் நீங்கள் ஏதாவது சொல்ல வேண்டுமானால் நான் அடுத்த முறை வரும்போது சொல்லிவிடுங்கள். கொஞ்சம் சாவகாசமாக வருகிறேன். என்னென்ன சொல்ல வேண்டுமோ அத்தனையும் சொல்லலாம். இந்தத் தடவை என்னை மன்னிக்க வேண்டும். நான் போக வேண்டி இருக்கிறது'' என்றார்.



எந்த விதத்திலும் உணர்ச்சி வசப்படாமல் பேசினார். அவர்களோ அவரைப் பற்றி மிக மோசமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களால் நம்பவே முடியவில்லை. ''நாங்கள் எதையும் உன்னிடம் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. உன்னைத் திட்டித் தீர்த்துக் கொண்டிருக்கிறோம். திட்டுவது தெரியவில்லையா?'' என்றார்கள்.

''கேட்கிறது புரிகிறது. என்றாலும் அது எனக்கு எந்த விதத்திலும் என்னுடைய பிரச்சனையே இல்லை. உங்களுக்குக் கோபம் என்றால் அது உங்களுடைய பிரச்சனை. உங்களுடைய வாழ்வில் குறுக்கிடுவது என்னுடைய காரியமே அல்ல. கோபப்பட்டு அதை அனுபவிக்க முடியும் என்றால் அனுபவியுங்கள். எனக்கும் உங்கள் முட்டாள் தனத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லை'' என்றார்.

மேலும், ''பார்க்கப் போனால் நீங்கள் பத்தாண்டுகள் கழித்து வந்திருக்கிறீர்கள். என்னைச் சீண்ட வேண்டுமானால் நீங்கள் பத்தாண்டுகளுக்கு முன் செய்து பார்த்திருக்க வேண்டும். நான் உங்களைத் திருப்பி அடித்திருப்பேன். இப்போது எனக்குள் சிறப்பான மெய்ஞ்ஞனுபவம் ஏற்பட்டுவிட்டது. என் இருத்தல் மற்றவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதைச் சார்ந்ததாக இல்லை. என்னைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பது உங்களைப் பற்றிச் சொல்கிறதே தவிர என்னைப் பற்றி எதுவும் சொல்லவில்லை. எனக்கு, என்னைத் தெரியும் என்னைப் பற்றிய யாருடைய அபிப்பிராயத்தைப் பற்றியும் எனக்குக் கவலை இல்லை. தங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளாதவர்கள்தான் பிறர் தங்களைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைச் சார்ந்தவர்கள்'' என்றார்.



ஸ்டீவன்! பிறரோடு தொடர்பு கொண்டு தனக்கென ஓர் அங்கீகாரம் தேடுவதென்பது உனக்குள்ளே ஓர் ஆழ்ந்த இருட்டு இருப்பதற்குச் சாட்சி. அப்படி இல்லையென்றால் அதற்குத் தேவையே இல்லை. உள்ளே ஆன்ம ஒளி நிறைந்த ஒருவன் பிறரோடு தொடர்பு வைத்துக் கொள்வதில்லை என்று நான் சொல்லவில்லை. அவன் மட்டுமே பிறரோடு தொடர்பு கொள்ள முடியும். ஏனென்றால் அவனிடம் பிறருக்குச் சொல்ல விஷயம் இருக்கிறது.

உன்னிடம் என்ன இருக்கிறது? பிறரோடு பகிர்ந்து கொள்ள உன்னிடம் என்ன இருக்கிறதென்கிறாய்? நீயே ஒரு பிச்சைக்காரன். பிச்சையெடுத்துக் கொண்டிருக்கிறாய். உனக்கு அங்கீகாரம் வேண்டும். சர்டிபிகேட் வேண்டும் என்று பிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறாய். நீ அவர்களைப் பார்த்து, ''என்னைப் பற்றிக் கொஞ்சம் நல்ல வார்த்தைகள் சொல்லுங்களேன். அப்படியாவது என்னைப் பற்றி எனக்கு ஒரு சௌஜன்யம் இருக்கட்டுமே. பாருங்கள்... ரொம்பத்தான் தளர்ந்து கிடக்கிறேன். மதிப்பற்றுப் போய்க் கிடக்கிறேன். எனக்கும் சிறிது மதிப்புக் கற்பியுங்களேன். நானும் முக்கிய மானவன்தான் என்று உணர வையுங்களேன்'' என்று கெஞ்சிக் கொண்டிருக்கிறாய். இது பிச்சை கேட்பதே அன்றித் தொடர்பு கொள்வதாகாது.

உன் மையத்தில் இருந்து ஒரு பாட்டு கிளம்பி வெடிக்கும் போதுதான் பிறரோடு நீ தொடர்பு கொள்ள முடியும். உனக்குள் ஒரு மகிழ்ச்சிப் பிரவாகம், ஒரு பரவசம் அனுபவமாகும் போதுதான் பிறரோடு பகிர்ந்து கொள்ள முடியும். வார்த்தைகளால் மட்டுமின்றி மிக அழகான தளத்தில் தொடர்பு சித்திக்கிறது. அப்போது நீ பிச்சைக்கார னாக இருக்க மாட்டாய். ஒரு பேரரசனாக இருப்பாய்.



புத்தர்கள் மட்டுமே எடுத்துச் சொல்லவும் தொடர்பு கொள்ளவும் முடிந்தவர்கள். மற்றவர்களிடம் சொல்வதற்கோ கொடுப்பதற்கோ ஏதுமில்லை. வாஸ்தவத்தில் எல்லோரும் பேசிக் கொண்டேதான் இருக்கிறார்கள். பிறரோடு பேசாத நேரத்திலும் தம்மோடேயே பேசிக் கொண்டேதான் இருக்கிறார்கள். உன்னுடைய கட்சியாக ஏதோ ஒன்றை யாரோ ஒருவரிடம் பேசிக் கொண்டே இருக்கிறாய். அந்த யாரோ ஒருவர் உன்னுடைய கற்பனையில் உதித்தவராகக் கூட இருக்கலாம். அப்படிப் பேசும்போதெல்லாம் நீ உளறிக் கொண்டிருக்கிறாய். உனக்காக என்றும் நீ சொல்வதைக் கேட்டுக் கொண்டிருப்பவனுக்காக என்றும் இரண்டு பக்கத்தையும் நீயே பேசி உளறிக் கொட்டிக் கொண்டிருக்கிறாய்.

இது ஒரு பேதலிப்பு. பைத்தியம் பிடித்திருப்பதல்ல. ஒரு பேதலித்த நிலை என்றுதான் சொல்வேன். மானுடம் முழுக்க இந்தப் பேதலிப்பில்தான் இருக்கிறது. பைத்தியம் பிடித்தவன் மனித உணர்வு விளிம்புகளைத் தாண்டியவன். அவனுக்கு உள்ளே வெளியே என்று எங்கும் பைத்தியம்தான். ஆனால் பேதலித்தவனுக்கோ உள்ளே பைத்தியம் - வெளியே நல்ல நினைவோடு இருப்பவனாக இருப்பதைப் போல இருக்கிறது. அதனால்தான் அவனைப் பேதலித்தவன் என்கிறேன்.

உள்ளே மௌனம் குடி கொள்ளுமளவுக்கு எல்லாப் பேச்சும் நின்றுவிடும்போதுதான் சுயநினைவு இருக்க முடியும். மனதை ஒழித்துக் கழித்து விடும்போது புத்தியுடையவனாக இருக்கிறாய். மனம் என்ற ஒன்று இருக்கும் வரை பைத்தியம் பிடித்தவனாக அல்லது பேதலித்தவனாகத்தான் நீ இருக்க முடியும். மனதைக்



கழித்திருத்தலே புத்தி சுவாதீனத்தோடு இருப்பது. அதுவே புரிந்து கொள்வது. உணர்ந்து கொள்வது. உன்னுடைய இருத்தலை மட்டுமல்ல. பிரபஞ்சத்தின் இருத்தலையும் அப்போதுதான் உணர்ந்து கொள்ளமுடிகிறது. பிறரோடு பகிர்ந்து கொள்ள அப்போது உன்னிடம் ஏதோ ஒன்று இருக்கிறது. பிறரோடு தொடர்பு கொள்ள, அவரோடு சேர்ந்து நடனமாட, கொண்டாட ஏதுவாகிறது.

அதற்கு முன் பிறருடைய அபிப்பிராயங்கள் பேரில் உன்னைப் பற்றிய அனுமானங்களுக்கு வருவதற்குத்தான் தொடர்பு என்று பெயர் வைக்கிறாய். ஒன்றுக்கொன்று முரண்பட்ட கருத்துகள் உன்னைப் பற்றிப் பிறர் சொல்லக் கேட்கும்போது அதில் எது நீ என்று தெரிந்துகொள்ள முடியாத திகைப்பே வாழ்க்கையாகிப் போகும்.

ஒருவன் உன்னை அசிங்கமானவன் என்று நினைத்து வெறுக்கிறான். இன்னொருவன் நீ அழகன், உனக்கு யாருமே இணையில்லை என்று சொல்கிறான். இந்த இரண்டு அபிப்பிராயங்களை வைத்துக் கொண்டு என்ன செய்வது? நீ யாரென்பது உனக்கே தெரியவில்லை. இரண்டு பேரில் யார் சொன்னது சரி? அழகு என்று சொல்வதை உண்மை என்றும் அசிங்கம் என்று சொன்னதைத் தவறு என்றும் எடுத்துக் கொள்ளத்தான் விரும்புகிறாய். ஆனால் நீ யாரென்பது நீ எதை விரும்புகிறாய் என்பதைப் பொருத்து அமைவதல்ல. என்னதான் மறுத்து விட விரும்பினாலும் நீ விரும்பாத அபிப்பிராயம் உன்னோடு இருந்துகொண்டேதான் இருக்கப் போகிறது.

பெற்றோர்களிடம் இருந்து, குடும்பத்தினரிடம் இருந்து, சுற்றியிருப்போரிடம் இருந்து, சகப் பணியாளர்களிடம் இருந்து, ஆசிரியர்களிடம் இருந்து, பூசாரிகளிடம் இருந்து



என்ற அபிப்பிராயங்களைச் சேர்த்துக் கொண்டே வருகிறாய். ஆயிரக்கணக்கான அபிப்பிராயங்கள் உனக்குள் ஓலமிடுகின்றன. இதை வைத்துக் கொண்டுதான் உனக்கென ஒரு வடிவு கற்பித்துக்கொள்ளப் போகிறாய். ஒரே அடைசல்தான். முகம் உருவம் என்று எதுவும் தெளிவில்லாத குழப்பம்தான். இப்படித்தான் ஒவ்வொருவரும். மையமே இல்லையெனும் போது ஒழுங்கு எங்கிருந்து வரும்?

அந்த மையத்தைத்தான் நான் தியானம் என்கிறேன். ஏஸ் தம்மோ சனந்தனோ. இதுவே வற்றாத நெறி. முடிவான நெறி. விழித்துக் கொண்டவர்கள் மட்டுமே தாம் யாரெனத் தெரிந்து கொள்பவர்கள் என்ற நெறி. அவர்களுக்கே தெரியும் என்கிறபோது அவர்களை யாரும் அசைத்துவிட முடியாது. யாருமே தான். உலகம் முழுக்க ஒன்றைச் சொல்லலாம். ஆனால் உனக்குத் தெளிவு இருக்குமேயானால் நீ உன்னை உணர்ந்தவனானால் அது உனக்கு ஒரு பொருட்டே இல்லை.

உலகம் முழுக்க யேசு பைத்தியக்காரர் என்று சொல்லியது. அவரைச் சிலுவையில் அறைந்தபோது ஆயிரக்கணக்கான மக்கள் கூடிவிட்டனர். ஒருவர் கூட அவருக்குச் சாதகமாக இருக்கவில்லை. எல்லோரும் அவரைப் பைத்தியக்காரர் என்றுதான் நினைத்திருந்தார்கள்.

குறிப்பிட்ட விடுமுறை நாட்களில் சிலுவையில் அறையப்படுகிறவர்களில் ஒருவரை மன்னித்துவிடலாம் என்பது அன்றைய வழக்கமாக இருந்தது. அன்று ஒரு விடுமுறை நாள். மூவர் சிலுவையில் அறையப்பட நின்றிருந்தனர். இரண்டு திருடர்கள் - யேசு. போண்டியஸ் பைலேட் ''மூவரில் ஒருவரை மன்னித்து விட்டு விடலாம். இந்த மூவரில் யாரை மன்னித்து விடலாம்?'' என்று கேட்டார். யேசுவை மன்னித்து விடலாம் என்று சொல்வார்கள் என்று நினைத்தார். ஆனால் யாரும் அப்படிக்



கேட்கவில்லை. ஒரு திருடனை மன்னித்து விடலாம் என்றார்கள். ஒரு பக்காத் திருடனுக்கு மன்னிப்பு - யேசுவுக்குச் சிலுவை. குற்றமற்ற யேசுவை அவர்கள் மன்னிக்க முடியவில்லை. ஏன்?

யேசுவோ இதனால் அதிர்ச்சி அடையவில்லை. உலகம் முழுக்க அவருக்கு எதிராக இருக்கலாம். கடவுள் அவரோடு இருந்தார். அமைதியான மனத்தோடு உதட்டில் ஒரு பிரார்த்தனையோடு அவர் சிலுவையேறினார். என்ன பிரார்த்தனை என்கிறாய்? ''என்னப்பரே! அவர்களை மன்னியும். தாம் என்ன செய்கிறோம் என்பது அவர்களுக்குத் தெரியாது. ஏமென்.''

அவர்களை மன்னிக்க வேண்டுமாம். என்ன செய்கிறோம் என்பது தெரியாதவர்களாம். அவரைச் சிலுவையில் அறைகிறார்கள். என்றாலும் அவரது நெஞ்சில் அவர்களிடம் கருணை மட்டுமே இருக்கிறது.

உனக்குத் தெரியும் என்கிறபோது முழுக்கத் தெரிந்தவனாகத்தான் இருக்கப் போகிறாய். உணர்ந்து கொண்டவனாகிப் போகும்போதும், உலகம் முழுக்க உனக்கு எதிராகப் போகும் போதும் அது எந்த விதத்திலும் உனக்குப் பொருட்டாவதில்லை. உனக்கு யாரிடமிருந்தும் எந்த அங்கீகாரமும் அவசியம் இல்லாமல் போய்விடுகிறது.

இனி கடைசிக் கேள்வி

**அன்புக்குரிய குருவே,**

**அது ஏன் காமமும் பணமும் ஏதோ ஒரு வகையில் ஆழ்ந்த தொடர்புடையவை என்று எனக்கு எப்போதுமே தோன்றுகிறது?**



**நிர்மல்**, அவை தொடர்புடையவைதான். பணம் அதிகாரத்தைத் தருகிறது. எனவே அதைப் பலவகையிலும் பயன்படுத்தலாம். காமத்தைக் கடைச்சரக்காக வாங்கலாம். காலம் காலமாக அதுதானே நடந்து கொண்டிருந்திருக்கிறது? அரசர்களுக்கு ஆயிரக்கணக்கில் மனைவியர். இந்த நூற்றாண்டில்கூட, முப்பது வருடங்களுக்கு முன்னால், அல்லது நாற்பது வருடங்களுக்கு முன்னால் ஹைதராபாத் நிஜாமுக்கு ஐந்நூறு மனைவிகளாம்.

கிருஷ்ணருக்குப் பதினாறாயிரம் மனைவியராம். இது அதிகம்தான் என்று நான் நினைத்ததுண்டு. ஆனால் ஹைதராபாத் நிஜாமுக்கு ஐந்நூறு மனைவிகள் - அதுவும் முப்பதாண்டுகளுக்கு முன்னால்தான் - என்றால் கிருஷ்ண ருக்கு ஏன் அப்படி இருக்கக் கூடாது என்று சமாதானம் செய்து கொண்டேன். சாத்தியம்தான். ஐந்நூறு மனைவியரை வைத்திருக்க முடியுமானால் - அதைப்போல் முப்பத்திரண்டு மடங்குதானே - பதினாறாயிரம் மனைவியரை வைத்திருப் பதும் மானுட சாத்தியத்துக்குட்பட்டதுதான்.

எல்லா அரசர்களும் அதைத்தானே செய்து கொண்டிருந்திருக்கிறார்கள்! பெண்களைக் கால்நடைகளைப் போல வைத்திருந்தார்கள். பெரிய பெரிய அரசர்களின் மாளிகைகளில் பெண்களுக்கு எண்களே அடையாளம். பெயர்களை நினைவில் வைத்துக் கொள்வது சிரமம். அதனால் அரசர் தன் ஊழியரிடம், ''நானூற்று ஒன்றைக் கூட்டி வா!'' என்று சுலபமாகச் சொல்லிவிடலாம். எப்படி ஐந்நூறு பெயர்களை நினைவில் வைத்துக் கொள்வது? சிப்பாய்களுக்கு எண்கள் கொடுப்பதைப் போலப் பெண்களுக்கும் அடையாள எண்கள்.



எண்கள் கணித இயல்புடையவை. அவை மூச்சுவிடுவதில்லை. அவைகளுக்கு நெஞ்சம் என்ற ஒன்று இல்லை. எண்களுக்கு ஆன்மா இல்லை. ஒரு சிப்பாய் இறந்துவிட்டால் நம்பர் பதினைந்து இறந்துவிட்டான் என்றுதானே சுற்றறிக்கை சொல்கிறது! இன்னார் இறந்துவிட்டார் என்று பெயர் சொல்லிச் சொல்வது வேறு. அப்படியானால் இன்னாருடைய கணவன் என்றாகிறது. அவள் விதவையாகிறாள் என்றாகிறது. இன்னாருடைய தந்தை எனும்போது பிள்ளைகள் அநாதைகளாகிப் போகிறார்கள் என்றாகிறது. இன்னாருடைய மகன் எனும்போது வயதான காலத்தில் தம்மைக் காப்பாற்ற யாரும் இல்லாதவர்கள் என்றாகிப் போகிறது. ஒரு குடும்பத்திலிருந்து ஒருவர் போய்விட்டார் என்றாகிறது. ஒரு வீட்டின் விளக்கு அணைந்து விட்டது என்றாகிறது.

ஆனால் நம்பரைச் சொன்னால் நம்பருக்கேது மனைவி? குழந்தைகள் இல்லை. வயதான தாய் தந்தையர் இல்லை. நம்பர் பதினைந்து, நம்பர் பதினைந்தைத் தவிர வேறு எதுவும் இல்லை. நம்பர் பதினைந்தை வேறொன்றைக் கொண்டு நிரப்பி விடலாம். இன்னொருவன் வருவான். நம்பர் பதினைந்தாகிப் போவான். ஆனால் எந்தத் தனிமனிதனையும் அப்படி வேறொருவரைக் கொண்டு நிரப்ப முடியாதல்லவா? நம்பர் சிப்பாய்களை மயக்க ஒரு வித்தை. ஒரு தந்திரம். இல்லாமல் போய்விட்ட எண்களைப் பற்றி யாருக்கு என்ன கவலை? புது எண்கள் வந்து கொண்டே இருக்கின்றன. பழைய எண்கள் போய்க் கொண்டே இருக்கின்றன.

மனைவிகளுக்கும் எண்கள் கொடுத்து வைத்திருந் தார்கள். எத்தனை என்பது அவனிடம் எந்த அளவுக்குச் செல்வம் இருந்தது என்பதைப் பொறுத்திருந்தது. பார்க்கப்போனால் அதை வைத்துக் கொண்டுதான்



முன்பெல்லாம் ஒருவனுடைய செல்வத்தை அனுமானித்தார்கள். எத்தனை மனைவியர் என்பது ஓர் அளவீடாக இருந்தது.

ஹஸரத் முகம்மதுவுக்கு ஒன்பது மனைவிகளாமே என்று இந்துக்கள், குறிப்பாக ஆரிய சமாஜத்தினர் குறை சொன்னார்கள். ஆனால் கிருஷ்ணருக்குப் பதினாறாயிரம் மனைவிகள் என்பதைப் பற்றி அவர்கள் குறை சொல்வதில்லை. அவர் மட்டுமல்ல அப்படி. பல மனைவியர் வைத்திருந்தது அன்று பொதுவாக இருந்தது. இந்த நாட்டிலும் எல்லா நாட்டிலும் கூடத்தான் பெண்களை இப்படி வைத்திருக்க முடிந்தது என்றால் அது பணத்தின் மூலமாகத்தான்.

உலகம் முழுக்க விபச்சாரம் இருக்கிறது. விபச்சாரி என்கிறவள் யார்? ஓர் இயந்திரமாக்கப்பட்டவள். அவளைப் பணம் கொண்டு வாங்கிவிடலாம்.

நினைவில் வைத்துக் கொள். உங்கள் மனைவியரும் அப்படித்தான். விபச்சாரி வாடகைக் காரைப் போல. மனைவியோ உனக்கே உனக்கென்று வாங்கி வைத்திருக்கும் காரைப் போல. ஒரு பெர்மனண்ட் ஏற்பாடு. அவ்வளவுதான். ஏழைகளுக்கு நிரந்தர ஏற்பாடுகள் சாத்தியம் இல்லை. எனவே வாடகைக் காரே கதி. பணக்காரர்களுக்கு நிரந்தர ஏற்பாடுகள் சாத்தியம். சொந்தமாகக் கார்கள் வாங்கி வைத்துக் கொள்ளலாம். எவ்வளவுக்கு எவ்வளவு பணம் இருக்கிறதோ அவ்வளவு கார்கள்.

எனக்குத் தெரிய ஒருவரிடம் முன்னூற்று அறுபத்தைந்து கார்கள் இருந்தன. ஒரு நாளைக்கு ஒரு கார். ஒரு கார் முழுக்கத் தங்கத்திலேயே செய்து வைத்திருந்தான்.



பணமே அதிகாரம். பணம் எதையும் வாங்கிவிடும். நிர்மல், காமத்துக்கும் பணத்துக்கும் தொடர்பு இருக்கிறது என்று நீ சொன்னதில் தவறேதும் இல்லை.

ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். காமத்தை அடக்கி வைக்கிறவனுக்குப் பணத்தின் மீது ஆசை இருக்கும். பணம் காமத்துக்கு மாற்றாகிப் போகிறது. பணத்தைக் காதலிக்க ஆரம்பித்து விடுகிறான். பணத்தின் மீது மோகம் கொண்டவன் நூறு ரூபாய் நோட்டைத் தொட்டுப் பார்ப்பதைப் பார். காதலியைத் தடவுவதைப் போலத் தடவுவான். தங்கத்தைப் பார்ப்பதைப் பார். அவன் கண்களைப் பார். காமம் வழியும். காசே கடவுள். இந்தியாவில் பணத்தைக் கும்பிடுவதும் உண்டு. பணத்தைக் கும்பிடுவதற்கு என்றே ஒரு நாள் கொண்டாட்டம். ரூபாய் நோட்டுகள், நாணயங்கள் என்று இவற்றை வழிபடுவார்கள். புத்திசாலிகள் செய்யும் முட்டாள்தனம்.

காமத்தைப் பல வழிகளிலும் மடைமாற்றம் செய்துவிடலாம். அடக்கி வைக்கும்போது அது கோபமாகிறது. அதனால்தான் சிப்பாய்களுக்குக் காமம் மறுக்கப்படுகிறது. மறுக்கப்பட்ட காமம் ஆக்ரோஷமாகக் கிளம்ப வேண்டுமே. காமத்தை லட்சியமாக மடைமாற்றம் செய்யலாம். காமத்தை அடக்கி வைக்கும்போது உனக்கு ஒரு சக்தி கிடைக்கிறது. அதை எந்த வழியிலும் செலுத்தலாம். அரசியல் அதிகாரம், பணம், புகழ், பெயர், மரியாதை, மதிப்பு, துறவு என்று இப்படி...

மனிதனுக்கென்று ஒரே ஒரு சக்திதான். அதுதான் காமம். உனக்குள் பல சக்திகள் இல்லை. ஒரே சக்திதான் பல வகையிலும் பிரயோகிக்கப்படுகிறது. வெகுவான ஆற்றலுடைய சக்திதான் அது.



பணம் அதிகமாகச் சம்பாதித்தால் அதிகமாகக் காமத்தைத் துய்க்கலாம் என்றுதான் அரக்கப் பரக்க ஓடுகிறார்கள். இன்னமும் அழகான பெண்கள் - வலிமையான ஆண்களை அனுபவிக்கலாம். பல ரகங்களில் அனுபவிக்கலாம். பணம் இருந்தால் எதையும் தேர்ந்தெடுத்து அனுபவிக்கலாம்.

காமத்திலிருந்து விடுபட்டவன் பணத்திலிருந்தும் விடுபட்டவன். அவனுடைய காமம் பணம் கழிந்த, லட்சியம் கழிந்த, புகழ் வேண்டுமென்ற ஆசை கழிந்த நிகழ்வாக நிலைமாற்றம் பெறுகிறது. உடனே இதுபோன்ற பல விஷயங்களும் அவனுடைய வாழ்விலிருந்து மறைந்து போகின்றன. காமம் உயர்ந்து காதலாக, பக்தியாகத் தியானமாக மாறும்போது அதனுடைய கீழ்நிலை வடிவங்கள் மறைந்தே போகின்றன.

ஆனால் காமமும் பணமும் வெகுவாக நெருங்கியவை தான். நீ சொன்னதில், நிர்மல், நிறையவே உண்மை இருக்கிறது.

காமமும் பணமும் வெறியாகிப் போகிறவை. பணத்தை நோக்கி வெறியைத் திசை திருப்பிவிடலாம். பணத்தைக் கொண்டு எதை வேண்டுமானாலும் அடையலாம். காதலை வாங்க முடியாது. ஆனால் காமத்தை வாங்கலாம். காமம் ஒரு கடைச்சரக்கு. காதல் அப்படியல்ல.

பிரார்த்தனைகளுக்கு விலை கொடுத்து வாங்க முடியாது. ஆனால் பூசாரிகளை வாங்கிவிடலாம். பூசாரிகள் கடைச்சரக்கு. பிரார்த்தனை கடைச்சரக்கல்ல. வாங்க முடிந்ததெல்லாம் சாதாரணமானது. வாங்க முடியாதது புனிதமானது. புனிதமானது எப்போதுமே காசுக்கு அப்பாற்பட்டது. கடைச்சரக்கோ எப்போது வேண்டு மானாலும் வாங்க முடிவது.

கடைச்சரக்கிலேயே மிக அதிகமாகப் புழங்குவது காமம்தான்.



வாங்கி விற்கக் கூடியதை மட்டும் சார்ந்தது உன் வாழ்வு என்றால் அது ஒரு காலிப் பாத்திரம். கடைச்சரக்கோடு மட்டுமே உனக்குப் பரிச்சயம் என்றால் உன் வாழ்வு பொருளற்றதாகத்தான் இருக்கும். வாங்க முடியாததை விற்க முடியாததைத் தெரிந்து கொள்ளும்போது இறக்கை முளைத்த பறவையாக நீ வானத்தில் உயரப் பறக்கப் போகிறாய்.

பிம்பிசாரன் என்று ஓர் அரசன். மகாவீரரைப் பார்க்கப் போனான். சமணர்களின் மொழியில் சமயிக் என்று சொல்லப்படும் நிலை தியானத்தின் உச்சத்தில் இருப்பதைக் குறிக்கும். மகாவீரர் சமயிக் சாதித்தவர். சமாதி என்றும் வைத்துக் கொள்ளலாம். பிம்பிசாரனிடம் இல்லாததே இல்லை. சமயிக் பற்றிக் கேள்விப்பட்டவுடன் அவனுக்கு ஒரே வருத்தம். தன்னிடம் இல்லாததே இருக்கக் கூடாது என்ற நினைக்கிறவன் அல்லவா? ''இது என்ன சமயிக்? இது என்ன சமாதி?''என்று கேட்டுக் கொண்டு நிம்மதி இழந்தான். தன்னைக் கவர்ந்த ஒன்று தன்னிடம் இல்லையென்றால் அதைப் பெறும் வரை நிம்மதி கெட்டு அலைகிறவர்களில் பிம்பிசாரனும் ஒருவன்.

மலைகளைத் தேடிப் போய் மகாவீரர் இருந்த இடத்தைக் கண்டுபிடித்தான். ''சமயிக் என்ன விலை? நான் வாங்க வந்திருக்கிறேன். என்ன கேட்டாலும் தருகிறேன். எனக்கு சமயிக் மட்டும் தந்துவிடுங்கள். இந்தச் சமாதி, தியானம் இதுவெல்லாம் என்ன? எங்கே இருக்கிறது? முதலில் நான் பார்க்க வேண்டும்'' என்றான்.

மகாவீரருக்கு ஒரே ஆச்சரியம். முட்டாளாக இருக் கிறானே இந்த அரசன் என்று. ஆனால் மிகவும்



நாகரிகமானவர், மரியாதை தெரிந்தவர் என்பதால் மென்மையாக அருளோடு சொன்னார். ''அதைத் தேடி இவ்வளவு தூரம் வந்திருக்கவே வேண்டியதில்லையே. உன்னுடைய தலை நகரிலேயே என்னுடைய சிஷ்யன் ஒருவன் இருக்கிறான். அதைப் பெற்றுக் கொண்டவன். பரம ஏழை. அவன் வேண்டுமானால் அதை விற்கத் தயாராக இருக்கலாம். நான் விற்கத் தயாரில்லை. எனக்குப் பணமே வேண்டியதில்லை. பார். நிர்வாணமாக இருக்கிறேன். பரம திருப்தியோடு இருக்கிறேன். எனக்கு எந்தத் தேவையும் இல்லை. எனவே உன் பணத்தை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது? உன்னுடைய நாட்டையே எனக்குக் கொடுத்தாலும் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை. எனக்கு என்று என்னுடைய ராஜாங்கம் இருந்தது. அதை விட்டுவிட்டு வந்துவிட்டவன் நான். உன்னிடம் இருப்பதெல்லாம் என்னிடமும் இருந்தவைதான்'' என்றார்.

பிம்பிசாரனுக்கு அது தெரிந்திருந்தது. எல்லாவற்றையும் துறந்துவிட்டுப் போனவர் மகாவீரர் என்பது அவனுக்குத் தெரிந்திருந்தது. எனவே அவரிடமிருந்து எதையும் வாங்க முடியாது என்பது நன்றாகத் தெரிந்தது. ''சரிதான். யார் அந்த ஆள்? அவனுடைய விலாசத்தைத் தாருங்கள்.''

மகாவீரர், ''அவன் பரம ஏழை. உன்னுடைய தலைநகரில் மிக வறிய இடத்தில் வாழ்கிறான். நீ அந்தப் பக்கம் போனதே இல்லை. இதுதான் அவனுடைய விலாசம். போய் அவனைக் கேள். அவன் உன்னுடைய நாட்டுப் பிரஜை. உனக்கு அவன் அதை விற்கக் கூடும். அவனுக்குத் தேவைகள் அதிகம். மனைவி மக்கள், பெரிய குடும்பம் என்று பாவம் பரம ஏழைதான்'' என்றார்.

பிம்பிசாரன் மகிழ்ச்சியோடு திரும்பினான். நேராகச்



சேரிகள் இருந்த பகுதிக்குப் போனான். எல்லோருக்கும் ஒரே ஆச்சரியம். வராத இடத்துக்கு வந்திருக்கிறான். அவர்கள் கண்களை அவர் களாலேயே நம்ப முடியவில்லை. தங்கத்தேர். ஆயிரக் கணக்கான வீரர்கள் புடைசூழ அரசன் வத்திருக்கிறானே!

அந்த ஏழையின் வீட்டுக்கு முன்னால் நின்றார்கள். அவன் வெளியே வந்து அரசனின் காலில் விழுந்து வணங்கினான். ''ஆணையிடுங்கள் அரசே. நான் என்ன செய்ய வேண்டும்?'' என்றான்.

அரசன், ''உன்னிடமிருந்து 'சமாதி' என்று சொல்கிறார்களே அதை வாங்க வந்திருக்கிறேன். சமாதி, தியானம். என்ன விலை வேண்டுமானாலும் தருகிறேன்'' என்றான்.

அந்த ஏழையின் கண்களில் கண்ணீர். ''மன்னிக்க வேண்டும். என் உயிரை வேண்டுமானால் கேளுங்கள். உங்களுக்காக இப்போதே இறக்கத் தயார். என்னுடைய தலையை வெட்டிக் கொண்டு சாகிறேன். ஆனால் எப்படி என்னுடைய சமாதியை உங்களுக்குத் தருவது? விற்கவோ வாங்கவோ முடியாதது. அது கடைச்சரக்கல்ல. அது பிரக்ஞையின் ஒரு நிலை. மகாவீரர் உங்களுக்கு விளையாட்டுக் காட்டியிருக்க வேண்டும்'' என்றான்.

சிலவற்றை வாங்கவோ விற்கவோ முடியாது என்று தெரிந்து கொள்ளும் வரையிலும் பணத்துக்கு அப்பாற்பட்டுச் சில இருக்கின்றன என்ற தெரிந்து கொள்ளும் வரையிலும் நீ உண்மையாக வாழ்கிறவனே அல்ல.

காமம் பணத்துக்கு அப்பாற்பட்டது அல்ல. காதல் பணத்துக்கு அப்பாற்பட்டது. உன் காமத்தைக் காதலாக்கு. உன் காதலைப் பிரார்த்தனையாக்கு. ஒருநாள் பிம்பிசாரன்



போன்ற அரசர்கள் கூட உன்னைக் கண்டு பொறாமைப்படுவார்கள். ஒரு மகாவீரர் ஆகிவிடு. ஒரு புத்தர் ஆகிவிடு. ஒரு கிறித்து, ஒரு ஸாரதூஸ்ட்ரா, ஒரு லாவோட் சூ ஆகிவிடு. அப்போதுதான் நீ வாழ்ந்திருக்கிறாய் என்றாகிறது. அப்போதுதான் வாழ்வின் ரகசியத்தைத் தெரிந்து கொண்டவன் என்றாகிறது.

பணமும் காமமும் மிகக் கீழ்நிலையில் இருப்பவை. எல்லோருமே காமமும் பணமும் ஆளும் உலகத்தில்தான் வாழ்கிறார்கள். அவர்கள் வாழ்வதாக நினைத்துக் கொள்கிறார்கள். அவர்கள் வாழ்வதே இல்லை. மரம்போல வளர்கிறார்கள். அவ்வளவே. அவர்கள் இறந்து கொண்டே இருக்கிறார்கள். இதுவல்ல வாழ்க்கை. வாழ்க்கையில் பல ராஜாங்கங்கள் கண்டுபிடிக்க இருக்கின்றன. வாழ்க்கை முடிவில்லாத பொக்கிஷம். இது உலகச் சார்புடையதே அல்ல. பணமோ காமமோ அதைத் தர முடியாது. ஆனாலும் அதை நீ சாதிக்கலாம்.

காமத்தின் பலத்தையும் பணத்தின் சக்தியையும் கொண்டு அதை அடையலாம். ஆனால் காமத்தாலோ பணத்தாலோ அதை அடைய முடியாது. காமத்தையும் பணத்தையும் பயன்படுத்திக் கடந்து நிற்பதை இறங்கி வர வைக்கலாம்.

நான் காமத்துக்கு எதிரானவன் அல்ல. பணத்துக்கு எதிரானவன் அல்ல. நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அவற்றைத் தாண்டிப் போக உனக்கு உதவியாக இருக்கிறவன்.

எதையும் ஒரு படியாகக் கொள். எதையும் மறுத்து ஒதுக்காதே. பணக்காரன் என்றால் ஏழையை விடச் சுலபமாக நீ தியானத்தில் ஈடுபடலாம். உனக்கென்று நிறைய நேரம்



கிடைக்கும். உன் வீட்டிலேயே ஒரு சின்னக் கோயிலைக் கட்டி வைத்துக் கொள்ளலாம். ஒரு நந்தவனம், ரோசாச் செடிகள் - அங்கே தியானிப்பது சுலபம். விடுமுறை எடுத்துக் கொண்டு மலைகள் பக்கம் போகலாம். எல்லோரிடமிருந்தும் விலகிப் போய்க் கவலை இன்றி வாழலாம். பணம் இருந்தால் பணத்தைக் கொண்டு வாங்க முடியாததற்கு அதைப் பயன்படுத்து. பணம் அதற்கான களத்தைப் படைக்க முடியும்.

காமம் காமமாகவே இருக்கும்வரை அது வீணாகிப் போய்விடுகிறது. அதனுடைய இயல்பை மாற்றி அமைக்கும்போது அது ஒரு வரப்பிரசாதமாகிறது - காமத்துக்காகக் காமம் என்றில்லாமல் அன்பின் பங்கீடாகும் போது.

காமத்தை இரண்டு உடல்கள் மட்டுமன்றி இரண்டு ஆன்மாக்களும் சந்திக்கும் களமாக்கு. இரண்டு பேரின் சக்திகளும் சேர்ந்து தியான நடனமாக மாற காமத்தை உபயோகி. ஆணும் பெண்ணும் சேர்ந்து நடனமாடும் போது அந்த நடனம் மிக வளமையானது. நடனத்துக்கெல்லாம் நடனமாக உன் காமத்துய்வு இருக்கட்டும். இரண்டு சக்திகளின் சந்திப்பு, இணைவு, நடனம், கொண்டாட்டம்...

ஆனால் அதை ஒரு படியாகக் கொள். காமத்தின் உச்சத்தில் என்ன நடக்கிறது என்பதைக் கவனித்திரு. உனக்கே ஆச்சரியமாக இருக்கும். காலம் மறைந்து போகிறது. மனம் மறைந்து போகிறது. அகங்காரம் மறைந்து போகிறது. ஒரு கணத்துக்குப் பரம அமைதி. அந்த அமைதியே சத்தியமானது.

இந்த அமைதியை வேறு வகைகளிலும் சாதிக்கலாம். இந்த அளவுக்குச் சக்தி விரயத்தையும் தவிர்க்கலாம். இந்த அமைதி, இந்த மனம் கழிந்த நிலை, இந்தக் காலம் கடந்த நிலை, இதையெல்லாம் தியானத்தின்மூலமும் சாதிக்கலாம்.



பார்க்கப் போனால் முழுக்க உணர்ந்து காமம் துய்க்கிறவன் வெகு சீக்கிரமே தியான வசப்பட்டு விடுவான். காமத்தின் ஒவ்வொரு நிலையையும் உணர்கிறவன் அதன் உச்ச அனுபவத்தைக் காமக் கூட்டுறவின்றி அனுபவிக்க முடியும் என்பதைத் தெரிந்து கொள்வான்.

எதுவும் செய்யாமல் அமைதியாக உட்கார்ந்திருந்து கூட இதைச் சாதிக்கலாம். மனத்தைக் கழித்துவிடலாம். காலத்தைக் கழித்து விடலாம். காலத்தையும் மனத்தையும் அகங்காரத்தையும் கழித்துவிடும்போது உனக்குக் காமத்தின் உச்சம் தரும் இன்பம் கிடைக்கிறது.

காமத்தின் உச்சம் கொஞ்ச நேரத்துச் சமாச்சாரம். நிலையில்லாது கழிந்து போகும் எதுவும் விரக்தியைத்தான் தரும். துயரமும் வருத்தமும் கொண்டு வரும். ஆனால் அந்த உச்ச உணர்வைத் தொடர்ந்து அனுபவிக்கவும் முடியும். ஒரு தொடர் நிகழ்வாக நித்திய அனுபவமாக ஆக்க முடியும். அப்படி ஆக்குவது தியானத்தின் மூலமே சாத்தியம். காமத்தின் மூலமாக மட்டுமே அல்ல.

காமத்தை அனுபவி, பணத்தை அனுபவி. உடலை அனுபவி. உலகை அனுபவி. ஆனால் கடைசியில் கடவுளைச் சென்று சேர வேண்டும். கடவுளே நம்முடைய நித்திய லட்சியமாக இருக்கட்டும்.

இன்றைக்கு இது போதும்...





சந்தனம், ரோசா, மல்லி மணம்
காற்றின் போக்கை எதிர்த்து
யாத்திரை போக முடியாது.

சுய ஒழுக்கத்தின் மணமோ
காற்றின் போக்கை எதிர்த்து
உலகின் அந்தம் வரை போகும்.

எவ்வளவு நேர்த்தி
இந்த சுய ஒழுக்கத்தின் மணம் -
சந்தனம், ரோசா, நீலத்தாமரை,
மல்லிகை மணத்தை விடவும்!

சந்தனம் ரோசாவின் மணம்
வெகுதூரம் போவதில்லை.
சுய ஒழுக்கத்தின் மணமோ
சொர்க்கத்தை எட்ட உயர்கிறது.



சுய ஒழுக்கமும் விழிப்பும்
கொண்டவன் பாதையில்
ஆசை குறுக்கிடுவதில்லை.
அவற்றின் பிரகாசமே அவர்களின் சுதந்திரம்.

சாலை ஓரத்துச் சேற்றில்
எவ்வளவு அழகாகப் பூக்கிறது தாமரை!
பரிசுத்த மணம் நெஞ்சை நிறைக்கிறதே!

ஞானியைப் பின்தொடர் - அப்போது
குருடர்கள் மத்தியில்
உன் ஞானம்
பரிசுத்தமாக ஒளி விடும்.

**மனிதன்** இருப்பவனல்ல. மாறிக் கொண்டிருப்பவன். மனிதன் ஒரு தொடர் நிகழ்வு. ஒரு வளர்தல். ஒரு சாத்தியம். ஓர் உள்ளடங்கிய ஆற்றல். மனிதன் இன்னும் எதார்த்தமாகாதவன். எதார்த்தமாக வேண்டியவன். இனிமேல்தான் வந்து சேர வேண்டியவன். மனிதன் ஒரு சாரமாகப் பிறக்கவில்லை. ஒரு ஜீவனாகப் பிறந்திருக்கிறான். ஒரு பெரும் வெளி. அங்கே பலவும் நடக்கலாம். அல்லது எதுவுமே நடக்காமல் போய்விடலாம். எல்லாம் உன்னைப் பொருத்தே அமைகிறது.

மனிதன் தன்னைத் தானே உருவாக்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. அவன் ரெடிமேடாக வந்து சேர்கிறவன் அல்ல. கொடுக்கப்பட்ட முழுமை அல்ல. அவனுடைய படைப்பு அவனுடையதாகவே இருக்க வேண்டியிருக்கிறது. வேறு யாரும் உன்னைப் படைக்க முடியாது. நீ ஒரு கடைச்சரக்கல்ல. தொழிற்சாலையில் உன்னை உற்பத்தி செய்ய முடியாது. நீ உன்னையே படைத்துக் கொள்ள



வேண்டியிருக்கிறது. நீயாகவே விழிப்படைந்து கொள்ள வேண்டியிருக்கிறது. யாரும் உன்னை எழுப்பி உட்கார வைக்க முடியாது.

இதுதான் மனிதனின் பிரமாதமே. அவனுடைய பெருமிதமும் இதில்தான் இருக்கிறது. இந்த உலகில் அவன் மட்டுமே இதுவாகவோ அதுவாகவோ இருக்காமல் எதுவாக வேண்டுமானாலும் இருக்க வரும் சுதந்திரம் கொண்டவனாக இருப்பது. பிற உயிர்களெல்லாம் ஏற்கெனவே இப்படித்தான் அப்படித்தான் என்ற நிர்ணயத்துக்கு உட்பட்டவை. ஒரு ப்ளூபிரிண்ட்டுக்கு உட்பட்டவையாக வந்து சேர்கின்றன. வகைப்படுதலுக்கு உட்பட்டவை.

ஒரு கிளி கிளியாகத்தான் இருக்க முடியும். ஒரு நாய் நாயாகத்தான் ஆகும். ஒரு சிங்கம் ஒரு சிங்கமாக. ஒரு சிங்கம் வேறு எதுவாகவோ ஆகும் என்ற சாத்தியமே இல்லை. ஆனால் மனிதனைப் பொறுத்த அளவில் அவன் மனிதனாக இருக்கிறானா என்று கேட்பது பொருத்தமாகத்தான் இருக்கிறது.

ஒவ்வொரு சிங்கமும் உண்மையில் ஒரு சிங்கம்தான். அப்படியே ஒவ்வொரு யானையும். ஆனால் மனிதன் மட்டுமே ஒரு கேள்விக்குறி. ஒரு மனிதன் வாஸ்தவத்தில் மனிதனாக இருக்கலாம். இல்லாமல் போகலாம். மிருகங் களை விடக் கீழானவனாக இருக்கலாம். அல்லது தேவர் களை விட உயர்ந்தவனாகிப் போகலாம். கடவுளரை விஞ்சிய உயரத்தில் இருக்கும் நிலையைத்தான் புத்த நிலை என்கிறோம். அந்த விழிப்புணர்வு - முடிவான விழிப்புணர்வு - உன்னுடைய உள்ளடங்கிய ஆற்றலை உண்மையாக்குவது.

புத்தர் தேவர்களுக்கு மேலானவர். புத்தர் தேவர்களுக்கு மேலானவர் என்று சொன்னது கௌதமரை இந்துக்கள்



மன்னிக்காது போனதற்கு ஒரு காரணம். கடவுளர் தூங்கிக் கிடக்கிறார்கள். அவர்கள் அழகான கனவுகளைக் கண்டு கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய கனவுகளில் பயங்கரம் இல்லை. அவர்கள் சொர்க்கத்தில் இருக்கிறார்கள் அல்லவா! அவர்களுடைய வாழ்க்கையே இன்பமயமானது. சொர்க்கம் ஓர் இன்பபுரி. அவ்வளவுதான். நரகம் அதற்கு எதிரிடையானது. அங்கே வலி. வலி மட்டுமே. நரகம் பயங்கரம். சொர்க்கம் இனிய கனவு. ஆனால் கனவுகள் கனவுகளே - இன்பக் கனவுகள் என்றாலும் சரி, பயங்கர கனவுகள் என்றாலும் சரியே. இனிய கனவுகள் என்றாலும் சரி கசந்த கனவுகள் என்றாலும் சரியே. அது ஒரு பொருட்டே இல்லை.

தேவர்கள் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். இனிய கனவுகள் கண்டு கொண்டிருக்கிறார்கள். புத்தர் விழிப்புணர்வு பெற்றவர். அவர் எல்லாக் கனவுகளையும் தாண்டி வந்துவிட்டவர். புத்தர் போதி அடைந்தபோது சொர்க்கத்தில் இருந்து தேவர்கள் வந்து வணங்கி அவர் கால்களைக் கழுவி விட்டனர் என்று பௌத்த சாத்திரங்கள் சொல்கின்றன.

இந்துக்களுக்கு இது ம்ன்னிக்க முடியாத கருத்தாகப் போய்விட்டது. அவர்களுக்குத் தேவர்கள் சொர்க்கவாசிகள். இந்திரன் போன்ற தேவர்கள் அனைவருக்கும் மேலானவர்கள். என்ன திமிர் இருந்தால் தேவர்கள் சொர்க்கத்தில் இருந்து ஒரு மனிதனின் கால்களைக் கழுவ வந்தார்கள் என்று இந்தப் பௌத்தர்கள் சொல்லியிருக்க வேண்டும்!

பௌத்தம் மானுடத்தை மிக உயர்ந்த பீடத்தில் வைத்தது. வேறு எந்தச் சமயமும் அதைச் செய்யவில்லை. மனிதன் பிரபஞ்சத்தின் மையமாகிறான். கடவுளல்ல. புத்தருடைய சொற்படி விழித்துக் கொண்ட மனிதனே பிரபஞ்சத்தின் மையம். புறவட்டத்தில் தூங்கிக்



கிடப்பவர்களும் குருடர்களும் இருக்க மையத்தில் கண்கள் உடையவர்களும் விழிப்புணர்வு கொண்டவர்களுமே இருக்கிறார்கள். தேவர்களுக்குப் பௌத்தத்தில் இடமே இல்லை. நீட்ஷே இரண்டாயிரம் வருடங்களுக்குப் பின் செய்த காரியத்தைப் புத்தர் அன்றே செய்துவிட்டார்.

சாந்திதாஸ் என்ற மிகப் பெரும் கவிஞர். புத்தரால் வசீகரிக்கப்பட்டு எழுதுகிறார். யார்தான் புத்தருடைய வசீகரத்திலிருந்து தப்பிக்க முடியும்! 'ஸர் உபர் மனுஸ் சத்ய, தஹர் உபர் நிஹி'' மனிதனே உயர்ந்த சத்தியம். அதற்கு மீறிய சத்தியம் இல்லை. ஆனால் ஒன்று - புத்தர் மனிதனைப் பற்றிப் பேசும்போது ஞானியைப் பற்றிப் பேசுகிறார். உன்னைப் பற்றி அல்ல. நீ அதற்கான பாதையில் இருக்கிறாய். ஞானியாகிக் கொண்டிருக்கிறாய். நீ ஒரு விதை.

ஒரு விதையில் நான்கு சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. என்றைக்கும் அது விதையாகக் கிடந்து விடலாம். மூடி வைத்ததாக. சன்னல்கள் இல்லாததாக. இயற்கையோடு தொடர்பில்லாததாக. இறந்து கிடப்பதாக. ஆமாம் - இயற்கையோடு தொடர்பு இல்லையென்றால் இறந்து கிடப்பதுதானே! இன்னமும் மண்ணோடு, வானத்தோடு, காற்றோடு, சூரியனோடு, நட்சத்திரங்களோடு தொடர்பு கொள்ளாத விதை இறந்து கிடப்பதுதான். ஜீவனோடு பொருந்திய எதனோடும் இன்னமும் அது தொடர்பு கொள்ளாமல் கிடக்கிறது. முழுக்கத் தனிமையில், அடங்கிக் கிடப்பதாக, தனக்குள் உறைந்து போனதாக, சீனப் பெருஞ்சுவருக்குள் இருப்பதாக... விதை தன் கல்லறைக்குள் இருக்கிறது.

முதல் சாத்தியம் விதை விதையாகவே என்றைக்கும் இருந்து விடுவது. மிகவும் துரதிருஷ்டம்தான். ஒருவன்



வெறும் விதையாகவே இருந்து கழிந்து போய்விடலாம். உள்ளார்ந்த திறன்கள் எத்தனை இருந்தும் அவன் மீது பொழிய எத்தனை வரங்கள் இருந்தும் அவன் தன் கதவைத் திறவாமலேயே போய்விடலாம்.

இரண்டாவது சாத்தியம் தைரியமாக விதை மண்ணுக்குள் பாய்ந்து, தான் என்ற நிலை அழிந்து தன் கவசங்களை எல்லாம் கழித்துவிட்டு இயற்கையோடு தொடர்பு கொண்டு மண்ணோடு ஒன்றிணைந்து போகலாம். இதற்கு மிகவும் தைரியம் வேண்டும். ஏனென்றால் இதுவே கடைசியாகிப் போகலாம். அதிலிருந்து எதுவும் பிறந்து வளராமல் போய்விடலாம். என்ன உத்திரவாதம் இருக்கிறது? இது ஒரு சூதாட்டம்தான். ஒரு சில பேர்களே இந்தச் சூதாட்டத்துக்குத் தயாராகிறார்கள்.

ஒரு சன்னியாசியாகிப் போவது இந்தச் சூதாட்டத்தின் முதல்படி. வாழ்க்கை, தான் என்ற அடையாளம் ஆகியவற்றை இதில் பணயமாக வைக்க வேண்டியிருக்கிறது. எல்லாக் கவசங்களையும் விட்டுவிடுவதால் இது பெரும் சூதாட்டமாகிப் போகிறது. சன்னல்களைத் திறந்து வைக்கிறாய். என்ன வந்து நுழையப் போகிறது என்று யாருக்குத் தெரியும்? நண்பனா? விரோதியா? யாருக்குத் தெரியும்? பாதுகாப்பற்றுப் போகிறாய். அதுதான் சன்னியாசம். தன் வாழ்நாள் முழுக்க அதைத்தான் புத்தர் போதித்துக் கொண்டிருந்தார். நாற்பத்திரண்டு வருடங்கள் - தொடர்ச்சியாக - விதைகளைச் செடிகளாக்கிக் கொண்டிருந் தார். சாதாரண மனிதர்களை சன்னியாசிகளாக மாற்றி அமைத்துக் கொண்டிருந்தார்.

ஒரு சன்னியாசி ஒரு செடி. ஒரு முளை, மிக மெல்லிய முளை. விதைக்கு எந்த அபாயமும் இல்லை. என்ன அபாயம்



இருக்க முடியும்? எல்லாப் பாதுகாப்போடும் இருக்கிறது. ஆனால் மெல்லிய செடிக்கு எப்போதும் ஆபத்துத்தான். கல்லைப் போன்ற கவசத்துக்குப் பின்னால் விதை எப்போதும் பத்திரமாக இருக்கிறது. ஆனால் செடியோ ஆயிரத்தொரு அபாயங்களுக்கிடையில் வாழ வேண்டியிருக்கிறது. அதுதான் இரண்டாவது நிலை. விதை மண்ணுக்குள் கரைந்து போவது. மனிதனின் அகங்காரம் மறைந்து போவது. அவனுடைய அடையாளம் அழிந்து போவது. ஒரு செடியாகிப் போவது.

மூன்றாவது சாத்தியம் இன்னும் அரியது. எல்லாச் செடிகளும் பூத்துக் குலுங்கவா செய்கின்றன? ஆயிரத்தொரு மலர்களின் விகசிப்பில் உயர்ந்து நிற்கின்றன? வெகு சில மனிதரே இந்த மூன்றாவது நிலைக்கு உயர்கின்றனர். பூத்துக் குலுங்கும் அந்த நிலைக்கு ஏன் பலரால் உயர முடிவதில்லை? பேராசைதான் காரணம். கஞ்சத்தனம்தான் காரணம். அவர்கள் பகிர்ந்து கொள்ளத் தயாராவதில்லை. அன்புடையவராவதில்லை.

ஒரு செடியாவதற்குத் தைரியம் வேண்டும். மலர்களாக விரிவதற்கு அன்பு வேண்டும். மரம் தன் இதயத்தைத் திறந்து விடுவதுதான் பூத்துக் குலுங்குவது. தன் மணத்தை வெளியிடுவது. தன் ஆன்மாவைத் தத்தம் செய்து விடுவது. தன் உயிரை ஜீவனுக்குள் ஊற்றுவது.

என்னதான் சிரமம் என்றாலும் விதை தன் பாதுகாப்புக்களை உடைத்தெறிந்துவிட்டுச் செடியாக முடியும். அது சுலபம். மண்ணிலிருந்து எதை எதையோ எடுத்துக் கொண்டு விதை தன்னோடு பிறவற்றைச் சேர்த்துக் கொள்வதுதானே அது! விதை மண்ணிலிருந்து, மரம் நீரிலிருந்தும் காற்றிலிருந்தும் சூரியனிலிருந்தும் என எடுத்துக் கொள்கின்றன. அவற்றின் ஆசை நிறைவேற்றம் பெறுகிறது.

லட்சியம் நிறைவேறுகிறது. பெரியதாக வளர்ந்து கொண்டே இருக்கின்றது.



ஆனால் அந்த ஒரு கணம் வந்து சேர்கிறது. கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்ற அளவுக்கு எடுத்துக் கொண்டாயிற்று என்ற அந்தக் கணம். பகிர்ந்து கொண்டாக வேண்டும் என்ற அந்தக் கணம். இனி கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்ற அளவுக்குப் பெற்றுக் கொண்ட கணம். இவ்வளவும் இறைவன் கொடுத்துவிட்டதற்கு நன்றி யுடையவனாக இருக்க வேண்டிய கணம். அப்படி நன்றியைத் தெரிவிக்கச் செய்யக்கூடிய ஒரே காரியம் உன்னுடைய பொக்கிஷங்களை ஜீவனுக்குள் செலுத்தி விடுவதுதான். திரும்பக் கொடுத்து விடுவதுதான். உன்னிடம் எந்த அளவுக்கு ஜீவன் தாராளமாக நடந்து கொண்டதோ அந்த அளவுக்குத் தாராளமாக நீயும் நடந்து கொள்ள வேண்டி இருக்கிறது. பிறகு மரம் பூத்துக் குலுங்க ஆரம்பித்து விடுகிறது.

நான்காவது நிலை மணம் பரப்பும் நிலை. என்னதான் ஆனாலும் மலர் பொருள்தான். மணமோ சூக்ஷுமம். அது பொருளல்ல. அதைப் பார்க்க முடியாது. முகரத்தான் முடியும். கைப்பிடிக்குள் வராதது. மணத்தோடு சம்பாஷிக்க மிகக் கூர்மையான உணர்வுகள் தேவை. மணத்தைத் தாண்டி எதுவும் இல்லை. மணம் பிரபஞ்சத்துக்குள் மறைந்து போய் அதனோடு ஒன்றாகிப் போகிறது.

விதையின் இந்த நான்கு நிலைகளே மனிதனின் நிலைகளும். விதையாகவே இருந்து விடாதே. தைரியமாக தான் என்பதைக் கழித்துவிட்டு பாதுகாப்புக்களை விலக்கி வைத்துவிட்டு நடப்பது நடக்கட்டும் என்று வந்து விடு. ஆனால் மரமாக மட்டுமே நின்று விடாதே. மலர்கள் இல்லாத மரம் ஏழ்மையானது. வெறுமையானது. அடிப்படையான



ஏதோ ஒன்று இல்லாதது. அதற்கு அழகில்லை. மரத்தில் அழகிருக்கிறதா என்ன? மலர்கள் மூலம்தான் மரம் தன் அன்பைக் கொட்ட முடியும். சூரியனிடமிருந்தும் சந்திரனிடமிருந்தும் மண்ணிடமிருந்தும் எவ்வளவு எடுத்துக் கொண்டுள்ளதோ அவ்வளவையும் அது திரும்பத் தர வேண்டும்.

வாழ்வில் இந்தச் சமநிலையைச் சாதிக்க வேண்டும். எடுத்துக் கொண்டாயல்லவா! தந்து விடு. ஒரு மலராகிவிடு. ஒரு மலராகும்போதுதான் மணமாகிப் போய்க் காற்றில் கரையும் சாத்தியம் இருக்கிறது.

அதற்குப் பிறகும் மூடிய மலராக, மொட்டாக இருந்து விடாதே. உன் மணம் வெளியே வரமுடியாது போகும். மணத்தை வெளியிடும் வரையிலும் உனக்குச் சுதந்திரம் இல்லை. நீ கட்டுகளுக்குள் கிடப்பவனாகத்தான் இருப்பாய்.

இந்தக் கட்டுகளைத்தான் புத்தர் சம்சாரம் என்றார். இந்த உலகத் தொடர்பு. மணத்தின் சுதந்திரத்தை அவர் நிர்வாணம் என்கிறார். நிறுத்திவிடுவது. மறைந்து போவது. கரைந்து போவது. பகுதி முழுமைக்குள் மறைந்து போகிறது. பனித் துளிகள் கடலுக்குள் மறைந்து விடுவதைப் போல. அப்படிச் சமுத்திரத்தில் தன்னை இழக்கும் அந்த நாளில் ஒரு வகையில் நீ இல்லாதவனாகிப் போகிறாய். வேறொரு வகையில் நீ முதன் முறையாக இருக்க வருகிறாய். இருத்தல் எதார்த்தமாகிப் போன நிலைக்கு வருகிறாய்.

இந்த எதார்த்த இருப்பே உண்மையான தேவநிலை. இந்த இருப்புநிலை, ஸ்படிக நிலை, கடலாகிப் போன உணர்வு - அதுதான் ஈடேற்றம், விடுதலை, மோக்ஷம், கைவல்யம், நிர்வாணம். எந்த வார்த்தையை வேண்டு

மானாலும் போட்டுக் கொள். எல்லாமும் பொருளில் ஒன்றே. வேலிகள் அற்ற எல்லையற்ற ஆன்மாவின் முழுச் சுதந்திரம்.



**இனி சூத்திரங்கள்.**

> **சந்தனம், ரோசா, மல்லி மணம்**
> **காற்றின் போக்கை எதிர்த்து**
> **யாத்திரை போக முடியாது.**

உண்மை தான்! சந்தனம், ரோசா, மல்லி இவற்றின் மணம் பௌதிக உலகத்தின் பகுதிகள். காற்றோடுதான் போக முடியும். காற்றை எதிர்த்துப் போக முடியாது. பௌதீக உலகின் நியதிகள் பாற்பட்டுத்தான் அது இயங்க முடியும். அதுவும் பொருள் தானே! அந்நிலையில் அதற்கென்று முழுச் சுதந்திரம் கிடையாது. மணம் மலரை விட உயர்ந்ததுதான். மலருக்கு மரத்தை விட அதிகச் சுதந்திரம் உண்டுதான். மரத்துக்கு விதையைவிட அதிகச் சுதந்திரம் உண்டுதான். ஆனால் இந்தச் சுதந்திரமெல்லாம் சார்புடையவை. தன்னளவில் முழுமையானது அல்ல.

முழுமையான சுதந்திரமே லட்சியம் என்கிறார் புத்தர். எல்லா நியதிகளையும் தாண்டிய சுதந்திரம். எல்லா நியதிகளையும் தாண்டிப் போகும்போதுதான் முடிவான நியதியைச் சென்று சேர முடிகிறது. ஏஸ் தம்மோ சனந்தனோ. பண்படாத எல்லைகளை தாண்டுவதன் மூலமே விண்ணைப் போல எல்லையற்றுப் போக முடியும்.

பிரபஞ்சமாக விரியவில்லை என்றால் உன்னுடைய அக ஆற்றலை நீ இன்னமும் சென்று சேரவில்லை என்றுதான் பொருள். பிரபஞ்சமாக வர வேண்டியவர்கள் மிகச் சிறியவர்களாய், இருண்ட, கதவுகளற்ற, சன்னல்களற்ற, சகிக்க முடியாத சிறைக்குள் இருக்கிறீர்கள். உங்களைச் சுற்றி



இருப்பது அனைத்தும் வியாதிக் கூறுகளாகத்தான் போய்விட்டன - அகங்காரம், பேராசை, கோபம், காமம், பொறாமை, என்னுடையது என்ற உடைமை உணர்வு. இவைதான் உன்னுடைய சக சிறைத் தோழர்கள். வாழ்வில் என்ன மணத்தை உன்னால் முகர முடியும் என்கிறாய்?

காமமற்ற காதலைப்பற்றி உனக்குத் தெரியாது. எல்லையில்லாதது, பரந்து போவது என்ன என்பது உனக்குத் தெரியாது. பௌதிக நியதிகளுக்குக் கட்டுப்பட்டு நிற்கிறாய். புவி ஈர்ப்பு விசைக்கு உட்பட்ட உனக்கு அருளைப் பற்றி ஒன்றும் தெரியாது. அந்த விசை உன்னைக் கீழ்நோக்கி இழுக்க இன்னமும் இன்னமும் என்று கீழ் நோக்கியே போய்க் கொண்டிருக்கிறாய். உயர எழுந்து மேலே மேலே பறப்பது எப்படி என்று உனக்குத் தெரியாது. புவி எதிர்ப்பு விசை பற்றி உனக்கு ஒன்றும் தெரியாது.

விஞ்ஞானத்துக்கு புவி எதிர்ப்பு விசை பற்றி ஒன்றும் தெரியாது. அவர்கள் புவி ஈர்ப்பு பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறார்கள். கீழ்நோக்கிய இழுப்பு. ஆனால் புரிந்து கொள்ள மிக எளிய விஷயம் இது. இயற்கையில் ஒன்றை ஒன்று இட்டுச் சரிக்கட்டுவதாகவே எல்லாமும் அமைந்துள்ளன. கீழ் நோக்கி ஒரு விசை இழுக்க முடியுமானால் மேல் நோக்கி இழுக்கவும் ஒரு விசை இருக்க வேண்டும். அதுதான் புவி எதிர்ப்பு விசை. கவித்துவமாகச் சொன்னால் அது அருள்.

இரண்டு நியதிகள் இருக்கின்றன. ஒன்று புவிஈர்ப்பு. இவ்வுலகம் சார்ந்தது. பௌதிகம் பாற்பட்டது. புலனுணர்வுக்கு உட்பட்டது. இன்னொன்று அருளின் நியதி. தெய்விக நியதி. புத்தர் ஏஸ் தம்மோ சனந்தனோ என்று

குறிப்பிடும் நித்தியமான, முடிவில்லாத, இறைவனின் நியதி. அதுவே உன்னை மேல் நோக்கி இழுக்கிறது.



சந்தனம், ரோசா, மல்லிமணம் காற்றின் போக்கை எதிர்த்து யாத்திரை போக முடியாது.

மணத்துக்கென்று சில வரைமுறைகள் உள்ளன. அதைத் தூக்கிப் போகக் காற்று வேண்டும். தன்னுடைய சித்தம் என்று எதுவும் மணத்துக்குக் கிடையாது. அதற்கு உண்மையான சுதந்திரம் கிடையாது. முழுச் சுதந்திரத்தில் மூச்சு விடாதவரை ஏதோ ஒரு குறை இருந்து கொண்டே இருக்கும். இந்தப் பௌதிக நியதிகளைத் தொடரும் வரைக்கும் நீ ஒரு சிறைவாசிதான். என்னதான் அப்படி இப்படி நகர இந்த நியதிகள் இடம் கொடுக்குமேயானாலும் நீ ஒரு சிறைக்குள்தான் இருக்கப் போகிறாய்.

அப்படித்தானே நிலைமை இருக்கிறது! இங்குமங்குமாகப் போக இடம் தந்து வைத்திருப்பதால் சிறைக்குள் இருக்கும் உணர்வு உன்னைத் தாக்குவதில்லை. உதாரணமாகத் தேசத்தை எடுத்துக் கொள்ளுங்கள். இந்தியா, பாகிஸ்தான், ஜப்பான், ஜெர்மனி என்ற இவை எல்லாமுமே பெரிய சிறைச்சாலைகள்தான். எல்லைகளைக் காண முடியவில்லை என்பதால் அவை சிறைகளாக உனக்குத் தோன்றுவதில்லை. உன்னுடைய நாட்டின் எல்லை தாண்டிப் போய்ப் பார். சிறைக்குள் இருந்து விட்டோமே என்பதை உணர்வாய். வேண்டிய இடத்துக்குப் போகலாம் என்ற அளவுக்குப் பெரிய சிறையாக இருந்து விட்டதால் அங்கே இருக்கும் வரை சிறைப்பட்டிருந்த உணர்வு இருக்கவில்லை. அந்தச் சிறையை விட்டு வெளியே வந்து இன்னொரு சிறைக்குப் போய்ப் பார். பிறகுதான் என்ன வகையான வேலிகளுக்குள் இருந்திருக்கிறாய் என்பது புரிகிறது.



இவையெல்லாம் மனிதன் செய்து வைத்த சிறைகள். பெரியதாக இருப்பதால் சிறைகளாகத் தோன்றாத சிறைகள். ஆனால் அங்கே சுதந்திரமில்லை. நாடுகள் என்ற அடையாளங்கள் மறையும் வரை இந்த உலகம் அடிமைப்பட்டுத்தான் இருக்கும். அனைவரும் சிறிதும் பெரிதுமான சிறைக் கொட்டடிகளில்தான் இருப்பார்கள். பெரிய சிறை என்பதால் அது சிறையில்லாமல் போய்விடாது. அதன் சுவர்கள் சூக்ஷுமமானவை என்பதால் சுவர்களற்றுப் போகாது. பாஸ்போர்ட், விசா என்று அவை கண்ணுக்குத் தெரியாமல் இருக்கலாம். என்றாலும் அதைத் தாண்டிப் போக முடியாது.

உலகத்து நாடுகள் எல்லாவற்றின் அரசியல் சட்டங்களும் எங்கு வேண்டுமானாலும் போக முடியும் என்று சுதந்திரத்துக்கு உத்திரவாதம் தருகின்றன. ஆனால் அந்த உத்திரவாதம் காகிதத்தோடு சரி. உண்மையானதல்ல. சுதந்திரமாக எங்கும் போய்வர முடியாது. ரஷ்யாவுக்கோ சீனாவுக்கோ போவது என்றால் அது முடியாத காரியம்.

நாடுகள் பெரிய சிறைகள். ஜனாதிபதிகளும் பிரதம மந்திரிகளும் ஜெயிலர்கள். சுதந்திரத்தைப் பற்றிப் பேசுகிற வர்கள். எல்லோரும் போலீஸ்காரர்கள். உங்களுடைய பாது காப்புக்காகத் தாம் இருப்பதாகச் சொல்லிக் கொள்வார்கள். ஆனால் நீ தப்பிக்க முடியாதபடி காவல்தான் காக்கிறார்கள்.

ஒரு நிகழ்ச்சி - கேள்விப்பட்டதுதான்.

ரஷ்யாவில் வயதான ஒருவன் மரணத்தின் வாசலில் இருந்தான். கதவை யாரோ தட்டும் சத்தம். ''யாரது?'' என்றான்.

அமானுஷ்யமான குரல் ஒன்று, ''நான்தான் மரணம்'' என்றது.



அவனோ, ''சரிதான். ரகசியப் போலீஸ் என்று நினைத்தேன்'' என்றானாம்.

சீனப் பெட்டிகள் போலச் சிறைக்குள் சிறைகள் என்று நிறையத்தான் சிறைகள். இந்தியா ஒரு பெரிய சிறை. இதற்குள் இந்துக்கள், முகம்மதியர்கள், கிறித்துவர்கள், சீக்கியர்கள், புத்தர்கள் என்று பல சிறிய சிறைகள்.

கிறித்தவன் சர்ச்சுக்குப் போகலாம். கோயிலுக்குப் போகக் கூடாது. இந்து கோயிலுக்குப் போகலாம். சர்ச்சுக்குப் போகக் கூடாது. சர்ச் புனிதமான இடம் அல்ல என்று அவனுக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். கிறித்துவனுக்கோ சர்ச் மட்டுமே புகலிடம் என்று சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். மற்ற மதங்கள் எல்லாமும் போலியானவை. அவை உன்னைத் தவறான பாதையில் இட்டுப் போய்விடும் என்று சொல்லிப் பழக்கி வைத்திருக்கிறார்கள். கிறித்துவனாக இல்லாமல் உனக்கு ஈடேற்றம் கிடையாது என்கிறார்கள். கிறித்துவத்துக்குள்ளும் கத்தோலிக்கர்கள், புரோடஸ்டண்டுகள் என்று பிரிவுகள். அவர்களுக்குள் இன்னும் உட்பிரிவுகள். இப்படிச் சிறைகள் சின்னதாகிக் கொண்டே வருகின்றன.

தவிரவும் அரசியல் சிறைகள் வேறு. ஒருவன் கம்யூனிஸ்டு. இன்னொருவன் சோஷலிஸ்டு. இன்னொருவன் முதலாளித்துவம் பேசுகிறவன். இப்படியாகப் பலரும் பல விதங்கள். இவற்றோடு நின்று விடுகிறாயா? ரோட்டரி கிளப் என்கிறாய். லயன்ஸ் கிளப் என்கிறாய். சிறைக்குள்ளிருக்க வேண்டும் என்ற தாகத்தால் உன்னால் மனிதனாக இருக்க முடியவே இல்லை. ஒரு மனிதனாக மட்டுமே இருக்க முடியாததால்தான் ''நான் ஒரு ரோட்டேரியன்!'' ''நான் ஒரு லயன்!'' என்று கர்வத்தோடு அறிவித்துத் திரிகிறாய். இப்படி



இன்னும் இன்னும் சிறிய சிறைகளில் உன்னைப் போட்டு அடைத்துக் கொள்கிறாய்.

இந்தச் சிறைகளை ஒழித்துக் கட்டுவதற்குப் பதிலாக அலங்காரம் செய்து மகிழ்கிறோம். சௌகரியமாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறோம். கீழ் நோக்கிய விசைக்கு உட்பட்ட நாம், சிறைவாசிகளாகத்தான் இருக்கிறோம். காற்றை எதிர்த்துப் போக முடிவதில்லை. நம் வாழ்வு புலன்களின் சிறைக்குட்பட்டது. புத்தர், ''உன் வாழ்வை வைத்துக் கொண்டு என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்பதை உணர்ந்திரு. அதை மறுபரிசீலனை செய். அதைப் பற்றிய தியானத்தில் இறங்கு. உன்னை வைத்துக் கொண்டு நீ என்ன செய்து விட்டாய் என்று பார்'' என்கிறார்.

**சுய ஒழுக்கத்தின் மணமோ**
**காற்றின் போக்கை எதிர்த்து**
**உலகின் அந்தம் வரை போகும்.**

உனக்குள் ஒரு விகசிப்பு இருக்கிறது. சந்தனத்தை விட ரோசாப் பூவை விட, மல்லிகையை விட இனியது. அதன் முழுச் சுதந்திரமே அதன் அழகு. அது காற்றை எதிர்த்துப் போக முடியும். உண்மையிலேயே சுய ஒழுக்கமானவன் சுதந்திரமானவன். எந்தக் கட்டளைக்கும் ஆட்பட்டவனல்ல. எந்தச் சாத்திரத்தையும் தொடர்கிறவன் அல்ல. தன்னுடைய அக ஒளியன்றி யாரையும் அவன் பின் தொடர்வதில்லை. தன்னுடைய நெஞ்சத்துக்கு உண்மையாக வாழ்கிற அவன் ஒரு புரட்சிக்காரன்.

புத்தர் அசலான ஒழுக்கத்தின் மணத்தைப் பற்றிப் பேசுகிறார். எதை ஒழுக்கம் என்று சாத்திரங்கள் சொல்கின்றனவோ அதைப் பற்றியல்ல அவர் பேசுவது.



மகான்களைப் பற்றியும் முனிவர்களைப் பற்றியும் அல்ல அவர் பேசுவது. அவர்கள் சுதந்திரமானவர்கள் அல்லர்.

பார்க்கப் போனால் சந்தன மணமும் ரோசா, மல்லி மணமும் இவர்களை விடச் சுதந்திரமானவை. இவை இயற்கையின் நியதியின்படி இருக்கின்றன. அவர்களோ மனிதன் செய்து வைத்த நியதிகள் வழியில் இயங்குகிறார்கள். குருடர்கள் வகுத்த நியதிகள். அறியாமை வகுத்த நியதிகள். விழிப்பில்லாத மனிதர்கள், விழித்திருப் பது இன்னதெனத் தெரியாதவர்கள் வகுத்த நியதிகள்.

யார் சட்டங்கள் செய்தவர்கள்? யார் அரசியலமைப்பின் சிற்பிகள்? யார் இந்தச் சமுதாயத்தை வகுத்து நிர்வகிக்கிறவர்கள்? உன்னைப் போலவே குருடர்கள். உன்னைவிட அதிகம் படித்தவர்களாக இருக்கலாம். உன்னைவிட அதிகம் தெரிந்தவர்களாக இருக்கலாம். ஆனால் இரு குருடர்களில் யாருக்கு வெளிச்சத்தைப் பற்றி அதிகம் தெரியும் என்பது ஒரு பொருட்டே இல்லாத விஷயம். குருடன் குருடன்தான். இந்து ஞானிகளைக் கவனித்துப் பார். ஆச்சரியமாகத்தான் இருக்கும். அவர்கள் சாதாரண மனிதர்களைவிட ஆழமாகக் கட்டுண்டு கிடக்கிறார்கள்.

ஒரு சமணத் துறவி என்னைச் சந்திக்க விரும்பினார். பல வருடங்களாகவே என்னைப் பார்க்க வேண்டும் என்று விரும்பியிருப்பதாகவும் அந்த ஊருக்கு அப்போது வந்திருப்பதாகவும் என்னைச் சந்திக்க வேண்டும் என்றும் செய்தி அனுப்பினார். ஆனால் அவருடைய சீடர்கள் அவரை விடுவதாயில்லை. சமணர்கள் இந்தக் கம்யூனுக்கு வருவதை அவர்கள் அனுமதிப்பதில்லை.

தான் எங்கே போக வேண்டும் வர வேண்டும் என்பதைத் தன் சீடர்கள் தான் தீர்மானிக்க வேண்டும் என்றால் அவர்



என்ன வகையான துறவி? ஆனால் அது அவர்களுக்குள் ஓர் ஏற்பாடு. அவர்கள் இவரை மகான் என்று கொண்டாட வேண்டும். வழிபட வேண்டும். அவர்களுக்காக இவர் சமாதானங்கள் செய்து கொள்ள வேண்டும். தன்னைத் தொடர்கிறவர்களை இவர் தொடர வேண்டியிருக்கிறது.

தலைவர்கள், மகான்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்கள் எல்லோருமே தம்மைப் பின்பற்றுகிறவர் களைப் பின்பற்றுகிறவர்கள்தான். என்ன முட்டாள்தனமான உலகம் பாருங்கள். மேம்போக்காகப் பார்த்தால் அவரே அனைத்தையும் தீர்மானிப்பவராகத் தெரிகிறார். பிறருக்கு இவர் ஆலோசனை சொல்கிறார். ஆனால் கூர்ந்து பார்த்தால் அவரைப் பின்பற்றுகிறவர்களுடைய தாளத்துக்கு இவர் நடனமாட வேண்டியிருக்கிறது என்பது தெரிகிறது. அவர்களே தீர்மானிக்கிறவர்கள். அவரைக் கொண்டாட முடியும் என்பதாலேயே அவரை அவமதிக்கவும் முடியும் என்றாகிப் போகிறது.

அவர்களுடைய வார்த்தைகளுக்கும் விருப்பத்துக்கும் கட்டுப்பட்டு நடக்கும் வரையிலும் இவரைத் துதிப்பார்கள். அவர்களுடைய விருப்பு வெறுப்புகள், கருத்துகள் - இவற்றுக்கு இசைவாக இருக்கும் வரை மகான். இல்லையேல் மகான் அல்ல. அவரை மகான் என்று உயரத் தூக்கி வைக்கலாம். அல்லது பாவி என்று தூக்கிப் போட்டு மிதித்துவிடலாம். மகானாக இருக்க வேண்டுமானால் எல்லா விதமான முட்டாள்தனத்துக்கும் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். அவருக்குத் தெரியும் எவ்வளவு முட்டாள் தனமான காரியம் இது என்று.

திருப்பி ஒரு செய்தி அனுப்பி வைத்தேன். ''இது முட்டாள்தனம். வடிகட்டிய முட்டாள்தனம். எதற்காக



அவர்களைக் கேட்க வேண்டும்?அவர்கள் உங்களைப் பின்பற்றுகிறார்களா நீங்கள் அவர்களையா? அவர்களை ஏன் கேட்க வேண்டும் என்கிறேன்?''

அவர், ''நீங்கள் சொல்வதும் சரிதான். ஆனால் நான் அவர்களை நம்பியல்லவா இருக்கிறேன்! இந்த வயதில் என்னால் அவர்களை விட்டுப் போக முடியாது. வாழ்க்கையில் நான் எந்த வேலையும் செய்ததில்லை. என்னுடைய சாப்பாடு துணிமணி என்ற எல்லாவற்றுக்கும் அவர்களைத்தான் நம்பியிருக்கிறேன்'' என்றார்.

இப்போது பார்த்தாயா என்ன ஏற்பாடு என்பதை? இதைத்தான் ஆன்மிகம் என்கிறார்கள். பிழைப்புக்கான ஏற்பாடுதான் இது.

உண்மையிலேயே உயர்ந்தவன் நிச்சயமாகச் சுதந்திர மானவன். காற்றை எதிர்த்துப் போகுமளவுக்குச் சுதந்திர மானவன். சமுதாயத்தை எதிர்த்துப் போகுமளவுக்குச் சுதந்திரமானவன். கடந்து போன கழிந்து போன எல்லாவற்றையும் எதிர்த்துப் போகுமளவுக்குச் சுதந்திர மானவன். சம்பிரதாயங்களை எதிர்த்துப் போகுமளவுக்குச் சுதந்திரமானவன். தன் கடந்த காலத்தையும் சம்பிரதாயங் களையும் எதிர்த்துப் போகும்போது அவன் தன்னுடைய சுதந்திரத்தை நிலை நாட்டுகிறான்.

இதனால்தான் என்னை இந்த நாடு முழுக்க, மெது மெதுவாக உலகம் முழுக்கத் தூற்றுகிறார்கள். நான் காற்றோடு போக வேண்டும் என்கிறார்கள். சம்பிரதாயத்துக்குத் தலை வணங்க வேண்டும் என்கிறார்கள். என்னை வணங்க அவர்கள் மிகச் சித்தமாகத்தான் இருந்தார்கள். என்ன ஒரே காரியம் செய்ய வேண்டும் என்கிறார்கள். சம்பிரதாயத்தை எதிர்த்து இருக்கக் கூடாது என்கிறார்கள். என்னை மகான் என்று உயர்த்திப் போற்றி வணங்குவார்களாம்.



நானோ, ''என்னை யாரும் வணங்குவதிலோ, மகானாக ஆக்கிவிடுவதிலோ எனக்கு எந்த அக்கறையும் இல்லை. நான் நானாக இருக்க வேண்டும். அவ்வளவுதான். யாரோடும் எந்தச் சமாதானமும் செய்துகொள்ள நான் தயாரில்லை. அது யாராக இருந்தாலும் சரியே. சமாதானம் எனக்கு ஒத்துவராத விஷயம்'' என்று சொல்லிவிட்டேன்.

நான் காற்றை எதிர்த்துப் போவதால் அவர்கள் காயம் பட்டவர்களாகிப் போனார்கள். ஒழுக்கத்தோடு இருந்தால்... எதை நெறி என்கிறார்கள்? பழக்க வழக்கங்களாக வளர்த்துக் கொள்வதல்ல ஒழுக்கம். சுய ஒழுக்கம் தியானம் என்னும் மலரின் மணம். அதனால்தான் செய்தது, செய்யாதது என்பதைச் சார்ந்தது அல்ல சுய ஒழுக்கம் என்கிறேன்.

சுய ஒழுக்கம் என்பதைச் செயல்கள் மூலம் அளவிடுகிறவர்கள் எப்போதும் தயாராக இருக்கிறார்கள். அவர்களுடைய மகிழ்ச்சியே திட்டுவதில், குறை காண்பதில், கொல்வதில், அழிப்பதில் இருக்கிறது. துன்பப்படுவதற்கும் தயாராக இருக்கிறார்கள். ஜபதபம் என்று தங்களை வருந்திக் கொள்வதில் அவர்களுக்கு ஆனந்தம். உன்னைவிட நான் புனிதமானவன் என்று நினைத்துக் கொள்வதற்காக எந்த முட்டாள்தனமான காரியத்தையும் செய்யத் துணிகிறார்கள். ''நீங்கள் எல்லோரும் பாவிகள். நானே மகான்!'' என்கிறார்கள்.

உண்மையான ஞானியின் இயல்பே வேறு. அவர் ஒழுக்கநெறி பேசுவதில்லை. மன்னிப்பது எப்படி என்று அவருக்குத் தெரியும். கடவுள் தன்னை மன்னித்திருக்கிறார் என்பது அவருக்குத் தெரியும் அவரிடம் மனிதனுக்கேயான குறைகள் உண்டு. அவர் மன்னிக்கிறவர். அவர் புரிந்து கொள்கிறவர்.



அறநெறி பேசுகிறவன் புரிந்து கொள்ளாதவன். அவனால் மன்னிக்கவே முடியாது. ஏனென்றால் அவன் தன்னையே சித்திரவதை செய்து கொள்கிறவன். உன்னை விட நான் புனிதமானவன் என்பதிலேயே அவனுடைய மகிழ்ச்சி இருக்கிறது. ஏனென்றால் அவனுக்கென்று ஓர் அடையாளத்தை அவன் மிகச் சிரமப்பட்டு உருவாக்கி வைத்திருக்கிறான். எப்படி அவனால் மன்னிக்க முடியும் என்கிறாய்? அப்படி அவன் மன்னித்தால் தன் அகங்காரத்துக்குள் இன்ப யாத்திரை செய்து கொண்டிருக்க முடியாதே!

கடுந்துறவி உலகத்திலேயே மிக அகங்காரம் பிடித்தவன்.

புத்தரைப் பற்றியே ஒரு கதை உண்டு.

தன் அரண்மனையை விட்டுப் போன முதல் ஆறு வருடங்களுக்கு அவர் பல நோன்புகளை, விரதங்களைக் கைக் கொண்டார். சம்பிரதாயமாகச் சத்தியத் தேட்டத்துக்கு அதுதான் வழி என்றிருந்தார்கள். தன் உடலை அவர் சித்திரவதை செய்தார். உண்ணாவிரதம் இருந்தார். உடல் மிக மெலிந்து போய் உலர்ந்து போகுமளவுக்குப் பட்டினி கிடந்தார். வெறும் எலும்புக் கூடுதான். எண்ணிவிடலாம். வயிற்றுக்கும் முதுகுக்கும் இடையே ஒன்றுமே இல்லையெனும் அளவுக்குப் போய்விட்டது. நிரஞ்சனா என்ற சிறு நதியைக் கடக்கக் கூட முடியாத அளவுக்கு அவர் மெலிந்து போய்விட்டார். அந்த நதியைப் போய்ப் பார்த்திருக்கிறேன். மிகச் சிறிய நதி. மழைக்காலம் கூட இல்லை. அந்த நதியை அவரால் கடக்க முடியவில்லை. அதைத் தாண்டி நீந்த முடியவில்லை. அவர் மிகப் பலவீனமாகத்தான் இருந்திருக்க வேண்டும்.



அன்று அவருக்கு மிகப் பெரிய உண்மை புரிந்தது. ''என்னைத் தேவையின்றித் துன்புறுத்திக் கொண்டு இருந்து விட்டேன்.'' அப்போது அவருக்குச் சீடர்கள் ஐந்து பேர். அவர்களும் கடுந்துறவிகள். நோன்புகளில் புத்தர் அவர்களை விடப் பலமடங்கு சிறந்து இருந்ததாலேயே அவருடைய சீடர்களாக ஆனவர்கள். அவர்களை விட எத்தனை நோன்புகளை அவர் கடந்து வந்திருக்கிறார்!

அன்று மாலை புத்தர் ஒரு முடிவெடுக்கிறார். ''உடலைச் சித்திரவதை செய்வது முட்டாள்தனம். ஆன்மாவுக்கென எதை இந்தச் சித்திரவதை மூலம் சாதிக்க முடியும்? எந்தச் சங்காப்தமும் இல்லையே!''

''இந்தச் சின்னஞ்சிறு நதியான நிரஞ்சனாவை நீந்திக் கடக்க எனக்கு முடியவில்லை என்றால் சம்சார சாகரத்தை நான் எப்படிக் கடக்கப் போகிறேன்? உடலுக்கு உணவு வேண்டும். உடலுக்குப் போஷாக்கு வேண்டும். உடலுக்கு வலிமை வேண்டும். அப்போதுதான் என்னால் தியானிக்க முடியும். அப்போதுதான் நான் தீரச் சிந்திக்க முடியும். அப்போதுதான் நான் மனதைக் குவித்து வைக்க முடியும். ஆர்வத்தோடும் சக்தியோடும் தேடுதலை மேற்கொள்ள முடியும்.''

எல்லா விரதங்களையும் விட்டுவிட முடிவு செய்தார். அவருடைய ஐந்து சீடர்களும் அவரை விட்டு உடனடியாக விலகிப் போய்விட்டார்கள். ''கௌதமர் தன் புனிதத்திலிருந்து நழுவிவிட்டார். இனியும் அவர் ஒரு மகான் அல்ல!'' என்றார்கள். அவர்கள் அதுவரை அவரோடு இருக்கவில்லை. அவருடைய ஜபதப விரதங்களோடுதான் இருந்திருக்கிறார்கள். தம்மைத் தாமே சித்திரவதை செய்து இன்பம் காண்கிறவர்களாகத்தான் இருந்திருக்க வேண்டும்.



கௌதமருக்கு அடுத்த நாளே ஞானோதயம் கிடைத்தது. எல்லா விரதங்களையும் விட்டுவிட்டுத் தேவையில்லாத அகப் போராட்டங்களை விட்டுவிட்டு ஓர் உள்நாட்டுப் போரை விட்டு விட்டு அவர் அமைதியாகிப் போனார். அடுத்த நாள் முதல் தெளிவான பார்வை கொண்டவராகும் அளவுக்குத் தெளிவாக உணரும் அளவுக்கு அமைதியாகிப் போனார். அவருடைய அமைதியில் அகப் போராட்டம், உள்ளே உரத்து ஒலித்த கூக்குரல்கள் எல்லாம் அடங்கிப் போய்விட்டன. தன் ஜீவனுக்குள் அவர் விழித்து எழுந்து விட்டார். அவர் விழித்துக் கொண்டார். புத்தராகிப் போனார்.

ஞானம் அமைதியிலிருந்து பிறந்தது. தியானத்தில் இருந்து பிறந்தது. சாவகாசத்தில் இருந்து பிறந்தது. முயற்சியில் இருந்தல்ல. இறுக்கத்தில் இருந்தல்ல. போராட்டத்தில் இருந்தல்ல. உடனே அவர் தன் ஐந்து சீடர்களைத் தேடிப் போனார். ''இனியும் உங்களை வருத்திக் கொள்ளாதீர்கள். இதற்கும் புனிதத்துக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது. இதற்கும் ஆன்மிகத்துக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது'' என்று சொல்லிப் போனார்.

முதலில் தியானம். அதற்குப் பின் அறநெறி அதன் நிழலாக வந்து சேரும். தியானம் இல்லையானால் நல்லவன் என்று சொல்லிக் கொள்வதெல்லாம் பாசாங்குதான். வேறு எதுவுமில்லை. மகான்கள் என்று சொல்கிறவர்கள் எல்லோரும் பசப்புக்காரர்கள். அவர்கள் சொல்வது ஒன்று. நினைத்துக் கொண்டிருப்பது வேறொன்று. ஒன்றைச் செய்கிறார்கள். ஆனால் அதற்கு நேர் எதிரிடையாக இருப்பதைச் செய்யத்தான் விரும்புகிறார்கள். மேம்போக்காக ஒன்றைக் காண்பிக்கிறார்கள். உள்ளே அதற்கு நேர் எதிரிடையாக இருப்பதை மறைத்து வைத்திருக்கிறார்கள்.



ஒரு சிறுமி பாவ மன்னிப்புக் கேட்கப் பாதிரியாரிடம் போகிறாள். தன் பாய் பிரண்ட் தொடை மேல் கை வைத்தானாம். பிறகு உள்ளாடைகளை விலக்கிக் குறுகுறுப்புச் செய்தானாம்.

''அப்புறம்? அப்புறம்?'' பொறுமையிழந்துவிட்டார் பாதிரியார்.

''அம்மா அங்கே வந்துட்டாளே!''

''சேச்சே!'' என்றாராம் பாதிரியார்.

இந்தப் பாதிரியார்கள், மகான்கள் - இவர்கள் உன்னை விட மிக அசிங்கமானவர்கள். நீ எந்த அளவுக்கு அசிங்கமாக முடியுமோ அதைவிட அசிங்கமானவர்கள். அவர்கள் இரட்டை ஆட்கள். அடக்கி வைத்து வைத்து அவர்களுடைய மனமும் ஆழ்மனமும் இருவேறாகிப் போய்விட்டன. சொல்லிக் கொடுப்பது ஒன்று; செய்வது வேறொன்று. முன்வாசலில் ஒருவன். பின்வாசலில் முழுக்க வேறொருவனாகிப் போகிறார்கள். இரண்டு இடத்திலும் முகமூடிகளை அவ்வளவு பொருத்தமாகப் போட்டுக் கொள்கிறார்கள் - உன்னால் அதைத் தாண்டிப் பார்க்கவே முடியாது.

இவர்கள்தான் ஒழுக்கமானவர்கள். புத்தர் இம்மாதிரி ஒழுக்கத்தைப் பற்றிப் பேசவில்லை. தியானத்திலிருந்து முகிழும் சுய ஒழுக்கத்தைப் பற்றிப் பேசுகிறார். புத்தர் தியானத்தை வலியுறுத்துகிறார். அதுதான் உலகுக்கு அவருடைய அடிப்படைப் பங்களிப்பு. முதலில் மையத்தில் விழிப்பு வேண்டும் என்கிறார். பிறகு தானாகவே விளிம்புகளில் வெளிச்சம் பரவும் என்கிறார்.



அறநெறிப்படி நடந்து கொள். அப்போதே உன் மையத்தில் மாற்றங்கள் வந்து விடுகின்றன என்று பாதிரியார்கள் சொல்லிக் கொடுக்கிறார்கள். இது முட்டாள்தனம். மையம் விளிம்பைத் தொடாது. மையம் அவ்வளவுக்கு முக்கியமானது. அடிப்படையானது. வட்டமோ மையத்தைத் தொடர்வது. முதலில் மையத்தைச் சீராக்கு. விளிம்பைப் பற்றிய கவலையே வேண்டாம். இதைத்தான் நானும் வலியுறுத்திக் கொண்டிருக்கிறேன். புத்தரும் நானும் இதில் ஒன்றேதான். தியானம் முதலில். பிறகு எல்லாமும் தாமாகத் தொடர்கின்றன.

முதலில் கடவுளின் ராச்சியத்தைத் தேடு. அனைத்தும் பின் தாமாக உன்னிடம் வந்து சேரும். இதுதானே யேசுவும் சொன்னது!

கடவுளின் ராச்சியம் என்று யேசு சொன்னதையே புத்தர் தியானம் என்கிறார். புத்தருடைய வார்த்தைகள் யேசுவின் வார்த்தைகளை விட விஞ்ஞான பூர்வமானவை. யேசு நிகழ்ச்சிகளின் தொகுப்புகளில் தன் கருத்தைச் சொல்கிறார். புத்தர் தெளிந்த முறையில் கணிதத்தின் கூர்மையோடு பேசுகிறார். பலவிதத்திலும் வியாக்கியானம் செய்யும்படி புத்தர் பேசுவதில்லை. கவிதையில் பேசுவதில்லை. கவிதையில் தெளிவு இருப்பதில்லை. பலவகையிலும் வியாக்கியானம் செய்யலாம். கணிதவாதியாகப் பேசுகிறார். தர்க்கவாதியாகப் பேசுகிறார். ஒவ்வொரு வார்த்தைக்கும் ஒரு குறிப்பிட்ட முடிவான கருத்தும் குறிப்பும் இருக்கப் பேசுகிறார்.



சுய ஒழுக்கத்தின் மணமோ
காற்றின் போக்கை எதிர்த்து
உலகின் அந்தம் வரை போகும்.

எவ்வளவு நேர்த்தி
இந்த சுய ஒழுக்கத்தின் மணம் -
சந்தனம், ரோசா, நீலத்தாமரை,
மல்லிகை மணத்தை விடவும்!

சந்தனம், ரோசா, நீலத்தாமரை ஆகியவற்றின் மணம் பிரமாதமானதுதான். என்றாலும் நெறியின் மணத்தோடு ஒப்பிடும்போது அது அவ்வளவு நேர்த்தியானதல்ல. நெறிக்கென்று ஒரு மணம் உண்டு. அது உலகத்தின் கடைக் கோடி வரை பரவும்.

எப்படி நீங்கள் இங்கே வந்து நான் சொல்வதைக் கேட்க நேர்ந்தது? உலகத்தின் பல பாகங்களில் இருந்தும் வந்திருக்கிறீர்கள். சமயத்துக்கு ஏன் வந்திருக்கிறோம் என்பது தெரியாமல் கூட வந்திருக்கிறீர்கள். ஆனால் எதுவோ ஒன்று உங்களை இழுத்து வந்திருக்கிறது. ஏதோ ஒரு தெரியாத சக்தி உங்களை இழுத்து வந்திருக்கிறது. உங்களுடைய உணர்வின் மையத்தில் உணர்ந்த ஏதோ ஒன்று உங்களை இங்கே கொண்டுவந்து சேர்த்திருக்கிறது. சமயத்துக்கு உங்கள் வார்த்தைகளையே மீறிக் கூட நீங்கள் இங்கே வருவதுண்டு.

''போக வேண்டாம். எங்கேயும் போக வேண்டிய அவசியம் இல்லை'' என்கிறது ஒரு குரல். என்றாலும் வந்து விடுகிறீர்கள். ஏதோ ஒரு மணத்தை உணர்ந்திருக்க வேண்டும். கண்ணுக்குத் தெரியும் எதனோடும் சம்பந்தப்படாத ஒரு மணம். இது கண்ணுக்குப் புலனாகாத ஒரு நிகழ்வு.

இன்னும் மிகப் பலர் விரைவில் இங்கே வரப்போகிறார்கள். அந்த மணம் அவர்களைச் சென்று சேர்ந்துவிட்டது. சேர்ந்துதான் ஆகவேண்டும். சத்தியத்தைத் தேடுகிறவர் யாராக இருந்தாலும் எங்கே இருந்தாலும் இங்கே வந்துதான் ஆக வேண்டும். தவிர்க்க முடியாது. நடந்தே தீர வேண்டும்.



காலங்காலமாக நடந்து கொண்டிருப்பதும் அதுதான். ஆயிரக்கணக்கில் புத்தரைத் தேடி வந்தார்கள். ஆயிரக்கணக்கில் மகாவீரரைத் தேடி வந்தார்கள். ஆயிரக்கணக்கில் லாவோட் சூவைத் தேடி வந்தார்கள். ஸாரதூஸ்ட்ராவைத் தேடி வந்தார்கள். அவர்கள் சொல்லியதெல்லாம் ஏற்கெனவே சாத்திரங்களில் இருப்பதுதான். எனவே காரணம் ஏதுமின்றி அவர்கள் அவர்களைத் தேடிப் போனார்கள்.

நான் சொல்வதையெல்லாம் நீங்கள் பகவத் கீதை, குரான், பைபிள், தம்மபதம் போன்ற நூல்களைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம். வெகு சுலபமாக இதையெல்லாம் உபநிடதங்களில் காணலாம். தௌ த ஜிங்கில் காணலாம். ஆனால் இந்த மணத்தைக் காண முடியாது.

அவையெல்லாம் மலர்கள், பழைய செத்துப் போன, காய்ந்து போன மலர்கள். ஒரு ரோசாப்பூவை பைபிளுக்குள் வைக்கலாம். வெகு சீக்கிரத்தில் காய்ந்து போய்த் தன் மணத்தை இழந்துவிடும். பிறகு அது ஒரு பிணமாகத்தான் இருக்கும். ஒரு மலரை நினைவுபடுத்தும் சருகாகத்தான் இருக்கும். அப்படியேதான் சாத்திரங்களும். இன்னொரு புத்தர் அவற்றுக்கு உயிர் கொடுக்க வேண்டியிருக்கிறது. இல்லையேல் அவற்றுக்கு மூச்சிருக்காது.



அதனால்தான் தம்மபதம், கீதை, பைபிள் பற்றிப் பேசுகிறேன். மறுபடி அவை மூச்சுக் காற்றோடு இயங்க வேண்டும் என்பதற்காக. அவற்றுக்கு நான் உயிரூட்டுகிறேன். என்னுடைய மணத்தை அவற்றோடு பகிர்ந்து கொள்கிறேன். என்னுடைய மணத்தை அவற்றுக்குள் ஊற்றுகிறேன்.

எனவே உண்மையான கிறித்துவன், சமுதாயக் கட்டாயங்களுக்காக இல்லாமல் கிறித்து மேல் வைத்த உண்மை அன்பால் கிறித்துவனாக இருக்கும் கிறித்துவன், என் வார்த்தைகளில் கிறித்து மறுபடி உயிர்த்தெழக் காண்பான். ஒரு பௌத்தன் இருபதாம் நூற்றாண்டின் மொழியில் இருபதாம் நூற்றாண்டு மனிதருக்காகப் புத்தர் மறுபடி பேசுவதைக் காண்பான்.

எவ்வளவு நேர்த்தி இந்த சுய ஒழுக்கத்தின் மணம் - சந்தனம், ரோசா, நீலத்தாமரை, மல்லிகை மணத்தை விடவும்! காற்றை எதிர்த்துப் போகும் அளவுக்கு நேர்த்தி. எல்லாச் சட்டதிட்டங்களையும் எதிர்த்துப் போகுமளவுக்கு நேர்த்தி. புவிஈர்ப்பை எதிர்த்து மேலெழும்பிப் போய் உயர்வானம் சேருமளவுக்கு நேர்த்தி.

**சந்தனம் ரோசாவின் மணம்**
**வெகுதூரம் போவதில்லை.**
**சுய ஒழுக்கத்தின் மணமோ**
**சொர்க்கத்தை எட்ட உயர்கிறது.**

மலர்களின் மணம் வெகு தூரம் போக முடியாது. அது கணப்பொழுதுக்கானது. வரையறைகளுக்குள் அடங்கிப் போனது. கொஞ்ச தூரம் போய் இல்லாமல் போய்விடுவது. ஆனால் புத்தரின் மணமோ அந்தத்தின் அந்தத்துக்கும் போய்ச் சேருவது. முடிவில்லாதது. காலம் கடந்தது. வெளி கடந்தது.



உண்மையில் புத்தரின் உடல் போய்ச் சேர்ந்த பின்னும் அவருடைய மணம் போய்க் கொண்டே இருக்கிறது.

புத்தர் மறைந்து பல நூற்றாண்டுகள் ஆகியிருந்தாலும் உணர்வுகள் உண்மையாகிப் போனவர்கள் அந்த மணத்தை உணர முடியும். புத்தருக்கும் யேசுவுக்கும் சக காலத்தவனாக இருப்பது இன்றைக்கும் சாத்தியமே. யேசுவோடு இன்றும் தொடர்பு கொள்ளலாம். மலர் இல்லை. ஆனால் மணம் பிரபஞ்சத்தின் ஒரு பகுதியாகி விட்டது. மரங்களில், காற்றில், மேகங்களில், படிந்து போய்விட்ட மணம். யேசு தன் ஸ்தூல வடிவில் இல்லை. ஆனால் அவர் பிரபஞ்சத்தில் கரைந்திருக்கிறார். பிரபஞ்சத்தை ருசிப்பது எப்படி என்று தெரிந்தால், பிரபஞ்சத்தோடு எப்படித் தொடர்பு கொள்வது என்று தெரிந்தால் ஒரு பெரும் ஆச்சரியம் காத்திருக்கிறது. எல்லா புத்தர்களும் ஒன்றாக இருக்கக் காண்பாய். காலம் கடந்த நிலையில் எல்லோரும் சககாலத்தவரே.

அதுதான் என்னுடைய முயற்சி, உங்களை யேசு, புத்தர், ஸாரதுரஸ்ட்ரா, லாவோட் சூ ஆகியோருடைய சககாலத்தவர் ஆக்கிவிடுவது. அவர்களுக்குச் சக காலத்தவர் ஆகிவிட முடியும் என்கிறபோது இந்தச் சாதாரண உலகில் சாதாரண மனிதர்களோடு இருப்பதும், மானுடம் கழிந்த மனிதர் களோடு இருப்பதிலும், உள்ளீடு இல்லாத பிராணிகளோடு இருப்பதும் பொருளற்றுப் போய்க் காலியாக இருப்பவரோடு இருப்பதும் எதற்காகும் என்கிறாய்? கௌதம புத்தருக்குப் பக்கத்து வீட்டுக்காரர் ஆக முடியும் எனும்போது சிறையில் பக்கத்துப் பக்கத்துக் கொட்டடியில் இருப்பது எதற்காக?

ஆம், அது சாத்தியம்தான். காலம், இடம் ஆகியவற்றைக் கடந்து போகும்போது சாத்தியம்தான். தியானத்தில் இரண்டையுமே கடந்து விடுகிறாய். எங்கே



இருக்கிறாய் என்பதில்லை. நேரம் தெரியாது போகும். இடம் தெரியாது போகும். தியானத்தில் காலமும் இடமும் மறைந்து போக நீ நீயாக இருக்கிறாய்.

அந்தக் கணத்தில் - நீ நீயாக மட்டுமே இருக்கும் கணத்தில் - புத்தர் உன் அருகிலிருக்கிறார். காலங்காலமாக இருந்த புத்தர்கள் அனைவரும் உன்னோடிருக்கிறார்கள். வாழத்தகுந்த வாழ்வை முதல்முறையாக வாழ ஆரம்பிப்பாய். முக்கியத்துவம் நிறைந்த வாழ்க்கை. புத்தரின் கையைப் பிடித்து நிற்க முடியுமென்றால், கிருஷ்ணரோடு நடனமாட முடியும் என்றால், மீராவோடு பாட முடியும் என்றால், கபீரோடு உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்க முடியும் என்றால், ஆபிரகாம் உன்னோடு பேசிக் கொண்டிருப்பார் என்றால், யேசு உன்னோடு நேருக்கு நேர் பேசுவார் என்றால் சாத்தியம்தான். மலர்கள் மட்டும்தானே மறைந்து விட்டன. மணம் நித்தியமானது. அது மறையவே மறையாது.

அப்போது எல்லாச் சாத்திரங்களும் உயிர்த்தெழு கின்றன. பைபிளைப் படிக்கும்போது வெறும் புத்தகத்தைப் படிக்க மாட்டாய். மோஸஸ் உன்னோடு பேசுவார். ஆபிரகாம் பேசுவார். யேசு பேசுவார். நேருக்கு நேராகத்தான்.

**சுய ஒழுக்கமும் விழிப்பும் கொண்டவன்**
**பாதையில்**
**ஆசை குறுக்கிடுவதில்லை.**
**அவற்றின் பிரகாசமே அவர்களின் சுதந்திரம்.**

ஆசை என்றாலே இன்னும் இன்னும் வேண்டும் என்பதுதான். ஆசை என்றாலே அதிருப்தி என்றுதான் பொருள். இருப்பதில் ஒரு அதிருப்தி. நிகழ்காலத்தில் ஒரு அதிருப்தி. எனவே எதிர்காலத்தைப் பற்றிய கனவிலே



திருப்தி காணும் முயற்சி. இன்றைய நாள் வெறுமையாகிப் போகிறது. அடுத்த நாளைப் பற்றிய கனவில் மட்டுமே வாழ முடிகிறது. ஏதோ ஒன்றைக் கொண்டு வரும் என்கிற ஆசை. எத்தனையோ அடுத்த நாட்கள் வந்து போய்விட்டன. ஆனால் எதுவும் வந்து சேரத்தான் இல்லை. என்றாலும் நம்பிக்கொண்டே வாழ்கிறாய். மரணம்தான் வரப்போகிறது.

ஆசைகள் என்றுமே நிறைவேறப் போவதில்லை. இயல்பாகவே நிறைவேற முடியாது. விழித்தவர் ஆசைப் படும் மனத்தைப் பார்த்துச் சிரித்துக் கொள்கிறார். ஆசைப்படும் மனமே மிக முட்டாள்தனமானது. ஏனெனில் எந்த ஆசையும் நிறைவேறப் போவதே இல்லை. மணலில் எண்ணை எடுக்க முடியுமா? நீயோ மணலை அரைத்து அரைத்துப் பார்த்துக் கொண்டே இருக்கிறாய். மணலில் எண்ணெய் இல்லை. சாத்தியமே இல்லை. அப்படியே ஆசையும் ஓர் ஏமாற்றுத்தான்.

ஆசை உனக்கு ஒரு வேலை வைப்பதோடு சரி. நம்பிக் கொண்டிருப்பது என்னும் வேலை. அவ்வளவுதான். வாக்குறுதிக்கு மேல் வாக்குறுதி என்று ஆசை தொடர்கிறது. ஆசை ஒரு அரசியல்வாதி. ''பொறு. ஓர் ஐந்து வருடம் பொறு. எல்லாமும் தலைகீழாக மாறப் போகிறது. ஐந்து வருடம்தான் - இந்த உலகம் சொர்க்கமாகிப் போகும்.'' ஆயிரக்கணக்கான வருடங்களாக அரசியல்வாதிகள் இதையே சொல்லிக் கொண்டிருந்திருக்கிறார்கள்.

இந்த முட்டாள் ஜனங்களைப் பாருங்கள். அரசியல் வாதிகளை நம்பிக் கொண்டே இருந்திருக்கிறார்கள். அரசியல்வாதிகளை அப்போதைக்கப்போது மாற்றிக் கொள்கிறார்கள். ஒருவரிடம் சலிப்பு என்றால் இன்னொருவரை அவர் இருந்த இடத்தில் உட்கார



வைக்கிறார்கள். இன்னொருவர் வார்த்தைகளைக் கவனிக்க ஆரம்பிக்கிறார்கள். ஆனால் எதுவும் மாறுவதுதான் இல்லை. ஒரு அரசியல்வாதிக்குப் பதில் இன்னொரு அரசியல்வாதி. அவ்வளவுதான். இதற்குத் தோதுவாகத்தான் மக்களாட்சியில் இரண்டு கட்சிகள் இருக்கின்றன.

ஒரு கட்சி ஐந்து வருடங்களுக்குப் பதவியில் இருக்கிறது. வாக்குறுதியை நம்பிக் காத்துக் கொண்டிருக்கிறாய். எதுவும் நடப்பதில்லை. முன்னைவிட எல்லாமும் மோசமாகத்தான் போய்விடுகிறது. ஆனால் அதற்குள் பதவியில் இல்லாத இன்னொரு கட்சி வாக்குறுதிகளை அளிக்கத் துவங்கிவிடுகிறது. உன் முட்டாள்தனத்தினால் அந்த வாக்குறுதிகளை நம்ப தொடங்கி விடுகிறாய்.

இன்னொரு கட்சியைப் பதவிக்குக் கொண்டு வருகிறாய். அடுத்த ஐந்து வருடங்களுக்கு அந்தக் கட்சி உன்னை ஏமாற்றப் போகிறது. அதற்குள் ஏற்கெனவே உன்னை ஏமாற்றிய முதல் கட்சி நம்பகத்தன்மை கொண்டதாகிப் போகிறது. மறுபடி ஆளும் கட்சியை விமரிசித்து உனக்கு வாக்குறுதிகள் தந்து உன் கண்களுக்கு மரியாதையான கட்சியாக மாறிப் போகிறது. மறுபடியும் உனக்குள் நம்பிக்கை மலரைப் பூக்க வைக்கிறது. மக்களின் ஞாபக சக்திக்கு அற்பாயுசு. அதனால் அரசியல்வாதிகள் ஏமாற்றிக்கொண்டே இருக்க முடிகிறது.

ஆசை ஓர் அரசியல்வாதி. ஓர் ஆசை உன்னைப் பல வருடங்களுக்கு நம்பிக் கொண்டிருக்க வைக்கிறது. பிறகு விரக்தி வந்து சேர்கிறது. சலித்துக் கொள்கிறாய். அதை விட்டு விலகிப் போகிறாய். ஆனால் உடனே இன்னொரு ஆசைக்குள் புகுந்து கொள்கிறாய். இன்னுமொரு அரசியல்



வாதி உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறான். பணம் வேண்டுமென்று ஆசை. பிறகு சலித்துக் கொள்கிறாய். அதை மறந்துவிட்டு அதிகாரம் வேண்டும்- புகழ் வேண்டும் என்று ஓடுகிறாய்.

ஆசை மிகத் தந்திரமானது. ஆன்மிகமாகக் கூடத் தோன்றும். எந்த முகமூடியும் போட்டுக் கொள்ளத் தயார். சொர்க்கத்தையும் சொர்க்க போகத்தையும் பற்றி நினைத்துக் கொள்ள ஆரம்பித்துவிடும். இந்த வாழ்வில் அது சாத்தியமில்லை என்று கொண்டு அடுத்த வாழ்வில் சொர்க்கத்துக்குப் போனால் எல்லாமும் கிடைக்கும் என்று நினைத்துக் கொள்ள வைக்கும். சொர்க்கம் முழுக்க ஆசைகளை நிறைவேற்ற எக்கச்சக்கமான மந்திர மரங்கள் இருப்பதாகத் தோன்றும். மரத்துக்கு அடியில் உட்கார்ந்து இது வேண்டும் அது வேண்டும் என்று சொல்ல வேண்டியதுதான். உடனே கிடைத்துவிடும் என்று சொல்லிக் கொள்கிறாய்.

அப்படி என்ன வேண்டும் என்று நினைத்துக் கொள்ளப் போகிறாய்? மனத்திலிருந்து தோன்றும் ஆசைகள் என்பதால் அனைத்தும் முட்டாள்தனமான ஆசைகளாகவே இருக்கப் போகின்றன. சொர்க்கத்தில் என்ன இன்பங்களைத் தேடப் போகிறாய்?

சொர்க்கத்துக்குப் போய்ச் சேர்ந்தாகிவிட்டது என்று ஒரு நாளைக்கு நினைத்துக் கொள். என்னவெல்லாம் வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறது என்று பார். ஒரு ஓட்டல் வேண்டும் ஒரு சினிமாத் தியேட்டர் வேண்டும். ஒரு பெண் வேண்டும். ஓர் ஆம்பிளை வேண்டும். வேறு என்ன? அதேதான். பிறகென்ன? அதே விரக்தியும்தான்.

சுய ஒழுக்கமும் விழிப்பும் கொண்டவன் பாதையில் ஆசை குறுக்கிடுவதில்லை. எவனொருவன் ஆசை எந்த



அளவுக்கு ஓர் ஏமாற்று வித்தை என்று தெரிந்து வைத்திருக்கிறானோ அவனைத்தான் நான் ஒழுக்கமானவன் என்கிறேன் என்கிறார் புத்தர். எனவே அவன் மனதில் ஆசையே தோன்றுவதில்லை. ஆசையற்ற மனமாகிப் போகிறது. அப்படி ஆசையற்று இருக்க ஒரே வழி விழிப்புடன் இருப்பதுதான். கவனித்திருப்பதுதான். கவனித்திருக்கும் போது உனக்குள் ஓர் ஒளி தோன்றுகிறது. அந்த ஒளிக்குள் ஆசையெனும் இருட்டு நுழைய முடியாது.

அவற்றின் பிரகாசமே அவர்களின் சுதந்திரம். கவனித்திருக்கும் போது உனக்குள் ஓர் ஒளி தோன்றுகிறது. உனக்குள் ஓர் அறிவொளி தோன்றிவிடுகிறது. சாதாரண மானவன் முட்டாள்தனத்தில் வாழ்கிறான். உனக்குள் இருக்கும் இசைக்கும் உனக்கும் ஒரு லயம் வரும்போது, தியானத்தோடு ஓர் இசைவு வந்துவிடும்போது, ஒரு பெரும் அறிவுச்சுடர் வெளிப்படுகிறது. அந்த ஒளியில் எல்லா வற்றையும் அவை அவை என்னவாக இருக்கின்றனவோ அப்படி அப்படியே பார்க்க ஆரம்பிக்கிறாய். தவறாகப் புரிந்து கொள்வது இல்லை.

உன்னைப் பெரிய அறிவாளி என்று நினைத்துக் கொண்டிருப்பாய். ஆனால் முட்டாள்களே தங்களை அறிவாளிகள் என்று நினைத்துக் கொண்டிருப்பார்கள். அறிவு என்பது உணர்வு நிலையிலானதல்ல. தான் என்ற உணர்வை அழித்துக் கட்டுவதுதான் அறிவு. அங்கே அகங்காரம் அழிந்து போகிறது. மேன்மை மறைந்து போகிறது. மிக எளிமையானவனாக்குகிறது.

ஆனால் சாதாரண மனிதன் தவறாகவே புரிந்து கொண்டிருக்கிறான். பைபிளைப் படித்துத் தவறாகப் புரிந்து கொள்கிறான். யேசுவுக்கு அணுக்கச் சீடர்களாக இருந்தவர்கள்



கூட அவரைப் புரிந்து கொள்ளவில்லை. தன் பணியை ஆரம்பித்த மூன்றாவது வருடமே சிலுவையில் அறையப்பட்டார் என்பதால் மட்டும் அல்ல. அவருடைய சீடர்கள் அனைவரும் முட்டாள்களாக இருந்தார்கள் என்ற வகையில் யேசு மிகவும் துரதிருஷ்டவசமானவர் என்பேன்.

யேசுவைக் கைது செய்த நாள். அவருடைய சீடர் ஒருவராலேயே காட்டிக் கொடுக்கப்பட்டுக் கைது செய்த அந்த நாள். அப்படிக் காட்டிக் கொடுத்தவன் யூதாஸ். யேசு மற்ற பதினொரு அப்போஸ்தலர்களைப் பார்த்து ''என்னிடம் ஏதாவது கேட்க வேண்டுமா?'' என்றார். என்ன கேட்டார்கள் தெரியுமா? மிக முட்டாள்தனமாகக் கேட்டார்கள். யேசு கண்ணில் நீர் தளும்பியிருக்க வேண்டும். அவருடைய நெஞ்சில் அடி ஆழத்தில் நெக்குருகி அவர்களுக்காகப் பிரார்த்தித்து இருக்க வேண்டும். ''கடவுளே என்ன கேட்கிறோம் என்பது தெரியாமல் கேட்கிறார்கள். இவர்களை மன்னித்து விடுங்கள்.''

அப்படி என்ன கேட்டார்கள்? ''குருவே! நீங்கள் போகப் போகிறீர்கள். ஒரு சில விஷயங்களைத் தெளிவுபடுத்தி வைக்க வேண்டும். சொர்க்கத்துக்குப் போய்ச் சேரும்போது நிச்சயமாக நீங்கள் கடவுளுக்கு வலது புறம் இருக்கப் போகிறீர்கள். உங்களுக்கு வலது புறம் யார் இருக்கப் போவது? உங்களுக்கு வலதில் முதல், இரண்டாவது என்று யார் இருக்கப் போவது? யாருக்கு மேல் யார்?''

கேள்வியைப் பார். குரு அடுத்த நிமிடம் சிலுவையில் தொங்கப் போகிறார். இவர்களுக்கு யார் யாரைவிட உசத்தி என்று கவலை. யேசு கடவுளுக்கு அடுத்தபடி என்ற அளவுக்கு ஏற்றுக் கொண்டாயிற்று. ''சரிதான். நீங்கள் கடவுளுக்கு அடுத்தவர். ஆனால் யார் மூன்றாவது?



நான்காவது? ஐந்தாவது? இதைத் தெளிவாக இப்போதே முடிவு செய்துவிட வேண்டும். உங்களை மறுபடி சந்திக்க முடியாது. எனவே இப்போதே இதைத் தீர்மானித்து விடுங்கள்.''

ஆசைப்படும் மனது. அவர்கள் யேசுவைப் புரிந்து கொள்ளவே இல்லை. அப்போது மண்டியிட்டுக் கண்ணில் நீர் வழிய யேசு பிரார்த்தித்தாராம். ''கடவுளே என்ன கேட்கிறோம் என்பது தெரியாமல் கேட்கிறார்கள். இவர்களை மன்னித்து விடுங்கள்.'' கண்ணீர் விட்டு அழுதுதான் இருக்க வேண்டும். வாழ்நாள் முழுக்க இதைப் போன்றவர்களுக்காகச் செலவழித்தவர் அல்லவா? ஆசைப்பட வேண்டாம் என்று சொல்லிக் கொடுத்தார். ''இந்த உலகில் முதலாவதாக இருப்பவன் கடவுளின் ராச்சியத்தில் கடைசி ஆளாகத்தான் இருப்பான். இங்கே கடைசியாக இருப்பவன் அங்கே முதலாவதாக இருப்பான்.'' ஆனால் அவர்கள் அதைப் புரிந்து கொள்ளவே இல்லை.

பொதுவாகவே யாரும் கேட்பதைப் புரிந்து கொள்வதில்லை. கவனித்தால்தானே புரிந்து கொள்வதற்கு? கவனிப்பதைப் போலப் பாசாங்கு செய்கிறார்கள். ஆயிரத்தெட்டு எண்ணங்கள் மனதில் ஓடிக் கொண்டிருக்க அவர்கள் எங்கே இருக்கிறார்களோ அங்கே இருப்பதில்லை. எந்தச் சூழலையும் அவர்கள் உணர்வதில்லை. எப்போதும் வேறு எங்கேயோதான் மனதை வைத்திருக்கிறார்கள்.

பூனாவில் உடல் இருக்கும்போது உண்மையில் அவர்கள் பெய்ஜிங்கில் இருக்கிறார்கள். பெய்ஜிங்கில் இருக்கும்போது பூனாவில் மனம் இருக்கிறது. விநோதமான மக்கள்தான். எங்கே இருக்கிறார்களோ அங்கே அவர்கள் இருப்பதில்லை என்பதை நீ நிச்சயமாக எடுத்துக் கொள்ளலாம். அவர்களை எப்படிப் புரிந்து கொள்வது?



வார்த்தைகளைக் கேட்டுக் கொள்ளும் அவர்கள் பொருளைக் கவனிப்பதே இல்லை. பொருளைக் கவனிக்க நெஞ்சம் வேண்டுமே. வார்த்தைகளை மூளை வாங்கிக் கொள்ளும். நெஞ்சத்தைக் கொண்டு கவனிப்பது எப்படி என்பதை அவர்கள் கற்றுக் கொள்ளவே இல்லை.

நெஞ்சத்தைக் கொண்டு கவனிப்பதே சீடனாக இருப்பதற்கு அடையாளம். அப்படிக் கவனிப்பதென்பது அன்போடும் நம்பிக்கையோடும் மற்றவரிடத்தில் தம்மை வைத்தும் கவனிப்பதாகும். சொல்வதோடு உன்னை அடையாளப்படுத்திக் கவனிப்பது என்பதே நெஞ்சத்தைக் கொண்டு கவனிப்பதாகும். குருவோடு இணைந்த உள்ளத்தோடு சீடர் இருப்பானேயானால் அவருடைய அடுத்த வார்த்தை வெளிவருமுன் அதைக் கேட்டுவிடுவான். கேட்பது மட்டுமல்ல. புரிந்து கொள்வான். வார்த்தைகள் சுமந்து செல்லும் பொருளாகிய மணத்தைத் தெரிந்து கொள்வான். ஆனால் இது புலனுக்குத் தெரியாமல் நடப்பது. மூளை புலன் பாற்பட்டது.

புலனுக்கு அப்பாற்பட்டதைப் பிடித்துக்கொள்ள நெஞ்சமெனும் வலையால் மட்டுமே முடியும்.

பின்பற்றுகிறார்கள்தான். ஆனால் தவறாகப் புரிந்து கொண்டதையே பின்பற்றுகிறார்கள். ஒருவரைப் பின்பற்று வதாலேயே உன்னிடம் மாற்றங்கள் ஏற்பட்டுவிடும் என்பதில்லை. ஞானி ஒருவரைப் புரிந்து கொள்வதுதான் முக்கியம். அவர் சொல்வதைப் புரிந்தும் புரியாமலும் பின்பற்றுவது அவ்வளவு முக்கியமில்லை.

நான் உங்களை என் சீடர்கள் என்று சொல்லமாட்டேன். நீங்கள் என் நண்பர்கள். என்னுடைய நண்பர்களாக



இருந்தால், என்னோடு இருக்கும்போது அன்போடும் நம்பிக்கையோடும் இருந்தால் நான் உங்களோடு இருப்பதை நீங்கள் உணர்ந்தவர்களாக இருந்தால் நாம் ஒருவரை ஒருவர் பார்க்கும்போது ஒருவருக்கொருவர் கண்ணாடியாக இருந்தால் அதி முக்கியமான பலவும் தாமாக நடந்தேற ஆரம்பித்து விடுகின்றன.ஏனென்றால் உன் நெஞ்சு புரிந்து கொள்ள ஆரம்பித்துவிடும். நெஞ்சு புரிந்து கொள்ளும்போது உடனடியாக மாற்றங்கள் நடந்துவிடும்.

மூளை தெரிந்து கொள்ளும்போது ''எப்படி? சரிதான். இதை எப்படிச் செயல்படுத்துவது?'' என்று கேட்க ஆரம்பிக்கும். அதாவது மூளையைப் பொறுத்த அளவில் தெரிந்து கொள்வது என்பது ஒன்று. தெரிந்து கொண்டதைச் செயலாக்குவது என்பது வேறு. நெஞ்சத்தைப் பொறுத்த அளவிலோ தெரிந்து கொள்வதே செயல்படுத்துவதாகிப் போகிறது.

அறிவே நல்லியல்பு என்பார் சாக்ரெட்டெஸ். ஆனால் பல காலமாகவே அவரை யாரும் புரிந்து கொள்ளவே இல்லை. அவருடைய மாணவர்களான பிளேட்டோ, அரிஸ்டாட்டில் கூட அவரைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அறிவே நல்லியல்பு என்று சொன்னபோது புரிந்து கொண்ட அந்தக் கணமே அதற்கு மாறாக எதையும் செய்ய முடியாது என்றாகிப் போகிறது என்று பொருள். கதவு ஒன்று இருக்கிறது என்று தெரிந்து கொண்ட அந்தக் கணமே சுவர் வழியாகப் போகமாட்டாய் என்பதைப்போல. பார்ப்பது என்பது செயல்படுவது. பார்ப்பதன் விளைவே செயல்.

''இதுதான் கதவு. எப்போது வெளியே போக வேண்டுமென்றாலும் இதன் வழியாகப் போ. போதும் சுவற்றின் வழியாகப் போக முயன்று பட்ட காயங்கள்'' என்று



நான் சொல்லும்போது, ''சரி அய்யா! மிகச் சரியாகப் புரிந்து கொண்டேன் ஆனால் எப்படிக் கதவு வழியாக வெளியே போவது?'' என்று கேட்கிறாய். அப்படிக் கேட்டால் நெஞ்சத்தைக் கொண்டு புரிந்து கொள்ள வில்லை என்று பொருள். மூளை எப்போதுமே ''எப்படி?'' என்று கேட்டுக் கொண்டேதான் இருக்கும்.

மேலோட்டமாகப் பார்த்தால் மிகப் பொருத்தமானவை போன்று தெரியும் கேள்விகளைத்தான் மூளை கேட்டுக் கொண்டே இருக்கிறது. ஆனால் அத்தனையும் சிறுபிள்ளைத் தனமானவை. நெஞ்சம் எப்போதும் கேள்விகள் கேட்பதே இல்லை. புரிந்து கொள்கிறது. செயல்படுகிறது. இரண்டும் நெஞ்சத்துக்கு ஒன்றே. அன்பும் அப்படியே. அது எப்படி என்று கேட்பதே இல்லை. நெஞ்சத்துக்கு என்று அறிதிறன் இருக்கிறது. மூளை அறிவின் வயப்பட்டது. நெஞ்சம் புத்திசாலித்தனமானது.

**சாலை ஓரத்துச் சேற்றில்**
**எவ்வளவு அழகாகப் பூக்கிறது தாமரை!**
**பரிசுத்த மணம் நெஞ்சை நிறைக்கிறதே!**

இதை நன்கு நினைவில் நிறுத்தி வை. ஏனெனில் இது நெஞ்சத்தின் பரவசம். நெஞ்சம் எதிலாவது பரவசத்தைக் கண்டுகொண்டால் உன் வாழ்வு வளர்ந்து கொண்டிருக்கிறது என்று பொருள். உன் உணர்வுகள் தெளிவாகிக் கொண்டிருக்கின்றன என்று பொருள். உன்னுடைய புத்திசாலித்தனம் சிறையிலிருந்து விடுதலையாகிறது என்று பொருள்.

சாலை ஓரத்துச் சேற்றில் எவ்வளவு அழகாகப் பூக்கிறது தாமரை! தாமரைக்குப் புத்தரின் வார்த்தை பங்கஜ் என்பதாகும். மிக அழகான வார்த்தை. சேற்றில் பூப்பது என்று



பொருள். தாமரை இயற்கையின் மிக அதிசயமான நிகழ்வு. எனவேதான் கீழ்த்திசையில் ஆன்ம மலர்ச்சிக்குத் தாமரை குறியீடாகி விட்டது. புத்தர் தாமரையில் வீற்றிருப்பார். விஷ்ணு தாமரையில் நின்றிருப்பார். ஏன் தாமரை என்கிறாயா? தாமரைக்கு ஆன்மிகக் குறியீடு உண்டு. கலங்கிய சேற்றில் பிறக்கிறது. அது ஒரு நிலைமாற்றத்துக்குக் குறியீடாகிப் போகிறது. சேறு நாற்றம் கூட எடுக்கலாம். ஆனால் தாமரையோ மணக்கிறது. நாற்றம் மிக்க சேற்றில் இருந்து மணமிக்க தாமரை.

அப்படியே வாழ்க்கை சாதாரணமாக நாற்றமெடுக்கும் சகதி. ஆனால் ஒரு தாமரை அதிலிருந்து மலரும் சாத்தியம் அங்கே மறைந்திருக்கிறது. நீயும் தாமரையாகிப் போகலாம். காமம் நிலைமாறிப் போய் சமாதி ஆகலாம். கோபம் நிலைமாறிப் போய் கருணையாகிப் போகலாம். வெறுப்பு அன்பாகிப் போகலாம். எதுவெல்லாம் எதிர்மறையாகத் தெரிகின்றனவோ அத்தனையும் உயர்வடையலாம். இரைச்சல் போடும் மனம் மாறிப் போய் சொர்க்கத்து இசையாய் ஒலிக்கலாம்.

**ஞானியைப் பின்தொடர்- அப்போது**
**குருடர்கள் மத்தியில்**
**உன் ஞானம்**
**பரிசுத்தமாக ஒளிவிடும்.**

ஆனால் இந்தச் சகதியிலிருந்து நிலைமாற்றம் கொள்ள ஒரே வழி ஏற்கெனவே ஞானியாகிப் போன ஒருவரோடு இசைந்தவராகிப் போவதுதான். நீயோ தூங்கிக் கொண்டிருக்கிறாய். விழித்திருப்பவரே தூங்குபவனை எழுப்ப முடியும். தூக்கத்தில் இருந்து விடுபட உதவ முடியும்.



குர்ட்ஜீஃப், ''நீ சிறையில் இருக்கிறாய் என்றால் சிறைக்கு வெளியே இருப்பவர்தான் அதைக் கவனித்துக் கொள்ள முடியும். ஏதாவது செய்து தப்பிக்க உதவ முடியும். இல்லையேல் தப்பிப்பது சாத்தியமே இல்லை'' என்பார்.

நீ சிறையில் இருப்பவன் மட்டுமல்ல. இது சிறையல்ல, உன் வீடுதான் என்று சொல்லி நம்ப வைத்து மனோவசியம் செய்து வைத்திருக்கிறார்கள். அப்படியே நம்பிக் கொண்டு நீயும் அதற்கு அலங்காரங்கள் செய்து கொண்டிருக்கிறாய். உன் வாழ்க்கை முழுக்க இந்த அலங்கரிப்பிலேயே கழிகிறது. இதில் ஒருவருக்கொருவர் போட்டி வேறு. அவரவர் அவரவரது கொட்டடியை அலங்கரிப்பதில் போட்டி.

சுதந்திரமாக இருப்பவர். ஒருகாலத்தில் தானும் அச்சிறையில் இருந்தவர். இப்போது அங்கில்லாதவர். அப்படிப்பட்ட ஒருவர்தான் உன்னை எழுப்ப முடியும். எதார்த்தத்தைப் புரிந்துகொள்ள வைக்க முடியும். மனோவசியத்திலிருந்து விடுபட உதவி செய்ய முடியும். முதலில் உன் பழகிப் போன நிலைமையை மாற்றிச் சிறையிலிருந்து தப்பிக்க வழிமுறைகளை வகுத்துச் சொல்ல முடியும்.

காவலாளிக்கு லஞ்சம் கொடுக்கலாம். சுவரருகே ஓர் ஏணியைச் சாய்த்து வைக்கலாம். ஒரு கயிற்றை உள்ளே வீசலாம். சுவற்றில் கன்னமிடலாம். ஆயிரத்தெட்டு வழிகள் இருக்கின்றனவே.

ஆனால் உனக்கு ஒரே நம்பிக்கை அப்படிப்பட்ட ஞானி ஒருவரோடு இடையறாத தொடர்பு வைத்திருப்பதுதான். அவரைத்தான் சத்குரு என்கிறோம். அப்படி ஒரு குருவைக் கண்டு கொண்டால் வாய்ப்பை நழுவ விட்டுவிடாதே. அவரிடம் சரணடைந்து விடு. அவருடைய இருப்பில்



உன்னை கரையவிடு. அவருடைய விழிப்பைப் பெற்றுக்கொள். அவருடைய மணம் உன்னைச் சுற்றிப் பரவி இருக்கட்டும். நீயும் அப்படி விழித்திருக்கும் நாள் வெகு தொலைவில் இல்லை. நீயும் ஒரு புத்தனாகிவிடுவாய்.

ஒரு புத்தனாகாவிட்டால் உன் வாழ்க்கை வீணாகிப் போனது என்பதை நினைவில் நிறுத்தி வை. புத்தனாகும் போதுதான் ஒருவன் வாழ்வில் அருளிருக்கும். அழகிருக்கும். அறிவிருக்கும். முக்கியத்துவமிருக்கும். கருணை இருக்கும்.

இன்றைக்கு இது போதும்...





முதல் வினா

அன்புக்குரிய குருவே,

> ஏறக்குறைய அனைத்தும் ஒன்றுக்கொன்று எதிரிடையாக இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறீர்கள். இரண்டும் நேர் எதிர்த்துருவங்களில் இருப்பதாக... அப்படியானால் வெறுப்பு அன்பின் மறுமுனை தானே? அப்படியானால் வெறுப்பதும் அன்பு செலுத்துவதைப் போலச் சுலபமான ஒரு காரியமா என்ன? அன்பு அவ்வளவு அருமையானதாக இருக்க வெறுப்பு அசிங்கமாக இருக்கிறதே! ஆனாலும் அதுவும் இருக்க வருகிறதே!

**ஸரீன்,** அன்பு உணர்வின் இயல்பான நிலை. அது சுலபமானதோ சிரமமானதோ அல்ல. அந்த வார்த்தைகளை அன்போடு இணைத்துப் பயன்படுத்த முடியாது. அன்பு ஒரு முயற்சியல்ல. எனவே அது சுலபமானதோ கடினமானதோ ஆக முடியாது. அன்பு மூச்சு விடுவதைப் போல. உன்



இதயத்துடிப்பு போல. உன் உடலில் சுற்றி வரும் ரத்த ஓட்டம் போல.

அன்பு உன் ஜீவன். ஆனால் அன்பு ஏறக்குறைய முடியாததாகிப் போய்விட்டது. சமூகம் அதை அனுமதிப்பதில்லை. சமூகம் உன்னை நிர்பந்தப்படுத்தி அன்பை இயலாததாக்கிவிடும்போது வெறுப்பு மட்டுமே சாத்தியமாகிப் போகிறது. பிறகு வெறுப்பது சுலபமாகிப் போகிறது. அன்பு சிரமமானது மட்டுமல்லாமல் ஏறக்குறைய முடியாததாகிப் போகிறது.

மனிதன் சிதைந்து போகிறான். அப்படி அவன் சிதைந்து போனால் ஒழிய அவனை அடிமைப்படுத்துவது முடியாது. எனவே காலம் காலமாகவே அரசியல்வாதிகளும் ஆன்மிகவாதிகளும் சதி செய்து மனிதர்களை ஓர் அடிமைகளின் கூட்டமாக ஆக்கி வைத்திருக்கிறார்கள். மனிதன் எதையும் எதிர்த்துப் போக வழியில்லாமல் செய்து வைத்திருக்கிறார்கள். காதல் ஒரு கலகம். ஏனென்றால் காதல் நெஞ்சத்துக்கு மட்டுமே செவி மடுக்கும். வேறு எதைப் பற்றியும் அதற்குத் துளிகூட அக்கறை இல்லை.

அன்பில் அபாயம் இருக்கிறது. அது உன்னைத் தனிமனிதன் ஆக்குகிறது. அரசாங்கத்துக்கும் மதங்களுக்கும் தனிமனிதன் தேவையில்லை. தனிமனிதனை அவை ஏற்றுக்கொள்வதே இல்லை. அவர்களுக்கு வேண்டியது செம்மறியாட்டுக் கூட்டம். மனிதர்களைப் போலத் தெரிய வேண்டும். ஆனால் அவர்களுடைய ஆன்மாக்கள் மிதிபட்டுக் கூழாகியிருக்க வேண்டும். சரி செய்ய முடியாத அளவுக்குச் சிதைந்து போயிருக்க வேண்டும்.

சுவாதீனமான அன்பை அழிப்பதுதான் மனிதனை அழித்துப் போடும் மிக எளிய வழி. மனிதன் அன்பின்



வழியில் நின்றால் உலகில் நாடுகள் இல்லாது போகும். நாடுகள் வெறுப்பின் அஸ்திவாரத்தில் நிற்பவை. இந்தியர்களுக்குப் பாகிஸ்தானியர்களைக் கண்டால் வெறுப்பு. பாகிஸ்தானியர்களுக்கு இந்தியர்கள் மேல் வெறுப்பு. இந்த வெறுப்பு இல்லாதிருந்தால் இரண்டு நாடுகள் இருக்க முடியாதல்லவா? அன்பு தோன்றிவிடும் போது நாடுகளின் எல்லைகள் இல்லாமல் போய்விடுகின்றன. அன்பிருக்குமானால் யார் கிறித்துவனாவது? யார் யூதனாவது? அன்பிருக்குமானால் மதங்கள் மறைந்து போகும்.

அன்பிருக்குமானால் கோயிலுக்கு யார் போகப் போகிறார்கள். கோயிலுக்குப் போவது எதற்காக என்கிறாய்? அன்பு காணாமல் போய்விட்டதால் கடவுளைத் தேடுகிறாய். காணாமல் போய்விட்ட காதலுக்கு ஒரு மாற்றுத்தான் கடவுள். நிம்மதி இல்லாமல் போய்விட்டது - பரவசம் இல்லாமல் போய்விட்டது- மகிழ்ச்சி இல்லாமல் போய்விட்டது- அதனால் கடவுளைத் தேடி அலைகிறாய். அப்படி இல்லையென்றால் யார் கடவுளைப் பற்றிக் கவலைப்படப் போகிறார்கள்?

வாழ்க்கை ஒரு நடனம் என்றால் கடவுளை ஏற்கெனவே அடைந்து விட்டாய் என்று பொருள். அன்புள்ள நெஞ்சம் முழுக்கக் கடவுள் இருக்கிறார். அவரைத் தேடிப் போக வேண்டிய தேவையே இருக்காது. பிரார்த்தனைகளுக்குத் தேவை இல்லை. கோயிலுக்குப் போக வேண்டியதில்லை. பூசாரியைத் தேடிப் போக வேண்டியதில்லை.

எனவே இந்த அரசியல்வாதியும் பூசாரியும் மனித குலத்துக்கு விரோதிகள். அவர்கள் கூட்டுச் சதிகாரர்கள். அரசியல்வாதி மனிதனின் உடல் மேல் அதிகாரம் செலுத்த வேண்டும். பூசாரி மனிதனின் மனதின் மேல் ஆதிக்கம்



செலுத்த வேண்டும். இரகசியம் ஒன்றுதான். அன்பை அழித்துப் போடு. அப்புறம் மனிதன் உள்ளீடற்றுப் போவான். வெறுமையானவனாகிப் போய் அர்த்தமில்லாத ஜீவனாகிப் போவான். அப்புறம் அவனை வைத்துக் கொண்டு என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். யாரும் கலகம் செய்ய மாட்டார்கள். யாருக்கும் கலகம் செய்யுமளவுக்குத் தைரியம் இருக்காது.

அன்பு தைரியம் தருகிறது. அன்பு பயம் எல்லாவற்றையும் விலக்கி வைக்கிறது. கொடுங்கோலர்கள் பயத்தை நம்பிப் பிழைப்பு நடத்துகிறவர்கள். ஆயிரத்தெட்டு பயங்களைத் தூண்டிவிடுகிறார்கள். உன்னைச் சுற்றிலும் பயம்தான். உன் அடிப்படை மனதில் பயம் தவிர வேறொன்றும் இருப்பதில்லை. அடி ஆழத்தில் நடுங்கிக் கொண்டே இருக்கிறாய். மேம்போக்காக ஏதோ ஒரு அலங்காரப் பந்தல் போட்டுக் கொண்டிருக்கிறாய். அதைத் தவிர உள்ளே அடுக்கடுக்காகப் பயம்தான்.

பயம் நிறைந்த மனிதனால் வெறுக்கத்தான் முடியும். வெறுப்பு பயத்தின் இயல்பான வெளிப்பாடு. வெறுக்கிறவன் கோபம் நிறையத்தான் வைத்திருப்பான். அப்படி வெறுப்பைச் சுமந்து திரிகிறவன் வாழ்வுக்கு எதிராக இருப்பானே தவிர வாழ்வுக்காக இருக்க மாட்டான். இறப்பு அவனுக்குப் பெரும் நிம்மதியாகத் தெரியும். தற்கொலை எண்ணம் கொண்டவனாக இருப்பான். வாழ்வைச் சீரழிப்பவனாக இருப்பான். வாழ்வது என்றால் அன்பாக இருப்பது என்பதால் அவனுக்கு வாழ்க்கை அபாயம் நிறைந்ததாகத் தெரியும். அன்போடு எப்படி வாழ்வது? உடலுக்கு மூச்சுப் போல ஆன்மாவுக்கு அன்பு தேவை. ஆனால் அன்புதான் முழுக்க விஷமாகிப் போயிற்றே.



அன்பெனும் சக்தியைப் பாஷாணமாக்கி உன் வாழ்வில் ஒரு பிளவை உண்டாக்கி வைத்திருக்கிறார்கள். உனக்குள் ஓர் எதிரியை உருவாக்கி வைத்திருக்கிறார்கள். உன்னை இரண்டாக்கி வைத்திருக்கிறார்கள். உனக்குள் ஒரு உள்நாட்டுப் போரைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள். எப்போதும் அங்கே போராட்டம்தான். அந்தப் போராட்டத்தில் உன் சக்தி விரயமாகிக் கொண்டிருக்கிறது. எனவே உன் வாழ்வில் ஆர்வமில்லை. மகிழ்ச்சியில்லை. அதில் சக்தியின் பிரவாகமில்லை. சலித்துப் போனதாக முட்டாள் தனமானதாக ஆகிவிட்டது.

அன்பு புத்திசாலித்தனத்தைக் கூர் தீட்டி வைக்கிறது. வெறுப்பு அதை மழுங்கடிக்கிறது. நீ புத்திசாலியாக இருக்க வேண்டும் என்று யார் கேட்டார்கள்? அதிகாரத்தில் இருப்பவர்கள் கேட்பதில்லை. நீ புத்திசாலியாக இருக்கக் கூடாது. அப்படி இருந்துவிட்டால் நீ அவர்களுடைய திட்டங்களை எல்லாம் ஊடுருவிப் பார்த்துவிடுவாய். உன்னை முட்டாளாகவும் சாமானியனாகவுமே வைத்திருக்க விரும்புகிறார்கள். வேலையைப் பொறுத்த அளவில் திறமையானவனாக இருக்க வேண்டும் என்கிறார்கள். ஆனால் புத்திசாலியாக இருக்கக் கூடாது. அதனால் மானுடம் முழுக்க அதன் கீழ்நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறது. தன் உள்ளார்ந்த திறனில் வெகு கொஞ்சத்தையே பயன்படுத்திக் கொண்டிருக்கிறது.

விஞ்ஞானிகள் மனிதன் வாழ்நாள் முழுக்கத் தன் திறன்களில் ஐந்து சதவிகிதத்தைத்தான் பயன்படுத்துகிறான் என்று சொல்கிறார்கள். சாதாரண மனிதன் ஐந்து சதவிகிதம் என்றால் அசாதாரணமானவர்கள் எப்படி என்கிறாயா? ஆல்பர்ட், ஐன்ஸ்டீன், மொஸார்ட், பீதோவன் என்று



இவர்களைப் போன்றவர்கள் ஆராய்ச்சிகளின் முடிவின்படி வெகு அசாதாரணமான மனிதர்கள் கூடத் தம் திறன்களில் பத்து சதவிகிதத்தைத் தான் பயன்படுத்துகிறார்கள். மேதைகள் என்று நாம் சொல்கிறோமே அவர்கள் பதினைந்து சதவிகிதம். அவ்வளவுதான்.

ஒவ்வொருவரும் தம் திறன்களில் நூறு சதவிகிதம் பயன்படுத்தினால் அந்த உலகம் எப்படி இருக்கும் என்று நினைத்துப் பார். தேவர்கள் கூட மனிதர்களைப் பார்த்துப் பொறாமைப்படுவார்கள். கடவுளர் பூமியில் பிறக்க வேண்டும் என்பார்கள். இந்த உலகம் ஒரு சொர்க்கமாகிப் போகும். சொர்க்கத்துக்கு மேல் ஒரு சொர்க்கமாகிப் போகும். ஆனால் இப்போதோ இது ஒரு நரகம்.

ஸரீன், அன்பு செலுத்துவது வெறுப்பதைவிட எளிது என்கிறாய். மனிதனை அவன் போக்கில் விட்டுவிட்டால் எந்த விஷத்தையும் கலக்காமல் விட்டுவிட்டால் வெகு சுலபம்தான். எந்தப் பிரச்சனையும் இருக்காது. பள்ளத்தை நோக்கி நீர் பாய்வதைப் போலத்தான். அல்லது புகை மேலே கிளம்புவதைப் போலத்தான். மரங்களில் மலர்கள் விரிவதைப் போலத்தான். பறவைகள் பாடுவதைப் போலத்தான். அவ்வளவு இயல்பாக ஊற்றுப் போலத்தானே விரவகித்துப் பாயும்தான்.

ஆனால் அவனை யார் விடுகிறார்கள்? குழந்தை பிறந்தவுடனே அவன் மீது பாய்ந்து விடுகிறார்கள். சக்தியை எல்லாம் சிதைத்து, தான் பொய்வாழ்வு வாழ்கிறோம் என்ற உணர்வே இல்லாமல் போகுமளவுக்கு அவனை அலங்கோலப்படுத்தி விடுகிறார்கள். தான் எப்படி வாழ வேண்டுமோ அப்படி வாழவில்லை என்பதைத் தெரிந்து கொள்ள முடியாமல் செய்து விடுகிறார்கள். பிறப்பெடுத்த



பயனைக் கெடுத்துவிடுகிறார்கள். செயற்கைத் தனமாக வாழ்க்கை வாழ்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ளாமல் இருக்க வைத்து விடுகிறார்கள். அதனால்தான் கோடிக்கணக்கான மக்கள் துயரத்தில் வாழ்கிறார்கள். அவர்கள் அவர்களாக இருக்கவே முடிவதில்லை. என்னவோ அடிப்படை யிலேயே சரியில்லாமல் போய்விடுகிறது.

இயல்பாக வளர்வதற்குக் குழந்தையை விட்டுவிடும் போது அன்பு மிக எளிமையான காரியமாகிப் போகிறது. தம்மதின் பாதையில் வளர விட்டுவிட வேண்டும். தன்னோடும் இயற்கையோடும் சுருதி கலையாமல் வாழ விட்டுவிட்டால், எல்லா விதத்திலும் துணை செய்தால், போஷித்தால், இயல்பாகத் தானாக இருக்க ஊக்கம் தந்தால், தனக்குத்தானே ஒளியாக இருக்க விட்டுவிட்டால் அன்பு மிகச் சுலபமான காரியம்தான். அப்படியே அன்பு செலுத்த வந்துவிடுவான்.

மற்றவரை வெறுக்குமுன் உனக்குள் ஒரு சிறையை அமைத்துக் கொள்ள வேண்டியிருக்கும் என்பதால் வெறுப்பு காரிய சாத்தியமற்றதாகிப் போகும். உன்னிடம் ஏதாவது இருந்தால்தானே அதைப் பிறருக்குத் தர முடியும்? நீ வெறுப்பால் நிறைக்கப்பட்டிருந்தால்தான் மற்றவருக்கு வெறுப்பைத் தர முடியும்.

வெறுப்பால் நிறைக்கப்பட்டிருப்பது என்பது நரகத்து வேதனை. தீக்குள் பொசுங்கிப் போவது. வெறுப்பு முதலில் உன்னைக் காயப்படுத்தி விடும். மற்றவனைக் காயப்படுத்து முன் உன்னைக் காயப்படுத்திக் கொள்ள வேண்டி இருக்கும். மற்றவனுக்குக் காயமே படாமல் போகலாம். அவனைப் பொறுத்தது அது.



ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். வெறுப்பு கொள்ளுமுன் நீ ஏகப்பட்ட துயரம் பட வேண்டியிருக்கும். வலிகளை அனுபவிக்க வேண்டியிருக்கும் உன்னுடைய வெறுப்பை ஏற்றுக் கொள்ளாமல் மற்றவன் தட்டிக் கழித்து விடலாம். அவர் ஒரு புத்தராக இருக்கலாம். அதைப் பார்த்துச் சிரித்து ஒதுக்கிவிடலாம். உன்னை மன்னித்து விடலாம். திரும்ப எதுவும் செய்யாமல் போகலாம். பிறகு எப்படி அவனைக் காயப்படுத்துவது? திருப்பித் தாக்காவிட்டால் எப்படி அவனை மேலும் தாக்குவது? அவனை எப்படியும் உபத்திரவத்துக்கு உள்ளாக்க முடியாது போகும். என்ன செய்வது? அவனுக்கு முன்னால் நீ காயடித்துப் போனவனாகிப் போவாய்.

எனவே மற்றவன் உன் வெறுப்பால் காயப்பட்டுப் போவான் என்பதற்கு உத்திரவாதம் இல்லை. ஆனால் ஒன்று சர்வ நிச்சயம். மற்றவனை வெறுக்க வேண்டுமானால் முதலில் உன் ஆன்மாவைப் பல வகையிலும் காயப்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. உனக்குள் நிறைய விஷம் இருந்தால்தான் பிறர் மீது நீ விஷம் கக்க முடியும்.

வெறுப்பு இயல்புக்கு மாறானது. அன்பு ஆரோக்கியமானது. வெறுப்பு ஒரு வியாதி. வியாதியைப் போல வெறுப்பு இயற்கைக்கு முரணானது. இயற்கையோ டான உன் தொடர்பை இழந்துவிடும்போதுதான் நீ வெறுக்க முடிகிறது. ஜீவிதத்தோடு லயம் தப்பிப் போன வனாகும்போது, உன் இருத்தலோடும் உன் உள்ளாழத் தோடும் லயம் தப்பிப் போனவனாகிப் போகும்போது, வெறுக்க முடிகிறது. நீ வியாதியஸ்தனாகிப் போகிறாய். மனத்தளவில் ஆன்மாவில் வியாதிகள் பீடித்தவனாகிப் போகிறாய். வெறுப்பு வியாதிக்கான அடையாளம். அன்பு



ஆரோக்கியத்துக்கும் முழுமைக்கும் புனிதத்துக்கும் ஓர் அடையாளம்.

ஸரீன், அன்பு மிக இயல்பானதாக இருக்க வேண்டும். ஆனால் அப்படி இருப்பதில்லை. மாறாக அது மிகக் கடினமான செயலாகிப் போய்விட்டது. ஏறக்குறைய முடியாத காரியமாகிப் போய்விட்டது.

வெறுக்க உனக்குப் பயிற்சி தருகிறார்கள். எனவே வெறுப்பது சுலபமாகிப் போய்விட்டது. அதற்கு உன்னைத் தயாராக்கி வைத்திருக்கிறார்கள். இந்துவாக இருப்ப தென்பது முகம்மதியர்களை வெறுப்பது. கிறித்தவர்களை, யூதர்களை வெறுப்பது. கிறித்தவனாக இருப்பதென்பது மற்ற மதங்களைச் சார்ந்தவர்களை வெறுப்பது. தேசிய வாதியாக இருப்பதென்பது மற்ற நாடுகளை வெறுப்பது.

அன்புக்கு ஒரே ஒரு மார்க்கம்தான். அது மற்றவரை வெறுப்பது என்றாகிப் போய்விட்டது. மற்ற நாட்டை வெறுக்கத்தான் உன் தேசாபிமானத்தைக் காட்டுவது என்றாகிப் போய்விட்டது. ஒரு மதத்தை நேசிப்பது என்பது பிற மதங்களை வெறுப்பதுதான் என்றாகிப் போய்விட்டது.

மதங்கள் அன்பைப் பற்றிப் பேசிக் கொண்டே இருக்கின்றன. என்ன சாதித்துவிட்டன என்றால் வெறுப்பை வளர்த்துவிட்டிருப்பதைத்தான். கிறித்துவர்கள் அன்பைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் போர்களை நடத்திக் கொண்டே இருக்கிறார்கள். முகம்மதியர்கள் அன்பைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் ஜிஹாத்களை நடத்திக் கொண்டே இருக்கிறார்கள். இந்துக்கள் அன்பைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் அவர்களுடைய சாத்திரங்களைப் பார். எங்கும் வெறுப்பே மண்டிக் கிடக்கிறது. தயானந்தரின் மிகப் பெரிய புத்தகமான சத்யார்த்த பிரகாசம் படித்துப் பார். ஒவ்வொரு பக்கத்திலும் வெறுப்புத்தான். ஒவ்வொரு



வாக்கியத்திலும்தான். இந்தப் புத்தகங்களைப் போய் ஆன்மிக நூல்கள் என்கிறார்கள்.

நாமும் இத்தனை முட்டாள்தனத்தையும் ஏற்றுக் கொள்கிறோம். எந்த எதிர்ப்பும் இல்லாமல்தான். ஏனென்றால் இதையெல்லாம் ஏற்றுக்கொள்ள நம்மைப் பழக்கப்படுத்தி வைத்திருக்கிறார்கள். அப்படித்தான் என்று நம்ப வைத்திருக்கிறார்கள். பிறகு என்ன? உன்னுடைய இயல்புக்குத் துரோகம் செய்ய வேண்டியதுதான்.

ஒரு கதை.

ஒரு கன்னியாஸ்திரி பாவ மன்னிப்புக் கேட்க வந்திருந்தார்கள். மதர் சுபீரியரிடம்தான். ஒரே அழுகை. கன்னத்தில் வழியும் கண்ணீர். நடு நடுங்கி நிற்கிறாள். ''நான் பெரும் பாவம் பண்ணிவிட்டேன். மன்னிக்க முடியாத பாவம். நான் தனியாக இருந்தபோது அவன் என் அறைக்குள் நுழைந்தான். கையில் துப்பாக்கி. என்னை நோக்கித் துப்பாக்கியை நீட்டி மிரட்டி என்னைப் பணிய வைத்தான். ஒண்ணு செத்துப்போ. இல்லே என் ஆசைக்கு இணங்கிவிடு என்றான். அய்யோ நான் சீரழிந்து விட்டேனே! என் வாழ்க்கையே கெட்டுப் போய்விட்டதே!''

மதர் சுபீரியர் வெகு கருணையோடு பேசினார். ''கவலைப்படாதே கண்ணே. கடவுளின் கருணை மிகப் பரந்தது. பழைய சாத்திரங்களில் கூட உயிர் பிழைப்பதற் கென்றால் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். பைபிள் மீது காறித் துப்புவதைத் தவிர. உயிர் பிழைக்கத்தானே நீ அப்படிச் செய்தாய்! கவலைப்படாதே. உனக்கு மன்னிப்பு உண்டு'' என்கிறார்.

அவளோ மறுபடி மறுபடி அழுது கொண்டே இருந்தாள். ''அது ஒன்றும் பயனில்லை'' என்றாள்.



மதர் சுபீரியர், ஏன் அப்படிச் சொல்கிறாய்?'' என்று கேட்டார்.

அவள், ''எனக்கும் அது பிடித்திருக்கிறதே!'' என்றாள்.

இயல்பை மறுத்து நடந்து கொள்ளலாம். ஆனால் அதை அழித்துவிட முடியாது. உன் இருப்பில் எங்கோ அடி ஆழத்தில் இருந்து கொண்டேதான் இருக்கும். அதில்தான் உன்னுடைய ஈடேற்றத்துக்கான நம்பிக்கையே இருக்கிறது.

அன்பை வக்கிரப்படுத்தி விட்டார்கள். அழித்து விடவில்லை. அந்த விஷத்தை எடுத்து எறிந்துவிடலாம். உன்னைச் சுத்தம் செய்து கொள்ளலாம். உனக்குள் இந்தச் சமுதாயம் எதை எதையெல்லாம் திணித்து வைத்திருக் கிறதோ அதையெல்லாம் வாந்தி எடுத்துவிடலாம். உன்னுடைய நம்பிக்கைகளை எல்லாம் வழக்கங்களை எல்லாம் விட்டுவிடலாம். சுதந்திரமாக இருப்பது என்று நீ தீர்மானித்து விட்டால் இந்தச் சமுதாயம் உன்னை எப்போதும் அடிமையாக வைத்திருக்க முடியாது.

சன்னியாசம் அதைப் பற்றியதுதான்.

ஸரீன், இதுதான் சரியான தருணம். சன்னியாசியாவதற்கு இதுதான் சரியான தருணம். பழையதை எல்லாம் கழித்துவிட்டுப் புதிய வாழ்வை ஆரம்பிக்க இதுதான் சரியான தருணம். இயல்பான வாழ்வு வாழ்வதற்கு, அடிமைப்பட்ட வாழ்வை விட்டு வருவதற்கு, துறந்து விட்டல்ல, கொண்டாட்டமாக வாழ்வை ஆக்குவதற்கு இதுதான் சரியான தருணம்.

சாதாரணமாகப் பார்த்தால் அன்பு சாத்தியமில்லாத தாகவும் வெறுப்பே காரிய சாத்தியம் என்றும் தெரியும். ஆனால் நான் இங்கே கொண்டு வரப்போகிற இடம் முழுக்க



வேறுபட்டதாக இருக்கும். இங்கே அன்பு மட்டுமே சாத்தியம். வெறுப்பு முடியாததாகிப் போகும். வெறுப்பு அன்புக்கு நேர்எதிர் துருவம். ஆரோக்கியத்துக்கு நோயைப் போல. ஆனால் நீயோ நோயைத் தேர்ந்தெடுக்க வேண்டியதில்லை.

நோயிலும் சில சாதகங்கள் இருக்கின்றன. ஆரோக்கியத்தில் இல்லாத சாதகங்கள். அந்தச் சாதகங்களின் மீது பற்று வைத்துவிடாதே. வெறுப்பிலும் சில சாதகங்கள் இருக்கின்றன. அன்பில் இல்லாத சாதகங்கள். எனவே நீ கவனமாக இருக்க வேண்டி இருக்கிறது. நோய் வந்து விட்டால் எல்லோரும்தான் கரிசனம் காட்டுகிறார்கள். யாரும் எந்தத் தீங்கும் செய்ய மாட்டார்கள். அடாடா, நோய் வந்து விட்டதே என்று சொல்லும்போது பரிவுதான் காட்டுகிறார்கள். எல்லோருடைய கவனத்துக்கும் மையமாகிப் போகிறான்.

முக்கியமானவனாகிப் போகிறான். ஆனால் இந்த முக்கியத்துவத்தின் மீது பற்றுக் கொண்டவனாகிப் போனால் நோயோடேயே இருக்க வேண்டும் என்று ஏங்க ஆரம்பித்து விடுவான். மனோதத்துவ அறிஞர்கள் இப்படிப் பலரும் நோயைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கண்டுபிடித்துச் சொல்லியிருக்கிறார்கள். இப்படியாக நெடுங்காலத்தை நோயில் முதலீடாக்கி நோயைத் தாம்தான் விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிறோம் என்பதை மறந்து விடுகிறார்கள். ஆரோக்கியமானவர்கள் ஆகிப் போனால் தாம் யாருமற்றவர்களாகிப் போய்விடுவோம் என்று பயப்படுகிறார்கள்.

இதையும்தான் சொல்லிக் கொடுக்கிறார்கள். வீட்டில் ஒரு குழந்தைக்கு உடல்நிலை சரியில்லை என்றால்



எல்லோரும்தான் அந்தக் குழந்தை மீது கரிசனத்தைக் கொட்டுகிறார்கள். இது அறிவுக்குப் பொருந்தாத செயல். உடல்நிலையைக் கவனிக்க வேண்டியதுதான். ஆனால் அதற்காக இவ்வளவு ஆர்ப்பாட்டமா? இது அபாயம். நோயும் கரிசனமும் தொடர்புடையதாக ஆகிப்போய் விடுகிறது. மறுபடி மறுபடி நடந்தால் அப்படித்தானே நடக்கும்!

குழந்தைக்கு உடல்நிலை சரியில்லை எனும்போது குடும்பத்தில் மையப்படுத்தப்பட்ட குழந்தை. தந்தை வந்தால் பக்கத்தில் உட்கார்ந்து கொள்கிறார். எப்படி இருக்கிறாய் என்று கேட்கிறார். டாக்டர் வருகிறார். பக்கத்து வீட்டுக்காரர்கள் வருகிறார்கள். நண்பர்கள் என்ன எப்படி என்று விசாரிக்கிறார்கள். வருகிறவர்கள் வெறுங்கையோடு வருவதில்லை. இதையெல்லாம் பார்த்து ஆசைப்பட்டுப் போய் தனக்கு நோய் குணமாகக் கூடாது என்று கூட அந்தக் குழந்தை ஆசைப்பட்டு விடலாம்.

அப்படி இது நடந்துவிட்டால் ஆரோக்கியமாக இருப்பது முடியாது போய்விடும். எந்த மருந்தும் எதுவும் செய்ய முடியாது. அந்த ஆள் தீர்மானமாக நோயாளியாக இருப்பது என்ற முடிவெடுத்தாகி விட்டது. அதுதான் நிறையப் பேருக்கு நடக்கிறது.

வெறுப்பைக் காண்பிக்கும்போது உன்னுடைய அகந்தை நிறைவேறுகிறது. தான் என்ற உணர்வு வெறுப்பு இருந்தால்தான் தங்கி இருக்க முடிகிறது. வெறுக்கும்போது தன்னை உயர்வாக நினைத்துக் கொள்வதால்தான். வேறுபட்டவன் என்ற உணர்வு வந்துவிடுவதால்தான். உனக்கு என்று ஓர் அடையாளம் கற்பித்துக் கொள்வதால்தான்.



அன்பில் இந்தத் தன்முனைப்பான யாத்திரை நின்று போய்விடுகிறது. அன்பு காட்டும் போது தனிமையில்லை. தன்னைப் பிறரில் கரைத்துக் கொள்வதுதான் நடக்கிறது. அன்பு ஒரு சந்திப்பும் சங்கமிப்புமாகிப் போகிறது.

தான் என்ற முனைப்போடு அதிகம் பற்று வைக்கும்போது வெறுப்பு சுலபமாகிப் போக அன்பு மிகக் கடினமானதாகிப் போகிறது. எனவே கவனத்தோடும் விழிப்போடும் இரு. வெறுப்பு அகங்காரத்தின் நிழல். அன்புக்குப் பெரும் தைரியம் தேவை. தான் என்ற உணர்வைக் கழித்து விட வேண்டியிருக்கிறது. யாருமற்றுப் போகத் தயாராக இருப்பவர்கள்தான் அன்பு செலுத்த முடிகிறவர்கள் ஆகிறார்கள். அவர்கள்தான் கடந்து நிற்கும் சக்தியின் அன்புக்கு அருகதையுள்ளவர் ஆகிறார்கள்.

கவனமாக இருந்தால் ஸரீன், அன்பு மிகச் சுலபமானதாகிப் போகும். வெறுப்பு முடியாததாகிப் போகும். அன்பு இயல்பாகிப் போய் வெறுப்பு சாத்தியமில்லாமல் போகும் அந்த நாள் நீ உன் வீட்டைக் கடந்து விடுகிறாய். அதற்குப் பின் போவதற்கு வேறு இடம் இருப்பதில்லை. கடவுளைச் சேர்ந்ததாயிற்று.

கடவுளைக் கண்டுபிடிப்பது என்பது முழுக்க முழுக்க இயல்பாக இருப்பதுதான்.

இரண்டாவது கேள்வி

அன்புக்குரிய குருவே

இருப்பது எது?

**பிரபாதி**, இரண்டு வகையானவை இயற்கையில் உள்ளன. முதலாவது விளக்கத்துக்கு உட்பட்டது.



இரண்டாவது அனுபவித்துத்தான் தெரிந்துகொள்ள முடிவது. விளக்கத்துக்கு உட்பட்டவை இவ்வுலகுக்குச் சம்பந்தப்பட்டவை. சாதாரண மானவை. அவற்றுக்கெனச் சொந்தமாக எந்த மதிப்பும் இல்லை. விளக்கத்துக்கு அப்பாற்பட்டவை உண்மையில் முக்கியமானவை. அவற்றுக்கெனச் சொந்தமாக ஒரு மதிப்பு உண்டு.

உதாரணமாகக் காமத்தைச் சொல்லி விளக்கி விடலாம். ஆனால் காதலைச் சொல்லி விளக்க முடியாது. எனவேதான் காமம் கடைச்சரக்காகிவிட்டது. அதை விற்கலாம் வாங்கலாம். காதல் கடைச்சரக்கல்ல. அதை வாங்கவோ விற்கவோ முடியாது. உடற் சார்பு உடையது என்ற வகையில் காமத்தை விளக்கிவிடலாம். காதலை விளக்க முடியாது. அது உன்னுடைய அகத்தின் ரகசியத்தின் ஒரு பகுதி.

காமம் உயர்ந்து எழுந்து காதலாகாவிட்டால் அது புலன் வயப்பட்டது மட்டுமேதானாகிப் போகும். காமம் காதலாகும் போது முற்றிலும் புதியதொரு பருமானத்துக்குள் நுழைந்து விடுகிறது. அதிரகசியமும் ஆச்சரியமும் ஆன ஒரு தளத்துக்கு அது போய்ச் சேர்ந்து விடுகிறது. அது ஆன்மிகமாகிப் போகிறது. புனித மானதாகிப் போகிறது. கீழ்மை ஏதும் இருப்பதில்லை.

இன்னமும் உயர்ந்த நிலையிலான காதலும் இருக்கிறது. நான் அதைப் பிரார்த்தனை என்பேன். எந்த விதத்திலும் விளக்க முடியாதது. சொல்லில் அடங்காதது. அதைப் பற்றி எதுவும் சொல்லவே முடியாது.

சீடர் ஒருவர் யேசுவிடம் பிரார்த்தனை என்றால் என்ன என்று கேட்டபோது யேசு முழந்தாளிட்டுப் பிரார்த்திக்க



ஆரம்பித்துவிட்டார். அதைத் தவிர வேறு என்ன செய்திருக்க முடியும்? பிரார்த்தனையைச் சொல்லி விளக்க முடியாது. அதைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது. ஆனால் அதைக் காட்ட முடியும். மரணத்தைப் பற்றி என்ன சொல்லிவிட முடியும்? பிறப்பு பற்றி என்ன சொல்லிவிட முடியும்? என்ன சொன்னாலும் முழுமை இருக்காது. வார்த்தைகள் ஜனன மரண உயரத்துக்கு ஏறிப் பறக்க முடியாது.

அழகைப் பற்றி என்ன சொல்லிவிட முடியும்? பௌர்ணமி நாளன்று ஏரி முழுக்க அழகான தாமரைகள் இருக்க எங்கும் அழகு பொலிந்திருக்க கரையில் நின்று ஒருவன் ''அழகு என்றால் என்ன? என்று கேட்டால் என்ன சொல்வது காட்டத்தான் முடியும். ''இதுதான்!'' என்று சொல்லலாம். ஆனால் அவன், ''எனக்கு ஒரு விவரணம் தேவை'' என்று சொல்லலாம்தான்.

ரவீந்திரநாத் இந்த நாட்டின் மிகப்பெரிய கவிஞர்களில் ஒருவர். அவரிடம் ஒரு படகு வீடு இருந்தது. மாதக்கணக்கில் அந்தப் படகு வீட்டில் இருப்பது அவருக்குப் பிடித்திருந்தது.

ஒரு பௌர்ணமி அன்று அந்தப் படகு வீட்டின் ஓர் அறையில் உட்கார்ந்து ஒரு புத்தகம் படித்துக் கொண்டிருந்தார். மிகச் சிறிய அறை. மெழுகுவர்த்தி வெளிச்சம். அழகியல் பற்றிப் படித்துக் கொண்டிருந்தார். அழகு என்றால் என்ன என்பதைப் பற்றித்தான். வெளியே முழுநிலவின் ஒளி வெள்ளம். குயில் தூரத்துக் கரையிலிருந்து பாடுகிறது. ஏரி முழுக்க நிலவொளியின் பிரதிபலிப்பு. ஏரி முழுக்க ஒரு வெள்ளித் தாம்பாளம் ஆகிப் போய்விட்டிருந்தது. மிக அமைதியான இரவு. யாரும் அருகில் இல்லை பாடும் குயிலைத்தவிர. அப்போதைக்கப்



போது ஒரு பறவை சிறகடிக்கும் ஓசை. அல்லது ஒரு மீன் நீருக்குள் துள்ளி விழும் ஓசை. அந்த ஓசைகள் அந்த இரவின் அமைதியை ஆழமாக்கின. பெரிய பெரிய புத்தகங்களைப் புரட்டி அழகு என்றால் என்ன என்ற கேள்விக்கு விடை தேடிக் கொண்டிருந்தார்.

களைத்துப் போனவராக நடு இரவில் மெழுகு வர்த்தியை ஊதி அணைத்தார். உடனே அவருக்கு ஓர் அதிர்ச்சி. ஆச்சரியம். மெழுகுவர்த்தி அணைய சன்னல் வழியாக நிலவொளி அறைக்குள் பாய்ந்தது. வத்தியின் வெளிச்சம் நிலவொளியை அறைக்கு வெளியே நிறுத்தி வைத்திருந்தது. திடீரென தூரத்துக் கரையில் இருந்து குயில் கூவியது. திடீரென அந்தப் பிரம்மாண்டமான அமைதி அவருக்கு உறைத்தது. படகைச் சுற்றிக் கவிந்திருந்த அமைதியின் ஆழம். ஒரு மீன் குதித்தது. அவர் வெளியே வந்தார். அவ்வளவு அழகான காட்சியை அவர் கண்டதே இல்லை. சில வெள்ளை மேகங்கள் வானத்தில் மிதந்திருந்தன. அந்த நிலவும் நீரும் குயிலின் பாடலும் - அவர் வேறு ஓர் உலகத்துக்குப் போய்விட்டார்.

இதைப் பற்றித் தன் டைரியில் எழுதியிருக்கிறார். ''நானொரு முட்டாள். அழகு என்ன என்று நான் புத்தகங்களில் தேடிக் கொண்டிருந்து விட்டேன். என் கதவைத் தட்டிக் கொண்டு அழகு நின்றிருந்திருக்கிறது. அழகைத் தேடிக் கொண்டிருந்தேன். ஒரு சிறு மெழுகுவர்த்தியை வைத்துக் கொண்டு அழகு என்ன என்று தேடிக் கொண்டிருந்தேன். அந்தச் சின்ன மெழுகுவர்த்தி அழகை அறைக்குள் வராமல் தடுத்து நிறுத்தியிருந் திருக்கிறது. என் அகங்காரம் கடவுளை வெளியே நிறுத்தி வைத்திருக்கிறது. என் சின்னஞ்சிறு அகந்தை. சின்னஞ்சிறு மெழுகுவர்த்தி நிலவொளியைத் தடுத்து நிறுத்தி



யிருந்ததைப் போலக் கடவுளின் ஒளி என்னை வந்து சேராமல் தடுத்து நிறுத்தி வைத்திருக்கிறது. அவரோ வெளியே காத்திருந்திருக்கிறார். நான் செய்திருக்க வேண்டியதெல்லாம் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு மெழுகுவர்த்தியை அணைத்துவிட்டு வெளியே வந்திருக்க வேண்டியதுதான். வந்து பார்த்திருக்க வேண்டியதுதான்.''

பிரபாதி! இருப்பது எது என்று கேட்கிறோம்.

இதுதான். இதுவாகும் இதுதான். இருப்பது உன்னை இந்தக் கணம் சூழ்ந்திருக்கிறது. அது உனக்குள்ளும் உனக்கு வெளியிலும் இருக்கிறது. பறவைகளின் குரல்... இந்த அமைதி... நீயோ இருப்பது எது என்று கேட்கிறாய்.

கடவுளுக்கு ஒருவன் ஒரு நல்ல காரியத்தைப் பண்ணினானாம். அவனுடைய ஒரு கேள்விக்குப் பதில் தருவதாகக் கடவுள் வரம் தந்தாராம். எந்தக் கேள்வி வேண்டுமனாலும் கேட்கலாம். ஆனால் கடவுள் சில விஷயங்களை அனுபவிக்கத்தான் முடியும். சொல்லத் தெரிந்து கொள்ள முடியாது என்று எச்சரிக்கை செய்திருந் தார். நிறையவே யோசனை செய்துவிட்டு அவன் மிக முக்கியமாகத் தனக்குத் தெரிந்த கேள்வியைக் கேட்டான். மறுபடியும் கடவுள் அனுபவத்துக்கும் விளக்கத்துக்கும் இடையேயான வித்தியாசத்தைச் சொல்லி எச்சரித்தார்.

அவன் அதற்கு மேலும் அடக்க முடியாமல், ''மரணத்துக்குப் பின் என்ன நடக்கிறது?'' என்று கேட்டு விட்டான். அவன் நின்றிருந்த இடத்திலேயே வைத்துக் கடவுள் அவனைக் குத்திச் சாக வைத்தாராம்.

கடவுள் வேறு என்ன செய்திருக்க முடியும்? மரணத்துக்குப் பின் என்ன என்று தெரிந்துகொள்ள மரணிக்கத்தானே வேண்டும்? அதனால்தான் உடனடியாக



அவன் நின்றிருந்த இடத்திலேயே வைத்து அவனைக் குத்தி மரணமடைய வைத்தார் கடவுள்.

எனவே ஜாக்கிரதையாக இரு. இந்த உலகத்தைச் சார்ந்த விஷயங்களைப் பற்றி விளக்கங்கள் கேட்டுப் பெறலாம். அதற்கு இருக்கவே இருக்கிறார்கள் விஞ்ஞானிகள். அது அவருடைய விவகாரம். அவருக்கு விவரம் தெரிந்துதான் இருக்கும். ஆனால் மெய்ஞ்ஞானிகளிடம் போய் விவரங்கள் கேட்டு விடாதே. அது அவருடைய விவகாரமே இல்லை. அவருடைய விவகாரமே அனுபவிப்பவை பற்றிய தேடுதல் மட்டுமே.

விளக்க முடியாதவை பற்றிக் கேட்காதே. என்னோடு இரு. நான் இருப்பதை அனுபவி. திறந்த நெஞ்சோடு ஏற்றுக் கொள்ளத் தயாராக இரு. ஏதோ ஒன்றை அனுபவிக்கத்தான் நாம் இங்கே இருக்கிறோம். அற்புதங்கள் பற்றிய விளக்கங்கள் எதுவும் எதையும் விளக்குவதில்லை.

அனுபவம் என்ற வார்த்தையின் அடிப்படைப் பொருளே ஒன்றைத் தட்டையாக்கி இல்லாமல் செய்து விடுவது என்பதுதான். கடவுள் என்றால் என்ன? காதல் என்றால் என்ன? பிரார்த்தனை என்றால் என்ன? இருப்பது எது? என்று கேள்விகள் யாராவது கேட்டால் மிகப் பிரமாதமான நம்ப முடியாத ஓர் அனுபவத்தை வெற்று வார்த்தைகள் கொண்டு அழித்துத்தான் விடுவான். எல்லா வார்த்தைகளும் போதாத வார்த்தைகளே!

இருந்து பார். சலனமின்றி இருந்து தெரிந்துகொள். மேலும் மேலும் வார்த்தைகளைத் தெரிந்துகொள்வதற்காக அல்ல. நீ இங்கே வந்திருப்பது அமைதியின் ஆழத்துக்குள் அமிழ்ந்து போகத்தான். என்னுடைய வார்த்தைகளை வார்த்தைகளற்ற அனுபவத்துக்குப் போகத் தரும் குறிப்புகளாக எடுத்துக்கொள்.

## இதுதான்



இருப்பது இதுதான். எதைப் பற்றிக் கேள்வி கேட்கிறாய்? இந்தக் கணத்தை உணர்ந்து கொள். அதன் முழுமையில் அதன் அனைத்துப் பருமானங்களிலும்... அருமையான அழகு உன்னிடம் இறங்கி வரக் காண்பாய். அருமையான கருணை... உன்னைச் சூழ்ந்து கொள்ளும். மௌனமான ஒரு பரவசம் உனக்குள் எழ ஆரம்பித்துவிடும். பிரபஞ்ச இருப்பை குடித்த போதை உன்னைக் கிறங்க வைக்கும்.

குடித்த போதையை அனுபவி. அதுதான் தெரிந்துகொள்ள ஒரே வழி.

மூன்றாவது கேள்வி

**அன்புக்குரிய குருவே,**

**சயண்டாலஜி பற்றி உங்கள் கருத்து என்ன?**

**ஆயிதர!** வெகு பிரமாதம்தான். முட்டாள்தனமானது என்கிறேன். முழுக்க முட்டாள்தனமானது. அதைப் போன்ற முட்டாள்தனமானவை பற்றிக் கவனமாக இருக்க வேண்டும். விஞ்ஞானம் என்றாலே பிரமாதம் என்று நினைத்துக் கொண்டிருப்பதால் அதைப் போன்ற கொள்கைகள் வந்து சேர்ந்திருக்கின்றன. விஞ்ஞானத்தின் பெயரால் எந்தப் பொருளற்றதையும் பேசலாம் என்றாகிப் போய்விட்டது.

சயண்டாலஜி என்பது ஒரு மனோவசியமே தவிர வேறு எதுவும் இல்லை. உன்னை மயக்கி வைக்க முடியும். உண்மையான ஆன்மிகம் என்பது அதற்கு நேர் எதிரானது. அது மனமயக்கங்களை நீக்குவது. ஏற்கெனவே மயங்கிக் கிடக்கிறாய். உனக்கெதற்கு இன்னுமொரு மயக்கும் சயண்டாலஜி? உனக்கு வேண்டியது மயக்க நீக்கம்தான். வழக்கமாகிப் போனதை விட்டு விலகத் தெரிந்து



கொள்வதுதான். எல்லாச் சித்தாந்தங்களில் இருந்தும் வெளியே வரவேண்டியதுதான். சயண்டாலஜி இன்னுமொரு சித்தாந்தம். விஞ்ஞான மொழியில் பேசுகிறது. விஞ்ஞானம் என்றாலே வாய் பிளக்கிறார்கள். விஞ்ஞானம் நவீன மூட நம்பிக்கை.

விஞ்ஞானத்தைக் கொண்டு வந்தால் போதும். இன்றைய மனிதன் எதையும் நம்பிவிடுகிறான். எனவே எதையும் விஞ்ஞானபூர்வமாக நிரூபிக்க வேண்டி இருக்கிறது. கடவுளுக்குக் கூட விஞ்ஞான விளக்கம் தரும் அரை வேக்காடுகள் இருக்கிறார்கள். தியானத்தின் நிலங்களை அளக்க முற்படுகிறவர்கள் இருக்கிறார்கள். தியானத்தை அளக்க முடியுமா என்ன? அளக்க முடிந்ததெல்லாம் மனத்தளவினதே. ஆல்பா அலைகள் என்ற இன்ன பிறவற்றால் எந்தப் பயனும் இல்லை. ஓரளவுக்குத்தான் அவை போக முடியும். தியானமோ எங்கே மனம் முடிகிறதோ அங்கே ஆரம்பமாவது.

மனம் அளத்தலுக்குட்பட்டது. ஏனென்றால் மனம் ஓர் இயந்திரம். ஆனால் மனமற்ற நிலை அளத்தலுக்கு அப்பாற்பட்டது. அதற்கு எல்லையே இல்லை. எனவே அளத்தல் என்ற பெயரால் நடக்கும் முட்டாள்தனம் எதுவும்... சரிதான் அதையும் நம்ப ஆட்கள் இருக்கிறார்களே!

பளபளக்கும் கருவிகளுக்கு முன்னால் உட்கார்ந்து கொண்டு தலையில் ஒயர்களைச் சொருகிக் கொண்டு கார்டியோகிராமைப் போல, விஞ்ஞானம் போன்ற தோற்றத்தை உருவாக்கி வைக்கிறார்கள். ஆழ்நிலை அமைதியை விளக்கத்துக்குள் கொண்டு வர முயல் கிறார்கள். முடியாது. முடியவே முடியாது. எதையெல்லாம் குறித்து வைக்க முடிகிறதோ அதுவெல்லாம் மனதின்

வரைமுறைகளுக்குள் அடங்கிப் போகின்றவை. எல்லா அலைகளும் மனதளவே ஆனவை.



தியானத்தில் அலைகளில்லை. ஏனெனில் அது நினைவு கடந்த நிலை. தியானத்தைக் குறிப்புகளுக்குள் அடக்க முடியாது. அதற்கு கார்டியோகிராம்கள் இல்லை. அதை அளந்து குறித்துக் கொள்ள எந்தக் கருவியும் இல்லை. அது நழுவிவிடக் கூடியது. தற்குறிப்புடையது. அதை ஒரு பொருளாகக் குறைத்துவிட முடியாது. ஆனால் மேற்கத்திய மனம் எதற்கும் பொருள் வயப்பட்ட விளக்கம் தேடுவதால் விஞ்ஞான முறைகளில் பயிற்சி பெற்றிருப்பதால் அரைவேக்காடுகள் இதைப் பயன்படுத்தி அவர்களைக் கவர்ந்து பிழைப்பு நடத்துகிறார்கள்.

சயண்டாலஜி அப்படிப்பட்ட ஒரு போலி ஆன்மிகம். உண்மையான ஆன்மிகத்துக்கு இதுவெல்லாம் தேவையே இல்லை. சயண்டாலஜி பலருடைய அறிவையும் சிதைத்துக் கொண்டுதான் இருக்கிறது.

இன்றைய மனிதன் ஒரு சிறப்பான சூழலில் இருக்கிறான். பழைய மதங்கள் தம் மதிப்பை இழந்து விட்டன. நம்பகத்தன்மையை இழந்து விட்டன. புதிய மதம் இன்னமும் வந்து சேர்ந்தபாடில்லை. எனவே ஓர் இடைவெளி வந்துவிட்டது.

மதம் இல்லாமல் மனிதன் வாழ முடியாது. அந்த அளவுக்கு ஆன்மிகம் ஒரு அடிப்படைத் தேவையாகி விட்டது. எனவே அசல் இல்லையென்றால் போலி புழக்கத்துக்கு வந்துவிடுகிறது. ஒரு மாற்றாக அமைந்துவிடுகிறது. சயண்டாலஜி அப்படிப்பட்ட போலியான மதம். இதைப் போலப் பலவும்தான் இருக்கின்றன.



உண்மையான ஆன்மிகத்தில் அமைதிதான் இருக்கிறது. நிபந்தனைகள் இல்லை. மனோவசியம் ஏதும் இல்லை. மனதைத் தாண்டிப் போகிறது. சித்தாந்தங்களைத் தாண்டியது. சாத்திரங்களைத் தாண்டியது. அறிவைத் தாண்டியது. அது நேரடியாக உன் அகத்துக்குள் விழுவது. மௌனமாகப் படர்வது. எதைப் பற்றியும் ஒன்றும் தெரிந்து கொள்ளாமல் அறியாத நிலையில் செயல்படுவது. அறிவைக் கழித்துவிட்ட நிலையில் இருந்து இயங்கும்போது உன் செயல்களில் ஓர் அருமை இருக்கத்தான் செய்கிறது. அதுதான் நெறி என்பது - ஏஸ் தம்மோ சனந்தனோ.

நான்காவது கேள்வி

**அன்புக்குரிய குருவே,**

**மனிதர்களின் பிரச்சனைகளைத் தீர்க்க மனோதத்துவம் போதாதா? மதம் கண்டிப்பாகத் தேவைதானா?**

**நீலிமா**, மனோதத்துவப் பகுப்பாய்வு மேம் போக்கானது. பயனுள்ளதுதான். என்றாலும் மேம்போக் கானது. மனதின் விளம்புகளில் அலைகளை அது பகுத்து ஆராய்கிறது. சயண்டாலஜியைவிடச் சிறந்ததுதான். ஏனெனில் அது இருப்பதை ஆய்கிறது.

உன்னிடம் இருக்கும் மனதைப் பற்றியது. அடக்கி வைக்கப்பட்ட மனதின் ஆழமான பகுதிகளில் தேடிப் பார்க்கிறது. உனக்கு உதவியாக இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அது உன்னுடைய பிரச்சனைகள் எல்லாவற்றையும் தீர்த்து விடாது. ஏனெனில் அதன் வீச்சு அளவானது.

எனவே பிராய்டு திருப்திகரமானவராக முடியவில்லை. மனதின் ஒரு பகுதியை மட்டுமே அவரால் தொட



முடிந்தது. ஏட்லர் இன்னொரு பகுதியைத் தொட்டுப் பார்த்தார். அவரும் திருப்திகரமான வராக ஆக முடியவில்லை. யங் பிறிதொரு பகுதியைத் தொட்டுப் பார்த்தார். அவரும் திருப்தி கரமானவராகவில்லை. ஏனென்றால் பகுதிகள் பகுதிகள் தான். பிரச்சனையோ முழுமையைச் சார்ந்தது.

அஸ்ஸாகியோலி இவர்கள் மூவரையும்விட ஆழமாகப் போனார். சைக்கோ அனாலிஸிஸ் என்பதை விட்டுவிட்டுத் தமது முறையை அவர் சைக்கோ சிந்தஸிஸ் என்று அழைத்தார். அது கொஞ்சம் பரவாயில்லை. சிந்தஸிஸ் என்பது பகுப்பாய்வை விடச் சிறந்ததுதான்.

பிராய்டு ஒரு தீவிரவாதி. தான் சொல்வது அனைத்தும் உண்மை தவிர வேறு எதுவும் இல்லை என்கிறார். அதுதான் முழு உண்மையும் ஒரே உண்மையும் என்கிறார். அதற்கு எதிர்ப்புச் சொல்கிறவர்கள் உண்மைக்கு எதிரானவர்கள் என்கிறார். அவர் சொல்வதைத் தவிர்த்த எந்தச் சாத்தியமும் இல்லை என்கிறார். தீவிரவாதிகள் அப்படித்தான் இருப்பார்கள். இதுதான் ஒரே வழி என்பார்கள். தீவிரவாதிகள் வாழ்வின் ரகங்கள் பாற்பட்ட செழிப்பை ஏற்றுக் கொள்வதில்லை.

ஏட்லரும் அப்படித்தான். அவர்கள் எல்லோரும் அடிப்படையில் பிராய்டின் மாணவர்கள். அவருடைய கொள்கைகளை அவர்கள் கைவிட்ட போதும் அவருடைய மாணவர்களாகவே இருந்தார்கள். அவருடைய அடிப்படை யான தீவிரவாதத்தை அவர்கள் கைவிட முடியவில்லை. அவர்கள் மீதான அவருடைய தாக்கத்திலிருந்து அவர்கள் தப்பிக்கவே முடியவில்லை.

யங், பிராய்டின் மாணவர். பிறகு அவரை எதிர்த்தவர். அந்த எதிர்ப்பில் கூட அவர் தனது அடிப்படைக் குணத்தை



விட்டவர் அல்லர். முழுக்கத் தெரிந்தவர் என்று சொல்லிக் கொள்வதில்,

அஸ்ஸாகியோலி எவ்வளவோ பரவா யில்லை. மூவரும் அறிவார்த்தமாகச் சொல்கிறார்கள் என்று சொன்னாலும் அவர்கள் பகுதியைப் பற்றித்தான் பேசுகிறார்கள் என்பதை வலியுறுத்தினர். அவர்கள் சொன்னதை ஒருங்கிணைக்க வேண்டும் என்கிறார். அவர்களுடைய கருத்துகள் எல்லாவற்றையும் ஒன்றாக வைத்துப் பார்க்க வேண்டும் என்கிறார்.

அஸ்ஸாகியோலி அடிப்படையிலேயே ஒரு தவறு செய்கிறார். மனிதனின் உடலை அறுத்துப் பார்த்து உள்ளே என்ன இருக்கிறது என்று பார்க்கலாம். ஆனால் இறந்து போன உடலை அறுத்துப் பார்த்து ஆன்மாவைப் பார்க்க முடியுமா என்ன? கை, கால், கண், தலை, இதயம், சிறுநீரகம் என்று ஆயிரக்கணக்கானவற்றைப் பார்க்கலாம். பெரிய பட்டியலே போடலாம். ஆனால் ஆன்மாவைக் காண முடியாது. எனவே ஆன்மா என்ற ஒன்று இல்லை என்ற முடிவுக்கு வருவாய்.

இதைத்தான் பிராய்டு, ஏட்லர், யங் போன்றவர்கள் செய்தார்கள். பிறகு வந்தவர் அஸ்ஸாகியோலி. இது சரியல்ல என்றார். அறுத்துப் பார்ப்பதில் பயனில்லை. சேர்த்து வைத்துப் பார்க்கப் போகிறேன் என்றார். எனவே அறுத்ததை எல்லாம் சேர்த்து வைத்துத் தைத்துப் பார்க்கிறார். என்றாலும் இறைவனுடையதைத்தானே சேர்த்துத் தைத்திருக்கிறார். அவருக்கும் ஆன்மா கிடைக்க வழியில்லை.

ஆன்மா நீங்கிவிட்ட பின் உடலை ஒன்றுசேர்த்து வைத்துப் பார்த்தால் போன ஆன்மா வரப்போவதில்லை. அஸ்ஸாகியோலி செய்தது பரவாயில்லைதான். முன்னவர்



கள் யானையைக் கண்ட ஐந்து குருடர்களைப் போலப் பகுதி பகுதியாகத் தொட்டுப் பார்த்து விட்டு முடிவுகள் எடுத்தனர். என்றாலும் பிராய்டு, யங், ஏட்லர், அஸ்ஸாகியோலி என்று இவர்கள் எல்லோருமே யானையைப் பார்த்த குருடர்கள்தான்.

அஸ்ஸாகியோலி செய்ததெல்லாம் குருடர்கள் சொன்னதைத் தொகுத்துப் பார்த்ததுதான். அதற்குப் பின் - இதுதான் சரி. நான் சேர்த்து வைத்துவிட்டேன். இதுதான் உண்மை என்கிறார். உண்மையைக் கண்டுபிடிக்க இதுவல்ல வழி. ஐந்து குருடர்கள் சொன்னதை வைத்துக் கொண்டு யானையைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியாது.

உண்மையான யானையைக் காணக் கண்கள் வேண்டும். சைக்கோ அனாலிஸிஸ். சைக்கோ சிந்தஸிஸ் இரண்டுமே குருடுதான். மனிதனின் அடிப்படைப் பிரச்சனைகளுக்கு அவை தீர்வு காண முடியாது. ஏனென்றால் மனதளவில் அவனுடைய பிரச்சனைகள் அனைத்துக்கும் தீர்வு கண்டிருப்பான்.

மனிதன் இதையெல்லாம் தாண்டியவன். ஒரு முழுமையானவன். உடல் , மனம், ஆன்மா என்ற இந்த மூன்றும் இணைந்த அவன் அதிசயமானவன். மூன்றைத் தாண்டிய நான்காவதானவன். இந்த நான்காவதைத்தான் இந்திய மெய்ஞ்ஞானிகள் துரியா என்றழைத்தார்கள். துரியா என்றால் நான்காவது என்று பொருள். அதற்கென்று பெயர் எதையும் அவர்கள் தரவில்லை. ஏனெனில் எந்தப் பெயரையும் அதற்குத் தர முடியாது.

உடல், மனம், ஆன்மா ஆகியவற்றுக்குப் பெயரிடலாம். புலனுக்குத் தட்டுப்படுவது உடல். மனம் புலனுக்கும் அறிவுக்கும் புலப்படுவது. வெளியிருந்து நடவடிக்கைகளையும் உள்ளே எண்ணங்களையும் சிந்தனை



களையும் கற்பனைகளையும் நினைவுகளையும் அடிப்படை உணர்வுகளையும் உணர்ச்சிகளையும் கூடக் கவனித்தலுக்குட்படுத்தலாம். ஆன்மா உய்த்துணர்வதற்கு மட்டிலுமானது. இந்த மூன்றையும் தாண்டி இவற்றை ஒன்றாக வைத்திருக்கும் துரியா என்பது. நான்காவது - பெயருக்குட்படாதது. நான்காவதைக் கடவுள் என்பார்கள். நிர்வாணா என்பார்கள். ஞானம் என்பார்கள்.

மனிதனின் பிரச்சனை சிக்கலானது. அவன் உடம்பு மட்டிலுமே என்றால் சுலபமாக இருக்கும். விஞ்ஞானம் எல்லாப் பிரச்சனைகளுக்கும் தீர்வு கண்டிருக்கும். அவன் மட்டுமே என்றால் மனோதத்துவம் போதுமானதாயிருக்கும். ஆனால் அவன் நான்கு பருமானங்கள் கொண்ட சிக்கலானவன். அந்த நான்காவதைத் தெரிந்து கொண்டாலன்றி, அதனுள் புகுந்து வந்தாலன்றி மனிதனை அவன் முழுமையில் அறிந்து கொள்ள முடியாது. அவனை முழுமையில் தெரிந்து கொள்ளாமல் பிரச்சனையைத் தீர்த்து வைக்க முடியாது.

சைக்கோ அனாலிஸிஸ் தத்துவார்த்தமான தீர்வுகளைத் தரலாம். ஆனால் வாழ்வியல் மாறுதலுக்கு வழி வகுக்காது.

மனோதத்துவ அறிஞர்களுடைய மகாநாடு. கடைசி நாள். ஒருவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அழகான ஒருத்தியைத் தீண்டி சில்மிஷம் செய்து கொண்டிருந்தார். பார்த்த ஒருவர் மிகக் கரிசனமாக ''அவர் தொந்திரவு செய்கிறாரா?'' என்கிறார். அவளோ ''எனக்கென்ன தொந்திரவு? அது அவருடைய பிரச்சனை'' என்றாள்.

சைக்கோ அனாலிஸிஸ், சைக்கியாட்ரி, சைக்காலஜி - இவையெல்லாம் வாழ்க்கைக்கு ஒரு தத்துவார்த்தமான நோக்கைத் தர முடியும். வாழ்வின் பிரச்சனைகளில் இருந்து விலகிப் போகச் செய்ய முடியுமே ஒழிய பிரச்சனைகளைத்



தீர்த்து வைப்பதில்லை. சைக்கியாட்ரிஸ்ட் தன்னுடைய பிரச்சனையையே தீர்த்துக் கொள்ள முடியவில்லை. பிறர் பிரச்சனைக்குத் தீர்வு காண உதவுவது எப்படி?

சிக்மண்ட் பிராய்டு ஒரு புத்தரல்ல. அவருக்குச் சாதாரண மனிதனைவிட அதிகப் பிரச்சனைகள். அவருக்குப் பெரும் மரண பயம் இருந்தது. மரணம் என்ற வார்த்தையை யாராவது சொன்னால் மயக்கம் போட்டு விழும் அளவுக்கு அவ்வளவு பயம். அந்த வார்த்தையே போதும். மயங்கி விழுந்துவிடுவார். மயங்கித் தன் நாற்காலியில் இருந்து கீழே விழுந்து விடுவார்.

பிராய்டு காமத்தை விவாதத்துக்குள் கொண்டு வந்தார். இதில் அவர் செய்த காரியம் மிகப் பெரிய காரியம்தான். தீட்டாகக் கருதப்பட்ட ஒன்றை உடைத்தெறிந்தார். பல நூற்றாண்டுகளாக வெளிப்படையாகப் பேசப்படாததைப் பற்றிப் பேசலாம் என்று உணர வைத்தார். இதற்காக அவருக்கு மரியாதை செய்யத்தான் வேண்டும். ஆனால் மரணம் அவருக்கு விலக்கிவைத்த பொருளாகிவிட்டது. அந்த வார்த்தையைக் காதால் கேட்கக் கூட முடியவில்லை. இதில் ஏதோ ஒரு தொடர்பு இருப்பதாகத் தெரிகிறது.

இது என்னுடைய கணிப்பு. இரண்டு விதமான மனிதர்கள் இருக்கிறார்கள். ஒரு வகையினருக்குக் காமத்தைப் பற்றிப் பேசத் தடை இருக்கிறது. அவர்களுக்கு மரணத்தைக் கண்டு பயம் இல்லை. இன்னொரு வகையினர் காமத்தைப் பற்றி வெளிப்படையாகப் பேசுகிறவர்கள். இவர்களுக்கு மரணத்தைக் கண்டு பயம். மரணம், காமம் இரண்டையும் கண்டு பயப்படாத மானுட சமுதாயத்தை நாம் இன்னும் உருவாக்கவே இலலை.



என்னுடைய சன்னியாசிகள் அதைத்தான் செய்ய வேண்டும்.

இது ஏன் இப்படி?

உதாரணமாக இந்தியாவில் காமத்தைப் பற்றி வெளிப்படையாகப் பேசுவது தவறு. ஆனால் மரணத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். எல்லா மதங்களிலும் அதைப் பற்றிப் பேசுகிறார்கள். மறுபடி மறுபடி மரணத்தைப் பற்றிப் பேசிப் பேசியே அனைவரையும் அதைக் கண்டு பயப்பட வைத்து விட்டார்கள். அந்தப் பயத்தாலேயே மதங்களைத் தேடி மக்கள் வருகிறார்கள். எல்லா இந்தியச் சாத்திரங்களிலும் மரணத்தைப் பற்றிய விவரங்கள் விலாவாரியாக இருக்கின்றன. காமம் அல்ல -இறப்பே மிக அதிகம் பேசப்பட்டுள்ள பொருளாக இருக்கிறது. காமம் வாழ்வின் ஒரு பகுதி. எனவே மரணம் பற்றிப் பேசுகிறவர்கள் காமத்தைப் பற்றிப் பேச முடியாது. இது அல்லது அதுதான்.

பிராய்டின் சேவை மிகப் பெரியது. மனதின் இருண்ட மூலைகளில் இருந்து காமத்தை வரவேற்பறைப் பேச்சுக்குக் கொண்டு வந்தவர். ஆனால் உடனே மரணத்தைப் பற்றிப் பேசுவது நின்று போய்விடுகிறது. அவருக்கே மரணத்தைப் பற்றிப் பேச பயம். மரணமும் காமமும் இரண்டு எதிர்த் துருவங்கள். முழுமையான மனிதன் இரண்டையும் ஒன்றாகப் புரிந்து கொள்ள முடியாது என்றாகிறது.

என் பார்வையில் முழுமையான மனிதன் புனிதமானவன். காமத்தைப் பற்றி விலாவாரியாக அவனால் பேச முடியும். அக்கு அக்காக அலசி ஆராய்ந்து பேச முடியும். அதைப் பற்றித் தியானிக்க முடியும். அப்படியே மரணத்தைப் பற்றியும். ஏனெனில் அவன் காமமோ மரணமோ அல்ல. அவன் காமத்துக்கும் மரணத்துக்கும்



சாட்சி. இப்படிச் சாட்சியாக இருப்பது துரியத்துக்கு அவனைக் கொண்டு போகும். நான்காவதற்குப் போய்ச் சேரும்போது எல்லாப் பிரச்சனைகளும் தீர்ந்து போகும். கரைந்து இல்லாமல் போய்விடும். அதற்கு முன் பிரச்சனைகள் அப்படியே இருக்கும்.

பிரச்சனைகளை ஆராய்வதில் நிபுணத்துவம் பிரச்சனைகளைத் தீர்க்க உதவாது.

ஓர் அழகான பெண் ஒரு சைக்கோ அனலிஸ்ட்டைத் தேடிப் போனாள். அவள் உள்ளே வந்தவுடனே, ''உடைகளைக் கழற்று!'' என்றார்.

''ஆனால் நான்...''

பதில் சொல்ல அவளுக்கு நேரம் கொடுக்காமல், ''உடைகளைக் கழற்றிவிடு என்கிறேனே!'' என்கிறார்.

''ஆனால் டாக்டர், எனக்கு ஒரு பிரச்சனை. நான் வந்தது...''

''அதெல்லாம் அப்புறம். முதலில் உடைகளைக் கழற்று. என் நேரத்தை வீணாக்காதே.''

ஆச்சரியமும் தர்மசங்கடமுமாக அவள் உடைகளைக் கழற்றினாள். அரை மணி நேரத்துக்குப் பின்னர் என்ன நடக்கிறது என்று புரியாமல் நின்றிருந்த அந்தப் பெண்ணிடம், ''என்னுடைய பிரச்சனை தீர்ந்தது. உன்னுடைய பிரச்சனைக்கு வருவோம்'' என்றார்.

தனக்கென்று எந்தப் பிரச்சனையும் இல்லாத புத்தரால்தான் பிறருடைய பிரச்சனைகளைத் தீர்த்து வைக்க முடியும்.

சமயத்தை விட்டுவிட முடியாது. எப்போதைக்கும் தான். சமயம் ஏதோ மேம்போக்கானதும் தற்செயலானதும் அல்ல. அது ஓர் அடிப்படைத் தேவை.



நீலிமா, சைக்கோ அனாலிஸிஸ் மக்களின் பிரச்சனைகளைத் தீர்க்காதா என்று கேட்டாய். தீர்க்காது. பிரச்சனைகளைப் புரிந்து கொள்ள வைக்கும். ஆனால் புரிந்து கொள்வதன் மூலம் ஓரளவுக்கு உன் வாழ்வை ஒரு கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரலாம். இருப்பதைவிட இன்னும் கொஞ்சம் சுவாதீனமாக இருக்க முடியும். ஓரளவுக்கு அமைதியாக இருக்க முடியும். பரபரப்பின்றி இருக்கலாம். அவ்வளவுதான். காய்ச்சல் கொஞ்சம் குறைவாகலாம். ஆனால் எந்தப் பிரச்சனையும் தீரப்போவதில்லை. உதவியாக இருக்கும். ஆறுதல் அளிக்கும்.

ஒருவனுக்கு ஒரே நேரத்தில் மூன்று சிகரெட்டுகள் பிடிக்கவேண்டும். தர்ம சங்கடம்தான். என்ன செய்கிறான் இவன் என்று மற்றவர்கள் பார்க்கும்போது தர்மசங்கடமாக இருக்கும். ஆனால் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. மூன்று. சிகரெட்டுகளை ஒன்றாகப் பிடிக்கவில்லையென்றால் திருப்தி இருப்பதில்லை.

எல்லா வகையான முயற்சியும் செய்து பார்த்து விட்டான். யார் யார் எதை எதையெல்லாம் சொன்னார் களோ அதையெல்லாம் செய்து பார்த்து விட்டான். ஆனால் அவனால் இந்தப் பழக்கத்தை விட முடியவில்லை.

சைக்கோ அனலிஸ்டிடம் போய்ப் பாரேன் என்று ஒருவர் ஆலோசனை சொன்னார்.

ஒரு வருடம். ஏகப்பட்ட செலவு. அதற்குப் பின் ஒரு நண்பர். ''சைக்கோ அனலிஸிஸ் பயனளித்ததா?'' என்று கேட்டார்.

''நிச்சயமாக ...'' என்றான்.



கேட்டவனுக்கு நம்பவே முடியவில்லை. ஏனென்றால் அவன் இன்னமும் மூன்று சிகரெட்டுகளை ஒன்றாகப் புகைத்துக் கொண்டிருந்தான்.

''நான் இப்போதெல்லாம் வெட்கப்படுவதில்லை. என்னுடைய சைக்கோ அனலிஸ்டு இது சாதாரணமான விஷயம் என்பதைப் புரிய வைத்து விட்டார். இதிலென்ன தவறு? பலரும் ஒரே ஒரு சிகரெட் புகைக்கிறார்கள். சிலர் இரண்டு புகைக்கிறார்கள். நான் கூட ஒன்று புகைக்கிறேன். அவ்வளவுதானே! எண்ணிக்கையில்தான் வித்தியாசம். மற்றபடி எந்த வித்தியாசமும் இல்லை. ஒரு வருடமாக அவர் இதைச் சொல்லிக் கொண்டே இருக்க எனக்கு இப்போது இதில் எந்த வெட்கமும் இல்லாமல் போய்விட்டது. பார்க்கப் போனால் ஒரே சமயத்தில் மூன்று சிகரெட் புகைப்பவன் நான் ஒருவன்தான். இதில் பெருமைப்பட்டுக் கொள்ளத்தான் வேண்டும்.

சைக்கோ அனலிஸிஸ் உனக்கு நிறைய ஆறுதல்கள் தரும். பகுத்தறிவு வழிப்படுத்தும். சகஜமாக இருக்க வைக்கும். வெட்கத்தை விட்டொழிக்க உதவும். ஆனால் பிரச்சனைக்குத் தீர்வு தருவதில்லை. முடியாது. வாழ்வின் ஒரே தளத்தில் இருக்கும் வரை பிரச்சனை தீராது. அடிப்படையான இதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

பிரச்சனையைத் தீர்க்க வேண்டுமானால் உயர்ந்த ஒரு தளத்துக்குப் போய்ச் சேர வேண்டும். அதே தளத்தில் இருக்கும்வரை தீர்க்க முடியாது. உயரப் போகும்போது அதன் கீழே உள்ள பிரச்சனைகள் தாமாக இல்லாமல் போய்விடுகின்றன. துரியை என்ற நான்காவது நிலையை அடையும் போது எல்லாப் பிரச்சனைகளும் இல்லாமல் கரைந்து மறைந்து போகின்றன. அவை பொருளிழந்து போகின்றன.



தீர்வுகளைக் கண்டு பிடித்து விட்டாய் என்று பொருள் அல்ல. இல்லவே இல்லை. ஆன்மிகத்துக்குப் பிரச்சனைகள் பற்றி எந்த அக்கறையும் இல்லை. எந்தத் தீர்வும் எந்த ஒரு பிரச்சனைக்கும் தீர்வாகாது. ஒரு பிரச்சனையைத் தீர்த்து வைத்தால் இன்னொரு பிரச்சனைக்குக் காரணமாகிப் போகும். இப்படியாகத் தீர்வு இன்னொரு பிரச்சனை யாகத்தான் மாறிப் போகிறது. பிறகு பிரச்சனை தீர்வு என்று ஒரு விஷமச் சங்கிலியில் பிணைப்புண்டவனாகிப் போவாய்.

ஒவ்வொரு நாளும் இதுதான் வாழ்வில் நடக்கிறது. உடல்நலம் இல்லை. மருந்து சாப்பிடுகிறாய். நல்லதுதான். ஆனால் மருந்தில்லாமல் இருக்க முடியவில்லை என்றாகிப் போகிறது. மருந்தை விட்டுவிட்டு வாழ முடிவதில்லை. மருந்துக்குப் பக்க விளைவுகள் உண்டு. அவை உன்னைச் சித்திரவதை செய்கின்றன. அவற்றுக்காக வேறு மருந்துகள் சாப்பிட வேண்டி இருக்கிறது. இப்படியேதான் தொடரும் சங்கிலி... முடிவே இல்லாமல்...

எந்தத் தீர்வும் உண்மையான தீர்வாக முடிவதில்லை. ஆன்மிகம் வேறு மார்க்கத்தைச் சொல்கிறது. தீர்வுகளைத் தருவதை விட்டுவிட்டு நிலை உயர வழி சொல்கிறது. ஆன்மிகம் பிரக்ஞை நிலையுயர்வு. பிரச்சனையிலிருந்து உயரக் கொண்டு போகிறது. மேலிருந்து பிரச்சனையைப் பார்க்கும் போது - மலை மேலிருந்து வயலைப் பார்க்கும் போது - பிரச்சனைகள் ஒன்றுமே இல்லை என்றாகிப் போகிறது. வெய்யிலில் ஜொலிக்கும் மலைஉச்சியில் இருந்து பார்க்கும்போது பள்ளத்தாக்கின் பிரச்சனைகள் பொருளற்றவை என்பது புரிகிறது.

ஐந்தாவது கேள்வி



அன்புக்குரிய குருவே,

நான் இங்கே ஒன்பது மாதங்கள் இருந்து விட்டேன். இப்போதுதான் என் முதல் கேள்வி ஜனிக்கிறது.

இன்று தங்கள் உரையில் காமம் சலிப்புத் தருவது என்று சொன்னீர்கள். எனக்கோ என் திசுக்கள் ஒவ்வொன்றிலும் இசையும் நிறமும் ஒளியும் திரண்டு வெடிக்கும் ஓர் இனிமையாகத்தான் காமம் இருக்கிறது. உடல் எனும் வலையிலிருந்து நழுவிப் போவதாகத் தெரிகிறது. இறைவனின் கரங்களில் கரைவதாகத் தெரிகிறது. காலம் மனம் கடந்து பறப்பதாகத் தெரிகிறது. கடவுளாகவே இருப்பதாகத் தெரிகிறது. வார்த்தைகள் அதை விவரிக்க முடிவதில்லை. அந்த அனுபவம்தான் என்னை உங்களிடம் அனுப்பி வைத்தது. காமத்தில் முட்டாள்தனமா? எனக்குத் தெரியவே தெரியாது. காமம் என் சுவாதீனத்துக்கும் எல்லையற்ற சக்திக்கும் இட்டுச் செல்கிற அருமையான விஷயம். மிக உயர்ந்த பரவசம். சலிப்புக்கு மாற்று.

ஆண்களுக்குப் பெண்களை விடக் காமம் அதிகச் சலிப்பூட்டுவதாகத் தெரியுமோ? அல்லது அதை விட்டுவிட இன்னும் நான் வெகு தூரம் போக வேண்டி இருக்கிறதோ? வேறு என்ன? சொல்லுங்களேன்.

**அபூர்ணா!** உன் அனுபவம் ஏற்றுக் கொள்ளக் கூடியதுதான். ஆனால் அது அப்படிப்பட்ட பரவசம் என்பதாலேயே உணர்வுகளின் ஊட்டம் என்பதாலேயே



அதை எத்தனை முறை திரும்பத் திரும்ப அனுபவிக்கப் போகிறாய்? ஒரு நாள் இல்லாவிட்டால்ஒரு நாள் அது திரும்பத் திரும்ப ஒரே மாதிரியாக இருப்பது தெரிய வரும். அப்போது அதில் இன்பம் இல்லாமல் போய்விடக் காண்பாய். அந்தக் கணம் அது சலிப்பாகத் தோன்றிவிடும்.

உன் அனுபவம் ஏற்றுக் கொள்ளக் கூடியதுதான். ஆனால் எல்லைக்குட்பட்டது. வாழ்வு மிகப் பெரிது. அது காமத்தில் ஆரம்பிக்கிறது. ஆனால் அதிலேயே முடிவடைந்து விடவில்லை. நீ காமத்தை அனுபவித்தது குறித்து எனக்கு மகிழ்ச்சிதான் – எவ்வளவு முடிகிறதோ அந்த அளவு அனுபவி. அதிகமாக அனுபவிக்க அனுபவிக்க அதில் நீ சீக்கிரமே சலிப்படைந்து விடுவாய்.

ஆனால் அதைப் பற்றி எந்த வருத்தமும் பட்டுக் கொள்ள வேண்டியதில்லை. அதில் சலிப்படைந்து விட்ட ஒருவனுடைய கேள்விக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தேன். அந்த இன்பத்தை எல்லாம் கண்டு கொண்டவன் அவன். அந்தப் பொம்மைகளோடு விளையாடிக் களித்தவன். பொம்மைகளுக்குப் பெரிய பெரிய பெயரெல்லாம் தருகிறாய். எல்லாமும் கரடி பொம்மைகள்தான்.

உன் பொம்மைக்கு நீ கடவுள் என்று பெயர் வைத்துக் கொள்ளலாம். அதில் எந்தத் தவறும் இல்லை. ஒரு குழந்தை தன் கரடிப் பொம்மைக்குக் கடவுள் என்று பெயர் வைத்துக் கொண்டு அதைக் கட்டிப் பிடித்துக் கொண்டுதான் தூங்க முடியும் என்றால் அதை அதனிடமிருந்து பிரிப்பது கொடுமை. அழுக்கான பொம்மையாக இருந்தாலும் குழந்தை அதைத் தூக்கிக் கொண்டேதான் திரியும். விடுமுறைக்கு வெளியே



போகும்போது கூட, ''இதென்ன இந்த அழுக்கான நாற்றம் பிடித்த பொம்மை?'' என்று பெற்றோர்கள் சலித்துக் கொள்கிறார்கள். ஆனால் அந்தக் குழந்தை அந்தப் பொம்மை இல்லாமல் வாழ முடியாது. அதுவே அதனுடைய வாழ்க்கையாகிப் போகிறது. ஆனால் ஒரு நாள் அந்தக் குழந்தைக்கும் சலிப்பு வரத்தான் போகிறது. அதை ஒரு மூலையில் விட்டெறிந்து விட்டு மறந்தே போகப் போகிறது.

உன்னுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்வது சிரமம்தான். ஏனென்றால் ஒருவருடைய கேள்விக்குப் பதில் சொல்லும்போது அவனுக்கு என்றே பதில் சொல்கிறேன். நான் தரும் பதில் அவனுக்கு மட்டுமேயானது. அது உன்னுடைய அனுபவமாக இல்லாமல் இருக்கலாம்.

ஒரு நாள் ஓரினச் சேர்க்கை வக்கிரம் என்று சொன்னேன். உடனே கோபமாக எழுதிய சில கடிதங்கள் வந்தன. மிகக் காட்டமான கடிதங்கள்தான். இங்கேயும் ஓரினச் சேர்க்கையில் ஈடுபடுகிறவர்கள் இருக்கிறார்கள்தான். ''என்ன சொல்கிறீர்கள்? நீங்கள் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்வீர்கள் என்பதால்தானே நாங்கள் இங்கே வந்தோம். எதையும் மறுக்க மாட்டீர்கள் . நிந்திக்க மாட்டீர்கள் என்றுதானே வந்தோம்!'' என்றார்கள். நான் நிந்திக்கவே இல்லை. ஆனால் அந்தக் கேள்வியும் பதிலும் ஒருவனுக்கேயானவை. அதைப் பற்றி உனக்கு எந்தக் கவலையும் வேண்டாம். அது உனக்குப் பொருத்தமானதாக இல்லாமல் போகலாம்.

ஓரினச் சேர்க்கைக்காரனுக்கு அது ஆன்மிகம். அவனுக்கு வழக்கமான காமத்தில் நம்பிக்கை இல்லை. அவனுக்கு இவர்கள் வக்கிரம் பிடித்தவர்கள். அல்லது சம்பிரதாயமானவர்கள். காலந்தப்பிப் போனவர்கள்.



இவர்களை எல்லாம் ஒழித்துவிட வேண்டும் என்பார்கள். இது என்ன முட்டாள்தனம் என்பார்கள்.

வழக்கமான காமம் துய்ப்பவர்களுக்கு அவர்கள் வக்கிரம் பிடித்தவர்கள். மிருகங்கள். மிருகங்களை விடத் தாழ்ந்தவர்கள். ஓரினச் சேர்க்கை மனிதர்களில் சிறந்தவர்களின் கண்டுபிடிப்பு என்று சொல்லும் அவர்களுக்கு இவர்கள் வக்கிரம் பிடித்தவர்கள். மிருகங்களிடம் அந்த வழக்கம் இல்லை. குறைந்தது காட்டில் வாழும் மிருகங்கள் அப்படிச் செய்வதில்லை. மிருகக் காட்சி சாலையில் எப்போதாவது இருக்கலாம். அவை மனிதர்களிடம் இருந்து சில பல விஷயங்களைக் கற்றுக் கொள்கின்றனதான்.

எனவே ஓரினச் சேர்க்கை மனிதனுக்கே உரியது. அது ஒரு வகைப்படுத்தும் சாதனமாகிப் போய்விட்டது. அரிஸ்டாட்டில் மனிதனைப் பகுத்தறிவுடையவன் என்று சொல்வதைப் போல ஓரினச் சேர்க்கைக்காரர்கள். மனிதனை ஓரினச் சேர்க்கைக்காரன் என்று விவரணம் தருகிறார்கள். மனிதன் மட்டுமே அந்த உயரத்துக்குப் போகிறான் என்கிறார்கள். சம்பிரதாயமான கலவி மிகச் சாதாரணமானது. மிருகங்கள் கூடத்தான் செய்கின்றன. அதைப் பற்றிப் பெருமைப்பட்டுப் பேசிக் கொள்ள ஒன்றும் இல்லை என்கிறார்கள்.

இரண்டு ஒட்டகங்கள் மெல்ல அருகே வந்தன. பாலைவனத்தில் சவாரி செய்து கொண்டிருந்தவர்கள் பெர்மூடாக்களிலும் தொப்பிகளிலும் பிரமாதமாக இருந்தார்கள். ஒட்டகங்கள் அருகருகே நிற்க அவர்கள் பேசிக் கொள்கிறார்கள். பிரிட்டிஷ் தோரணை ஆங்கிலம்.

''இங்கிலீஷ்?''



''ஆமாம்... ஆமாம்...''

''ஃபாரின் ஆபீஸ்?''

''சினிமா போட்டோகிராபி.''

''ஆக்ஸ்போர்டு?''

''கேம்பிரிட்ஜ்.''

''ஹோமோ செக்ஸ்சுவல்?''

''கண்டிப்பாக இல்லை.''

''அடாடா...''

ஒட்டகங்கள் தத்தமது பாதையில் பிரிந்து நடக்க ஆரம்பித்தன.

நான் பலதரப்பட்டவர்களுக்காகவும் பேச வேண்டியிருக்கிறது. ஒட்டகங்கள் இருக்கின்றன. எனவே அது உன் கேள்வியல்ல எனும்போது பதிலைப் பற்றிக் கவலைப்படாதே. மறந்து விடு. வேறு யாருக்காகவோ சொன்னது. உன்னை விட முதிர்ச்சி அடைந்தவருக்கு.

கடைசிக் கேள்வி

அன்புக்குரிய குருவே

**உங்களுடைய கடைசி வார்த்தைகள் என்னவாக இருக்கப் போகின்றன?**

இந்தக் கேள்வி குர்ட்ஜீஃப் தன் சீடர்களுக்கு வழக்கமாகச் சொல்லும் ஒரு கதையைத்தான் எனக்கு நினைவுபடுத்துகிறது. ஒரு புத்தர் - பிரமாதமான ஒரு குரு. அவரைப் பற்றியது. அவருக்கு வெகு காலமாக ஒரு சீடர். அவருக்கு வலது கரம். குரு மரணப்படுக்கையில் இருந்தார். சீடர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. தங்களுடைய அற்புதமான குரு சாகப்போகிறார் என்பதில் அளவு கடந்த



வருத்தம். அவர் இறக்கக் கூடும் என்பதை அவர்களால் நம்பவே முடியவில்லை.

கடைசியாகப் பலவீனமான குரலில் குரு தன் வலது கரமாக இருந்தவரை அழைப்பது கேட்டது. எல்லோரும் வழிவிட்டு ஒதுங்கி நிற்கிறார்கள். போகும் அவரைக் குறிப்பாகப் பார்க்கிறார்கள். கதவின் குமிழில் கை வைத்துத் திரும்பிப் பார்க்கிறார். கடைசிக் கணத்தில் தம்மைக் கூப்பிட்டார் என்ற பெருமை அவருடைய கண்களில். பிறர் கண்களிலோ கடைசிக் கணத்திலும் இவரைக் கூப்பிடுகிறாரே என்று பொறாமை. வாரிசாக அந்த அறையிலிருந்து வெளிவரப் போகிறோம் என்கிற பெருமிதத்தோடு உள்ளே போகிறார்.

அமைதியாக உள்ளே போய் மெல்ல நடந்து கட்டில் அருகே மண்டியிடுகிறார். பக்கத்தில் வரச் சொல்லித் தலை அசைப்பு. முதியவரின் உதட்டுக்குக் காது கொடுத்துக் கேட்கத் தயாராகிறார். அவர் கிசுகிசுத்தார் ''ஃபக் யூ.''

இன்றைக்கு இது போதும்...





காவல்காரனுக்குத்தான் இரவு எத்தனை
நீண்டது!
களைத்த வழிப்போக்கனுக்குத்தான் சாலை
எத்தனை தூரம்!
வழியைத் தவறவிட்டுவிட்ட
அஞ்ஞானிக்குத்தான்
பல பிறவிகளின் அலைச்சல் எத்தனை காலம்!

வழிப்போக்கனுக்குக் கூட வர
குருவோ நண்பனோ இல்லையாகிப் போனால்
ஒரு அஞ்ஞானியோடு போவதைவிடத்
தனியாகப் போவது மேல்.

''என் மக்கள்! என் செல்வம்!''
என்றுதான் அஞ்ஞானி அலைபாய்கிறான்.
தன்னையே தனக்கென்று கொள்ளாதவனுக்கு
மக்களேது? செல்வமேது?

தான் அஞ்ஞானிதானென்று தெரிந்து கொண்ட
அஞ்ஞானி



அந்த அளவுக்காவது புத்திசாலிதான்.
தன்னைப் புத்திசாலி என்று நினைத்துக்
கொள்ளும் அஞ்ஞானி
உண்மையில் அஞ்ஞானி தான்.

கரண்டிக்குத் தெரியுமா சாம்பாரின் சுவை?
அஞ்ஞானி தன் வாழ்நாள் முழுக்கக்
குருவின் சாந்நித்தியத்தில் இருக்கலாம்.
என்றாலும் நெறியைத் தவற விட்டுவிடுவான்.

நாவுக்குத்தான் சுவை தெரியும்.
குருவின் சாந்நித்தியத்தில் விழித்திருந்தால்
ஏதோ ஒரு கணம் உனக்குப் பாதையைக்
காட்டும்.

அஞ்ஞானி தனக்கே எதிரி.
அவனுடைய சில்மிஷமே அவனுடைய அழிவு.
எவ்வளவு மோசமாகத்தான் துயருறுகிறான்.

வருத்தம் தருவதை ஏன் செய்ய வேண்டும்?
கண்ணீரை ஏன் வருந்தி அழைத்துக்கொள்ள
வேண்டும்?
எதைச் செய்தால் வருத்தம் வாராதோ அதைச்
செய்!
உன்னை மகிழ்வால் நிரப்பிக் கொள்!

**தெரிந்ததற்கும்** தெரியாததற்கும் இடையே ஒரு பாலம்தான் மனிதன். தெரிந்ததில் அடங்கிப் போய்க் கிடப்பது அறிவீனம். தெரியாததைத் தேடிப் போவது ஞானத்தின் ஆரம்பம். தெரியாததோடு ஐக்கியமாகிப் போவது ஞானியாகிப் போவது - புத்தனாகிப் போவது.



மீண்டும் மீண்டும் நினைவில் நிறுத்து. மனிதன் இருப்பவனல்ல. மாறி கொண்டிருப்பவன். அவன் மனிதனாகும் பாதையில் பயணம் போய்க் கொண்டிருக்கிறவன். ஒரு யாத்திரிகன். ஒரு வழிப்போக்கன். இன்னும் தன் வீட்டுக்குப் போய்ச் சேராதவன். தன் வீட்டைத் தேடிக் கொண்டிருக்கிறவன்.

வீட்டில் இருப்பதாக நினைத்துக் கொண்டிருப்பவன் அஞ்ஞானி. ஏனென்றால் அத்தோடு தேடுதல் முடிந்துவிடும். தேடுதலை நிறுத்திய அந்தக் கணமே தேங்கிப் போன குளமாகிப் போகிறாய். உன் சக்திகள் அனைத்தும் தேங்கிப் போக முடைநாற்றம்தான் வீசும். பிறகு நீ இறந்து போனவன். உயிரோடு இருப்பவனல்ல.

வாழ்க்கை ஓடிக் கொண்டே இருப்பது. நதியாக இருப்பது. நதிதான் கடலுக்குப் போய்ச் சேரும். தேங்கிவிட்ட குளமாகிப் போனால் எங்கும் போவதில்லை. அப்போது நீ உண்மையில் உயிரோடு இருப்பவனல்ல. அஞ்ஞானி ஜீவித்திருப்பவனல்ல. அவன் உயிரோடு இருப்பதாகப் பாசாங்குதான் செய்கிறான். அவனக்குத் தெரிதல் இல்லை. தெரிந்தவனாக நடிக்கிறான். அவனுக்குக் காதலில்லை. காதலிப்பதாகப் பசுப்புகிறான். அஞ்ஞானி ஓர் ஏமாற்று.

ஞானி வாழ்கிறார். காதலிக்கிறார். விசாரிக்கிறார். தயாராக, எப்போதும் தயாராக இருக்கிறார். வரைபடத்துக்கு உட்படாத கடலில் போகத்தயாராக இருக்கிறார். ஞானி சாகசக்காரர். அஞ்ஞானி கோழை.

புத்தர் அஞ்ஞானி என்ற வார்த்தையைப் பயன்படுத்தும் போது இந்த அர்த்தங்களையெல்லாம் நினைவில் வைத்திருக்க வேண்டும். சாதரணமான அர்த்தத்தில் அவர் அந்த வார்த்தையைப் பயன்படுத்தவில்லை. அஞ்ஞானி என்பவன் மனத்தளவில் வாழ்கிறவன். மனம் கழிந்த நிலை



பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது. தகவல்கள், அறிவு என்ற இவற்றின் தளத்தில் வாழும் ஞானத்தை ருசி பார்க்காதவன். இரவல் வாழ்க்கை வாழ்கிறவன். பிறரைப் பார்த்து அவ்வாறே தானும் வாழ்கிறவன். தன் இருத்தலில் இருந்து முகிழ்ந்து வரும் எதையும் அறியாதவன்.

புத்தருக்கு அஞ்ஞானி என்பவன் சாத்திரங்கள் சொல்வது அனைத்தும் தெரிந்து கொண்டவன். ஆனால் சத்தியத்தின் ஒரு கணத்தைக் கூடச் சுவைத்திராதவன். பெரிய அறிஞனாக இருக்கலாம். மெத்தப் படித்தவனாக இருக்கலாம். பார்க்கப் போனால் அஞ்ஞானிகள் மெத்தப் படித்தவர்களாகத்தான் இருக்கிறார்கள். தங்களுடைய அஞ்ஞானத்துக்குத் திரையிட்டு வைக்க அவர்கள் அப்படித்தான் இருக்க வேண்டியிருக்கிறது. வார்த்தைகள், கொள்கைகள், தத்துவங்கள் என்ற இவற்றுக்குப் பின்னால் தம்முடைய அகத்து அறியாமையை அவர்கள் மறைத்துக்கொள்ள வேண்டி இருக்கிறது. தமது வெறுமையை மறைத்து வைக்க வேண்டியிருக்கிறது. அப்போதுதான் அவர்களால் தமக்கும் தெரியும் என்று நினைத்துக்கொள்ள முடிகிறது.

அஞ்ஞானிகளைக் காண வேண்டுமா? பல்கலைக் கழகங்களுக்குப் போய்ப் பார். அகாடெமிகளுக்குப் போய்ப் பார். எல்லாம் தெரியும் என்கிற தோரணையோடு ஏதும் அறியாதவர்களாய் இருப்பவர்களைப் பார்க்கலாம். பிறர் என்னென்ன சொல்லியிருக்கிறார்கள் என்று அவர்களுக்குத் தெரியும். ஆனால் அதுவல்ல அறிந்திருப்பதென்பது. குருடன் வெளிச்சத்தைப் பற்றிய அனைத்துத் தகவல்களையும் திரட்டி வைத்திருந்தாலும் குருடனாகவேதான் இருப்பான். ஒளியைப் பற்றிப் பேசலாம். கட்டுரைகள் எழுதலாம். யூகங்கள் செய்யலாம். ஒளியைப் பற்றிச் சித்தாந்தங்கள் கூட வகுக்கலாம். என்றாலும் குருடனாகவே இருந்து ஒளியைப்



பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ளாதவனாகவே இருப்பான். தன்னிடமிருக்கும் தகவல்களைக் கொண்டு அவன் பிறரை மட்டுமல்ல, தன்னையுமேதான் ஏமாற்றிக் கொள்வான். தனக்கு ஒளியைப் பற்றித் தெரியும் என்றும், தான் குருடனல்ல என்றும் நினைத்துக் கொள்வான்.

புத்தர் அஞ்ஞானி என்று சொல்லும்போது அறிவிலி என்ற பொருள் சொல்லிப் போயிருக்கவில்லை. ஏனென்றால் அறியாதவன் தனக்குத் தெரியாது என்று நினைக்கும்போது அவன் அஞ்ஞானியாக இருப்பதில்லை. தனக்குத் தெரியாது என்பதைத் தெரிந்து கொள்வது அவர்களுக்கு முடியாத காரியமாகிப் போகிறது. அப்படி நினைத்துக் கொள்வதென்பது அவர்களுடைய முதலீட்டுக்கே பங்கமாகிப் போகிறது. வாழ்க்கை முழுக்க அறிந்து கொள்வதற்காகச் செலவிட்டபின்னும் சத்தியத்தை அறிந்து கொள்ளாததால் அறிந்து கொண்டது அத்தனையும் அர்த்தமில்லாதது. பயனற்றது என்று ஏற்றுக் கொள்வது மிகச் சிரமம்தான்.

தெரியாதவன் தனக்குத் தெரியாது என்பதைச் சுலபமாக நினைவில் வைத்திருக்க முடியும். அதனால் அவர்கள் இழக்கப் போவது ஏதுமில்லை. ஆனால் படித்தறிந்தவர்கள் தமக்குத் தெரியாது என்பதை ஏற்றுக் கொள்ளவே முடியாது. அப்படி ஏற்றுக் கொள்வதில் அவர்களுக்கு ஏற்படும் இழப்பு மிக அதிகம்தான்.

விஷயஞானம் உள்ளவன் உண்மையாகவே அஞ்ஞானிதான். விஷய ஞானம் இல்லாதவன் அப்பாவி. தனக்குத் தெரியாது என்பது அவனுக்குத் தெரியும். தனக்கு தெரியாது என்பதைத் தெரிந்து வைத்திருப்பதாலேயே அவன் ஞானத்தின் தலைவாசலுக்குப் போய்ச் சேர்ந்துவிடுகிறான். தனக்குத் தெரியாது என்று தெரிந்து வைத்திருப்பதால் அவன்



என்ன? ஏது? என்று கேட்டுக் கொள்ள முடிகிறது. அப்படி அவன் கேட்டுக் கொள்வதில் விருப்பு வெறுப்புகளுக்கு அப்பால் நிற்க முடிகிறது. முடிவுகள் எதையும் கற்பித்துக் கொள்ளாமல் அவனால் தேடுதலில் இறங்க முடிகிறது.

ஓர் இந்துவாகவோ கிறித்துவனாகவோ முகம்மதியனாகவோ இல்லாமல் தேடுதல் மட்டுமே மேற்கொண்டவனாக இருக்க முடிகிறது. ஏற்கெனவே ஆயத்தமாக வைத்துக் கொண்டிருக்கும் முடிவுகளில் இருந்தலன்றி அவனுடைய நெஞ்சிலிருந்து தேடுதல் உதிக்கிறது. அவனுடைய கேள்விகள் அவனுடைய விஷய ஞானத்தின் துணைப் பொருட்கள் அல்ல. அவை வாழ்வியல் பற்றியவை. சாவா வாழ்வா! என்ற அளவுக்கு அந்தக் கேள்விகள் அவனுக்கு முக்கியமான்வை. உண்மையாகவே தெரிந்துகொள்ள வேண்டும் என்பதனால் பிறந்தவை அந்தக் கேள்விகள். தனக்குத் தெரியாது என்பதைத் தெரிந்திருப்பதால் அவன் தேட ஆரம்பித்தவன். அந்தத் தேடுதலுக்கே உரியதாக ஒரு அருமை இருக்கிறது. அவன் ஓர் அஞ்ஞானியல்ல. தெரியாதவன். எதுவும் தெரியாமலேயே தெரிந்தவனாகத் தன்னை நினைத்துக் கொண்டிருப்பவன்தான் உண்மையில் அஞ்ஞானி.

சாக்ரெட்டீஸ் ஏதென்ஸில் இதைத்தான் செய்து கொண்டிருந்தார். அங்கிருந்த படித்த அஞ்ஞானிகள் அவர்களுடைய அறிவு போலியானது என்பதை அறிந்து கொள்ள வைக்க முயன்றார். உண்மையில் அவர்கள் மடையர்கள், பாசாங்குக்காரர்கள், பசப்புக்காரர்கள் என்பதை அறிய வைக்க முயன்றார். ஏதென்ஸில்தான் நிறைய பேராசிரியர்கள், தத்துவவாதிகள், சிந்தனாவாதிகள் இருந்தார்களே! ஏதென்ஸ் அன்றைய உலகில் ஆக்ஸ்போர்டு அல்லது கேம்பிரிட்ஜ். எல்லோருக்கும் ஏதென்ஸ் என்றால்



அவ்வளவு மரியாதை. படித்த மடையர்கள் நிறையத்தான் இருந்தார்கள். சாக்ரெட்டீஸ் அவர்களை எதார்த்தத்தை உணர்ந்து கொள்ள வைத்தார். அவர்களுடைய அறிவை உடைத்தெறிந்தார். ஒரு வகையில் மிக எளிமையாகத் தோன்றிய கேள்விகளைக் கேட்டார். ஆனால் பிறரிடமிருந்து தம் அறிவைப் பெற்றுக் கொண்டு தம்மை அறிஞர்கள் என்று சொல்லிக் கொண்டு திரிந்தவர்களுக்குப் பதில் சொல்லச் சிரமமான கேள்விகள் தான் அவை.

ஏதென்ஸுக்கு சாக்ரெட்டீஸ் மீது சரியான கோபம். அவருக்கு விஷம் வைத்துக் கொன்றார்கள். சாக்ரெட்டீஸ் மாமனிதர்களில் ஒருவர். அவர் செய்த காரியத்தை வெகு சிலரே செய்திருக்கிறார்கள். அவருடைய தர்க்க வாதம் மடையர்களை அவர்கள் மடத்தனம் வெளித்தோன்றக் காண்பித்தது. மடையர்களை மடையர்கள்தான் என்று காட்டிவிடுவது என்றைக்குமே ஆபத்தான செயல். அவன்தான் பழி எடுத்துவிடுவானே! சாக்ரெட்டீஸுக்கு விஷம் கொடுத்தார்கள். யேசுவைச் சிலுவையில் அறைந்தார்கள். புத்தரை நிந்தித்தார்கள்.

புத்தர் இறந்த நாளிலேயே பௌத்தத்தை நாடு கடத்தி விட்டார்கள். அறிஞர்கள், பண்டிதர்கள், பிராம்மணர்கள் ஆகியோர் பௌத்தத்தை இங்கிருக்க விடவில்லை. அவர்களை அது மிக அசௌகரியப்படுத்தியது. பௌத்தம் அடிப்படையில் பிராம்மணர்களை எதிர்த்தது. படித்த மடையர்கள். எனவே அவர்கள் புண்பட்டார்கள். புத்தரை அவர்கள் எதிர் கொள்ள முடியவில்லை. தங்களுடைய நோக்கத்துக்காகத் தந்திரமாகக் காத்திருந்தார்கள். புத்தர் இறந்ததுதான் தாமதம் - அவருடைய சீடர்களை எதிர்த்தார்கள். பகல் கழிந்து விட்டால் ஆந்தைகளுக்கான நேரம் வந்துவிடுகிறதே! படித்த மடையர்கள் நாட்டை ஆள



வந்து சேர்ந்தார்கள். அன்றிலிருந்து இன்று வரை ஆண்டுகொண்டே இருக்கிறார்கள். அதே மடையர்கள் தான் இன்னமும்.

உலகம் மிகவும்தான் துன்பப்பட்டுப் போய்விட்டது. மனிதன் இவ்வுலகக் கீர்த்திக்கு முகுடாக இருந்திருக்க வேண்டியவன். இந்த அஞ்ஞானிகள் இருக்கிறார்களே... பிறருக்குச் செய்யும் அதிகாரம் கொண்ட இவர்கள் இருக்கிறார்களே.... எந்தச் சாத்தியத்தையும் அழிக்கும் அளவுக்குப் பலம் வாய்ந்தவர்களாக இவர்கள் இருக்கிறார்களே... மனிதன் பரிணாம சத்தியத்தைக் கூடச் சிதைக்கும் இவர்கள் அதிகாரம் இருக்கிறதே... மனிதன் ஒரு வட்டத்துக்குள் சுற்றிச் சுற்றி வர நேர்ந்துவிட்டது. இவர்கள் அவர்களை ஞானிகளாக விடமாட்டார்கள். அவர்கள் ஞானிகளாகி விட்டால் இவர்களுக்குப் போக்கிடம் இல்லாமல் போய்விடுமே. இவர்கள் அதிகாரத்தில் இருக்க முடியாதே. சமயம், அரசியல், சமுதாயம், பொருளாதாரம் என்று எல்லாத் தளத்திலும் இவர்களுடைய அதிகாரம் இல்லாமல் போய்விடுமே. மனிதனின் ஞான சாத்தியங்களைச் சிதைக்காவிட்டால்தானே இவர்களுடைய அதிகாரம் செல்லுபடியாகும்?

மறுபடி சாக்ரெட்டீஸின் தர்க்கச் சிந்தனையைத் தூண்டுவதுதான் என்னுடைய காரியம். புத்தர் எழுப்பிய அடிப்படைக் கேள்விகளை மீண்டும் எழுப்புவது.

நமது புதிய கம்யூனில் ஏழு நிலைகளில் மக்கள் இருக்கப் போகிறார்கள். வட்டத்துக்குள் வட்டம் என ஏழு நிலைகளில். முதலாவதாக மேலோட்டமான வட்டம். குழந்தைத்தனமான ஆர்வத்தோடு இங்கே வருகிறவர்கள். அல்லது ஏற்கெனவே சேர்த்து வைத்துக் கொண்ட விருப்பு வெறுப்புகளோடு இங்கே வந்து சேர்ந்திருக்கிறவர்கள்.



மனதின் அடி ஆழத்தில் எதிர்ச்சிந்தனை கொண்டவர்கள். அதுதான் அந்தப் பத்திரிகைக்காரன் போன்றவர்கள்.

அவர்கள் மேலோட்டமாக என்ன நடக்கிறது என்பதைப் பார்க்கத்தான் அனுமதிக்கப்படுவார்கள். இங்கே எதுவும் ரகசியமாக நடக்கவில்லை. ஆனால் அவர்களால் ஓரளவுக்கு மேல் ஆழ்ந்து பார்க்க முடியாது. உடைகளை மட்டுமே பார்க்கிறவர்கள். இங்கேயும் அப்படித்தான். மேலோட்டமாக என்ன தெரிகிறதோ அதை மட்டுமே அவர்களால் பார்க்க முடியும்.

அன்றொரு நாள் ஒரு நிருபர் எழுதியிருந்ததைப் படித்தேன். இங்கே ஐந்து நாள் இருந்துவிட்டுப் போனவன். ஐந்து நாட்கள் இருந்தானாம். ஏதோ ஐந்து நாட்கள் என்பது மிக நீண்ட காலம் என்பதைப் போல எழுதியிருந்தான். ஐந்து நாட்கள் இருந்ததை ஐந்து ஜென்மங்கள் இருந்ததைப் போல எழுதியிருந்தான்.

என்ன நடக்கிறது என்பது தெரியுமாம். எல்லோரும் தியானத்திலிருக்க இவன் பார்த்தானாம். அதெப்படி தியானத்தைப் பார்ப்பது? நீ தியானத்தில் ஆழலாம். அல்லது தியானிக்காமல் விட்டுவிடலாம். தியானத்தை எப்படிக் கவனிப்பது? தியானிக்கிறவர்களுடைய அங்க அசைவுளைப் பார்க்கலாம். ஆனால் தியானத்தைப் பார்க்க முடியாது. தியானத்தில் இருப்பவரின் உடல் அசைவுகளைப் பார்க்க லாமே ஒழிய உள்ளே என்ன நடக்கிறது என்பதை எப்படிப் பார்க்க முடியும்? அதற்கு நீயும் தியானிப்பவனாக ஆக வேண்டும். அந்த அனுபவத்தில் பங்கு கொள்ள வேண்டும்.

அப்படிப் பங்கெடுப்பவனாக இருக்க முதல் நிபந்தனை என்னவென்றால் வேடிக்கை பார்க்கிறவன் என்ற எண்ணத்தை விட்டொழிக்க வேண்டும். அப்படியே இங்கு



நடக்கும் நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டாலும் - தியானிப்பவர்களோடு சேர்ந்து நடனமாடினாலும் - நடப்பதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்ற எண்ணத்தை வைத்துக் கொண்டிருக்கும் வரை எதுவும் நிகழப் போவதில்லை

போகும்போது ஏதோ முட்டாள்தனம் இங்கே அரங்கேறிக் கொண்டிருக்கிறது என்றுதான் சொல்வாய். உனக்குத்தான் எதுவும் நடக்கவில்லையே. இங்கே எதுவும் நடப்பதில்லை என்ற உன் கருத்து மிகச் சரியானது என்று நினைத்துக் கொண்டிருப்பதில் எந்தத் தவறும் இல்லைதான். ஏனென்றால் நிகழ்ச்சிகளில் பங்கெடுத்தும் உனக்கு எதுவும் வித்தியாசமாகத் தெரியவில்லையே!

அவன் தர்ஷன் போது இங்கே இருந்ததாக எழுதியிருக்கிறான். சன்னியாசிகளுக்கு என்னென்னவோ நடந்ததைக் கண்டானாம். என்னோடு இருந்தபின், என் சக்தியை உணர்ந்தபின் சிலருக்கு நடக்கக் கூட முடியாமல் தூக்கிக் கொண்டு போக வேண்டி இருந்ததைப் பார்த்தானாம். என்றாலும், ''ஆனால்,எனக்கு எதுவும் நடக்கவில்லை'' என்று எழுதுகிறான். அது போதும் அவனுக்கு - இங்கே ஒரு விதமான ஹிப்னாடிஸம்தான் நடக்கிறது. அல்லது இங்கே இருக்கிறவர்கள் பாசாங்கு செய்கிறார்கள் என்ற முடிவுக்கு வருவதற்கு. பத்திரிகையாளர்கள் எல்லோரும் வந்திருக்கிறார்களே - அவர்களுக்காக ஏற்பாடு செய்திருந்த ஒரு நாடகம் - அவனுக்குத்தான் எதுவும் நடக்கவில்லையே!

நீ தயாராக இருக்கும் போதுதான் ஒரு சில விஷயங்கள் நடக்க ஆரம்பிக்கும். உன்னை ஒப்புக் கொடுக்கும் போதுதான் உனக்கு ஒரு சில நடக்க வரும். திறந்த மனதோடு விருப்பு வெறுப்புகளைக் கழித்தவனாக இருக்கும் போதுதான் சில மாற்றங்கள் நடக்கும். மனதைக் கழித்த நிலையில்தான் சில விஷயங்கள் சாத்தியமாகும்.



அந்தப் பத்திரிகைக்காரன் மேலும், ''அங்கே போகிறவர்கள் காலணிகளைக் கழட்டி வைக்கும் போது மனதையும் கழட்டி வைத்துவிடுகிறார்கள். எனக்கு அது முடியவில்லை. நானும் எனது மனதைக் கழட்டி வைத்துவிட்டுப் போயிருந்தால் ஏதாவது நடந்திருக்கும்தான்.'' தன் மனதில் ஏதோ மிக மதிப்பு வாய்ந்த ஒன்று இருப்பதாக அவனுக்கு நினைப்புத்தான். எப்படி அதைக் கழட்டி வைப்பது? தன் மனதைக் கழட்டி வைத்துவிட்டுப் போகாததால் தன்னைப் புத்திசாலி என்று நினைத்துக் கொள்கிறான்.

மனம் ஒரு தடை. பாலம் அல்ல. புதிய கம்யூனில் முதல் வட்டம் இந்தப் பத்திரிகைக்காரர்களைப் போன்றவர் களுக்கு. பாரபட்சம் உடையவர்கள். தமக்குத் தெரியும் என்று தெரிந்து கொண்டவர்கள். சுருங்கச் சொன்னால் அஞ்ஞானிகள்.

இரண்டாவது வட்டம் என்ன ஏது என்று தேடுகிறவர் களுக்காக. எந்தப் பாரபட்சமும் இல்லாதிருப்பவர்கள். இந்து அல்லது முகம்மதியன் அல்லது கிறித்துவன் என்று அடையாளம் கற்பித்துக் கொள்ளாதவர்கள். ஏற்கெனவே செய்து கொண்ட முடிவுகளோடு வருகிறவர்கள் அல்லர். திறந்த மனதோடு வருகிறவர்கள். அவர்கள் மட்டுமே கொஞ்சம் ஆழப்பார்க்க முடியும்.

அற்புதத்தின் ஒரு பகுதி அவர்களுடைய நெஞ்சங் களைத் துடிக்க வைக்கிறது. மனம் என்ற தடையைத் தாண்டிவிடுகிறார்கள். ஏதோ மிக முக்கியமான ஒன்று தமக்குள் நடக்கக் காண்கிறார்கள். என்னவென்று அவர்களால் உடனடியாக உணர்ந்துகொள்ள முடிவதில்லை. என்றாலும் ஏதோ மிக உயர்ந்த ஒன்று தமக்குள் நடப்பதை அவர்கள் புகை மூட்டம் போல உணர்கிறார்கள். அதில்



பங்கெடுத்துக் கொள்ளும் ஆற்றல் அவர்களுக்கு இல்லாமல் போகலாம். அவர்கள் இன்னமும் அறிவின் தளத்தில் இருந்து கொண்டு வாழ்வியல் தோட்டத்துக்கு வராமல் இருக்கலாம். நடப்பதன் ஒரு பகுதியாக இல்லாமல் போய்விடலாம். என்றாலும் சற்றே குழம்பியவர்களாக, சற்றே தெளிவில்லாதவர்களாக ஏதோ தமக்குள் நடப்பதைப் பற்றி உணர்ந்திருப்பார்கள். கண்ணுக்குத் தெரிவதைத் தாண்டி தமக்குள் எதுவோ நிகழ்ந்து கொண்டிருப்பது அவர்களுக்குத் தெரிந்திருக்கும்.

மூன்றாவது வட்டத்தில் இருப்பவர்கள் ஒத்திசை வானவர்களாக இருப்பார்கள். ஆழ்ந்த ஒத்திசைவுள்ள மனதோடு இருப்பார்கள். கம்யூனில் இருப்பவர்களோடு நெருங்கியவர்களாக இருப்பார்கள். நடனமாடிப் பாட்டுப் பாடிப் பங்கெடுக்கத் தயாராக இருப்பார்கள். தேடுதல் இருக்கும்போதுதான். ஆனால் தேடுதலின் போது தேவை என்று உணர்ந்தால் தம்மை மாற்றிக் கொள்ளவும் தயாராக இருப்பார்கள். மனதின் ஆழ்ந்த தளங்களைப் பற்றிச் சற்றே தெளிவு பெற்றவர்களாக இருப்பார்கள்.

நான்காவது வட்டத்தில் இருப்பவர்கள் பிறரோடு தம்மை ஐக்கியப்படுத்திக் கொள்கிறவர்கள். ஒத்திசைவு என்பது பிறரோடு நட்போடிருப்பது. விரோதம் பாராட்டாதது. ஐக்கியம் என்பது நட்போடிருப்பது மட்டுமல்ல. அது ஒருவகை அத்வைத நிலை. இருப்பவரோடு கம்யூனோடு நடப்பவற்றோடு தம்மை ஐக்கியப்படுத்திக் கொள்வது. பார்த்துக் கலந்து கரைந்து ஒன்றாகிப் போவது.

ஐந்தாவது வட்டம் தீட்சை பெற்றவர்களுக்கானது. சன்னியாசிகள். உணர்தலைத் தாண்டித் தம்மை ஒப்புக் கொடுக்கிறவர்கள். எந்தப் பணயமும் வைக்கத் தயாராக இருக்கிறவர்கள். பித்தேயாகிப் போன அன்பில் கரைந் தவர்கள். சன்னியாசிகள். தீட்சை பெற்றவர்கள்.



ஆறாவது வட்டத்தில் வல்லவர்கள் இருப்பார்கள். தமது யாத்திரை ஏறக்குறைய முடிந்துவிட்டது என்ற நிலையில் இருப்பவர்கள். சன்னியாசிகளாக இருக்கும் நிலை தாண்டிச் சித்தர்களாக ஆகிக் கொண்டிருக்கிறவர்கள். யாத்திரையின் முற்றுப் புள்ளிக்கு வெகு அருகில் இருக்கிறவர்கள். முடிவுக்கு அருகில் வெகு அருகில் என்று போய்க் கொண்டிருக் கிறவர்கள். அவர்களுக்கும் வீட்டுக்கும் இடையே சில அடிகள்தான் தொலைவு. ஒரு வகையில் ஏற்கெனவே அங்கே போய்ச் சேர்ந்து விட்டவர்கள்.

ஏழாவது வட்டத்தில் அர்ஹதர்கள் அல்லது போதிசத்துவர்கள் இருப்பார்கள். அர்ஹதர்கள் தம்மளவில் ஞானம் பெற்றவர்கள். ஆனால் பிறர் ஞானம் பெற வேண்டும் என்ற கவலையெல்லாம் அவர்களுக்கு இல்லை. தனிமையில் யாத்திரையை முடித்து முற்ற முடிந்ததில் காணாமல் போய்விடுகிறவர்கள் என்ற பொருளில் பௌத்தம் அர்ஹதர்கள் என்ற வார்த்தையைப் பயன்படுத்துகிறது.

போதிசத்துவர்கள் யாத்திரையை முடித்துக் கொண்டவர் கள். என்றாலும் கருணையைக் கைக் கொண்டவர்கள். இன்னமும் அலைந்து திரிந்து கொண்டிருக்கிறவர்கள் மீது எல்லையற்ற கருணை வைத்திருக்கிறவர்கள். போதிசத்துவர் கருணையுள்ள அர்ஹதர்கள். தமது பிடியை விடாமல் திரும்பிப் பார்த்து இருட்டில் திகைத்து நிற்பவர்களை அழைத்துக் கொண்டிருப்பவர்கள். போதிசத்துவர் உதவியாக இருக்கிறவர். மானுடத்துக்கு ஒரு சேவகன்.

இரண்டு விதமானவர்கள் இருக்கிறார்கள். தனிமையில் மட்டுமே நிம்மதியாக இருக்கிறவர்கள் ஒரு வகை. யாராவது உடனிருந்தால் அசௌகரியமாக உணர்கிறவர்கள். சற்றே சலனப்படுகிறவர்கள். அந்த வகையினர் அர்ஹதர்கள். தன் வீட்டை அடைந்தாயிற்று என்றால் அனைத்தையும் முழுக்கக்



கழித்துப் போட்டுவிட்டவர்கள். அவருக்குத் திரும்பிப் பார்க்க ஏதுமிருப்பதில்லை.

போதிசத்துவர்கள் இரண்டாவது வகையினர். பிறரோடு இருக்கும் போதும் நிம்மதி இழக்காதவர். பார்க்கப் போனால் தனிமையில் இருப்பதைவிடவும் பிறரோடு இருப்பதில் சௌஜன்யத்தை உணர்கிறவர்கள். அன்பு சார்ந்தவர்கள். அர்ஹதர்கள் தியானம் சார்ந்தவர்கள். அர்ஹதர் நெறி பரிசுத்தமான தியான வழிப்பட்டது. போதிசத்துவர்கள் நெறி பரிசுத்தமான அன்பு வயப்பட்டது. பரிசுத்தமான அன்பில் தியானம் இருக்கிறது. பரிசுத்தமான தியானத்தில் அன்பு இருக்கிறது. ஆனால் கலப்படமற்ற தியானத்தில் அன்பு ஒரு மணமாக இருக்கிறது. ஒரு சுவையாக இருக்கிறது. தியானத்தின் நடுமத்துச் சக்தியாக இருப்பதில்லை. பரிசுத்தமான அன்பில் தியானம் மணமாக இருக்கிறது. அதனுடைய நடுமம் தியானம் அல்ல.

இவ்விரண்டு வகையினரும் உலகில் இருக்கிறார்கள். இரண்டாவது வகையினர் போதிசத்துவர்களாகிறார்கள். அவர்கள் அன்பின் நெறிபட்டவர்கள். இப்படியாக ஏழாவது வட்டத்தில் அர்ஹதர்களும் போதிசத்துவர்களும் இருப்பார்கள்.

ஏழாவது படி நிலையில் இருப்பவர்களுக்கு மற்ற ஆறு படி நிலையில் இருப்பவர்களையும் தெரியும். ஆறாவது படி நிலையில் இருப்பவர்களுக்கு அடுத்த ஐந்து படிநிலைகளில் இருப்பவர்களைத் தெரியும். இப்படியாக மேல்நிலையில் இருப்பவர்கள் கீழ்நிலையில் இருப்பவர்களைத் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கும் போது கீழ்நிலையில் இருப்பவர்கள் மேல்நிலையில் இருப்பவர்களைத் தெரிந்து வைத்துக் கொண்டவர்களாக இருப்பதில்லை. முதல் வட்டத்தில் இருப்பவர்கள் வேறு எந்த நிலையில்



இருப்பவர்களையும் புரிந்து கொள்ளாதவர்கள். அவர்களுக்குக் கட்டிடங்கள் கண்ணுக்குத் தெரியும்.

ஓட்டல், நீச்சல் குளம், கடைகள், நெய்தல், அரங்கம், பாத்திரங்கள் செய்கிறவர்கள், தச்சு வேலை செய்கிறவர்கள் இவர்களைக் காண்பார்கள். இருப்பதெல்லாம் கண்களுக்குத் தெரியும். ஆயிரக்கணக்கான சன்னியாசிகளைப் பார்த்துத் தோள்களைக் குலுக்கிக் கொண்டு, ''என்னதான் செய்கிறார்கள் எல்லோரும் இங்கே?'' என்று சொல்லத் தெரியும். இத்தனை பைத்தியங்கள் ஒரே இடத்தில் சேர்ந்திருக்க முடியுமா? என்று குழப்பம் கூடக் கொள்வான். ''எல்லோரும் மயங்கிக் கிடக்கிறார்கள்'' என்பான். விளக்கங்களும் தருவான்தான். கம்யூனைப் பற்றி முழுக்கத் தெரிந்து கொண்டேன் என்ற நினைப்போடு போவான். ஆனால் கண்ணுக்குத் தெரிவதைத் தாண்டி உயர்நிலையில் இருப்பது எதையும் அவன் உணர்ந்தவனாக மாட்டான். கீழே இருப்பவனுக்கு மேலே இருப்பது தெரியாது. வாழ்வின் அடிப்படை நியதிகளில் இதுவும் ஒன்று. ஏஸ் தம்மோ சனந்தனோ. மேலிருப்பவனுக்குக் கீழிருப்பவனைத் தெரியும். ஏனெனில் அவன் கீழே இருந்து மேலே போனவன்.

சூரியனின் கதிர்கள் நிறைந்த மலை முகட்டில் நின்றிருக்கும் போது கீழே இருப்பதெல்லாம் தெளிவாகத் தெரியும். ஆனால் கீழே இருப்பவர்கள் உன்னைக் காணவே முடியாமல் போகலாம். கீழே இருப்பவர்களுக்கென்று காரியங்கள், கவலைகள் இருக்கின்றன. சூழ்ந்திருக்கும் இருட்டே அவர்களை முழுக்கத் தன்பால் இழுத்து வைத்திருக்கிறது.

அஞ்ஞானி ஒருவன் குருவிடம் வந்து சேரலாம். ஆனால் அவனுக்கு எந்த லாபமும் இருக்கப் போவதில்லை. வெளியே தெரிவதைத் தாண்டிப் பார்க்க அவனுக்கு



முடிவதில்லை. அத்தியாவசியமானதை அவன் காண முடிவதில்லை. உட்பாகம் அவனுக்குப் புலப்படுவதில்லை.

அஞ்ஞானிகள் இங்கேயும் வருகிறார்கள். ஆனால் அவர்கள் வார்த்தைகளோடு நின்றுவிடுகிறார்கள். தம் அபிப்பிராயங்களுக்கு ஏற்ப வார்த்தைகளுக்கு வியாக்கியானங் கள் கற்பித்துக் கொண்டு போகிறார்கள். இங்கே என்ன நடக்கிறது என்பது தமக்குத் தெரிந்து விட்டது என்ற முழுத் திருப்தியோடு போய்ச் சேர்கிறார்கள்.

இங்கே வந்து சேராத அஞ்ஞானிகள் நிறையப் பேர் இருக்கிறார்கள். அவர்கள் அந்தத் தேவையை இன்னமும் உணராதவர்கள். மற்ற அஞ்ஞானிகள் மௌனத்தைச் சார்ந்திருப்பவர்கள். அவர்களுக்கு அது போதும். ஒரு அஞ்ஞானி ஆயிரக்கணக்கான அஞ்ஞானிகளை ஒப்புக் கொள்ள வைக்க முடியும். அவர்களுடைய மொழி பொதுவானது. அவர்களுடைய விருப்பு வெறுப்புகள் பொதுவானவை. அவர்கள் உணர்ந்து வைத்திருப்பவை பொதுவானவை. எனவே எந்தப் பிரச்சனையும் இல்லாமல் ஒரு அஞ்ஞானி மற்ற அஞ்ஞானிகளை வழிக்குக் கொண்டு வர முடியும். ஒரு மடையன்தான் பார்த்து விட்டானே. பிறர் நம்பி விடுவார்கள். ஒரு மடையன் செய்தித்தாளில் சொல்கிறான். காலையில் ஆயிரக்கணக்கான மடையர்கள் படித்துப் பார்த்து நம்பி ஏற்றுக் கொள்கிறார்கள்.

**இனி சூத்திரங்கள்**

**காவல்காரனுக்குத்தான் இரவு எத்தனை**
**நீண்டது.**
**களைத்த வழிப்போக்கனுக்குத்தான் சாலை**
**எத்தனை தூரம்!**



### வழியைத் தவறவிட்டுவிட்ட அஞ்ஞானிக்குத்தான் பல பிறவிகளின் அலைச்சல் எத்தனை காலம்.

காவல்காரனுக்கு இரவு மிக நீண்டதுதான். ஏன்? அவனால் சாவகாசமாக இருக்க முடியாது. விழித்துக் கொண்டிருக்க ஏதாவது செய்து கொண்டே இருக்க வேண்டும். அது ஒரு போராட்டம். இரவு தூங்குவதற்கானது. ஓய்வெடுப்பதற்கானது. எனவே இயல்புக்கு மாறாக விழித்திருப்பதென்பது ஒரு போராட்டம்தான். இப்படியே தான் அஞ்ஞானிகளும் இயற்கைக்கு எதிராகப் போராடுகிறவர்கள். நீரை எதிர்த்து நீந்துகிறவர்கள். எனவே அவன் துயரம் நீண்டது. தேவையில்லாத நீண்ட துயரம் விடாமல் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பதால் அது ஆயிரம் மடங்கு அதிகமாகிப் போகிறது.

அஞ்ஞானிகளின் முதல் அடையாளம் அவர்களால் தளர்வாக இயல்பாக இருக்க முடியாது என்பதுதான். எந்நேரமும் அவன் மன இறுக்கத்துக்கு ஆட்பட்டவனாக இருக்கிறான். எதைக் கண்டாலும் அவனுக்குப் பயம்தான். காவல்காரனுக்குத்தான் இரவு எத்தனை நீண்டது... தளர்வாகத் தலைசாய்த்துத் தூங்குகிறவனுக்கு இரவு நீண்டதாக இருப்பதில்லை. இரவு வெகு சீக்கிரம் ஓடிப் போய்விடுகிறது. ஒரு கணம் விழித்திருப்பதைப் போல இருக்கிறது. மறுகணம் தூங்கிப் போய்விடுகிறாய். அடுத்த கணத்தைப் போல இருக்கிறது. விழித்துப் பார்த்தால் விடிந்திருக்கிறது. இரவு அவ்வளவு வேகமாக ஓடிப் போய்விட்டது என்பதை நம்பவே முடிவதில்லை. உண்மையான தூக்கத்தில் இரவைக் கழிப்பவனுக்கு இரவு வெகு குறுகியது. எவ்வளவு ஆழ்ந்து தூங்குகிறானோ



அவ்வளவு வேகமாக இரவு ஓடிப்போய்விடுகிறது. ஓய்வெடுப்பதென்பது பரிபூரணமாக இருந்தால் காலப் பருமானம் மறைந்து விடுகிறது. இதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

காலம் என்பது ஓர் உளவியல் நிகழ்வு. கடிகாரம் காட்டும் காலத்தைப் பற்றி அல்ல நான் பேசுவது. மனதளவில் ஓடுகிறதே அந்தக் காலத்தைப் பற்றிப் பேசுகிறேன். மகிழ்ச்சியாக, ஓய்வாக, நிம்மதியாக இருக்கும்போது நேரம் வெகு வேகமாகப் போய்விடுகிறது. வலி, துயரம், கவலை - நேரம் நகர்வதே இல்லை. முடிவே இல்லாமல் நீள்கிறது.

இறந்து கொண்டிருப்பவன் யாராவது அருகே இரவு முழுக்க உட்கார்ந்திருக்க அனுபவம் இருக்கிறதா? விடியவே விடியாது என்று தோன்றும். இரவு - பிற இரவுகளின் அளவான இரவுதான். அவ்வளவு நீண்டதாகத் தோன்றும். காதலியோடு இருந்து பார் - அதே இரவு எவ்வளவு வேகமாகக் கழிந்து விடுகிறது என்பது தெரியும். நம்பவே முடிவதில்லை - விடிந்து விட்டதே அதற்குள் என்கிறாய். மகிழ்ச்சி, சாவகாசம், ருசிக்கும் அனுபவம். இயல்பாக இருத்தல், போராட்டமின்றி இருத்தல் - இவை காரணம். காதல் என்றாலே சரணடைந்து விடுவதுதானே! காதல் என்றாலே நிம்மதியாக இருப்பதுதானே!

ஐன்ஸ்டீனிடம் அடிக்கடி கேட்ட கேள்வி சார்பியல் கோட்பாடு என்றால் என்ன என்பதுதான். சிக்கலான கோட்பாடு. உயர்கணிதம் தெரிந்தவர்களுக்குக் கூட அதை எளிதில் புரிய வைக்க முடியாது. ஐன்ஸ்டீன் சொன்ன சார்பியல் கோட்பாட்டைப் புரிந்து கொண்டவர்கள் உலகத்திலேயே பன்னிரெண்டு பேர் மட்டுமே என்பார்கள். இதை எப்படிச் சாமானியனுக்குச் சொல்லிப் புரிய வைப்பது?



எனவே, அவர் ஓர் அருமையான விளக்கம் சொல்வது வழக்கம். ''எரியும் அடுப்பின் மேல் உட்கார்ந்து பார். ஒவ்வொரு வினாடியும் ஒரு யுகம் போலத் தோன்றும். அவ்வளவு வெப்பம். அவ்வளவு வலி. காதலியின் கையைப் பிடித்துக் கொண்டு ஆற்றங்கரையில் பௌர்ணமி நிலவில் நின்று பார். பல மணி நேரம் சில விநாடிகளாகக் கழிந்து போகும்.'' இதுதான் சார்பியல் கோட்பாடு என்று அவர் சொல்வார்.

எல்லாமும் உன்னைச் சார்ந்தது. உன் மனநிலையைச் சார்ந்தது. நேரம் என்பதற்கு எந்த விதமான வடிவமும் கிடையாது. முழுக்க அது மனத்தளவினது. எனவே ஆழ்ந்த தியானத்தில் நேரம் மறைந்து போகிறது. இது ஒன்றும் புதிய விஷயம் அல்ல. மெய்ஞ்ஞானிகள் இதைப் பல காலமாக அறிந்து வைத்திருக்கிறார்கள். எல்லா நாட்டின் எல்லாக் காலத்து மெய்ஞ்ஞானிகளும் தியானம் ஆரம்பித்து விட்டாலேயே நேரம் மறைந்து போகிறது என்பதைச் சொல்லிப் போயிருக்கிறார்கள்.

யேசுவிடம் ஒருவர் கேட்டாராம், ''நீங்கள் கடவுளின் ராச்சியத்தைப் பற்றி இவ்வளவு பேசுகிறீர்களே. எங்களுக்கு இதுவரை தெரிந்திராத சிறப்பு அப்படி என்ன அந்தக் கடவுளின் ராச்சியத்தில் இருக்கப் போகிறது? அதற்கு மட்டுமேயான சிறப்பு என்ன?''

என்ன பதில் சொன்னார் தெரியுமா? விநோதமான பதில். ''அங்கே நேரம் என்பது இருக்கவே இருக்காது.''

ஆமாம். கடவுளின் ராச்சியத்தில் நேரம் இருக்காது. நேரம் வலியைச் சார்ந்தது. கவலை, எதிர்பார்ப்பு ஆகியவற்றைச் சார்ந்தது. வலியில்லாமல் போனால் எந்தப் பயங்கரமும் இல்லாமல் போனால், நேரம் மறைந்து விடும். நேரம் மனதளவிலானது. மனம் கழிந்த நிலையில் நேரமும்



கழிந்து விடுகிறது. உனக்குத் தெரிந்ததுதானே! இந்தச் சார்புடைமையை நீயே அனுபவித்திருக்கிறாயே!

விவேக் ஓரிரு நாட்களுக்கு முன் சொல்லிக் கொண்டிருந்தான் - அடிக்கடி சொல்வதுதான் - ஏழு வருடங்கள் இங்கிருந்ததே தெரியவில்லையாம். நேரம் அவ்வளவு வேகமாக ஓடிவிட்டதாம். வந்து ஏழு நாட்கள் கூட ஆகவில்லை என்றுதான் இருக்கிறதாம்.

இத்தனைக்கும் நாம் இந்த உலகத்தில்தான் இருக்கிறோம். இந்த உலகத்தை விட்டு அகன்றுவிடும்போது, நமக்கென்று ஒரு சிறிய உலகத்தைச் சென்று சேர்ந்துவிடும்போது எல்லாப் பாலங்களையும் வெட்டி அகற்றிவிடும்போது காலம் மறைய ஆரம்பித்துவிடும். காலங்கழிந்த நிலையின் ருசியை நீங்கள் அனுபவிக்க வேண்டும். அப்படி அந்த ருசியை ஒரு முறை அனுபவித்த பின் திரும்ப இந்த உலகத்துக்கு வந்தாலும் அந்தச் சுவை உங்களை விட்டு நீங்காது நிலைத்துவிடும். அதை ஒரு முறையாவது ருசித்துவிடவேண்டும் என்பதுதான் முக்கியம். காலங்கழிந்த அதை ஒரு முறையாவது சுவைக்க வேண்டும். சுவைத்தான பின் ஜிவ்வென்று வேறு ஓர் உலகத்துக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறாய்.

இந்த உலகம் காலம் இடத்தாலானது. அப்படித்தானே ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் இதை விவரிக்கிறார். ஸ்பேசியோடைம் என்கிறார். இரண்டு வார்த்தைகளை இணைத்து ஒரு வார்த்தையாக்குகிறார். ஏனென்றால் காலம் நான்காவது பருமானமன்றி வேறு ஏதும் இல்லை என்கிறார். ஆக இந்த உலகம் காலத்தாலும் இடத்தாலும் ஆனது. தியானிக்கும் போது இரண்டையும் கடந்துவிடுகிறாய். இரண்டிலிருந்தும் மறைந்துவிடுகிறாய். அல்லது இரண்டும் உன்னிடத்திலிருந்து மறைந்து போகின்றன.



எங்கே இருக்கிறாய் என்பது தெரிவதில்லை. இருக்கிறாய்தான். முன்னெப்போதையும் விட சத்தியமாக இருக்கிறாய். முழுக்க இருக்கிறாய். ஆனால் உன்னைக் கட்டுப்படுத்தி வைக்க அங்கே இடமோ உன்னை விவரிக்கக் காலமோ இல்லை. அது ஒரு தூய்மையான பிரபஞ்ச இருப்பு. அதை ஒரு முறை சுவைத்துவிட்டால் எல்லா அஞ்ஞானமும் மறைந்து போகிறது.

அஞ்ஞானி காலத்தில் வாழ்கிறான். ஞானி காலத்தை கடந்து வாழ்கிறான்.

அஞ்ஞானி மனத்தால் வாழ்கிறான். ஞானி மனத்தை தாண்டி வாழ்கிறான்.

காவல்காரனுக்குத்தான் இரவு எத்தனை நீண்டது! களைத்த வழிப்போக்கனுக்குத்தான் சாலை எத்தனை தூரம்! மக்களின் முகங்களைத்தான் பாரேன். எவ்வளவு களைத்துப்போய். அசந்துபோய், விரக்தியின் வடிவமாகவே தெரிகிறார்களே! அப்படித் தெரிவது மட்டுமல்ல, அப்படியேதான் இருக்கிறார்கள். அவர்களுடைய ஆன்மாக்கள் களைத்துப் போய்விட்டன. அவர்களுடைய வாழ்வே வெறும் சலிப்பாகிப் போய்விட்டது. ஏதோ இழுத்துக் கொண்டு திரிகிறார்கள். மனதில் மகிழ்வில்லை. நடையில் நடனமில்லை. நெஞ்சில் கீதமில்லை. நன்றியில்லை. மாறாக ஒரே வருத்தமும் புகாரும்தான்.

கரமஸோவ் சகோதர்கள் என்ற டாய்த்தோவ்ஸ்கியின் நாவலில் ஒரு பாத்திரம், '' இறைவனைச் சந்தித்தால் இந்த என் வாழ்வைத் திருப்பிக் கொடுத்துவிடுவேன். இனியும் வாழ வேண்டும் என்று எனக்கு விருப்பமில்லை. வாழ்க்கை வெறும் துயரேதான்!'' டிக்கெட்டைத் திருப்பித் தர வேண்டும் என்கிறான். நன்றி எப்படி இருக்க முடியும்?



கொஞ்சம் நினைத்துப் பார். கடவுளை ஒரு நாள் சந்தித்தால் அவரிடம் என்ன சொல்லப் போகிறாய்? ''ஹாய்!'' என்று சொல்வது கூட சிரமம்தான். அவர் மீது அவ்வளவு கோபம், எரிச்சல். ''இவர்தான் என்னைப் படைத்தவர். இவர்தான் இந்த உலகத்தைப் படைத்தவர்.'' அதனால்தான் கடவுள் எப்போதும் மறைந்து திரிகிறார். இல்லையேல் மக்கள் அவரைக் கொன்று விடுவார்கள். விடப் போவதில்லை. அவர் மறைந்து இருக்க வேண்டியிருக்கிறது. பிழைத்திருக்க அவர் மறைந்திருக்க வேண்டியிருக்கிறது. களைத்த வழிப்போக்கனுக்குத்தான் சாலை எத்தனை தூரம்! வழியைத் தவறவிட்டுவிட்ட அஞ்ஞானிக்குத்தான் பல பிறவிகளின் அலைச்சல் எத்தனை காலம்!

அஞ்ஞானி வழி தவறித்தான் போவான். ஏனென் கிறாயா? தனக்கு வழி தெரியும் என்று நினைத்துக் கொண்டிருப்பதால். ஏற்கெனவே தான் வழியில் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறானே அதனால்தான். தன்னைத் தவிர எல்லோர் சொல்வதும் தவறு என்கிறான். தன்னை எல்லோரும் பின்பற்றினால் இந்த உலகம் பிரமாதமானதாகி விடும் என்று நினைக்கிறான். அவன் ஒரு வெறியன். பைபிள்தான் இருக்கிறதே! குரான்தான் இருக்கிறதே! கீதைதான் இருக்கிறதே! வேறென்ன வேண்டும் என்கிறான். எல்லா மதங்களின் எல்லா அருமையான சாத்திரங்களும் இவனுக்குத் தெரியுமே. வேறென்ன வேண்டும் என்கிறான். தன்னுடைய நெறி தனக்குத் தெரியும் என்கிறான்.

ஆனால் புத்தர் பாதை அல்லது நெறி எனும்போது தம்மாவைக் குறிக்கிறார். ஏஸ் தம்மோ சனந்தனோ. அகங்காரத்திலிருந்து உன்னை மீட்டெடுக்கும் நெறி. மனதிலிருந்து உன்னைப் பிரித்து எடுத்துப் போகும் நெறி. அடையாளங்களில் இருந்து உன்னைக் கொண்டு போகும்



நெறி. ஏதுமற்றவனாகச் செய்யும் நெறி. முழுவதில் உன்னைக் கரைத்துக் கொள்ளும் நெறி.

மதங்களைப் பற்றிப் புத்தர் பேசவில்லை. வழி முறைகளைப் பற்றிப் பேசவில்லை. லாவோட் சூ தாவோ எனும்போது எதைக் குறித்தாரோ அதையே புத்தர் நெறி என்கிறார். தாவோ என்றால் பாதை என்று பொருள். எதற்கான பாதை? உன்னைக் கடந்ததற்கான பாதை. உன் சிறையிலிருந்து, உன்னைச் சுற்றிப் படர்ந்திருக்கும் சுவர்களில் இருந்து திறந்த வெளிக்கு உன்னை இட்டுச் செல்லும் பாதை.

பல பிறவிகளின் அலைச்சல் எத்தனை காலம்! நீண்ட அலைச்சல்தான்... வெகு நீண்ட அலைச்சல். ஒரு நாளைக்கல்ல. ஒரு பிறவிக்கல்ல. பல பிறவிகளுக்கான அலைச்சல். பல கோடிப் பிறவிகளின் அலைச்சல். சலிப்பு தருகிறது என்றால் அதில் ஆச்சரியம் ஏதுமில்லை. அவர்களுடைய கண்களைப் புழுதி மூடியிருக்கிறது என்றால் அதில் ஆச்சரியம் ஏதுமில்லை. பிரதிபலிக்க முடியாதபடி அவர்கள் தங்களுடைய கண்ணாடிகளை இழந்துவிட்டார்கள் என்றால் அது தற்செயலானதல்ல. அவனைத் தவிர வேறு யாரும் இதற்குப் பொறுப்பில்லை எனும்போது அதை மன்னிக்க முடியவில்லை என்றாலும் புரிந்து கொள்ள முடிகிறது. தீர்மானமாக இருக்க முடியுமானால், எண்ணங்களின் எல்லாப் படலங்களையும் உதறித் தள்ளிவிட முடியுமானால் ஏற்கெனவே நீ சரியான நெறியில் கால் பதித்து விட்டாய் என்று பொருள். நிச்சயமானதுதான்.

''நெறி நானே! சத்தியம் நானே! வாயில் நானே!'' என்கிறார் யேசு. யேசுவே பாதை என்கிறார்கள் கிறித்துவர்கள். அது தவறான வியாக்கியானம். அது யேசுவைத் தவறாகக் காட்டுவதாகிவிடும். ''நான் இருக்கிறேன்'' என்று எவன் சொல்கிறானோ அங்கே ஈடேற்றத்துக்கான நெறி வந்து



விடுகிறது. ஜோசப்புக்கும் மேரிக்கும் பிறந்த மகனை யல்ல அவர் நான் என்று குறிப்பிடுவது. நானாகும் உள்ளே உறையும் ஆன்மாவைக் குறிக்கிறார்.

தான் என்ற இந்த இருப்பை ஆழ்ந்த அமைதியான தியானத்தில் கண்டு கொள்ளும் அந்தக் கணமே நெறியாகிப் போகிறாய். கிறித்துவனாக இருக்கிறாய் என்பதல்ல கேள்வியே. கிறித்துவர்கள் உலகம் முழுக்கப் போய்ச் சொல்லித் திரிந்து கொண்டிருப்பதே வேறு. ''கிறித்துவிடம் வந்து சேரவில்லையென்றால் இறைவனைச் சென்று சேர வழி காண முடியாது'' என்கிறார்கள். இதைப் போல முட்டாள்தனம் வேறு எதுவும் கிடையாது. கிறித்துவனாக இல்லாமலேயே புத்தர் கடவுளைக் கண்டிருக்கிறார். முகம்மது கண்டிருக்கிறார். மகாவீரர் கண்டிருக்கிறார். லாவோட் சூ கண்டிருக்கிறார். நான் கண்டிருக்கிறேன். கிறித்துவனாக இல்லாமல்தான். எனவே அவர்கள் சொல்வது முட்டாள்தனமே அன்றி வேறொன்றில்லை.

ஆனால் யேசு உண்மையில் என்ன சொல்ல வந்தாரோ அது சத்தியம்.

அருமையான கதை. கடவுளைச் சந்தித்தபோது மோஸஸ் கேட்டாராம். கதைதான். சரித்திரம் அல்ல. சரித்திரம் மிகச் சாதாரணமானது. டேமர்லேன், செங்கிஸ் கான், அடால்ப் ஹிட்லர், ஜோஸப் ஸ்டாலின், மாவோ இவர்கள்தான் சரித்திரம். வெகு சாதாரணமானவர்கள். அசிங்கத்தைத் தவிர வேறு எதுவும் அங்கே இல்லை. நான் சொல்வது சரித்திரம் அல்ல. கதை. ஓர் உருவகம். பிரமாதமான கவித்துவமும் அழகும் மிக்கது.

மோஸஸ் கடவுளைக் கண்டபோது கேட்டாராம். ''நீங்கள் யாரோ?'' கடவுள் சொன்னாராம். ''நான் எதுவாக இருக்கிறேனோ அதுவே.''



யேசு சொன்னதும் அதுதான் - ''நெறி நானே.''

உன்னுடைய இருப்பை உன்னால் உணர முடியுமானால் உன்னுடைய தானாக இருத்தலை உணர முடியுமானால், நீயும் நெறியைக் கண்டு கொள்வாய். அஞ்ஞானிக்கு அது முடியாது. அதே ஆசையில் உழன்று கொண்டே இருக்கிறான். அதே முட்டாள்தனமான எண்ணங்களில், அதே நினைவுகளில் ஆழ்ந்து கிடக்கிறான். தனக்குத் தெரிந்ததைத் திரும்பத் திரும்பச் செய்து கொண்டே இருக்கிறான். தன் அறிவைத் தாண்டிப் போக எந்த முயற்சியும் செய்வதில்லை. அவனுக்குச் சத்தியம் தெரியாததாகவே இருந்து விடுகிறது.

உன்னுடைய மனதைக் கவனித்துப் பார் - நான் சொல்வது என்னவென்று தெரிந்து கொள்வாய். உன்னுடைய மனது திரும்பத் திரும்பச் செய்ததைச் செய்து கொண்டிருக்கிறது. ''நேற்று அங்கே சாப்பாடு நன்றாக இருந்ததே. இன்றும் அங்கேயே போகலாம்'' என்கிறது. நேற்று அவன் மிகச் சிநேகிதமாக இருந்தானே. இன்று அவனை மறுபடி சந்திக்கலாம். நேற்றைய நாட்களைத் திரும்ப வரச் செய்ய விரும்பும் மனம் இன்றைய நாளை இருக்கவே வரவிடுவதில்லை. நாளை என்பதை இருக்க விடுவதில்லை. நாளைக்குக் கூட நேற்றுச் செய்ததையே திரும்பச் செய்யத்தான் முடிவு செய்து வைத்துக் கொள்கிறான்.

அப்படிக் கடந்த காலத்தில் துயரத்தைத் தவிர வேறு என்னதான் இருக்கிறது. என்றாலும் பழகிப் போய்விட்டதால் மறுபடி அப்படியே இருக்க விரும்புகிறாய்.

அஞ்ஞானி திரும்பத் திரும்பச் செய்ததைச் செய்கிறவன். ஞானியோ ஒவ்வொரு கணத்தையும் புதிதாக வாழ்கிறவர்.

அஞ்ஞானியுடைய மனது செய்ததையே மறுபடி மறுபடி திரும்பச் செய்கிறது. அது ஒரு விஷ வட்டம். வட்டத்தைத்



தாண்டிப் போவதில்லை. ஞானியோ எதையும் திரும்பச் செய்வதில்லை. ஒவ்வொரு கணத்தையும் புதிதாக வாழ்கிறார். ஒவ்வொரு கணமும் புதிதாகப் பிறக்கிறார். கடந்ததில் அவர் இறந்துவிடுகிறார். ஒவ்வொரு கணமும் புதிய பிறவி எடுக்கிறார்.

ஞானியின் வாழ்க்கை முழுக்க புனர்ஜென்மம் எடுத்துக் கொண்டிருக்கும் ஒரு தொடர் நிகழ்வு. ஞானி ஒரு முறை மட்டுமே பிறப்பதில்லை. ஒவ்வொரு கணமும் புதிதாகப் பிறந்து கொண்டே இருக்கிறார். ஆனால் அஞ்ஞானியோ ஒரே ஒருமுறைதான் பிறக்கிறான். பிறகு திரும்பத் திரும்பச் செய்ததைச் செய்து கொண்டிருக்கிறான்.

செய்ததைத் திருப்பித் திருப்பிச் செய்து கொண்டிருந்தால் நெறியைத் தவற விட்டுவிடுவாய். ஏனென்றால் உன் ஆன்மா நித்தியத்துக்குப் புத்தம் புதியது. நித்திய இளமை கொண்டது. என்றைக்கும் அது மூப்படைவதில்லை. மனம் மூப்படைகிறது. உடல் மூப்படைகிறது. ஆனால் ஆன்மாவுக்கு காலம் பற்றி ஏதும் தெரியாது. எனவே எப்படி அது மூப்படைவது. நித்திய இளமைதானே. விடியற்காலைப் பனித்துளி போலப் புத்தம் புதியது. குளத்து நீரில் மிதக்கும் தாமரை இலையைப் போலப் புதியது.

**வழிப்போக்கனுக்குக் கூட வர**
**குருவோ நண்பனோ இல்லையாகிப் போனால்**
**ஒரு அஞ்ஞானியோடு போவதைவிடத்**
**தனியாகப் போவது மேல்.**

குருவை நாடுவதே மிகச் சிறந்தது. குருவே மிகச் சிறந்த நண்பர். எனவேதான் புத்தர் குருவோ நண்பனோ என்கிறார்.



வழிப்போக்கனுக்குக் கூட வர குருவோ நண்பனோ இல்லையாகிப் போனால் ஒரு அஞ்ஞானியோடு போவதைவிடத் தனியாகப் போவது மேல். அஞ்ஞானிகளைத் தவிர்க்க வேண்டும். அதைத்தான் நீ வழக்கமாகச் செய்யத் தவறிவிடுகிறாய். உன்னைச் சுற்றி மடையர்களைச் சேர்த்து வைத்துக் கொள்கிறாய். அதில் ஒரு ரகசியம் இருக்கிறது. சுற்றி இருப்பவர்கள் மடையர்கள் எனும்போது நீ பெரியவன் என்கிற நினைப்பு வந்துவிடுகிறது. அவரவர் அகங்காரத்துக்குத் தீனி கிடைத்து விடுகிறது. எனவேதான் தம்மைவிடச் சிறந்தவரோடு இருப்பதை அனைவரும் தவிர்க்கின்றனர். தம்மைவிடத் தாழ்ந்தவர்களோடு இருக்கத்தான் விருப்பம். அப்போதுதானே தான் பெரியவன் என்ற திருப்தி வரும்?

குருவோடு இருக்க வேண்டுமானால் தான் பெரியவன் என்ற நினைப்பை விட்டுவிட வேண்டும். அந்தக் குப்பையை எல்லாம் கழித்துப் போட்டுவிட்டு வரவேண்டும். தான் என்பதை அறவே ஒழித்துக் கட்டிவிட்டுச் சரணடைய வர வேண்டும். குருவிடம் கரைந்து போய்விட வேண்டும். அதனால்தான் எல்லோரும் குருவைத் தவிர்க்கிறார்கள்.

எத்தனை பேர் யேசுவிடம் போனார்கள்? வெகு சிலர். விரல்விட்டு எண்ணிவிடலாம். எத்தனை பேர் புத்தரிடம் போனார்கள்? வெகு சிலரே. எப்போதும் இப்படித்தான். ஆனால் ரோட்டரி கிளப்புக்கு மகிழ்ச்சியாகப் போகிறார்கள். மடையர்கள் சூழ்ந்திருக்க இருப்பது சௌகரியமாக இருக்கிறது. எல்லா மடையர்களும் நன்கு உடை உடுத்தியிருக்க ஒவ்வொருவனும் தன்னைப் பெரியவனாக நினைத்துக் கொண்டிருக்கிறான். ஒவ்வொரு மடையனும் தன்னைப் பற்றியே பெருமை பேசிக் கொண்டிருக்கிறான்.

ஒவ்வொரு மடையனுக்கும் எல்லா மடையர்களும் ஆதரவாக இருக்கிறார்கள்.



கூட்டத்தில் இருக்கும்போது தான் எவ்வளவு சிறியவன் என்பது தெரிவதில்லை. அதனால் எல்லோருக்கும் கூட்டத்தில் இருக்கத்தான் ஆசை. கூட்டத்தை விட்டுப் போகமாட்டேன் என்கிறார்கள். இந்துக்களின் கூட்டம் ஒன்று. முகம்மதியர்களின் கூட்டம் ஒன்று. கிறித்துவர்களின் கூட்டம் ஒன்று. இப்படிப் பல கூட்டங்கள். யாரும் கூட்டத்தை விட்டுப் போகத் தயாரில்லை.

அப்படியே ஒரு கூட்டத்தைவிட்டுப் போனாலும் உடனே இன்னொரு கூட்டத்தில் போய்ச் சேர்ந்து கொள்கிறார்கள். ஒரு சிறையிலிருந்து தப்பி இன்னொரு சிறைக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறார்கள். தனியாக வாழவே முடிவதில்லை. அஞ்ஞானிகளோடு வாழ்வதை விடத் தனியாக வாழ்வது மேல் என்கிறார் புத்தர்.

ஒரு குருவோ அல்லது நண்பனோ கிடைத்தால் நல்லது. இல்லையென்றால் தனியாக இருப்பதே மேல். தனியாக இருப்பது சிரமம்தான். கூட்டம் உன்னை நிம்மதியாக இருக்க விடாது. யாரையும் தனியாக இருக்கவோ தத்தமது தனித்துவத்தை நிலைநிறுத்தவோ இந்தக் கூட்டங்கள் விடுவதில்லை. கூட்டத்தைச் சார்ந்தே ஒவ்வொருவனும் இருக்க வேண்டும் என்கிறார்கள். ஏகப்பட்ட தொல்லைகள் தருவார்கள். ஆனால் அத்தனை தொல்லைகளும் சவால்களே. அவை உன்னைப் பக்குவப்படுத்துகின்றன. உன் அறிவைத் தீர்க்கமாக்குகின்றன. உன்னை ஞானியாக்குகின்றன.

**''என் மக்கள்! என் செல்வம்!''**
**என்றுதான் அஞ்ஞானி அலைபாய்கிறான்.**
**தன்னையே தனக்கென்று கொள்ளாதவனுக்கு**
**மக்களேது? செல்வமேது?**



தான் தனது என்றே அஞ்ஞானி வாழ்கிறான். என்னுடைய நாடு. என்னுடைய மதம். என்னுடைய இனம். என்னுடைய குடும்பம். என்னுடைய செல்வம். என்னுடைய குழந்தைகள். என்னுடைய பெற்றோர். இப்படி தான் தனது என்பனவற்றைச் சுற்றியே அஞ்ஞானி வாழ்கிறான்.

இத்தனைக்கும் தனியே வந்தவன். தனியாகப் போகப் போகிறவன். யாரும் எதையும் வரும்போது கொண்டு வரவில்லை. யாரும் எதையும் எடுத்துக் கொண்டு போகப் போவதில்லை. தனியாக வெறுங்கையோடு வந்தவர்கள் நாம். தனியாக வெறுங்கையோடு போகப் போகிறவர்கள்.

ஞானியருக்கு இது தெரியும். எனவே எந்த ஞானியும் எதையும் தனதென்பதில்லை. பொருட்களைப் பயன்படுத்து கிறார். ஆனால் எதற்கும் சொந்தம் கொண்டாடுவதில்லை. பயன்படுத்துவது நல்லது. உலகில் இருக்கும் அனைத்தையும் பயன்படுத்திக் கொள். அவையெல்லாம் உனக்கெனவே இருக்கின்றன. இந்த உலகம் இறைவனின் கொடை. பயன்படுத்திக் கொள். ஆனால் சொந்தம் கொண்டாடாதே.

உன்னுடையது என்று எதையாவது எடுத்துக் கொண்டால் அதை உன்னால் பயன்படுத்த முடியாது போய்விடும். அப்படி உன்னுடையது என்று எதைக் கொண்டாலும் அதற்கு நீ அடிமையாகிப் போகிறாய். உரிமை கொண்டாடுவது என்பதே முட்டாள்தனமான காரியம். உன்னையே நீ உனக்கென்று கொள்ளாத போது வேறு எதை உன்னுடையது என்று கொள்வது? உன் மீதே உனக்குப் பிடிப்பில்லை எனும்போது வேறு எதை உன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து என்ன சாதிக்கப் போகிறாய்?



''என் மக்கள்! என் செல்வம்!'' என்றுதான் அஞ்ஞானி அலைபாய்கிறான். இப்படிச் சொல்கிறார் புத்தர். இந்தத் தான் தனது என்பதிலிருந்துதான் எத்தனை கவலைகள் தோன்றுகின்றன என்கிறாய்! முழுக்கப் போலியான சமாச்சாரம். அடிப்படையில் எந்த உள்ளீடும் இல்லாத இந்த உணர்வு தரும் துயரங்கள்தான் எத்தனை! இருட்டில் கயிற்றைப் பார்த்துப் பாம்பு என்று நினைத்துக் கொள்வதைப் போலத்தான். ஓடுகிறாய். கத்துகிறாய். நடுங்குகிறாய். நெஞ்சுவலி கூட வந்துவிடுகிறது. ஆனால் அங்கே பாம்பே இல்லை. கயிறுதான் இருக்கிறது. ஆனால் நெஞ்சுவலி உண்மை - நினைவில் கொள். இல்லாத பாம்பு நிஜமான நெஞ்சுவலியைக் கொண்டு வந்து விடுகிறது.

இவையெல்லாம் பொய்யான பிரச்சனைகள். எதை என்னுடையது என்றாலும் சரியே - நாடு, மதம், குழந்தைகள், செல்வம் எதையானாலும் சரியே- என்னுடையது என்று கொள்ளும் போது கவலை, வருத்தம் ஆகியவற்றுக்கு அச்சாரம் போட்டுவிடுகிறாய். உன்னைச் சுற்றி ஒரு நரகத்தை ஸ்தாபித்துக் கொள்கிறாய்.

புத்தருடைய கேள்வியைப் பார். தன்னையே தனக்கென்று கொள்ளாதவனுக்கு மக்களேது? செல்வமேது? தானே தன்னுடையவன் இல்லையெனும் போது தனக்குக் குழந்தையேது செல்வமேது?

ஒரு முட்டாள் ஆறாவது மாடியில் இருந்து கீழே விழுந்துவிட்டான். சுற்றி ஒரு கூட்டம். நடுவில் கிடக்கிறான். ஒரு போலீஸ்காரன் வந்து என்ன நடந்தது என்று கேட்கிறான். அவன், ''எனக்கே தெரியாது. இங்கே வந்து கிடக்கிறேன்'' என்கிறான்.

எப்படி இங்கே வந்து சேர்ந்திருக்கிறாய் என்பது பற்றி உனக்கு என்ன தெரியும்? எங்கே இருந்து வந்திருக்கிறாய்



என்று தெரியுமா? எங்கே போகப் போகிறாய் என்பது தெரியுமா? நீ யார் என்பது உனக்குத் தெரியுமா? அடிப்படையான சில கேள்விகள் மறைபொருளாக இருக்கின்றன. என்றாலும் இது என் வீடு. என்றெல்லாம் சொல்லிக் கொண்டு திரிகிறாய்.

புத்தர் ஞானோதயம் பெற்ற பின் தன் ஊருக்கு வருகிறார். அவருடைய தந்தைக்கு அடக்க முடியாத கோபம். ஒரே மகன் - விட்டுவிட்டுப் போய்விட்டானே! அவருக்கும் வயதாகிவிட்டது. பெரிய ராச்சியத்தைக் கட்டிக் காத்தாயிற்று. ஏகப்பட்ட கவலை. ''யாருக்கு இது? யார் இதை ஆளப் போகிறார்கள்? என் மகன், மடையன், தப்பித்துக் கொண்டான்.'' புத்தரைத் தம் பழைய வாழ்க்கைக்குத் திரும்பி வர வைக்க ஏகப்பட்ட முயற்சிகள் செய்தார்கள். ஒன்றும் பலிக்கவில்லை. ஞானம் பெற்றபின் தானாகத் திரும்பி வந்தார். தந்தையும் தனயனும் சந்தித்துக் கொண்ட அந்த நிகழ்ச்சி மனித வரலாற்றில் மிகச் சிறந்த நிகழ்ச்சியாகும்.

புத்தருடைய வயதான தந்தைக்குக் கோபத்தால் கண்ணில் நீர் வழிகிறது. கத்துகிறார். கதறுகிறார். திட்டித் தீர்க்கிறார். புத்தர் அசையாமல் நிற்கிறார். அமைதியாக நிற்கிறார். தன்னைச் சுற்றி எதுவுமே நடக்கவில்லை என்கிறவரைப் போல நிற்கிறார். ஓர் அரை மணி நேரம் அல்லது ஒரு மணி நேரம் இருக்கலாம். தந்தை - வயதானவர் - களைத்துப் போனார். அப்போதுதான் மகன் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை என்பது அவருக்கு உறைக்கிறது. ''இவனென்ன இப்படி நிற்கிறான். செவிடனாகி விட்டானா? பைத்தியம் பிடித்து விட்டதோ? ஏன் பதிலே சொல்லாமல் நிற்கிறாய்?'' என்கிறார். புத்தர், ''உங்களை விட்டுப் போனவன் இப்போது இல்லாமல் போய்விட்டான். நீங்கள் என்னோடு பேசவில்லை. உங்களுடைய மகனோடு



பேசிக் கொண்டிருக்கிறீர்கள். அவனோ இல்லாமல் போய்விட்டவன். அவன் போனதற்குப் பின் வெகுவாகத்தான் நீர் கங்கையில் வழிந்து போய்விட்டது. பன்னிரெண்டு வருடங்கள் ஓடிப் போய்விட்டன. நான் அவனல்ல'' என்கிறார்.

''நான் அதே பிரக்ஞையோடு இருக்கவில்லை. அதே புத்தியோடு இருக்கவில்லை. என்னுடைய எண்ணங்களைக் கழித்து விட்டேன். என்னுடைய விருப்பு வெறுப்புகளைக் கழித்துவிட்டேன். நான் இப்போது ஒரு புத்தம் புதியவன். எனக்கு நான் யார் என்பது தெரியும். அப்போது நான் அஞ்ஞானியாக இருந்தேன். இப்போது எனக்குள் ஒளி வெள்ளம் புகுந்து விட்டது. அதனால்தான் நான் அவனல்ல'' என்றார்.

தந்தைக்குப் பெரும் கோபம். ''என்ன சொல்கிறாய்? என்னுடைய மகனை எனக்குத் தெரியாதா? உன்னை எனக்குத் தெரியாதா? உன்னைப் பெற்றவன். என் உதிரம் உனக்குள் ஓடுகிறது. என்னுடைய ரத்தமும் சதையுமானவன் நீ. எனக்கு உன்னைத் தெரியாது என்கிறாயா? துணிச்சல்தான் உனக்கு'' என்கிறார்.

புத்தர் மறுபடியும், ''மன்னிக்க வேண்டும். என் உடல் உங்களுடைய ஒரு பகுதியாக இருக்கலாம். ஆனால் நானில்லை. நான் என் உடல் அல்ல. என் மனம் அல்ல என்பது எனக்குத் தெரியும். நான் யாரென்பது எனக்கு இப்போது தெரியும். என்னுடைய இருப்புக்கும் உங்களுக்கும் எந்தச் சங்காப்தமும் கிடையாது. என்னுடைய ஜீவனை நீங்கள் பெற்றெடுக்க முடியாது. என் பிறப்புக்கு முன்பே இருந்திருக்கிறவன் நான். என் இறப்புக்குப் பின்னும் இருக்கப் போகிறவன் நான். தயவு செய்து புரிந்து கொள்ளுங்கள். எரிச்சல் படாதீர்கள். உளைச்சல் பட்டுக் கொள்ளாதீர்கள்.



நான் பெற்ற பேரின்பத்தைப் பகிர்ந்து கொள்ளவே வந்திருக்கிறேன்'' என்றார்.

ஆனால் பெற்றோர் தம் மக்களைத் தம்முடையவர் என்று நினைக்கிறார்கள். குழந்தைகளும் தம் பெற்றோரைத் தம்முடையவர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த உலகில் உன் ஜீவிதம் அற்புதத் தனிமையில் இருக்கிறது. இன்பத்தைப் பகிர்ந்து கொள்ளலாம்தான். ஆனால் உரிமை கொண்டாட முடியாது. அஞ்ஞானிக்குத்தான் சொந்தங்கள் உண்டு. ஞானிக்குச் சொந்தமானது ஏதுமில்லை.

**தான் அஞ்ஞானிதானென்று தெரிந்து கொண்ட**
**அஞ்ஞானி**
**அந்த அளவுக்காவது புத்திசாலிதான்.**
**தன்னைப் புத்திசாலி என்று நினைத்துக்**
**கொள்ளும் அஞ்ஞானி**
**உண்மையில் அஞ்ஞானிதான்.**

உன்னைப் பற்றி நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் என்பதைப் பற்றிச் சிந்தித்துப் பார். உன்னுடைய அஞ்ஞானத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள வருவதென்பது வலி தருகிறதுதான். பிறரை அஞ்ஞானிகள் என்று காண்பது சுலபம். ஒவ்வொருவருக்கும் மற்ற ஒவ்வொருவரும் அஞ்ஞானிகள் என்பது தெரியும். ஆனால் தன்னுடைய அஞ்ஞானத்தைத் தெரிந்து கொள்வது ஞானத்தை நோக்கி எடுத்து வைக்கும் மிகப் பெரிய அடியாகும். உன்னுடைய அஞ்ஞானத்தைக் காண்பதென்பது உன் பிரக்ஞையை, உன் இருப்பைத் தெரிந்து கொள்ள ஆரம்பித்துவிட்டாய் என்பதற்கு அடையாளம்.

ஒருவன் பிரான்சுக்குப் போகிறான். முதல் நாள் இரவு அங்கே இங்கே சுற்றுகிறான். பிறகு தன்னை வரவேற்று



உபசரித்தவன் மனைவி, மகள், வீட்டு வேலைக்காரி, சமையல்காரி என்று எல்லோரோடும் இன்பம் துய்க்கிறான். காலையில் வீட்டுக்காரனுக்கு ஒரே சங்கடம்.

''என்ன செய்து என்ன? என்னுடைய விருந்தாளி. நண்பனைப் போல உன்னை வரவேற்று உபசரித்திருக்கிறேன். நீ என்ன செய்கிறாய் பார். என் வீட்டுக்காரி, மகள், வேலைக்காரி என்று எல்லோரையும் கவனிக்கிறாய். எனக்கு மட்டும் ஒன்றும் செய்யமாட்டேன் என்கிறாயே!'' என்றான்.

அஞ்ஞானிக்கு எப்போதும் தன் அகங்காரத்தைப் பற்றியே கவலை. தனக்கு என்று எதுவென்றாலும் ஆனந்தம். அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கத் தயார். துயரத்தைக் கூடப் பிடித்துத் தொங்குவான். ஏனென்றால் அது அவனுடையது என்ற சொந்தம் இருக்கிறதல்லவா! எது கிடைத்தாலும் சேர்த்து வைத்துக் கொள்வான். தனக்குள் இருக்கும் ராச்சியத்தைப் பற்றி எந்த அக்கறையும் இல்லாதவன். தனக்குள் இருக்கும் பொக்கிஷங்கள் பற்றி எதுவும் தெரிந்து கொள்ளாதவன். குப்பைக் கூளங்களைப் பொறுக்கித் திரட்டி வைத்துக் கொள்கிறான். அதைத் தவிர வேறு எதையும் சொந்தமாக்கிக் கொள்ளத் தெரியாதவன்.

உள்ளேயும் வெளியேயும் குப்பையும் கூளமும்தான். அதைத்தான் எல்லோரும் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். உள்ளேயும் வெளியேயும் சேர்ந்துவிட்ட குப்பைக்குள் அமிழ்ந்து போகிறான்.

உன் வாழ்வை எந்த விருப்பு வெறுப்பும் இன்றி நன்கு கவனித்துப் பார். அதைக் கொண்டு என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்று பார். அதிலிருந்து என்ன கிடைக்கிறது என்று பார். உன்னையே முட்டாளாக்கிக் கொண்டு திரியாதே. அதைத்தான் இந்த மனது உன்னைச்



செய்ய வைக்கிறது. அது எப்போதும், ''எவ்வளவு வைத்திருக்கிறாய் என்று பார். வங்கியில் இவ்வளவு பணம் வைத்திருக்கிறாய். இவ்வளவு பேருக்கு உன்னைத் தெரியும். உன்னை மதிக்கிறார்கள். உனக்கு மரியாதை செய்கிறார்கள். பெரிய பதவியில் இருக்கிறாய். அரசியல் செல்வாக்கு இருக்கிறது. இனி என்ன வேண்டும்? வேறு என்ன வேண்டும்? என்னென்னவெல்லாம் பெற முடியுமோ எல்லாமும் பெற்றிருக்கிறாய்'' என்கிறது.

ஆனால் பணமோ, மதிப்போ மரியாதையோ ஒன்றுமில்லை. ஏனென்றால் மரணம் வரத்தான் போகிறது. அப்போது உன்னுடைய செல்வம், அதிகாரம், மதிப்பு, மரியாதை என்ற எல்லா மாளிகைகளும் சீட்டுக் கட்டு மாளிகையைப் போல விழுந்துவிடப் போகின்றன. மரணத்தின் ஓர் அடியில் அத்தனையும் நொறுங்கிப் போகின்றன.

இறப்புக்குப் பின் எடுத்துச் செல்ல ஏதாவது இல்லையென்றால் நீ வெறுங்கையன்தான். ஏதுமில்லாதவன் . மரணமில்லாத ஒன்று. நித்தியமான ஒன்று உன்னிடம் இல்லையென்றால் நீ அஞ்ஞானி. தியானம், அருள், ஞானம் என்ற அசலான நிதியங்களைச் சம்பாதித்துக் கொண்டவரையே புத்தர் ஞானி என்கிறார்.

கரண்டிக்குத் தெரியுமா சாம்பாரின் சுவை? அஞ்ஞானி தன் வாழ்நாள் முழுக்கக் குருவின் சாந்நித்தியத்தில் இருக்கலாம். என்றாலும் நெறியைத் தவற விட்டுவிடுவான்.

கரண்டிக்குச் சுவை தெரியாது. அது ஜடம். அப்படியேதான் அஞ்ஞானியும். உயிரோடிருப்பதைப் போலத் தெரிகிறது. நெஞ்சமோ செத்துக் கிடக்கிறது. நெஞ்சத்தில்



துடிப்பில்லாதவன் இறந்தவன்தானே! புத்தியால் வாழ்கிறவன். புத்தியோ ஜடத்தாலானது.

புத்தியை வைத்துக் கொண்டு வாழ்வின் ஆனந்தத்தைச் சுவைக்க முடியாது. அழகைப் புத்தி கொண்டு பார்க்க முடியுமா? மலரைக் கண்கள் பார்த்திருக்க நெஞ்சம் அதன் அழகைச் சுவைக்காது போகலாம். நிலவைக் கண்கள் பார்த்திருக்க நெஞ்சம் நிலவின் அழகைத் தெரிந்து கொள்ளாமல் போய்விடலாம். சூரியன் மறைவதைப் பார்த்திருக்க அதன் அழகு தெரியாமல் போய்விடலாம். புத்தி அழகு எதையும் தெரிந்து கொள்ளாமலேயே போய்விடலாம்.

புத்திக்குக் காமம் தெரியும். காதல் தெரியாது. புத்தி வாழ்வின் அசுவாரசியமான பகுதிகளைத் தெரிந்து வைத்துக் கொள்ள முடியும். அது ஒரு கணக்குப் போடும் இயந்திரம். அதற்கு கவித்துவம் தெரியாது. கவித்துவத்தில் சத்தியம் இருக்கிறது. இயற்கையின் இசையில் அருள் இருக்கிறது. அதை நெஞ்சம் மட்டுமே உணர முடியும். அனுபவிக்க முடியும்.

எதுவெல்லாம் அர்த்தமற்றதோ அதிலெல்லாம் புத்தி சாமர்த்தியமாக இருக்கிறது. எதுவெல்லாம் முக்கியமானதோ அதை நெஞ்சம்தான் கையாள முடியும். நாமெல்லாம் புத்தியின் தளத்தில் வாழ்கிறவர்கள். நமது பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள், இவையெல்லாம் ஒரே நோக்கம் கொண்டவை. ஒரே குற்றத்தைச் செய்கின்றவை. மக்களை நெஞ்சிலிருந்து புத்திக்குத் திசை திருப்புவதுதான் அவற்றின் குற்றம். அவர்களைக் கணக்குப் போடும் இயந்திரங்களாக்க வேண்டாமா? திறமையான கிளார்க்குகள், டெபுடி கலெக்டர்கள், ஸ்டேஷன் மாஸ்டர்கள்.

இந்தக் கல்வி முறை உன்னை ஒரு காதலனாக்காது. ஒரு கவிஞனாக்காது. ஒரு பாடகனாக்காது. வாழ்வின்



உண்மையான முக்கியத்துவத்தை உணரவே விடாது. கோயிலுக்குள் நுழைய விடாமல் வாசலிலேயே நிறுத்தி வைப்பதுதான் கல்வியின் வேலை.

புத்தி மேம்போக்கானது. நெஞ்சம் அடி ஆழத்தில் இருப்பது. நெஞ்சம் இயங்கவில்லை என்றால் நீ ஒரு கரண்டிதான். ஒரு மரக்கரண்டி. சாம்பாரைச் சுவைக்க முடியாது. அஞ்ஞானி தன் வாழ்நாள் முழுக்கக் குருவின் சாந்நித்தியத்தில் இருக்கலாம் என்றாலும் நெறியைத் தவற விட்டுவிடுவான்.

குருவின் சாந்நித்தியத்தில் இருப்பது மிகப் பெரும் பாக்கியம். ஞானம் பெற்றவர் அருகே இருப்பது ஞானம் பெறுவதற்கான சாத்தியம் மலர இருப்பது. ஞானி இன்னொருவரை ஞானியாக்க முடியும். ஞானம் ஒட்டுவார் ஒட்டி. உன் கனவுகளில் இருந்தும் பயங்கரங்களில் இருந்தும் உன்னைத் தட்டி எழுப்புகிறவர்.

ஆனால் அஞ்ஞானி குருவின் அருகே வாழ்நாள் முழுக்க இருந்தும் நெறியைத் தவறவிட்டுவிடுவான் என்கிறார். எப்படி? குருவிடம் கூட அவன் புத்தியாலான தொடர்பு மட்டுமே வைத்திருக்கிறான். அதனால்தான். அப்படித்தான் அவன் தன் நெறியைத் தவற விட்டுவிடுவது.

இங்கே இருப்பவர்களில் சிலர் கூட இப்படிப் புத்தி வயப்பட்டுத் தம் நெறியைத் தவற விட்டுவிடத்தான் போகிறார்கள். புத்தி வயப்பட்டு வாழும் இடமல்ல இது. புத்தியைக் கழட்டி வைத்து விடு. உண்மையான சன்னியாசி புத்தியைக் கழித்துவிட்டவன். அவன் நெஞ்சத்தால் நிறைந்தவன். அவன் நெஞ்சம் மூலம்தான் நான் உனக்குள் ஊடாடிப் புக முடியும். நெஞ்சத்தின் மூலம்தான் எந்தத் தொடர்பும் சாத்தியம். இல்லையேல் என் வார்த்தைகளைக்



கேட்டுக் கொள்வாய். சேர்த்து வைத்துக் கொள்வாய். கிளிப்பிள்ளை போலத் திருப்பிச் சொல்வாய். அதுவெல்லாம் வியர்த்தம்தான். சுவைக்கவில்லை என்றால், என்னிடம் இருப்பதைக் குடித்துச் சுவைக்கவில்லை என்றால் எல்லாமும் வியர்த்தம்தான்.

நாவுக்குத்தான் சுவை தெரியும். கரண்டிகளாக இருக்காதீர்கள். நாவாக இருங்கள். ஒரு புத்தரோடு இருக்கும் போது கரண்டியாக இருக்காமல் நாவாக இருங்கள். விழித்திருங்கள். தயாராக இருங்கள். உணர்வோடு இருங்கள். நெஞ்சத்தோடு இருங்கள். காதலோடு இருங்கள். நம்பிக்கையோடு இருங்கள்.

**நாவுக்குத்தான் சுவை தெரியும்.**
**குருவின் சாந்நித்தியத்தில் விழித்திருந்தால்**
**ஏதோ ஒரு கணம் உனக்குப் பாதையைக்**
**காட்டும்.**

ஒரு கணம் போதும். வாழ்நாள் முழுக்கக் குருவோடு இருக்க வேண்டும் என்பதில்லை. இதில் நேரத்துக்கு வேலை எதுவும் இல்லை. எவ்வளவு காலம் குருவோடு இருந்திருக்கிறாய் என்ற அளவீடு பாற்பட்டது அல்ல இது. எவ்வளவு தீவிரத்தோடு எவ்வளவு உணர்ச்சிக் களிப்போடு நீ குருவிடம் ஐக்கியமாகி இருந்திருக்கிறாய் என்பதுதான் முக்கியம். நேரத்தின் அளவல்ல - உணர்வின் ஆழமே இங்கே பொருட்டாகிறது. ஒரு கணத்து விழிப்பு. ஒரு கணத்து நெஞ்ச விகசிப்பு, ஒரு கணத்து மௌனம் - அவ்வளவுதான் - சாத்திரங்கள் சொல்லித் தராததெல்லாம் அவரிடமிருந்து உன்னை வந்து அடைந்து விடுகிறது.

**அஞ்ஞானி தனக்கே எதிரி.**
**அவனுடைய சில்மிஷமே அவனுடைய அழிவு.**
**எவ்வளவு மோசமாகத்தான் துயருறுகிறான்!**



அஞ்ஞானியை ஏன் அவனுக்கே எதிரி என்கிறார் புத்தர்? ஏனென்றால் அவன் தானாகவே இயற்கையில் எதுவெல்லாம் முக்கியமோ அதையெல்லாம் புறந்தள்ளிப் போய்க் கொண்டிருக்கிறானே! யாரும் அவனுடைய பாதையை மறித்து நிற்கவில்லை. இருப்பின் கவித்துவம் அனைவருக்கும் கிடைக்க இருக்கிறது. அஞ்ஞானி செவிடனாகக் கிடக்கிறான். காதுகளை மூடி வைத்துக் கொண்டிருக்கிறான். இயற்கை எப்போதும் தெய்விக ஆனந்தத்தைச் சொரிந்து கொண்டே இருக்கிறது. மலர்களைச் சொரிந்து கொண்டே இருக்கிறது. அஞ்ஞானியோ உணர்வில்லாமல் கிடக்கிறான். தப்பித் தவறி ஏதாவது மலரைக் காண நேர்ந்தாலும் ''இது ஒரு கண்கட்டு வித்தை!'' என்று சொல்லிப் போய்விடுகிறான்.

அன்றாடம் நடப்பதுதான் இது. எனக்குப் பலரும் கடிதம் எழுதுகிறார்கள். தியானத்தில் ஏதோ இனம் புரியாத ஒன்று நடக்கிறது என்கிறார்கள். வெகு ஆனந்தமாக இருக்கிறது என்கிறார்கள். உண்மையாக இருக்க முடியாது என்கிறார்கள்.

யாருமே ''எனக்கு ஒரே வருத்தமாக இருக்கிறது. உண்மையாக இருக்க முடியாது'' என்று எழுதுவதில்லை. ஆனால் ஆனந்தம் முகிழும்போது, பரவசம் எழும்போது பயந்து போகிறார்கள். சந்தேகப்படுகிறார்கள். ஏதோ மயக்கம் என்கிறார்கள். காவி உடையில் பலரும் சுற்றி இருக்கிறார்களே அதனால் எழுந்த மனக் கிலேசம் என்கிறார்கள்.

எப்படித் தாம் ஆனந்தமாக இருக்க முடியும்? அவர்களுக்கு நம்பவே முடிவதில்லை. வாழ்நாள் முழுக்கத் துயரத்தையே கண்டவர்கள். அதற்குப் பழகிப் போனவர்கள். துயரமே வாழ்வாகிப் போனவர்கள். இப்போது பரவசமா? இருக்காது. இந்த மலர்கள் உண்மையாக இருக்க முடியாது. எங்கேயோ ஏதோ தவறு நடந்திருக்க வேண்டும் என்கிறார்கள்.



''உண்மையாக இருக்க முடியாது என்கிற அளவுக்கு அருமையாக இருக்கிறது'' என்று சொல்லும் பழமொழிகள் உலகத்தின் எல்லா மொழிகளிலும் இருக்கின்றன. அதெப்படி உண்மை அருமையாக இருக்க முடியாது என்பது? யாருக்குமே அருமையாக இருப்பதன் மேல் நம்பிக்கை இருப்பதில்லை. யாருமே, ''உண்மையாக இருக்க முடியாத அளவுக்கு அவ்வளவு மோசமாக இருக்கிறது'' என்று சொல்வதில்லை. எந்த மொழியிலும் அப்படியான வழக்கம் இல்லை. மோசமானதை ஏற்றுக் கொள்கிறோம். அசிங்கமானதை ஏற்றுக் கொள்கிறோம். சாதாரணமானதை ஏற்றுக் கொள்கிறோம். தெய்விகமானதை நம்புவதில்லை.

அப்படியே தெய்விகமானதை ஏற்றுக் கொண்டாலும் சம்பிரதாயமாக ஏற்றுக் கொள்கிறோம். கோயிலுக்கும் சர்ச்சுக்கும் ஒரு சமுதாயச் சம்பிரதாயமாகப் போகிறோம். உண்மையில் கோயிலையோ கடவுளையோ நம்புவதில்லை. அப்படிப் போவது சௌகரியமாக இருக்கிறது. உரசல் இல்லாமல் வாழ முடிகிறது. கோயிலுக்குப் போவதும் கடவுளை நம்புவதும் உயர்வுப் பொருளாக இருக்கிறது.

கோயிலுக்குப் போனால், கடவுளை நம்பினால் பிறர் உன்னை நல்லவன் என்கிறார்கள். நேர்மையானவன் என்கிறார்கள். ஆன்மிகவாதி என்கிறார்கள். பிறர் உன்னை நேர்மையானவன், நல்லவன், ஆன்மிகவாதி என்று எடுத்துக் கொண்டால் அவர்களை நீ எளிதாக ஏமாற்ற முடிகிறது. அவர்கள்தான் உன் மீது நம்பிக்கை வைத்திருக்கிறார்களே. உன்னை நம்புகிறவர்களை ஏமாற்றுவது மிக எளிது. மக்களை ஏமாற்றுவதற்கு இது ஒரு சமுதாயத் தந்திரம்தான். ஆனால் உன்னளவில் உனக்கு எந்த நம்பிக்கையும் இருப்பதில்லை.

உன்னைவிடப் பிரம்மாண்டமான ஒன்று உனக்குள் வந்து இறங்கும்போது நீ சுருங்கிப் போகிறாய். கண்களை



மூடிக் கொள்கிறாய். தீக்கோழியாகிப் போகிறாய். அதை மறுத்துவிடுகிறாய். அப்படி இருக்க முடியாது என்று சாதித்து விடுகிறாய்.

கடவுள் உன்னிடம் வரவே இல்லை என்பதல்ல. பல முறையும் உன் கதவுகளைத் தட்டியிருக்கிறார். நீதான் கதவுகளைத் திறக்கவே இல்லை. அதை விட்டுவிட்டு அறிவார்த்தமான விளக்கங்களைத் தேடிப் போய்க் கொண்டிருந்திருக்கிறாய். ''காற்றில் கதவு ஆடுகிறது'' என்கிறாய். அல்லது மழை அடிக்கிறது அல்லது பக்கத்து வீட்டுக் குழந்தை படியில் விளையாடுகிறது. இப்படி ஏதோ ஒன்றைச் சொல்லிக் கொண்டு கதவுக்கு அப்பால் இருப்பது யார் என்று பார்ப்பதேயில்லை.

அஞ்ஞானி தனக்கே எதிரி. அவனுடைய சில்மிஷமே அவனுடைய அழிவு. எவ்வளவு மோசமாகத்தான் துயருறுகிறான்!

**வருத்தம் தருவதை ஏன் செய்ய வேண்டும்?**
**கண்ணீரை ஏன் வருந்தி அழைத்துக் கொள்ள வேண்டும்?**

இந்த அக்கறையான அருளில் இருந்துதான் ஒரு கேள்வி பிறக்கிறது. உன்னிடம்தான் கேட்கிறார். வருத்தம் தருவதை ஏன் செய்ய வேண்டும்? கண்ணீரை ஏன் வருந்தி அழைத்துக் கொள்ள வேண்டும்?

**எதைச் செய்தால் வருத்தம் வாராதோ அதைச் செய்!**
**உன்னை மகிழ்வால் நிரப்பிக் கொள்!**

இதுதான் சரியான அளவீடு. நினைவில் நிறுத்து. எதுவெல்லாம் ஆனந்தத்தையும் பரவசத்தையும் கருணையையும் கொண்டு வருகிறதோ அதுதான் சத்தியம்.



ஏனென்றால் பரவசம் இறைவனின் இயல்பு. சத்தியம் பரவசத்துக்கு இன்னொரு வார்த்தை. அசத்தியம் துயரத்தைக் கொண்டு வருகிறது. பொய்யில் வாழ்ந்தால் துயரம்தான் மிஞ்சும். வாழ்வு துயரமாகிப் போனது என்றால் எந்தப் பொய்களின் மீது அந்த வாழ்வை எழுப்பி வைத்திருக்கிறாய் என்பதைப் பார். அந்தப் பொய்களில் இருந்து விடுபடு. நேரம் கடத்தாதே. தள்ளிப் போடாதே. உடனடியாக விலகிப் போய்விடு. அந்த விலகலைத்தான் சன்னியாசம் என்கிறேன்.

உலகத்திலிருந்து விலகிப் போய்விடுவதல்ல. இதுவரை எந்தப் பொய்மைகளில் இருந்து கொண்டிருந்தாயோ அவற்றிலிருந்து விலகிப் போய்விடுவது. உலகைத் துறப்பதல்ல அது. உன் வாழ்வின் ஆதாரமாக இருந்து விட்ட பொய்களைத் துறப்பதுதான்.

அவற்றிலிருந்து விலகிய அந்தக் கணமே அந்தப் பொய்கள் நொறுங்கி விழ ஆரம்பித்து விடுகின்றன. மரணித்து விடுகின்றன. அவை உன்னைச் சார்ந்தவை. உன்னையே தம் போஷாக்காகக் கொண்டவை. உன் ஆதரவின்றி அவை இருக்க முடியாது. உன் கூட்டுறவை விலக்கிக் கொள். எல்லாப் பொய்யும் மரணித்து விடுகின்றன. எல்லாப் பொய்யும் மறைந்தான பின் இருப்பது சத்தியம் மட்டுமே.

சத்தியம் உன் அடி ஆழத்து இயல்பு. வேறு எங்கேயும் தேடிப் போய்ப் பெற்றுக் கொள்வதல்ல சத்தியம். ஏஸ் தம்மோ சனந்தனோ. அதுதான் முடிவான நெறி. வற்றாத நெறி. முடிவான சத்தியம். அது உனக்குள்ளேயே இருக்கிறது. ஒரே ஒரு நிபந்தனையைப் பூர்த்தி செய்தால் அது உனக்குள்ளிருப்பதைக் காணலாம். அவ்வளவு முதலீடுகளைச் செய்து வைத்திருக்கிறாயே அந்தப் பொய்களில் இருந்து



விடுபட்டு விடு. பொய்யானது எல்லாவற்றையும் துறந்துவிடு. துயரம் பொய்மையின் அடையாளம்.

பரவசம் எப்போது ஏற்பட்டாலும் அதை நம்பி அதன் வழியே போய்ப் பார். கடவுளை நோக்கிப் போய்க் கொண்டிருப்பாய். பரவசம் கடவுளின் சுகந்தம். பரவசத்தின் வழியே போகும்போது வழியைத் தவறவே விடமாட்டாய். பரவசத்தைத் தொடர்ந்து போகும்போது இயல்பைத் தொடர்கிறாய். இயல்பாக இருக்கும்போது, பரவசத்தோடு இருக்கும்போது, இறுக்கமற்று இருக்கும்போது ஞானம் முகிழ்கிறது.

ஞானம் என்பது இறுக்கமே இல்லாதிருப்பது. ஞானம் என்பது அறிவால் ஆனதல்ல. தகவல்களின் தொகுப்பல்ல. உன் ஆழ்நிலை விழித்திருப்பது. எச்சரிக்கையோடு இருப்பது. கவனித்திருப்பது. சாட்சியாக இருப்பது. பிரகாசமாக இருப்பது. பிரகாசமாக இரு. அது உன் பிறப்புரிமை. அதைத் தவற விட்டால் நீ அஞ்ஞானி. ஏற்கெனவே பல பிறவிகளில் தவற விட்டுவிட்டாய். இந்தத் தடவை தயவு செய்து உன்னிடமே கொஞ்சம் கருணையோடு இரு.

இன்றைக்கு இது போதும்...



முதல் வினா

அன்புக்குரிய குருவே,

மேல்நாட்டில் சமூக சேவகனாக இருக்கப் பயிற்சி பெற்றிருக்கிறேன். ஒவ்வொருவரும் தம்மை முக்கிய மானவர் என்று கருதி மதித்து நேசிக்க வேண்டும் என்று எனக்குச் சொல்லித் தந்திருக்கிறார்கள். அவ்வாறு அவரவருடைய தான் என்று உணர்வை வலுப்படுத்த வேண்டும் என்று சொல்லித் தந்திருக்கிறார்கள். நீங்களோ தான் என்பதைக் கொன்று விட வேண்டும் என்கிறீர்கள். எனக்குக் குழப்பமாக இருக்கிறது.

**பிரேம் ஆரரதனர,** உண்மையாகத் தான் யாரெனத் தெரியாதவனுக்குத் தான் எனும் அகங்காரம் தேவைப் படுகிறது. அது ஒரு மாற்று ஆகிறது. பொய்யான வடிவம். உன்னை உனக்குத் தெரியாது என்பதால் நீ என்று ஒருவரைச் செயற்கையாகக் கற்பித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.



இல்லாவிடில் வாழ சிரமபட வேண்டிவருகிறது. உன்னுடைய உண்மையான முகம் உனக்குத் தெரியாது என்பதால் முகமூடி ஒன்றைப் போட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறது. அடிப்படையானதைத் தெரிந்து கொள்ளாததால் நிழல் மீது நம்பிக்கை வைக்க வேண்டி இருக்கிறது.

வாழ்வை வாழ இரண்டு வழிகளே இருக்கின்றன. ஒன்று உன் அடி ஆழத்திலிருக்கும் பிரக்ஞையில் இருந்து வாழ்வது. அதுதான் மெய்ஞானிகள் செய்வது. தியானம் என்பது உன்னுடைய உண்மையான அடையாளத்தைத் தெரிந்து வைத்துக் கொள்வதற்கான ஓர் உபாயம் தவிர வேறு எதுவும் அல்ல. அந்த உண்மையான அடையாளம் நீ ஆக்கி வைத்தது அல்ல. உன்னால் ஆக்கி வைக்கப்பட வேண்டிய அவசியம் இல்லாதது. அதனோடுதான் பிறந்திருக்கிறாய். அதைக் கண்டு பிடிக்க வேண்டி இருக்கிறது.

இது சாத்தியம் இல்லையென்றால் - அல்லது சமூகம் உன்னை அதைத் தெரிந்துகொள்ள விடவில்லை என்றால் - எந்தச் சமூகமும் விரும்புவதில்லைதான் – ஏனென்றால் அசலான நீ ஆபத்தானவன். மதங்களுக்கு ஆபத்தானவன். அரசாங்கத்துக்கு ஆபத்தானவன். கூட்டத்துக்கு ஆபத்தானவன். சம்பிரதாயங்களுக்கு ஆபத்தானவன்.

எப்போது ஒருவன் தன் உண்மையான அடையாளத்தைத் தெரிந்து கொள்கிறானோ அப்போதே அவன் தனி ஒருவனாகி விடுகிறான். கூட்டத்தின் மனோதத்துவத்துக்குக் கட்டுப்படுவதில்லை. அவனிடம் மூட நம்பிக்கை இருப்பதில்லை. எனவே அவனை ஏய்த்துப் பிழைக்க முடியாது. ஆடுமாடுகளைப் போல அவனை நடத்த முடியாது. ஆணைகளுக்குப் பணிந்து



போகச் செய்ய முடியாது. தன் போக்குக்கு அவன் வாழ்வான். தனக்குள் இருக்கும் ஒளியின் வழியில் நடப்பான். தனக்குள்ளிருந்து வாழ்வான். அவனுடைய வாழ்வில் அப்படி ஓர் அழகு இருக்கும். ஒருமைப்பாடு இருக்கும். ஆனால் அதைக் கண்டு சமூகத்துக்கு அதீதப் பயம்.

ஒருமைப்பட்டவர்கள் தனிமனிதர்கள் ஆகிவிடுகிறார் கள். சமூகத்துக்குத் தனி மனிதர்கள் தேவையில்லை. தனித்துவம் கழிந்து போய் இப்படிப்பட்டவன் அப்படிப்பட்டவன் என்று சமூகம் திணிக்கும் அடை யாளத்துக்கு ஒத்துப் போகிறவன்தான் தேவை. பெர்சனாலிட்டிகள் தேவை. பெர்சனாலிட்டி என்ற வார்த்தையைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். பெர்சனா என்றால் முகமூடி. நீ யார் என்பதற்கு ஒரு பொய்யான கருத்தைச் சமூகம் கற்பித்துவிடுகிறது. உனக்கு ஒரு பொம்மையைக் கொடுக்க, நீ அந்தப் பொம்மையை வாழ்நாள் முழுக்கப் பிடித்துத் தொங்கிக் கொண்டு திரிகிறாய்.

தியானத்தின் வழி வாழ்வது ஒரு வழி. அப்போது உன் வாழ்வு புரட்சிகரமாகிப் போகிறது. சாகசமாகிப் போகிறது. தீரமானதாகிப் போகிறது. அப்போதுதான் உண்மையாக வாழ்கிறாய்.

அடுத்த வழி போலியாக வாழ்வது. அது அகங்காரத்தின் வழி. தான் என்ற உணர்வை வலுப்படுத்துவது. அதைப் போஷித்துப் பாதுகாப்பது. அப்படி வாழ்ந்தால் உனக்குள் நீ போய்ப் பார்க்க வேண்டிய அவசியம் இருக்காது. கற்பித்துக் கொண்ட அகங்காரத்தைப் பிடித்துக் கொண்டிருந்தால் போதும். தான் என்ற இந்த அடையாளம் உன்னை ஏமாற்றுவதற்காக, உன் கவனத்தைத்



திசை திருப்புவதற்காகச் சமூகம் செய்து வைத்திருக்கும் பொம்மை.

தான் என்பதே மனிதனின் படைப்பு. மனிதனின் தயாரிப்பு. சமூகம் அதைத் தயாரித்து வைத்திருப்பதால் அதைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கிறது. மதங்களும் அரசாங்கமும் அதிகாரத்தில் இருப்பவரும் அதைத் தயாரித்து வைத்திருப்பதால் அதை எப்போது வேண்டுமானாலும் அழித்து விடலாம். அவற்றைச் சார்ந்தே இருக்க வேண்டி இருக்கிறது.

எப்போதும் பயத்தோடேயே வாழ வேண்டி இருக்கிறது. எப்போதும் பணிந்து போக வேண்டி இருக்கிறது. அவற்றின் சட்டதிட்டங்களுக்கு ஏற்ப நடக்க வேண்டி இருக்கிறது. அப்போதுதான் தான் என்ற நீ இருக்க முடிகிறது. நீ தனி மனிதன் அல்ல எனும்போது சமூகம் உன்னை மதிக்கிறது. ஒரு யேசுவாகவோ அல்லது சாக்ரெட்டீஸாகவோ அல்லது புத்தராகவோ இல்லை எனும்போது உன்னைக் கவுரவிக்கிறது. ஒரு மனிதனாக இல்லாமல் ஒரு செம்மறியாடாக இருக்கும் வரை உன்னை மதிக்கிறது.

மேற்கத்திய நாடுகளில் இருப்பவர்கள் எப்படித் தியானிப்பது என்பதை முழுக்க மறந்து விட்டார்கள். அதற்குக் கிறித்துவமே காரணம். தியானத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாத ஒரு போலி மதத்தைக் கிறித்துவம் சொல்லிக் கொடுத்து விட்டது. அதில் சடங்குகள் தவிர வேறு எதுவும் இல்லை. அது அரசியல் சமூகத்தின் ஒரு பகுதி.

கார்ல் மார்க்ஸ் மிகச் சரியாகவே சொல்லிப் போயிருக் கிறார். அப்படிப்பட்ட மதம் மக்களுக்கு அபின் என்றார். கிறித்துவத்தால் மேல் நாட்டு மக்கள் தம் ஆன்மாவைத்



தெரிந்து கொள்ள வழி தெரியாதவர்கள் ஆகிப் போனார்கள். தான் யார் என்பதைப் பற்றி எதுவும் தெரியாமல் யாரும் வாழ முடியாது. கண்டு பிடிக்க முடியாமல் போய்விட்டதால் செயற்கையாக ஒன்றை உருவாக்கிக் கொண்டார்கள். அது போலியானதாகத்தான் இருக்க முடியும். எப்படியோ, ஒன்றுமில்லாததற்கு ஏதோ ஒன்று.

ஆராதனா, உனக்குச் சொல்லித் தந்திருப்பது சரியான முட்டாள்தனமானது. யார் அதைச் சொல்லித் தந்தார்கள் என்பது முக்கியமில்லை. பல்கலைக் கழகங்கள், அரசியல்வாதிகள், பூசாரிகள் யாராகவாவது இருந்துவிட்டுப் போகட்டும். அவர்கள் சொன்னதற்கு நேர்மாறாக நான் சொல்வதால் உனக்கு நிச்சயமாகக் குழப்பமாகத்தான் இருக்கும். நான் என்பதை விட்டு விடு என்கிறேன். அப்படி விட்டுவிடும்போது உன்னுடைய பிரக்ஞையின் பிரவகிப்பைத் தடை செய்து வைத்திருக்கும் பாறையை விலக்கி விடுகிறாய்.

உன்னுடைய பிரக்ஞை அதோ அந்தப் பாறைக்குப் பின்னால் இருக்கிறது. அதை வேறு எங்கிருந்தும் கொண்டு வர வேண்டியது இல்லை. பாறையை விலக்கி வைக்க வேண்டியதுதான். தேவையில்லாததை விலக்கி வைக்கும் போது தேவையானது பிரவகிக்கிறது. அதுதான் உண்மை யான ஆன்மிகம். அவசியமற்றதை விலக்கி வைக்க வேண்டி இருக்கிறது. அவசியமானது ஏற்கெனவே இருக்கிறது. பாறையை நகர்த்தும் போது ஆச்சரியப்பட்டுப் போவாய். உன்னுடைய அசலை நீ உருவாக்க வேண்டிய தில்லை. அது தன்னை வெளிப்படுத்தி விடுகிறது.

அசலுக்கு ஓர் அருமை இருக்கிறது. மரணமில்லாதது. மரணமில்லையென்பதால் அச்சமில்லை. போலியானது



எப்போதும் நடுங்கிக் கொண்டே இருக்கிறது. யார் வேண்டுமானாலும் அழித்து விடலாம் என்பதால் அகங்காரத்துக்கு எப்போதும் ஆபத்துத்தான். மற்றவர் கொடுத்ததுதானே? எப்போது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். இன்றைக்கு உன்னை மதிக்கிறார்கள். நாளைக்கு மதிக்காமல் போய்விடலாம். வாழ்வைப் பற்றிய அவர்களுடைய கருத்துக்கு நீ உடன்படவில்லை என்றால், எப்படி இருக்க வேண்டும் என்று நினைக்கிறார்களோ அந்தக் கருத்தோடு நீ உடன்படவில்லையெனில் தமது மதிப்பை அவர்கள் திரும்பப் பெற்றுக் கொள்வார்கள். பிறகென்ன? குப்புற விழ வேண்டியதுதான். நீ யாரென்பதே உனக்குத் தெரியாமல் போய்விடும்.

போர்ஜஸ் எழுதுவார் -

''வேறொரு கனவில் இருந்து விழிப்பதைப் போல ஒரு கனவு. குழப்பமும் பயங்கரமும் நிறைந்த மிக மோசமான கனவு. பரிச்சயமில்லாத ஓர் அறையில் விழிக்கிறேன். விடிந்து கொண்டிருக்கிறது. இரும்புக் கட்டிலின் காலும் மேசையும் மெல்லிய ஒளியில் கோட்டுருவங்களாகத் தெரிகின்றன. பயந்து கொண்டே, ''எங்கே இருக்கிறேன்?'' என்று கேட்டுக் கொள்கிறேன். எனக்குத் தெரியவில்லை என்பதை உணர்கிறேன். ''நான் யார்?'' என்று கேட்டுக் கொள்கிறேன். என்னை எனக்கே அடையாளம் தெரியவில்லை. எனக்குள் பயம் வளர்கிறது. ''துயர் தரும் இந்த விழிப்பே நரகம். எதிர்காலம் என்ற ஒன்றில்லாத இந்த விழிப்பு எனக்கு நித்தியமாகிப் போகுமோ?'' பிறகு உண்மையில் விழித்தெழுகிறேன், நடுநடுங்கிக் கொண்டு.''

தன்னையே தெரிந்து கொள்ள முடியாததும் தன் விதி என்ன என்பதைத் தெரிந்து கொள்ளாததும் நரகம்தான்.



யாருக்கும் தன்னைத் தெரிவதில்லை. பிரச்சனைக்கு மலிவான தீர்வு தான் என்ற ஒருவரை உருவாக்கிக் கொள்வதுதான். மேற்கத்திய நாடுகளில் இந்த மலிவான வழியைத்தான் எல்லோரும் கைக் கொண்டிருக்கிறார்கள். கிழக்கே இருப்பவர்களில் பெரும்பான்மையோரும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். வெகு சிலரேயான ஞானியர் சிலரை விட்டுவிட்டால் உலகம் முழுக்க எல்லோரும் செய்து கொண்டிருப்பது அதுதான்.

மேற்கத்தியர் 99.9 சதவிகிதத்தினர். கிழக்கத்தியர் வெகு சிலர். விரல் விட்டு எண்ண முடிந்த சிலர். மேற்கு கிழக்கு என்று நான் சொல்லும்போது பூகோள ரீதியில் பேசவில்லை. அவை ஆன்மிகப் பருமானங்கள். கௌதம புத்தர், லாவோட் சூ, ஸாரதூஸ்த்ரா, ஆபிரகாம், மோஸஸ், கிறித்து, புனித பிரான்ஸிஸ் இவர்கள் கிழக்கத்தியர். அவர்கள் எங்கே பிறந்தார்கள் என்பது பொருட்டில்லை. புனித் பிரான்ஸிஸ் கிழக்கே பிறந்தவர் அல்லர், என்றாலும் அவரைக் கிழக்கத்தியர் என்றுதான் சொல்வேன்.

அகத்தில் உதிக்கும் சூரியனைக் கொண்ட ஆன்மிகப் பருமானம்தான் கீழ்த்திசை. ஆன்ம இரவின் இருட்டில் கிடப்பது மேற்கு. சூரியோதயம் பற்றி ஏதும் தெரியாது கிடக்கிறது.

இந்தியாவில் பிறப்பதாலேயே ஆத்திகனாகிவிட முடியாது. ஆத்திகம் அவ்வளவு மலிவானதல்ல. ஜீவிதத்தில் அரிதானதென்பதால் மிக மதிப்புயர்ந்தது. அதை அடையக் குறுக்கு வழி ஏதும் இல்லை. அப்படிக் குறுக்கு வழி தேடுகிறவர்களை யாராவது ஒருவன் ஏமாற்றத்தான் போகிறான். கையில் பொம்மையைக் கொடுத்து ஏமாற்றி விடுவான். நீயும் பொம்மையை வைத்துக் கொண்டு



அதுதான் உண்மை என்ற நம்பிக் கொண்டு இருக்கப் போகிறாய். தெரியாத உலகத்துக்குள் சாகசத்தோடு நுழைய உனக்குத்தான் பயமாயிற்றே!

தெரியாததில் மிகப் பிரமாதமானது உனக்குள் மறைந்திருக்கிறது. வரைபடங்கள் வரையறுக்காத கடலே உன் பிரக்ஞை. அபாயம் நிறைந்ததும் கூடத்தான். ஏனென்றால் உனக்குள்ளே போகப் போக யாருமில்லாதவனுக்குள் போய்க் கொண்டிருக்கப் போகிறாய். இன்னும் பயமாகி விடுகிறது. பைத்தியம் பிடித்து விடுமோ என்ற பயம். அடையாளத்தை இழந்து விடுவோமோ என்ற பயம்.

ஒரு பெயராக உன்னை நீ பார்த்துப் பழகிவிட்டாய். ஒரு குறிப்பிட்ட நபராக உன்னைப் பார்த்துப் பழகிவிட்டாய். ஒரு டாக்டர், அல்லது ஒரு இன்ஜினியர், அல்லது ஒரு பிஸினஸ்மேன், அல்லது ஓர் இந்தியன், அல்லது ஒரு ஜெர்மானியன், அல்லது ஒரு சைனாக்காரன், ஒரு வெள்ளையன் அல்லது கறுப்பன். ஓர் ஆண் அல்லது ஒரு பெண். படித்தவன் அல்லது படிக்காதவன். இத்தனை வகைகளும் இல்லாமல் போய்விடுகின்றன.

உனக்குள்ளே ஆழ்ந்து போகப் போக நீ ஆணுமின்றிப் பெண்ணுமின்றி ஆகிவிடுகிறாய். நேதி. நேதி... இதுவல்ல இதுவுமல்ல. வெள்ளையனில்லை கறுப்பனில்லை. இந்துயில்லை முகம்மதியனில்லை. இந்தியன் இல்லை பாகிஸ்தானி இல்லை. உள்ளே போகப் போக இந்த வகைகள் எல்லாம் உன் கைப்பிடியில் இருந்து நழுவிப் போய்விடுகின்றன.

அப்படியானால் நீ யார்? தான் என்ற அடையாளத்தை இழந்து விடுகிறாய். ஒரே பயமாகிப் போகிறது. யாருமில்லாமல் போய்விடுவோமோ என்ற பயம்.



நித்தியத்துக்குள் விழுந்து விடுகிறாய். திரும்பி வரப் போகிறாயா இல்லையா என்பது யாருக்குத் தெரியும்? இந்தத் தேடுதலின் விளைவு என்னவாக இருக்கப் போகிறது என்று யாருக்குத் தெரியும்?

கோழை கரையைப் பற்றிக் கொண்டு கடலை மறந்து விடுகிறான். அதுதான் உலகம் முழுக்க நடந்து கொண்டிருக்கிறது. எல்லோரும் அகங்காரத்தைப் பற்றிக் கொண்டு இருக்கிறார்கள். ஏனெனில் அகங்காரம் நீ யாரென்பதற்கு ஏதோ ஒரு வகை விளக்கத்தைத் தருகிறது. ஒரு விதமான தெளிவைத் தருவதாக இருக்கிறது. ஆனால் அகங்காரம் போலியானது. அந்தத் தெளிவும் போலியானது.

எதார்த்தத்தைப் பற்றிய குழப்பத்தோடு இருப்பது பொய்யின் நிச்சயத்தை விட மேல்.

ஆராதனா. நீ சொல்வது சரிதான். என்னிடம் வந்தால் ஒரு பெருங்குழப்பம் தோன்றிவிடுகிறது. ஏனென்றால் உன் எல்லா அறிவும் மெது மெதுவே அறியாமை தவிர வேறு எதுவும் இல்லை என்பதைத் தெரிந்துகொள்கிறாய். உன்னுடைய அறிவுக்குப் பின்னால் உன்னுடைய அறியாமை ஒளிந்து கொண்டு இருந்திருக்கிறது. உன் சாமர்த்தியத்துக்குப் பின்னால் உன்னுடைய முட்டாள்தனம் ஒளிந்து கொண்டு இருந்திருக்கிறது. அகங்காரத்துக்குப் பின்னால் எதுவும் இல்லை. அது ஒரு நிழல்.

ஒரு நிழலைத்தான் பற்றிக் கொண்டு தொங்கிக் கொண்டிருந்திருக்கிறாய் என்பது தெளிவாகும்போது ஒரு பெரும் குழப்பமும் நிலைகேடும் வந்து விடுகின்றன. ஆனால் அந்த நிலைகேட்டிலிருந்து பெரும் நட்சத்திரங்கள் தோன்றுகின்றன. ஒவ்வொருவரும் அந்த நிலைகேட்டின் வழியாகப் போய் வர வேண்டியிருக்கிறது. அது ஆன்மிக வளர்ச்சியின் ஒரு பகுதி. அசலைக் கொள்ளப் போலியைக்



கைவிட வேண்டியிருக்கிறது. ஆனால் இரண்டுக்கும் இடையே ஒரு இடைவேளை இருக்கிறது. அதில் போலியானது போய்விடுகிறது. உண்மையானது இன்னமும் வந்து சேராதிருக்கிறது. அந்தக் கணங்கள்தான் மிகச் சிரமமான முக்கியமான கணங்கள். அந்தக் கணங்களில்தான் ஒரு குருவோ நண்பனோ வேண்டியிருக்கிறது.

குருவோ அல்லது நண்பனோ வேண்டியிருக்கிறது என்கிறார் புத்தர். உன் கையைப் பிடித்து அழைத்துப் போக, உனக்கு ஆதரவாக இருக்க, உன்னிடம் ''பயப்படாதே. இந்த வெறுமை உணர்வு மறைந்து விடும். வெகு சீக்கரத்தில் நீ பிரவகிக்கப் போகிறாய். கொஞ்சம் பொறுமை தேவை. கொஞ்சம் காத்திருக்க வேண்டி இருக்கிறது'' என்று சொல்ல ஒருவர் வேண்டும். நீ பின்வாங்க நினைக்கும் போது, மறுபடியும் கரையைப் பிடித்துக் கொள்ளலாம் என்று நினைக்கும்போது குருவானவர் தன் கையை நீட்டி உனக்கு ஆதரவாக இருக்கிறார். குரு உனக்கு எதையும் தருவதில்லை நம்பிக்கையைத் தவிர.

குருவின் ஆனந்தம், அவருடைய தன்னம்பிக்கை, அவருடைய ஆளுமை - ஆளுமை என்று சொல்லும்போது அவர் உன் மீது ஆதிக்கம் செலுத்துகிறவர் என்ற பொருளில் சொல்லவில்லை. குரு என்றைக்கும் ஆளுமை செலுத்துவதில்லை. ஆனால் அவர் தன்னளவில் ஒரு சாட்சியாக இருப்பதால் அவருக்கு உன் மீது ஒரு அதிகாரம் வந்து விடுகிறது. அவரும் அக்கரையில் இருந்தவர்தானே! எனவே அங்கே இருப்பது எப்படி என்பது அவருக்குத் தெரியும்.

நீ அதைப் பற்றிக் கேள்விப்பட்டுத்தான் இருக்கிறாய். அதைப் பற்றிப் படித்திருக்கிறாய். இக்கரை பற்றி உனக்கு



அனுபவபூர்வமாகத் தெரியும். இதில் இருக்கும் சௌகரியம், பாதுகாப்பு எல்லாம் உனக்குத் தெரியும். ஆனால் புயல் கிளம்ப இக்கரை மறைந்து போக மறுகரை கண்ணுக்குத் தெரியாது போக உன் மனது, ''திரும்பிப் போய்விடு. எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமாகத் திரும்பிவிடு'' என்கிறது. பழகிய கரை மறைந்து விட்டது. புதிய கரை கண்ணுக்குத் தெரியவில்லை. மறுகரையில் ஏதுமில்லையோ? மறுகரையே இல்லையோ? புயலோ இப்படி வீசுகிறதே! என்கிறாய்.

அந்தக் கணங்களில் ஒரு குருவோடு இருந்தால் படகில் ஒருவர் புன்னகையோடு உட்கார்ந்திருந்தால், மிக அமைதியாக, சிரித்துக் கொண்டு ''கவலைப்படாதே!'' என்று சொல்லித் தன் புல்லாங்குழலில் காற்று இசை மீட்டிப் பாட்டுப்பாடி விகடம் பேசி ''கவலைப்படாதே. மறுகரை ஒன்று இருக்கிறது. நான் அங்கே போயிருக் கிறேன். கொஞ்சம் பொறுமைதான் தேவை'' என்று சொல்வதற்கு ஒரு குரு தேவை.

அவருடைய கண்களைப் பார்த்து அதில் தெரியும் நம்பிக்கையைப் பார்த்து அவருடைய அமைதியைப் பார்த்து அவருடைய ஒருமைப்பாட்டைப் பார்த்து... அவர் திரும்பிப் பார்ப்பதில்லை. அவருக்குப் பயம் இல்லை. அவர் மறுகரையைப் பார்த்தவராகத்தான் இருக்க வேண்டும். அங்கே போயிருக்க வேண்டும். அவருடைய பாவனையே அதைச் சொல்கிறதே. அவருடைய ஜீவிதம் அதற்குச் சாட்சியாக இருக்கிறதே. உன் கையைப் பிடிக்கும் அவர் கையில் நடுக்கமில்லை. என்ன சொன்னாலும் அதைத் தன் அனுபவத்தை வைத்துக் கொண்டே சொல் கிறார் என்பது தெரிகிறது. பைபிளில் எழுதியிருக்கிறது



என்றோ கீதையில் எழுதியிருக்கிறது என்றோ தம்மபதத்தில் எழுதியிருக்கிறது என்றோ அவர் சொல்வதில்லை. அவருக்கே அது தெரியும். அதுதான் அவருடைய ஆளுமை - அதிகாரம்.

அவருடைய தன்னம்பிக்கை உனக்கும் ஒட்டிக் கொள்ளும் போது நீயும் சிரிக்க ஆரம்பித்து விடுகிறாய். என்னதான் கொஞ்சம் மிரண்டு போயிருந்தாலும் உன் சிரிப்பு ஆரம்பித்து விடுகிறது. இருட்டில் போகும்போது சீட்டியடித்துப் பயத்தை விரட்டுவதைப் போல உன் பயத்தை விரட்டியடிக்கவாவது நீ அவரோடு சேர்ந்து சிரிக்க ஆரம்பித்து விடுகிறாய். என்ன நடக்கிறது என்பதை மறப்பதற்காகவாவது அவரோடு சேர்ந்து நடனமாட ஆரம்பித்து விடுகிறாய். உன்னைச் சுற்றி வீசும் புயலைக் காணக் கூடாது. கடந்த காலத்தை நினைக்கக் கூடாது. இனி வரும் காலத்தைக் கூட நினைத்துப் பார்க்கக் கூடாது. எங்கும் இருட்டாக, பயமாக இருக்கிறது. எனவே நடனத்தில் உன்னை மறக்க முயல்கிறாய்.

பயத்தால் நடனமாடினாலும் சரி, சற்றே மிரண்டவனாகப் பாடினாலும் சரி. என்னதான் முழுக்கச் சிரிக்காவிட்டாலும் சரி. புயலைக் கடந்து விடுவாய். எந்த அளவுக்கு உன் பொறுமை ஆழ்ந்ததாக இருக்கிறதோ அந்த அளவுக்கு வேகமாகக் கடந்து விடுவாய். கண்கள் தெளிவாகப் பார்க்குமானால், கண்களில் பயம் இல்லையானால், அவை நன்கு பார்க்க முடியும். அப்போது நீ மறுகரையைப் பார்க்கத் தான் போகிறாய். உனக்குள் ஒரு பார்த்தல் தோன்றுகிறது. நீ பார்க்கிறவனாகிப் போகிறாய்.

மறுகரை அவ்வளவு தொலைவில் இருப்பதில்லை. உன் கண்களில் புகை மூட்டம் இருப்பதால் உன்னால் பார்க்க முடியவில்லை. அவ்வளவுதான். உண்மையில்



இக்கரையே அக்கரை. உன் கண்களில் தெளிவு இருக்குமானால், உன்னால் பார்க்கவும் கேட்கவும் முடியுமானால், உன் இருப்பில் உள்நோக்கிய பார்வை தோன்றிவிடுமானால் இக்கரையே அக்கரையாகி விடுகிறது. இதைத் தெரிந்து கொள்ளும்போது வாழ்க்கை எவ்வளவு முட்டாள்தனமானது என்று சிரிப்புதான் வருகிறது. ஏனெனில் எதற்காக நாம் ஏங்கிக் கொண்டிருந்தோமோ அது ஏற்கெனவே நமக்குள் இருப்பது தெரிய வந்து விடுகிறது. பொக்கிஷம் நமக்குள்ளே இருக்க நாம் இங்குமங்கும் அலைந்து கொண்டிருக்கிறோம்.

தான் என்ற அகங்காரத்தை நாம் உருவாக்கிக் கொள்ள வேண்டியதில்லை. உயர்ந்த தானாகிய நீ உனக்குள்ளேயே இருக்கிறாய்.

ஆனால் உன்னுடைய குழப்பத்தை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. குழப்பத்திலேயே இரு. மறுபடி உன்னுடைய பழைய தெளிவுக்குப் போய்விடாதே. அது ஓர் ஏமாற்று. இந்தக் குழப்பத்தோடேயே இரு. என்னோடு கொஞ்சம் இருந்து பார். சீக்கிரத்தில் குழப்பம் விலகிவிடும். சிதைந்து மறைந்து விடும். பிறகு புதியதொரு தெளிவு பிறந்து விடும்.

தெளிவில் இரண்டு வகை. ஒன்று அறிவின் தளத்தில் இருப்பது. எந்தக் கணத்திலும் அதை உன்னிடமிருந்து பறித்து விடலாம். எந்தக் கணத்திலும் சந்தேகத்தை விதைத்து விடலாம். அறிவில் நிறையத்தான் சந்தேகம் இருக்கிறது.

நீ எதையெல்லாம் கேட்டு வைத்திருக்கிறாயோ எதையெல்லாம் உனக்குச் சொல்லி வைத்திருக்கிறார்களோ அதையெல்லாம் வெகு சுலபமாக நான் அப்புறப்படுத்தி விடுகிறேன். அதற்கு எந்த மதிப்பும் இல்லை. உன்னுடைய



வாழ்நாள் முழுக்க நீ பெற்ற பயிற்சி - அப்படியே உன் காலடி மண்ணை உருவிவிட்டு விடுகிறேன். உனக்குக் குழப்பமாகத்தான் இருக்கிறது. உன்னை நான் குழப்பத்தில் ஆழ்த்திவிட்டேன் என்றால் அதுதான் சரியான தெளிவு. குழப்பத்துக்கு ஏதுவே இல்லாத ஒரு புதிய தெளிவை நான் உனக்குத் தரப் போகிறேன்.

ஒரு முறை ஒரு மிகப் பெரிய தத்துவ அறிஞர் ஒருவர் ராமகிருஷ்ணரிடம் வந்தார். கடவுளுக்கு எதிராகத் தன் வாதத்தை எல்லாம் எடுத்து வைத்தார். மிக நன்றாகத்தான் வாதம் செய்தார். பெயர் கேசவ சந்திர சென். ராம கிருஷ்ணரோ படிப்பறிவே இல்லாதவர். தத்துவத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. பல்கலைக் கழகத்துக்குப் போனதில்லை. இரண்டாம் வகுப்பு வரை படித்தவர். வங்காள எழுத்துக்கள் எழுதத் தெரியும். அவ்வளவுதான்.

வந்தவரோ மெத்தப் படித்தவர். உலகப் புகழ் பெற்றவர். நிறையப் புத்தகங்கள் எழுதியிருக்கிறார். அவர் வாதம் செய்தார். ராமகிருஷ்ணர் சிரித்தார். கடவுளுக்கு எதிராக அவர் அருமையான வாதம் வைக்கும் ஒவ்வொரு முறையும் ராமகிருஷ்ணர் துள்ளிக் குதித்து அவரைக் கட்டிப் பிடித்தார். பெரிய கூட்டம் வேடிக்கை பார்க்கக் கூடிவிட்டது. வந்தவருக்கு ஒரே தர்ம சங்கடமாகிப் போய்விட்டது. வாதம் செய்ய வந்தவரிடம் இது என்ன வேடிக்கை? இந்த ஆள் சிரிக்கிறார். நடனமாடுகிறார். அப்போதைக்கப்போது கட்டிப் பிடிக்கிறாரே!

''என்னுடைய வாதங்கள் உங்களுக்குக் கிலேசம் தரவில்லையா?'' என்றார்.

ராமகிருஷ்ணர், ''எதற்குக் கிலேசப்பட வேண்டும்? உண்மையாகவே உன்னுடைய வாதங்களை நான் அனுபவித்துக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். சமத்காரமாகப்



பேசுகிறாய். புத்திசாலித்தனமாகப் பேசுகிறாய். உன்னுடைய வாதங்கள் அருமை. ஆனால் நான் என்ன செய்வது? எனக்குக் கடவுளைத் தெரியும். வாதப் பிரதிவாதத்துக்கோ நம்பிக்கைக்கோ அங்கே இடமில்லை. கடவுளை நம்புகிறேன் என்றால் என் நம்பிக்கையை அசைத்து விடுவாயோ என்று பயந்து விடுவேன். என் தெளிவை எல்லாம் குழப்பி விடுவாய். ஆனால் எனக்குத்தான் அவர் இருக்கிறார் என்பது தெரியுமே!'' என்றார்.

உனக்குத் தெரியும் என்றால் தெரியும்தான். உன்னைத் திசை திருப்புவதற்கு வழியே இல்லை. அப்படிப்பட்ட தெளிவை உனக்குத் தரப் போகிறேன். அந்தத் தெளிவு எந்த வாதப் பிரதிவாதத்தையும் சார்ந்ததல்ல. ஆன்ம அனுபவத்தில் இருந்து எழுவது. பிறகு உன்னை மதிக்கவோ உன்னிடமே அன்பாயிருக்கவோ உனக்கென ஒரு மதிப்பைத் தேடிக் கொள்ளவோ எந்தத் தேவையும் இருக்காது. தன்னைத் தெரிந்தவன் தானே கடவுள் என்பதைத் தெரிந்து கொண்டவன். அப்படியானால் என்ன மதிப்பை உனக்கே நீ தந்து கொள்ளப் போகிறாய்? அஹம் பிரம்மஸ்மி, நானே பிரம்மா, என்ற அனுபவம் பிரத்தியட்சமாகிப் போகும்போது உனக்கென எந்த மதிப்பை நீ தந்து கொள்ளப் போகிறாய்?

மதிப்புத் தருவதற்கென்று யார் இருக்கப் போகிறார்கள்? கடவுள் மட்டுமே அங்கே இருக்கிறார். அநால் ஹக் - நானே சத்தியம் என்ற தெளிவு உன் அடி ஆழத்தில் உண்டாகும்போது வேறு என்ன மதிப்பு வேண்டி இருக்கிறது? முடிந்த முடிவைப் போய்ச் சேர வேண்டும். அந்த முடிந்த முடிவை உனக்குள்ளேயே கண்டு கொண்ட பின் உன் அகமே அது எனத் தெரிந்து கொண்டபின் வேறு என்ன மதிப்பு வேண்டி இருக்கிறது?



நீ யாரென்பது உனக்குத் தெரியாது என்பதால்தான் உன்னையே மதித்து நடந்து கொள்ள வேண்டும் என்று சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். மதிப்பில்லாதவன் என்ற உணர்வு இருப்பதால்தான் மதிக்கக் கற்றுக் கொள் என்று சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள். உன்னையே வெறுக்கிறாய் என்பதால்தான் உன்மீது அன்போடு இரு என்கிறார்கள். இதில் விநோதம் என்னவென்றால், கேலிக் கூத்து என்னவென்றால் இரண்டையும் அதே மக்களே செய்து கொண்டிருப்பதுதான்.

அவர்கள்தான் உன்னை மதிப்பிழந்தவனாக உணர வைக்கிறார்கள். அதுதான் எல்லா மதங்களின் ரகசியமே. எல்லா அரசியல் சித்தாந்தங்களும் செய்வது அதுவே. எல்லாச் சமுதாயங்களும் நாகரிகங்களும் பண்பாடுகளும் இப்படித்தான் தாம் பிழைக்கும் வழியைத் தேடிக் கொள்கின்றன. முதலில் நீ எந்த மதிப்பும் இல்லாதவன் என்று நினைக்க வைக்கிறார்கள். ஒவ்வொரு குழந்தையிடமும், ''நீ இது அல்லது அது ஆகவில்லையென்றால் உனக்கென்று எந்த மதிப்பும் இல்லை'' என்கிறார்கள். அப்படித் தன் மதிப்பை இழந்து நிற்கும் குழந்தையிடம் ''உனக்கென்று ஒரு மதிப்பிருக்கிறது. அதை நீ உணரவில்லையென்றால் உன் வாழ்க்கையே வீண்!'' என்கிறார்கள்.

முதலில் அவனையே வெறுக்கவும் நிந்திக்கவும் செய்யத் தூண்டுகிறார்கள். அவன் செய்வதெல்லாம் தவறு. எனவே அவன் தன்னை வெறுக்கத்தான் வேண்டும். அருமையானவனாகத் தான் இருக்க முடியவில்லையே என்று தன்னையே வெறுக்கிறான். பெற்றோர்கள், ஆசிரியர்கள், பாதிரியார்கள் எல்லோரும் இந்தச் சதியில் பங்குதாரர்கள்.



தன்னைப் பற்றி அவ்வளவு தாழ்ந்த மதிப்பை வைத்திருக்கும் குழந்தை, ''செய்யக் கூடாததை எல்லாம் செய்கிறேனே! நான்தான் உலகத்திலேயே மிக மோசமானவனாக இருக்க வேண்டும். செய்ய வேண்டியதைச் செய்யவில்லையே!'' திடீரென ஒரு நாள் அந்தக் குழந்தையிடம், ''உன்னை நீயே விரும்பவில்லை யென்றால் எப்படி? பிழைத்திருக்க முடியாதே!'' என்கிறோம்.

அவனிடம் இருந்து எல்லா மரியாதையையும் எடுத்து எறிந்து விடுகிறோம். தன்னை மரியாதைக்கு உரியவனாகக் கருத முடியாத நிலைக்கு வந்து சேரும்போது ''உன்னையே நீ மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்'' என்கிறோம். என்ன ஒரு முட்டாள்தனம் பார்.

ஒவ்வொரு குழந்தையும் பிறக்கும்போது தன் மீது அதீத மரியாதை வைத்திருக்கிறது. தன் அடிப்படை மதிப்பைத் தெரிந்துதான் வைத்திருக்கிறது. ஒரு புத்தனாக இருப்பதாலோ, ஒரு கிருஷ்ணனாக இருப்பதாலோ ஒரு கிறித்துவாக இருப்பதாலோ வந்த மதிப்பல்ல அது. தான் தானாக இருப்பதாலேயே வந்துவிட்ட மதிப்பு. தான் அப்படித் தானாக இருப்பதே போதும். ஒவ்வொரு குழந்தையும் தன்னைத் தானே நேசிக்கிறது. மதிக்கிறது.

நீதான் அதைக் கெடுத்து விடுகிறாய். முதலில் அவனிடம் இருக்கும் அருமையை எல்லாம் சிதைக்கிறாய். பிறகு பொய்யான வடிவத்தைக் கற்பிக்கிறாய். இயற்கையான அழகைக் கெடுத்து விட்டு முகத்துக்குச் சாயம் பூசுகிறாய். அவனைப் போலியாக்கிவிடுகிறாய்.

இப்படி ஏன் நடக்க வேண்டும்? போலியாகிப் போனவர்கள்தான் அடிமைகளாக இருக்க முடியும்.



அவர்கள்தான் முட்டாள்களாகிய அரசியல் வாதிகளுக்குப் பின்னால் போக முடியும். அறிவற்ற பூசாரிகளுக்கு இரையாக முடியும். ஒவ்வொருவரும் அசலானவராக இருந்தால் யாரும் ஏய்த்துப் பிழைக்க முடியாது. அடக்கி ஆள முடியாது.

ஆராதனா. குழப்பத்திலேயே இரு. அதுவும் நல்லதற்குத்தான். ஒரு பெரிய குழப்பம் உனக்குள் தோன்றும். இந்த நிலைக்கு வந்து விட்டாய் என்பதே பெரிய காரியம். நான் எனும் உன்னுடைய அகந்தையை இனியும் உன்னால் நம்ப முடியவில்லை. நல்லதுதான். இது மிக முக்கியமானது. ஏனென்றால் இப்போது இரண்டாவது அடி எடுத்து வைப்பது சாத்தியமாகிவிட்டது. உன்னுடைய குழந்தையை உனக்கு மறுபடி தருகிறேன் வா. செய்து வைத்தது அல்லாத அடிப்படையில் மதிப்புள்ள உன் ஜீவனை, பழக்கி வைக்காத இயல்பான அன்பை, உனக்கு மீட்டுத் தருகிறேன் வா. இறைவனின் ஒரு பகுதி என்ற உணர்வின் அடிப்படையிலான நீயே தெய்விகம் என்ற உணர்வின் அடிப்படையிலான இயல்பாகப் பொங்கி வரும் மரியாதையை உனக்கு மீட்டுத் தருகிறேன் வா.

மறந்து விடாதே. தான் என்பது எப்போதும் ஒப்பீடு பாற்பட்டது. தன்னைப் பிறரோடு ஒப்பிட்டுக் கொண்டே இருக்கிறது. ஜீவன் ஒப்பீடு பாற்பட்டதல்ல. நீயாகும் நீ எந்த விதத்திலும் பிறரை விட உயர்ந்தவனும் இல்லை குறைந்தவனும் இல்லை என்பதைத் தெரிந்து கொள். அந்த ஜீவன் அதுதான்.

ஆனால் அகங்காரம் ஒப்பீடு பாற்பட்டது. இன்னொன்றையும் மறந்து விடாதே. ஒருவரை விட நீ உயர்ந்தவன் என்று கொண்டால் இன்னொருவனை விட நீ தாழ்ந்தவன் என்றும் ஆகிறது. எனவே இந்த அகங்காரம்



சற்றே தந்திரமானது. ஒரு பக்கம் உன்னை உயர்ந்தவனாக நினைக்க வைக்கிறது. இன்னொரு பக்கம் தாழ்ந்தவனாக நினைக்க வைக்கிறது. இரண்டு பக்கமும் பிடித்து இழுக்கிறது. உன்னைப் பைத்தியமாக அடிக்கிறது.

ஒரு பக்கம் உன்னுடைய வேலைக்காரனை விட நீ உயர்ந்தவன் என்று நினைக்கிறாய். அப்படியானால் உன் மேலதிகாரியை விட நீ தாழ்ந்தவன்தானே? வேலைக் காரனை உனக்குப் பணிவாக நடந்து கொள்ளக் கட்டாயப் படுத்துகிறாய். மேலதிகாரியிடம் தாழ்மையாக நடந்து கொள்கிறாய். உன் வேலைக்காரன், மனைவி, குழந்தை களை உன்னிடம் பணிவாக இருக்கக் கட்டாயப் படுத்துகிறாய். உன் மேலதிகாரியிடம் வாலாட்டும் நாயாகி விடுகிறாய்.

நீ எப்படிப் பரவசத்தோடு இருக்க முடியும்? இரண்டுமே தவறு. பிறரை உன்னை விடத் தாழ்ந்தவராக இருக்கக் கட்டாயப்படுத்துவது பலாத்காரம். கடவுளுக்கு எதிரான குற்றம். பிறரை விட உன்னைத் தாழ்ந்தவனாக நடத்துவதும் கடவுளுக்கு எதிரான குற்றம்தான். உன்னுடைய உண்மையான அடையாளத்தைத் தெரிந்து கொள்ளும்போது இரண்டுமே இல்லாமல் போய் விடுகின்றன. நீ நீயாக மட்டுமே இருக்கிறாய். மற்றவன் மற்றவனாக மட்டுமே இருக்கிறான். யாரும் யாருக்கும் உயர்ந்தவரில்லை தாழ்ந்தவரில்லை.

இதைத்தான் நான் ஆன்மிகக் கம்யூனிஸம் என்கிறேன். ஆனால் தன்னைச் சரியாகப் புரிந்து கொண்டவர்களுடைய சமூகத்தில் மட்டுமே இது சாத்தியம். கார்ல் மார்க்ஸ், ஏஞ்சல்ஸ், ஜோஸப் ஸ்டாலின், மாவோ - இவர்கள்



உண்மையான கம்யூனிஸ்டுகள் அல்ல. அவர்கள் அகங்காரத்தின் தளத்தில் வாழ்கிறவர்கள்.

உண்மையான கம்யூனிஸ்டுகள் கௌதம புத்தர், யேசு, லாவோட் சூ ஆகியோரே. யாரும் அவர்களைக் கம்யூனிஸ்டுகள் என்று பார்ப்பதில்லை. என்றாலும் அவர்களே உண்மையான கம்யூனிஸ்டுகள். அவர்கள் தீர்க்க தரிசனத்தைத் தெரிந்து கொள்ளும்போது எல்லா ஒப்பீடுகளும் மறைந்து விடுகின்றன. ஒப்பீடுகள் இல்லையென்றால் அதுதான் கம்யூனிஸம். உலகத்திலிருந்து ஒப்பீடுகள் மறைந்து விடும்போது சமத்துவம் சாத்தியமாகிறது.

உன்னை யாரென்று தெரிந்து கொள்ளாமல் நீ உறக்கத்தில் கிடக்கிறாய். ஒரு குடிகாரனைப் போல, ''எங்கே என் வீடு?'' என்று கேட்கிறாய். குடிகாரன் சமயத்துக்கு, ''அய்யா! நான் யாரென்று சொல்லுங்களேன்!'' என்று கூடக் கேட்கலாம்.

ஒரு முறை ஒரு குடிகாரன் பார் அட்டெண்டரிடம் போய், ''என் நண்பனைப் பார்த்தாயா? இங்கே வந்தானா?'' என்று கேட்டான்.

அவன், ''ஆமாம். இப்பத்தான் கொஞ்ச நேரத்துக்கு முன்னால் இங்கே இருந்தான்'' என்றான்.

குடிகாரன், ''தயவு செய்து சொல்லு. நானும் அவன் கூட இருந்தேனா?'' என்றான்.

இன்னொரு குடிகாரன். தனக்குப் பக்கத்தில் இருந்தவனைப் பார்த்து, ''என் பாக்கெட்டில் பீர் ஊற்றினாயா?'' என்றான்.

அவன், ''இல்லையே!'' என்றான்.



அடுத்த பக்கம் திரும்பி அங்கிருந்தவனைப் பார்த்து, ''என் பாக்கெட்டில் பீர் ஊற்றினாயா?'' என்று கேட்டான்.

அவனும் ''இல்லையே!'' என்று சொன்னான். இவன், ''சரிதான். இது உன் வேலைன்னு நான் நினைச்சது சரிதான்'' என்றான்.

இரண்டாவது வினா

**அன்புக்குரிய குருவே,**

**புதிய கம்யூனின் எதிர்காலம் பற்றி உங்களுடைய திட்டம் என்ன?**

**கிருஷ்ண பிரேம்!** புதிய கம்யூன் ஆன்மிகக் கம்யூனிஸத்துக்கு ஒரு சோதனைக் களம். கம்யூனிஸம் என்ற வார்த்தை கம்யூன் என்ற வார்த்தையில் இருந்து வந்தது. இந்த உலகில் ஒரே ஒரு கம்யூனிஸம்தான் சாத்தியம் அந்தக் கம்யூனிஸம் தியானத்தின் மூலமே வரவேண்டும். சமூகத்தின் பொருளாதார அமைப்புகளை மாற்றுவதன் மூலம் கம்யூனிஸத்தைக் கொண்டுவர முடியாது.

பொருளாதார அமைப்பின் மாற்றங்கள் புதிய வர்க்கங்களைத்தான் கொண்டு வந்து சேர்க்கும். வர்க்க பேதமற்ற சமுதாயத்தைக் கொண்டு வர முடியாது. முதலாளியும் அதிகாரியும் இல்லாமல் போய்விடலாம். ஆனால் ஆள்கிறவன் ஆளப்படுகிறவன் என்ற வர்க்கங்கள் வந்து விடும். அதுதானே ஸோவியத் ருஷ்யாவில் நடந்தது? சீனாவிலும் அப்படித்தானே? புதிய பதவிகள், புதிய வர்க்கங்கள்.



கம்யூனிஸம் அடிப்படையில் ஓர் ஆன்மிகச் சிந்தனை. பொருளாதாரக் கட்டமைப்புகளை மாற்றுவதல்ல அது. ஆன்மிக நோக்கை மாற்றியமைப்பது. நமது புதிய கம்யூனில் யாரும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று துடிக்க மாட்டார்கள். தமது அகங்காரத்தைப் போஷித்து வைத்திருக்க மாட்டார்கள். தமக்கென ஒரு பெர்சனாலிட்டியைக் கற்பித்துக் கொள்ள மாட்டார்கள்.

புதிய மானுடம் சாத்தியமாகும் சூழலையே புதிய கம்யூன் தோற்றுவிக்கும். சாக்ரெட்டீஸ் குரு ஒரு தாதி என்பார். அவர் சொன்னது மிகச் சரி தான். குருவானவர் ஒரு தாதிதான் எல்லோரும் தான் அவர்கள் புதிய மானுடத்தின் பிறப்புக்குத் தாதியர். அவர்கள் கவனிப்பில் புதிய மானுடம் பிறப்பெடுக்கிறான்.

பழைய மானுடம் கழிந்து போனவன். அவன் செல்லுபடியாகாதவன். அவனோடு அவனுடையது எல்லாமும் செல்லுபடி இழந்துவிட்டன. சம்பந்தமற்றுப் போய்விட்டன. பழைய மானுடம் வாழ்வைத் தடுத்தவன். இந்தக் கம்யூன் வாழ்வை ஏற்றுக் கொள்கிறவர்களைப் படைக்கப் போகிறது. ஆன்மிக வழியில் வாழ்வை ஏற்றுக் கொள்கிறவர்களை. இந்தப் புதிய கம்யூனின் கோஷம் - இந்த உடலே புத்தர். இந்த உலகே தாமரைச் சொர்க்கம்.

இந்தப் புதிய கம்யூன் உலகைச் சுற்றி ஒரு ஒளிவட்டத்தைக் கொண்டு வரும். அனைத்தையும் புனிதமாக்கும். இயற்கையை இந்த உலகம் அந்த உலகம் என்று பிரிக்க மாட்டோம். அதன் முழுமையில் வாழப் போகிறோம். ஒவ்வொருவரும் விஞ்ஞானியாக, கவிஞராக, மெய்ஞ்ஞானியாக ஒருமித்து வாழப் போகிறோம்.



விஞ்ஞானி மட்டுமே என்றால் அவன் முழுமையில்லாதவன். அவனுக்கு உடல் மட்டுமே தெரியும். அவனுடைய பார்வை குறுகியது. கிட்டப் பார்வை.

கவிஞன் மட்டுமே என்றால் அவன் அடுத்த முனையில் இருக்கிறான். அவனுக்கு உணர்வுகள் மட்டுமே பரிச்சயம். அவன் அழகை மட்டுமே காண்கிறவன். அவன் காணும் அழகு நிலையில்லாதது. நித்தியத்தைப் பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது.

மெய்ஞ்ஞானி ஆன்மாவாக இருப்பவர். மரணமற்ற நிலையில் இருப்பவர். நேரமற்ற தளத்தில் இருப்பவர். அப்படி இருப்பதால் இடம் காலம் பாற்பட்ட உலகைப் பற்றிய உணர்வு அவருக்கு இருப்பதில்லை. விஞ்ஞானத்தையும் கவிதையையும் கண்டு கொள்வதில்லை. இவை மூன்றும் சேர்ந்ததே ஜீவிதம் - திருமூர்த்தி - இறைவனின் மூன்று முகங்கள்.

இந்தப் புதிய கம்யூனில் என்னுடைய முயற்சி அப்படிப்பட்ட முழுமையான மானுடனைக் கொண்டு வருவதுதான். முழுமையானவன் - புனிதமானவன். இந்த மூன்றுமாக ஒரே நேரத்தில் ஒருவன் இருக்க வேண்டும். விஞ்ஞானியாக துல்லியமாக இருக்க வேண்டும். நெஞ்சம் நிறைந்தவனாக உணரத் தெரிந்தவனாக கவிஞனாக இருக்க வேண்டும். தன்னுடைய ஆன்மாவில் ஆழ வேர் பதித்தவனாக மெய்ஞ்ஞானியாக இருக்க வேண்டும். இதில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கக் கூடாது. மூன்று பருமானங்களும் ஒன்றாக இருக்க வேண்டும்.

கீழ்த்திசையில் ஜீவிதத்தைப் பற்றிய அக்கறை அதிகமாகப் போய்விடவே விஞ்ஞானத்தையும் கலையையும் இழந்து விட்டோம். மேற்றிசையில்



இருப்பவர்கள் ஆன்மாவை இழந்து விட்ட துயரத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். கிழக்கே உள்ளே செழிப்பும் வெளியே வறுமையும் - மேற்கே வெளியே செழிப்பும் உள்ளே வறுமையும். புதிய கம்யூன் இரண்டிலும் செழிப்பாக இருக்கும்.

எனக்குச் செழிப்பின் மேல் அலாதிப் பிரியம். வறுமையை வணங்க மாட்டேன். அப்படிச் செய்வது முட்டாள்தனம். சாத்தியமாக எல்லா வகையிலும் மானுடம் செழிப்பாக இருக்க வேண்டும். விஞ்ஞானத்தில் செழிப்பு - கவிதையில் செழிப்பு- இசையில் செழிப்பு - தியானத்தில் செழிப்பு - மெய்ஞானத்தில் செழிப்பு வேண்டும். வாழ்வை அதன் பல பருமானங்களிலும் வாழ வேண்டும். கடவுளை எல்லாச் சாத்தியமான வழிகளிலும் சென்று சேர வேண்டும். ஆன்மாவை எதற்குப் பட்டினி போடுவது.

புதுக் கம்யூனில் இந்தப் பல பருமான மானுடம் பிறப்பதற்கான இடமும் சூழலும் இருக்கும். எதிர்காலம் இந்தப் புதிய மானுடனுடையதுதான்.

பழைய மானுடன் பற்றற்று வாழ்ந்தான். கடவுளை நெருங்க வேண்டுமா - உலகத்திலிருந்து விலகி இரு என்றான். என்னவோ கடவுளுக்கும் உலகத்துக்கும் எப்போதும் ஒத்து வராது என்பதைப் போல. இந்த உலகம் கடவுளால் இருக்க வந்திருப்பது. இவ்வுலகம் கடவுளின் உடல். அவற்றுக்கிடையே என்ன மோதல் இருக்கப் போகிறது? அப்படி ஏதாவது மோதல் இருந்திருந்தால் உலகம் எப்போதோ இல்லாமல் போயிருக்கும்.

இந்த உலகம் மூச்சுவிட்டு உயிர்த்திருக்கிறது. வாழ்வே கடவுள். மரம் உயிர்த்திருப்பதால் தெய்விகம். பாறை கூட வளர்கிறது என்பதால் உயிர்த்திருக்கிறது: அதுவும் தெய்விகமே. இயற்கை முழுக்க உயிர்த்திருக்கிறது.



வாழ்வால் நிறைந்திருக்கிறது. கடவுள் உலகத்துக்கு எதிரானவர் அல்ல. ஓவியர் ஓவியத்துக்கு எதிரானவராக இருப்பதெப்படி? கவிஞன் கவிதைக்கு எதிராக இருக்க முடியுமா என்ன? இசைக் கலைஞன் எப்படி இசைக்கு எதிரானவனாக இருக்க முடியும்? இந்த உலகம் அவருடைய கவிதை, ஓவியம், இசை, நடனம்.

பழைய மானுடன் துறந்து வாழ்ந்தான். உலகத்திலிருந்து ஓடிப்போய்க் குகைகளில் ஒளிந்து கொண்டான். மடாலயங்களுக்குள் புகுந்து கொண்டான். இமாலயத்தில் தஞ்சம் புகுந்தான். அவன் தப்பித்துப் போகிறவன். வாழ்வதற்குப் பயந்தவன். இறப்பதற்குத் தயாராக இருந்தவன். ஒரு வகையில் தற்கொலை எண்ணம் கொண்டவன்.

புதிய மானுடன் வாழ்வின் மேல் ஆழ்ந்த காதலுடையவன். என்னுடைய மதம் துறக்கும் மதமல்ல. கொண்டாடும் மதம். கொண்டாடுவதற்கும் பாடுவதற்கும் நடனமாடுவதற்கும் எல்லாவிதத்திலும் சாத்தியமான சந்தர்ப்பத்தை இந்தக் கம்யூன் கொண்டிருக்கும்.

இந்தக் கம்யூனில் முழுக்க வேறுபட்ட ஆன்மிகம் இருக்கும். யாரும் இந்துவாகவோ, முகம்மதியனாகவோ கிறித்துவனாகவோ சமணனாகவோ இருக்கப் போவதில்லை. ஆனால் எல்லோரும் ஆத்திகர்களாக இருக்கப் போகிறார்கள். என்னைப் பொறுத்த அளவில் ஆன்மிகத்துக்கு உரிச்சொற்கள் அவசியம் இல்லை. எந்த ஒரு மதமும் தனக்கு ஓர் அடைமொழியைப் போட்டு அடையாளம் வைத்துக் கொள்ளும் அந்தக் கணமே அது ஆத்திகத்திலிருந்து நழுவி விடுகிறது. அரசியலாகி விடுகிறது.



பயாஸித் ஒரு முகம்மதியரல்ல. முகம்மது கூட ஒரு முகம்மதியர் அல்ல. இருந்திருக்க முடியாது. கிறித்து ஒரு கிறித்துவராக இருந்திருக்க முடியாது. அவர்கள் ஆத்திகர்கள். அவ்வளவே. அவர்களுக்கென்று ஒரு மணம், ஒரு மௌனம், ஒரு கம்பீரம் இருக்கிறது. அவர்களைச் சுற்றிப் படர்ந்து இருக்கிறது.

தூரத்துக் காட்சியைக் காண அவர்கள் சாளரங்களாக இருந்தார்கள். அவர்கள் மூலமாகத் தூரத்தே இருப்பதைப் பார்க்கலாம். அவர்கள் மூலமாகக் கடவுள் ஆயிரத்தெட்டுப் பாடல்களைப் பாடிக் கொண்டே இருக்கிறார்.

புதிய கம்யூன் எந்த மதத்தையும் சார்ந்திருக்கப் போவதில்லை. ஆனால் இங்கே ஆத்திகம் இருக்கும். இந்த உலகத்தைத் தாண்டிய விசாரங்கள் இங்கே இருக்காது. லோகாயதமானதாக இருக்கும். எனவே அதில் படைப்பின் புதுமை இருக்கும். படைப்புக்கான எல்லாச் சாத்தியங் களையும் தேடிப் பார்க்கும். எல்லாவிதமான படைப்புத் திறன்களுக்கும் இங்கே ஊக்கமும் ஆக்கமும் இருக்கும்.

உண்மையான ஆத்திகன் இந்த உலகத்துக்கு ஏதோ ஒன்றைத் தந்து போக வேண்டும். தான் வந்தபோது இருந்ததை விடக் கொஞ்சம் கூடுதல் அழகை அவன் தந்துவிட்டுப் போக வேண்டும். இன்னும் கொஞ்சம் பரவசத்தைச் சேர்த்துவிட்டுப் போக வேண்டும். இன்னும் கொஞ்சம் சுகந்தத்தைச் சேர்த்துவிட்டுப் போக வேண்டும். இன்னும் கொஞ்சம் லயத்தைக் கொண்டு வந்து விட்டுப் போக வேண்டும். அதுதான் அவனுடைய பங்களிப்பாக இருக்கப் போகிறது.

முன்பு தவறான காரணங்களுக்காகப் பிறரை மதித்தோம். பட்டினி கிடந்து விரதமிருப்பவரை



மதித்தோம். பட்டினி கிடப்பது எந்த வகையிலும் உலகுக்குப் பயன்படுவதாகாது. நீண்ட நாட்கள் பட்டினி கிடப்பவன் தன்னையே பலாத்காரம் செய்து கொள்கிறவன். அவனை மதிப்பது என்பது பலாத்காரத்தை மதிப்பதாகும். அவனை மதிப்பது தற்கொலை ஏக்கத்தை மதிப்பதாகும். அவனை மதிப்பது என்பது கொடூரத்தை மதிப்பதாகும். அவன் மனோ வியாதிக்காரன். அவன் இயல்பானவன் அல்ல. அவனுக்கு மனோதத்துவ வைத்தியம் தேவை. உதவி தேவை. ஆனால் நீயோ அவனை மதிக்கிறாய். நீ அப்படி மதிப்பதால் அவனுடைய அகங்காரம் அதிகமாகிப் போகிறது. ஒரு மாதம் பட்டினி கிடந்தவன் அடுத்த முறை மூன்று மாதம் பட்டினி கிடக்கிறான். எந்த அளவுக்கு விரதம் இருக்கிறானோ அந்த அளவுக்குத் தன் உடலை வருத்திக் கொள்கிறான். அதுவும் எந்த அளவுக்கு நீ அவனை மதிக்கிறாயோ அந்த அளவுக்கு அதிகமாகித்தான் போகிறது.

புதிய கம்யூனில் கொடூரங்களுக்கெல்லாம் மதிப்போ மரியாதையோ கிடையாது. இயல்புக்கு மாறான எதற்கும் கடுந்துறவுக்கும் இங்கே இடமில்லை. இயல்பாக இருக்கிறவனுக்கே மதிப்பும் மரியாதையும். ஒவ்வொரு வருக்கும் உள்ளே இருக்கும் குழந்தைமைக்கு மதிப்பு உண்டு. கள்ளங்கபடமற்ற தன்மைக்கு மதிப்புண்டு. படைக்கும் திறனுக்கு மதிப்புண்டு. அழகான ஓவியம் வரைகிறவனுக்கு மதிப்புண்டு. அருமையாகப் புல்லாங்குழல் இசைப்பவனுக்கு மதிப்புண்டு. புல்லாங் குழல் வாசிக்கிறவனும் ஓவியம் வரைகிறவனும் ஆத்திகர். நடனமாடுகிறவன் ஆத்திகன். பட்டினி கிடப்பவனல்ல. தன்னைக் கொடுமைப்படுத்திக் கொள்கிறவனல்ல. முட்படுக்கையில் கிடக்கிறவன் அல்ல. தன்னை முடமாக்கிக் கொள்கிறவன் அல்ல.



புதிய மானுடத்தின் ஆரம்பம் இது. இது மிகவும் தேவையானதாகி விட்டது. அடுத்த இருபது ஆண்டுகளுக்குள் அதாவது இந்த நூற்றாண்டு முடிவதற்குள் புதிய மானுடனைப் படைக்காவிட்டால் இனி எப்போதும் முடியாமல் போய்விடும். பழையவன் தன் அந்திமத்தை அடைந்து விட்டான். அவன் ஒட்டு மொத்தமாக எல்லோரையும் தற்கொலைக்கு இட்டுச் சென்று விடுவான். புதிய மானுடனைப் படைத்தால் மட்டுமே இதைத் தவிர்க்க முடியும்.

இது ஒரு பரிசோதனையாகத்தான் இருக்கப் போகிறது. மிகப்பெரிய பரிசோதனை. எத்தனையோ முக்கிய மானதெல்லாம் இதன் வெற்றியைச் சார்ந்திருக்கிறது. எதிர்காலத்தில் இதன் விளைவுகள் பிரமாதமாக இருக்கப் போகின்றன. எனவே தயாராகிவிடு. இந்த ஆசிரமம் ஓர் ஏவுதளம். சிறிய அளவில் நான் பரிசோதனை செய்து கொண்டிருக்கிறேன். புதிய கம்யூன் பரந்துபட்ட அளவில் இதை மேற்கொள்ளப் போகிறது. பத்தாயிரம் சன்னியாசிகள் ஒரே உடலில் வாழப் போகிறார்கள். ஒரே ஜீவனாக இருக்கப் போகிறார்கள்.

யாருக்கும் எதுவும் சொந்தமாக இருக்கப் போவ தில்லை. எல்லாவற்றையும் எல்லோரும் பயன்படுத்திக் கொள்ளப் போகிறார்கள். ஒவ்வொருவரும் தத்தமக்கு எவ்வளவு முடியுமோ அவ்வளவு சௌகரியமாக செழிப்பாக வாழப் போகிறார்கள். ஆனால் யாருக்கும் எதுவும் சொந்தமாக இருக்காது. பொருட்கள் மட்டுமல்ல. யாரும் யாருக்கும் சொந்தமானவராக இருக்கப் போவதில்லை. யாரையாவது காதலிக்கிறாயா? மிகுந்த காதலோடு வாழுங்கள். ஆனால் கணவன் மனைவி



ஆகிவிடாதீர்கள். கணவனோ மனைவியோ ஆகிவிடுவதென்பது மிக அசிங்கமான காரியம். ஏனென்றால் ஒருவருக்கு ஒருவர் சொந்தம் என்று ஆகிப் போகிறீர்கள். ஒருவர் மற்றவருடைய சொத்து என்ற ஆகிப் போகிறீர்கள்.

புதிய கம்யூனில் சொத்து எதுவும் இருக்காது. காதல் மட்டுமே நிறைந்திருக்கும். காதலோடு வாழ்வது - என்றாலும் யாரும் யாருடையவராகவும் ஆகாமல் இருப்பது. எல்லாப் பரவசங்களையும் பங்கிட்டுக் கொள்வது - எல்லோருமாக ஆனந்தக் குளத்தில் சங்கமித்து விடுவது. பத்தாயிரம் பேர் பங்களிப்பு என்றால் அது பிரம்மாண்டமாகத்தான் இருக்கப் போகிறது. பிரம்மாண்டமான கொண்டாட்டம்.

யேசு திரும்பத் திரும்ப, ''கொண்டாடு! கொண்டாடு!'' என்று சொல்லிப் போயிருக்கிறார். ஆனால் யாரும் காதில் போட்டுக் கொண்டதாகத் தெரியவில்லை. கிறித்துவர்கள் முகங்களைப் பாருங்கள் - ஒரே சீரியஸ் பாவம்தான். யேசுவின் படத்தைப் பார்க்கிறவர்கள் இவர் வாழ்வை ஒரு கொண்டாட்டமாகக் கொண்டிருந்தவர் என்பதை நம்பவே முடியாது. யேசு சிரித்ததே இல்லை என்பார்கள். அது எப்படி? கொண்டாடு என்று சொல்லிக்கொண்டே இருந்தவர் சிரித்தே இருக்க மாட்டார் என்பது நம்பும்படியாக இல்லையே.

கொண்டாடு என்று சொல்கிறவன் நன்கு சாப்பிடு கிறவன். நல்லமதுவைக் குடிப்பவன். விருந்தாடுகிறவன். விழாக்களில் கலந்து கொள்கிறவன். அவனைச் சுற்றி எப்போதும் மகிழ்ச்சியும் விருந்தும்தான். அப்படிப்பட்ட யேசு சிரிக்கவே இல்லை என்பதை நம்ப வேண்டுமா?



கிறித்துவர்கள் பொய்யான கிறித்துவைக் கற்பித்து வைத்திருக்கிறார்கள்.

என்னுடைய கம்யூனில் புத்தர் சிரித்து நடனமாடப் போகிறார். யேசு சிரித்து நடனமாடப் போகிறார். பாவம், யாரும் இதுவரை அவர்களைச் சிரிக்கவோ நடனமாடவோ விடவே இல்லை. அவர்களும் சிரிக்கட்டுமே. நடனமாடட்டுமே. என்னுடைய புதிய கம்யூனில் வேலை விளையாட்டாகப் போகிறது. வாழ்க்கை காதலாகவும் சிரிப்பாகவும் நிலைமாறப் போகிறது.

லட்சியத்தை மறுபடி நினைவுக்குக் கொண்டு வா - உலகத்துக்கு ஓர் ஒளிவட்டம் கொண்டு வருவது, எல்லாவற்றையும் புனிதமாக்குவது. சாதாரணமானவற்றை, இந்த உலகம் பாற்பட்டதை அசாதாரணமானதாகவும் தெய்விகமானதாகவும் மாற்றி அமைப்பது. ஜீவிதம் முழுக்க உன் கோயிலாகட்டும். செய்யும் தொழில் பக்தியாகட்டும். காதல் உன் பிரார்த்தனையாகட்டும்.

இந்த உடலே புத்தர். இந்த உலகமே தாமரைச் சொர்க்கம்.

மூன்றாவது வினா

**அன்புக்குரிய குருவே,**

> **நான் ஒரு சைக்காலஜிஸ்ட். சைக்காலஜி படித்தால் என் வாழ்வு மாறிப் போகும் என்றிருந்தேன். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. இப்போது நான் என்ன செய்வது?**

**நரகேஷ்!** மனோதத்துவம் இன்னும் முதிராத விஞ்ஞானம். தன் ஆரம்பத்தில் இருக்கிறது. இளந்தளிராக இருக்கிறது. இன்னமும் அது வாழ்வியல் நெறியாக



வில்லை. அது உன்னை எந்த வகையிலும் மாற்றப் போவதில்லை.

மனதைப் பற்றிய சில தகவல்களை அது தரமுடியும்தான். ஆனால் அப்படிக் கிடைத்த தகவல்கள் உன்னை மாற்றி அமைக்கப் போவதில்லை. ஏனென் கிறாயா? மாற்றம் எப்போதும் உயர்ந்த நிலையில்தான் நடக்க முடியும்.

பிரச்சனைகளைத் தீர்த்து வைப்பதென்பது நிலை மாற்றமாகாது. அதே தளத்தில் இருந்து கொண்டிருக்கும் வரைக்கும் அது ஒரு அட்ஜஸ்ட்மெண்ட். அவ்வளவுதான். சைக்காலஜி அப்படி அட்ஜஸ்ட் செய்து கொள்ள உதவியாக இருக்கிறது. பைத்தியக்காரத்தனமான சமுதாயத் தோடு அட்ஜஸ்ட் செய்து கொள்ள. குடும்பத்தோடு, உன்னைச் சுற்றிப் புழக்கத்தில் இருக்கும் கருத்துக்களோடு அட்ஜஸ்ட் செய்து கொள்ள. ஆனால் அவை எல்லாமும் தம்மளவில் நோயுற்றவையாக இருக்கின்றன. அவற்றோடு அட்ஜஸ்ட் செய்து கொள்வதென்பது ஒரு விதமான சகஜபாவத்தை உனக்குத் தரலாம். மேம்போக்காக ஆரோக்கியமாக இருக்கும் உணர்வைத் தரலாம். ஆனால் அது உன்னை மாற்றியமைக்கப் போவதில்லை.

உன்னுடைய புரிதலின் தளத்தை மாற்றிக் கொள்வதுதான் நிலைமாற்றம். கடந்து போகும்போதுதான் அது சாத்தியம். மனதை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டு மானால் மனம் கழிந்த நிலைக்குப் போக வேண்டும். அந்த உயரத்தில் நீ தலைவனாக இருந்து மனத்தை மாற்றிக் கொள்ள முடியும். மனத்தளவில் இருந்துகொண்டு அந்த மனத்தைக் கொண்டே மனதை மாற்றிக் கொள்வதென்பது வியர்த்தமான முயற்சியே. உன்னுடைய காலணியின் கயிற்றைக் கொண்டு உன்னைக் கட்டி இழுத்துக் கொள்ள



முடியுமா என்ன? தன் வாலைக் கவ்வ முயற்சிக்கும் நாயைப் போல. சில சமயம் முடியலாம். சில சமயம் மனிதனைப் போல நடந்து கொள்ளலாம்.

காலை நேரத்துச் சுகமான வெய்யிலில் உட்கார்ந் திருக்கும் நாய் தன் வால் தன்னருகே கிடக்கக் காண்கிறது. அதைப் பிடிக்க வேண்டும் என்று நினைக்கிறது. முயற்சி. தோல்வி. விரக்தி. மறுபடியும் கடும் முயற்சி. பைத்தியம் தான் பிடித்துக் கொள்கிறது. ஆனால் தன் வாலைத் தானே கவ்வ முடியவே முடிவதில்லை. அது அதனுடைய வால். எவ்வளவு குதிக்கிறதோ அவ்வளவுக்கு வாலும் குதித்து எழும்பி விடுகிறதே!

சைக்காலஜி மனதைப் பற்றிய சில தகவல்களைத் தரும். ஆனால் மனதைத் தாண்டி உன்னை அழைத்துப் போக முடியாது என்பதால் அதனால் எந்தப் பயனும் இருப்பதில்லை.

ஸாம் ஒரு சைக்காலஜிஸ்ட் ஆனான். நிறையச் சம்பாதித்தான். விலையுயர்ந்த கார் ஒன்று வாங்கினான். முதல் முறையாக அதை ஓட்டிக் கொண்டு போனான். கொஞ்ச தூரம் போனபின் இன்னொரு கார் அவன் காரோடு மோதியது. காரை விட்டுக் குதித்தான். தன் கார் மீது மோதிய காருக்குப் போனான். ''முட்டாள்! மடையா!...'' என்று வாய்க்கு வந்ததெல்லாம் சொல்லித் திட்டினான். திடீரெனத் தான் ஒரு சைக்காலஜிஸ்ட் என்பது நினைவுக்கு வந்தது. குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''அது என்ன உன் அம்மா மீது உனக்கு அப்படி ஒரு வெறுப்பு -'' என்று கேட்டுக் கொண்டான்.

மனோதத்துவத்தால் பயனேதும் இல்லை. இதே ஸாம் பற்றி இன்னொரு கதை கூடக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவன் செத்துப் போனதற்கு அப்புறம்...



கணவன் இறந்து விட்டான். மனைவி தன் கணவன் கல்லறையில் இருந்த பூச்செடிகளைக் கவனிக்க வந்தாள் குனிந்தபோது பாவாடைக் குள்ளிருந்த காலைப் புல் குறுகுறுக்க வைத்தது. அதிர்ந்து போய்த் திரும்பினாள். யாரையும் காணோம். பெருமூச்சுவிட்டுக் கல்லறைக்குத் திரும்பிக் கிசுகிசுத்தாள். ''ஸாம்! குறும்பெல்லாம் வேண்டாம். மறந்து போய் விடாதே. நீ ஏற்கெனவே செத்துப் போய்விட்டாய்'' என்றாள்.

வாழும்போதோ இறந்ததற்கு அப்புறமோ சைக்காலஜியால் எந்தப் பயனும் இல்லை. ஆன்மிகம் மட்டுமே உனக்குக் கதி.

சைக்காலஜிஸ்டுகள் தாம் குருவாக முடியும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். வெற்றுப் பெருமைதான் சைக்காலஜிஸ்டு, சைக்கோ அனலிஸ்ட், சைக்கியாட்ரிஸ்ட் - இவர்களெல்லாம் குருவாக முடியுமா? அவர்களுக்கு அவர்களையே தெரியாது.

மனம் எப்படி வேலை செய்கிறது என்பது கொஞ்சம் அவர்களுக்குத் தெரியும்தான். படித்திருக்கிறார்களே! நிறையத்தான் தகவல்கள் வைத்திருக்கிறார்கள். ஆனால் தகவல்கள் யாரையும் மாற்றிவிட முடியாது. புரட்சிகரமான மாற்றங்கள் சாத்தியமில்லை. அடி ஆழத்தில் அவனவன் அவனவனாகவே இருக்கிறான். அழகாகப் பேசத் தெரியும். அருமையான ஆலோசனைகள் சொல்வான். ஆனால் தன் ஆலோசனைகளை அவனே கடைப்பிடிக்க முடியாது.

சைக்கோ அனலிஸ்ட் குருவாக முடியாது. ஆனால் மேற்கத்திய நாடுகளில் அவனுடைய கீர்த்தியைக் கண்டு பாதிரியார்கள் கூட வியந்து நிற்கிறார்கள். கத்தோலிக்கரோ அல்லது புரோடஸ்டண்டோ-பாதிரியார்கள் கூட மனோதத்



துவம் படிக்க ஆரம்பித்து விட்டார்கள். அவர்களைத் தேடி வராமல் சைக்கோ அனலிஸ்டு களைத் தேடிப் போகிறார்கள்! பாதிரியார் பிழைப்பு கெட்டுவிடும் போல இருக்கிறது.

நூற்றுக்கணக்கான வருடங்களாக இந்தப் பாதிரியார்கள் மக்கள் வாழ்வில் ஆதிக்கம் செலுத்தி வந்திருக்கிறார்கள். ஆனால் இப்போது அவர்களுடைய பிழைப்புக்குப் பங்கம் வந்து விட்டது. ஆலோசகர் இல்லாமல் யாரும் இருக்க முடியாமல் போய்விட்டது. உடல் வளரும் அளவுக்கு மனம் வளராததால் என்ன செய்ய வேண்டும் என்று யாரா வது ஒருவர் அவர்களுக்குச் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டி இருக்கிறது. குழந்தைகளைப் போல. இதுவரை பாதிரியார்கள் இந்த வேலையை வெற்றிகரமாகச் செய்து கொண்டிருந்தார்கள். ஆனால் இப்போது அவருடைய கவர்ச்சி போய்விட்டது. பழைய கட்டுப் பெட்டி ஆகிவிட் டார். அவருடைய இடத்தை சைக்கோ அனலிஸ்டுகள் எடுத் துக் கொண்டார்கள். அவர்கள்தான் இன்றைய பாதிரியார்கள்.

பாதிரியார்கள் எப்படிப் போலியாக இருந்தார்களோ அப்படியே தான் இந்த சைக்கோ அனலிஸ்டுகளும் போலி யானவர்கள். பாதிரியார்கள் ஆன்மிக மொழி பேசி மக்களை ஏய்த்துக் கொண்டிருந்தார்கள். சைக்கோ அனலிஸ்டுகள் விஞ்ஞான மொழி பேசி அதே மக்களை ஏய்த்துக் கொண்டி ருக்கிறார்கள். பாதிரியார்கள் ஞானிகளாக இருக்கவில்லை. சைக்கோ அனலிஸ்டுகளும் ஞானிகள் இல்லை.

ஏற்கெனவே புத்தராகிப் போன ஒருவர்தான் மற்றவருக்கு உதவ முடியும். இல்லையேல் அவனால் எதுவும் செய்ய முடியாது.



ஆலோசனை சொல்கிற எல்லோரும் உன்னைக் குழப்பத்தில்தான் கிடத்திவிடுவார்கள். அவர்கள் சொல்வது என்ன என்று அவர்களுக்கே தெரியாது என்பதால் எந்த அளவுக்கு ஆலோசனை கேட்கிறாயோ அந்த அளவுக்குத் தறிகெட்டுப் போய்விடுவாய். அவர்களுக்குள்ளேயே கருத்தொற்றுமை கிடையாதே. பிராய்டு ஒன்று சொல்கிறார். ஏட்லர் ஒன்று சொல்கிறார். யங் ஒன்று சொல்கிறார். இப்போது ஆயிரத்தெட்டு மனோதத்துவச் சித்தாந்தங்கள் வந்து விட்டன. ஒவ்வொருவரும் தத்தமது சித்தாந்தத்தைப் பற்றிப் பைத்தியக்காரத்தனமாக வெறி கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சொல்வதே உண்மை, உண்மை அன்றி வேறொன் றுமில்லை என்கிறார்கள். அது மட்டுமல்ல. மற்றவர்கள் சொல்வதெல்லாம் பொய் என்றும் சொல்கிறார்கள்.

அவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டு ஒருவர் மாற்றி ஒருவரிடம் போய்க் கொண்டிருந்தால் குழப்பம்தான் மிஞ்சும். நீ புத்திசாலியாக இருந்தால் அவர்களுடைய வார்த்தைகளில் இருக்கும் முட்டாள்தனத்தைத் தெரிந்து கொண்டு எனக்கு எந்த மாற்றமும் வேண்டாமப்பா. ஆளை விட்டால் போதும் என்று இயல்பாக வாழ ஆரம்பித்து விடுவாய். ஆனால் அதற்குப் புத்திசாலித்தனம் வேண்டுமே. அதுதான் கிடைக்காத சமாச்சாரமாக இருக்கிறதே! உன்னுடைய புத்தியைத்தான் ஆரம்பத்திலிருந்தே சிதைத்து வைத்திருக்கிறார்களே. ஒரு சிலரே இதிலிருந்து தப்பித்துப் புத்திசாலிகளாக இருக்கிறார்கள்.

நாகேஷ்! என்ன செய்வது என்று கேட்கிறாய்.

செய்தது போதும் என்றுதான் சொல்வேன். எதையும் செய்யாமல் இருப்பதல்ல. செயலின்மையே செயலாகக் கொள்வதைக் கற்றுக் கொள். இங்கே இரு. கற்றுக் கொள்.



எதையும் செய்வதற்கல்ல. இருப்பதற்குக் கற்றுக் கொள். மௌனமாக உட்கார். சும்மாயிரு. ஒவ்வொரு நாளும் எவ்வளவு நேரம் முடியுமோ அவ்வளவு நேரம் சும்மாயிருந்தால் மூன்று முதல் ஒன்பது மாதங்களுக்குள் என்ன நடக்கிறது என்று சொல்கிறேன். முதலில் உனக்குள் ஏகப்பட்ட ரகளை. மனதின் அடி ஆழத்தில் புதைந்திருப்பதெல்லாம் வெளியே கிளம்பும். பைத்தியம் பிடித்துவிடும் போல இருக்கும். அதை அப்படியே கவனித்திரு. கவலையே படாதே. புதிதாகப் பைத்தியம் பிடிக்கப் போவதில்லை. நீதான் ஏற்கெனவே பைத்தியம் பிடித்துத் திரிகிறாயே. எனவே இனி இழக்க எதுவும் இல்லை. பயப்படாதே.

ஓர் அரசியல்வாதி, பெரிய ஆள்தான், ஒரு சைக்கோ அனலிஸ்டிடம் ஆலோசனைக்காகப் போகிறான். அரசியல்வாதிகள் எல்லோரும் தாழ்வு மனப்பான்மை கொண்டவர்கள்தானே! தாழ்வு மனப்பான்மை இல்லையென்றால் அவர்கள் அரசியல்வாதிகளாகவே இருக்க மாட்டார்கள். இவனுக்கும் அப்படித்தான். அரசியல்வாதியாக இருப்பது என்றாலேயே தான் மற்றவர்களை விட உயர்ந்தவன் என்று நிரூபிக்க முயற்சி செய்வது என்று தான் பொருள். ''நான் தாழ்ந்தவனில்லை. பார். நான் பிரதம மந்திரி. பார் - நான் மட்டுமே பிரதம மந்திரி. வேறு யாரும் இல்லை'' என்று சொல்லிக் கொள்வது.

அரசியலே தாழ்வு மனப்பான்மையில் இருந்து பிறப்பதுதான். அதிகாரத்துக்கான எல்லாப் போட்டியும் தாழ்வு மனப்பான்மையில் இருந்து பிறப்பெடுக்கிறது. எனவே இவனுக்குத் தாழ்வு மனப்பான்மை இருந்ததில் எந்த அதிசயமும் இல்லை.



சைக்கோ அனலிஸ்ட் வருடக் கணக்கில் இந்த அரசியல்வாதியின் பிரச்சனை மீது கவனம் செலுத்துகிறார். அவனுடைய உளறல்களைப் பல மணி நேரம் கேட்டுக் கொண்டிருக்கிறார். அரசியல்வாதிகள் உளறுவதைத் தவிர வேறு என்ன செய்கிறார்கள்?

மூன்று வருடங்கள் இப்படியே கழிகின்றன. ஒரு நாள் அவன் வந்த போது சைக்கோ அனலிஸ்ட் மிக மகிழ்ச்சியாக அவனை எதிர் கொண்டார். ''மூன்று வருடமாக உங்களைக் கவனித்த பின் உங்களுக்குத் தாழ்வு மனப்பான்மை இல்லை என்று அறிவிக்கிறேன். இத்தனை சிரமத்துக்குப் பின் நான் சொல்வது தவறாக இருக்க முடியாது. உங்களுக்குத் தாழ்வு மனப்பான்மையே கிடையாது. அதை மறந்து விடுங்கள்'' என்கிறார்.

அரசியல்வாதிக்கு ஒரே மகிழ்ச்சி. ''நன்றி. எப்படி இந்த முடிவுக்கு வந்தீர்கள்?''

''நீங்கள் உண்மையிலேயே தாழ்ந்தவர். பிறகெப்படி தாழ்வு மனப்பான்மை இருக்க முடியும்!''

நாகேஷ், வருந்தவே வேண்டியதில்லை. மௌனமாக அமர்ந்திருக்கும் போது ஒரு பைத்தியக்காரத்தனம் உனக்குள் இருந்து பீறிட்டுக் கிளம்பினால் கவலையே படாதே. நீ இப்போது இருப்பதை விடப் பைத்தியமாக இனி இருக்க முடியாது. ஏற்கெனவே பைத்தியத்தின் ஆழத்துக்குப் போய்ச் சேர்ந்தாயிற்று. இனி மேலும் கீழே போக இடமில்லை.

மௌனமாக உட்காரும்போது பைத்தியக்காரத்தனம் பூறிட்டுக் கிளம்பும்தான். இத்தனை நாட்களாக அமுக்கி வைக்கப்பட்டு இருந்த பைத்தியக்காரத்தனம். இத்தனை நாள் சைக்காலஜி போன்ற விஷயங்களில் ஆழ்ந்திருந்தாயே.



இனி தியானத்தில் ஆழ்ந்திருக்கப் போகிறாய். சன்னியாசத்தில் ஆழ்ந்திருக்கப் போகிறாய். ஆனால் அவை எல்லாம் பிழைப்புக்கான தொழில்களாக இருந்தவை. தியானம் அப்படியல்ல.

எவ்வளவு நேரம் கிடைக்கிறதோ அவ்வளவு நேரம் மௌனமாக உட்கார்ந்திரு. ஜென்மக்கள் ஒரு நாளைக்கு ஆறு முதல் எட்டு மணி நேரம் மௌனமாக உட்கார்ந்திருக்கிறார்கள். ஆரம்பத்தில் பைத்தியம் பிடித்தது போல இருக்கும். மனம் அத்தனை கோமாளித்தனத்தையும் முயன்று பார்க்கும். பைத்தியமாக அடிக்கும். கற்பனைப் பயங்களைக் கொண்டு வரும். பயங்கரமான தோற்றங்களை மனக்கண்ணில் காண்பாய்.

உடலும் கூடச் சில்மிஷங்கள் செய்யும். என்ன வேண்டுமானாலும் நடக்கும். ஆனால் நீ வெறுமனே சாட்சி யாக இருந்தால் மூன்று முதல் ஒன்பது மாதங்களுக்குள் எல்லாமும் அடங்கிப் போகக் காண்பாய். தாமாகவே அடங்கிப் போகக் காண்பாய். நீ எதுவும் செய்யாமலேயே தான். பிறகு ஒரு சலனமற்ற நிலை தோன்றுகிறது. பயிற்சியின் விளைவாக அல்ல. பழகிக் கொண்டது அல்ல. மிகப் பிரமாதமானது அது. பிரமாதமான அழகோடு, அதனோடு ஒப்பிட ஏதுமில்லாது... அதைப் போன்றதை நீ எப்போதுமே சுவைத்திருக்க முடியாது. அவ்வளவு பரிசுத்தமான அமிர்தம்...

மனதைக் கடந்து போய்விடுகிறாய். மனதின் காரணமான பிரச்சனைகள் எல்லாமும் அடங்கிப் போய் விடுகின்றன. பிரச்சனைகளுக்குத் தீர்வுகள் கண்டாயிற்று என்று பொருளல்ல. அவை தாமாக விலகி விழுந்து விடுகின்றன. சாட்சியாக இருந்தால் போதும். சும்மா சாட்சியாக இருந்து கவனித்தால் போதும்.



ஏற்கெனவே உனக்கு நிறைய தெரியும் இனி எந்த அறிவும் அவசியமில்லை. விஷய ஞானம் மிக்கவர்கள் தந்திரக்காரர்கள். தாம் எப்படி இருக்கிறோமோ அப்படியே இருந்து விடுவதற்குச் சமாதானங்களைக் கண்டு பிடித்துக் கொண்டே இருப்பார்கள்.

ஒரு தத்துவ மனோதத்துவப் பேராசிரியர். அவர் இரவில் குடிக்கும் வழக்கத்துக்கு அடிமையாகிப் போனவர். ஒரு நாள் அதிகமாகக் குடித்தபின் தன் அறைக்குப் போய்ப் படுத்துக் கொள்வதற்காக உடைகளைக் களைந்தார் மெழுகுவர்த்தியை ஊதி அணைக்க முயன்றபோது அவரது மூச்சுக் காற்றில் இருந்த ஆல்கஹால் தீச்சுவாலையாகக் கிளம்பியது. அதிர்ச்சி அடைந்தவர் மனைவியைக் கூப்பிட்டார். ''பைபிளைக் கொண்டு வா மார்த்தா! இது எனக்குச் சரியான பாடம். இனி மாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டும்'' என்றார்.

மனைவிக்கு ஒரே மகிழ்ச்சி. பைபிளைக் கொடுத்து விட்டுத் தள்ளி நிற்கிறாள். அவர் பைபிள் மீது கை வைத்து மேலே பார்த்தவாறு, ''இது சத்தியம். இனி மேல் எரியும் மெழுகுவர்த்தியை ஊதி அணைக்கவே மாட்டேன்.'' என்றார்.

மனம் தந்திரம் மிக்கது. எனவே நீ மனம் கழிந்த நிலைக்குப் போக வேண்டும். தியானம் என்பதே அதைப் பற்றியதுதான்.

கடைசி வினா

**அன்புக்குரிய குருவே,**

**ஜோக்குகள் சொல்லும் முதல் மகான் நீங்களாகத்தான் இருக்க வேண்டும். அது ஏன் அப்படி?**

**கரீமா!** உனக்கு ஒரு கதை சொல்ல வேண்டும். டால்முட் கதை ஒன்று. ஹஸ்ஸித் மகான் பால் ஷெம்முக்கு இது மிகப் பிடித்தமான கதை.



தாபி பரூ ஒரு கடைவீதிக்கு அடிக்கடி போவார். தீர்க்கதரிசி எலிஜா அங்கே அவருக்குத் தோன்றுவார். ஆன்மிகத்தில் முதிர்த்தவர்கள் கண்ணுக்கு அவர் தென்படுவார் என்பது நம்பிக்கை.

ஒரு முறை பரூ அவரிடம், ''இங்கே இருப்பவர்களில் யாருக்காவது இனிவரும் உலகில் இடமிருக்குமா?'' என்ற கேட்டார்.

அவர், ''இல்லை'' என்றார்.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது இருவர் அந்த வழியாகப் போனார்கள். எலிஜா, ''இனி வரும் உலகில் இவர்களுக்கு இடம் இருக்கும்'' என்றார்.

பரூ அவர்களிடம் போய், ''நீங்கள் என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

அவர்கள் ''நாங்கள் கோமாளிகள். யாராவது வருத்தமாக இருந்தால் மகிழ்ச்சியடைய வைக்கிறோம்'' என்றார்கள்.

கடவுளுக்குச் சிரிப்பு மிகப் பிடித்தமானது. கடவுள் மகிழ்ச்சியாக இருப்பவர்களை நேசிக்கிறார். அவருக்கு உங்களுடைய துயரமான முகங்களைப் பார்க்கப் பிடிக்காது.

பால் ஷெம் மரணப்படுக்கையில் இருந்தபோது ஒருவர், ''இறைவனைச் சந்திக்கத் தயாராகிவிட்டீர்களா?'' என்று கேட்டார்.



அவர், ''நான் எப்போதும்தான் தயாராக இருக்கிறேன். இந்தக் கணத்தில் தயாராக இருப்பதென்பது இல்லை. எப்போதும்தான் தயாராக இருந்திருக்கிறேன். அவர் எந்தக் கணத்திலும் என்னை அழைத்திருக்கலாம்'' என்றார்.

''அந்தத் தயார் நிலை என்பது என்ன?''

''எனக்குச் சில அருமையான ஜோக்குகள் தெரியும். அவருக்கு அதைச் சொல்ல வேண்டும். அவருக்குப் பிடிக்கும் என்பது எனக்குத் தெரியும். என்னோடு சேர்ந்து சிரிப்பார் என்பது எனக்குத் தெரியும். அவருக்கு வேறு எதைக் கொடுக்கப் போகிறேன்? இந்த உலகம் முழுக்க அவருடையது. இந்தப் பிரபஞ்சம் முழுக்க அவருடையது. நான் அவருடையவன். எதை அவருக்குக் கொடுக்க முடியும். சில ஜோக்குகளைத்தான்.''

யூதப் பாரம்ப்ரியத்தில் வந்த மிகப்பெரிய புத்தர்களில் பால் ஷெம் ஒருவர். தம் சீடர்களின் அன்புக்குப் பாத்திரமானவர். ஹஸிதிஸம் வகுத்தவர்.

முதல் முதலாக ஜோக்குகள் சொல்கிறவன் என்று என்னை எடுத்துக் கொள்ளாதே. அப்படி நிறையப் பேர் இருந்திருக்கிறார்கள். ஆனால் மக்கள் துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். ஜோக்குகள் சொல்லி மகிழ வைப்ப வர்களை மறந்து விடுகிறார்கள். துயரமாக இருந்தவர்களை மட்டுமே நினைவில் வைத்திருக்கிறார்கள்.

எல்லோருமே துயரமானவர்கள். எனவே துயரமானவர் களோடு அவர்களுக்கு ஒரு சௌஜன்யம் இருக்கிறது. சோகமான புத்தர்களையே நினைவில் வைத்திருக்கிறார்கள். அவர் சோகமாக இருக்காவிட்டாலும் அவர்கள் அவரைச் சோகமாகச் சித்தரித்துக் கொள்கிறார்கள். அவரவர் மனதில்



கட்டுக் கதைகளை உருவாக்கிக் கொண்டு புத்தர்களை சோகமானவர்கள் என்று கற்பித்துக் கொள்கிறார்கள்.

மகாவீரர் சிரித்தார் என்று சொன்னால் சமணன் ஒருவனுக்கு உடனே கோபம் வந்து விடும். சிரிப்பு என்பது இந்த உலகம் பாற்பட்டது. மகாவீரர் எப்படிச் சிரித்திருக்க முடியும்? பௌத்தர்கள், குறிப்பாக ஹீணயான பௌத்தர்கள், புத்தர் சிரித்தார் என்று நான் சொன்னால் கோபம் கொள்வார்கள்.

எனக்கு புத்தர் மேல் வெகு பிரியம். என்னளவுக்கு அவரை நேசிக்கிறவர்கள் வேறு யாரும் இருக்க முடியாது. ஆனால் செய்தி பத்திரிகையில் படித்தேன். இந்திய பௌத்த சங்கத்தின் தலைவர் என்னைப் பற்றி ஒரு கேள்வியைப் பார்லிமெண்டில் எழுப்பப் போகிறாராம். எனக்குப் புரிந்து கொள்ள முடிகிறது. புத்தருக்கு அவருக்கே உரிய இயல்புகளோடு கூடிய வடிவத்தைத் தந்து கொண்டிருக்கிறேன். இவர்களுக்குப் பொறுக்க முடியவில்லை. அவர் இருந்தபோது எப்படி இருந்தாரோ அப்படியே அவரை உங்களுக்குப் பரிச்சயம் செய்து வைக்கப் போகிறேன். இவர்கள் எல்லோருமாக அவருடைய வடிவத்தையே வக்கிரப்படுத்தி வைத்திருக்கிறார்கள். அவரைச் சிரிக்க விட மாட்டேன் என்கிறார்கள். சோகமாகவே இருக்க வைத்திருக்கிறார்கள். அவர் சிரித்தார் என்றால் இவர்கள் பார்லிமெண்டில் அதைப் பற்றிக் கேள்விகள் கேட்பார்கள்.

ஆன்மிகத்தை அவரவர் கருத்துக்கு உடன்பட்டு வாழ நான் தயாராக இல்லை என்பதால் அவர்களுக்குக் கோபம். தனிப்பட்ட முறையிலாவது சொல்ல வேண்டும். யேசு நன்றாகச் சிரிக்கத் தெரிந்தவர். ஆனால் கிறித்துவர்களிடம்



போய்ச் சொல்லிவிடாதீர்கள். அவர்களால் புரிந்து கொள்ள முடியாது. அவர்களுக்குச் சிலுவையில் அறையப்பட்ட கிறித்துவைத்தான் தெரியும். பார்க்கப் போனால் அவர்கள் மரணத்தைத்தான் வழிபட்டுக் கொண்டிருக்கிறார்கள். யேசுவை அல்ல. அவர்கள் சிலுவையை வழிபடுகிறார்கள். யேசுவை அல்ல. எனவே அவர்கள் மதம் கிறித்துவம் அல்ல. சிலுவையிஸம்தான் அது. கிறித்துவுக்கும் அதற்கும் எந்தச் சங்காப்தமும் கிடையாது. எனக்கு அவரைத் தெரியும். அந்த மனிதரை நேருக்கு நேராகத் தெரியும்.

அவருக்கு வாழ்வில் நல்லது எல்லாம் பிடிக்கும். ஜோக்குகளை அவர் எப்படித் தவிர்த்திருக்க முடியும்? கடவுளின் வார்த்தைகளை அல்லவா அவர் பேசிக் கொண்டிருந்தார்! எனவே அவருக்குப் பேசப் பிடிக்கும். அவர் இந்த உலகில் வேர் பதித்தவர். சூதாடிகளோடு, குடிகாரர்களோடு, விபச்சாரிகளோடு கூடப் பழகியிருக்கிறார். இந்த முட்டாள்களைக் கண்டு அவருக்குப் பயமே இருந்ததில்லை. அதனால்தான் அவர் சிலுவையில் சாக வேண்டி வந்தது.

அதனால்தான் என்னையும் நிந்திக்கிறார்கள்.

இன்றைக்கு இது போதும்...





கொஞ்ச நேரத்துக்கு அஞ்ஞானியின் சில்மிஷம்
தேனைப் போல இனிக்கிறது.
முடிவிலோ கசந்து போகிறது.
அடாடா எவ்வளவுதான் துயருறுகிறான்.

மாதக்கணக்கில் விரதமிருக்கிறான்.
புல் நுனி கொள்ளுமளவு மட்டும் உண்கிறான்.
என்றாலும் நெறியே தன் உணவாகிப் போன
மகானுக்கருகே அவன் பைசா பெறமாட்டான்.

பால் புளிக்க நேரம் ஆகிறது.
அப்படியேதான் அஞ்ஞானியின் சில்மிஷமும்
தன் விளைவைக் காட்டக் காலம் பிடிக்கிறது.
தீக்கங்காக அவனுள் குமுறிக் கிடக்கிறது.

அஞ்ஞானி கற்றுக் கொண்ட எல்லாமும்
அவனை மந்தமே ஆக்குகிறது.
அறிவு அவன் மனதை வகிர்ந்து விடுகிறது.

தனக்கு அங்கீகாரம் வேண்டும் என்கிறானே!
மற்றவருக்கு முன் ஓரிடம்
மற்றவருக்கு மேல் ஓரிடம்.



''என் பணியைத் தெரிந்து கொள்ளட்டும்.
திசை தெரிய என்னிடம் வரட்டும்.''
இப்படித்தான் அவனுடைய ஆசைகள்.
இப்படியானதே அவனுடைய கர்வம்.

ஒரு வழியில் போனால் செல்வமும் புகழும்,
மறு வழியில் போனால் அந்தம்.

அங்கீகாரம் தேடி அலையாதே.
ஞானியைப் பின்பற்று
விடுபட்டு விடு.

**கௌதம** புத்தர் கடைசியாகச் சொல்லிப் போன வார்த்தைகள் ''எனக்கு நீயே ஒளியாகிப் போவாயாக!'' என்பதாகும். மற்றவரைப் பின்பற்றாதே. பிறருடைய நகலாகிப் போகாதே. ஏனென்றால் பிறரைப் பின்பற்றுவதும் பிறருக்கு நகலாகிப் போவதும் அஞ்ஞானத்துக்கு இட்டுச் சென்றிருக்கும்.

பிறக்கும்போதே பிரமாதமான விவேகத்துக்கான சாத்தியத்தோடு வந்திருக்கிறாய். உனக்குள் ஓர் ஒளியோடு பிறந்திருக்கிறாய். உன்னை நெறிப்படுத்தும் அந்த மெல்லிய அமைதியான குரலைக் கேள். வேறு யாரும் உன்னை நெறிப்படுத்த முடியாது. நீ உன்னளவில் நிகரற்றவன் என்ற வகையில் யாரும் உன் வாழ்வுக்கு பிரதியாக முடியாது. உன்னைப் போல அச்சு அசலாக வேறு யாரும் இருந்ததில்லை. யாரும் உன்னைப் போல அச்சு அசலாக இருக்க வரப்போவதில்லை. உனக்கு மாற்று என்று யாருமே இல்லை என்பது உன்னுடைய பெருமிதம். உன்னுடைய கம்பீரம். நீ நீயாக இருக்கிறாய் என்பதும் வேறு யாராகவும் இல்லை என்பதும்...



பிறரைப் பின்பற்றுகிறவன் பொய்யானவனாகிப் போகிறான். அவன் ஒரு போலி. அவன் இயந்திரத்தனமாகிப் போகிறான். பிறர் கண்களுக்கு அவன் மிகப் பெரிய முனிவனாகத் தெரியலாம். ஆனால் தனக்குள் அஞ்ஞானியாகவன்றி வேறு எவராகவும் இருக்க மாட்டான். பிறர் மதிக்க வாழ்வான். ஆனால் அது மேம்போக்கில்தான். தோல் பருமானம் கூட இல்லை. கொஞ்சம் கீறிப்பார். உள்ளே அவன் முழுக்க வேறுபட்டவனாக இருப்பான். வெளியே எப்படித் தெரிகிறானோ அதற்குச் சிறிதும் சம்பந்தம் இல்லாதவனாக...

பிறரைப் பின்பற்றும்போது அருமையானவன் என்ற பெயர் எடுக்கலாம். ஆனால் அருமையான பிரக்ஞை உடையவனாக முடியாது. அருமையான பிரக்ஞை இல்லாதவரை நீ சுதந்திரமானவனாக இருக்க முடியாது. உன்னுடைய சிறைகளை மாற்றிக் கொண்டிருக்கலாம். உன்னைக் கட்டி வைத்திருக்கும் கயிறுகளை மாற்றிக் கொண்டிருக்கலாம். உன்னுடைய அடிமைத்தனங்களை மாற்றிக் கொண்டிருக்கலாம். ஆனால் விடுபட்டவனாக முடியாது.

ஓர் இந்துவாகவோ முகம்மதியனாகவோ கிறித்துவனாகவோ சமணனாகவோ இருப்பது எந்தப் பயனையும் தராது. சமணனாக இருப்பது மகாவீரரைப் பின்பற்றுவது. மகாவீரரைப் போல யாரும் இல்லை. இருக்கப் போவதும் இல்லை. அவரைப் பின்பற்றுவதன் மூலம் நீ ஒரு போலி அடையாளத்தைக் கற்பித்துக் கொள்ளப் போகிறாய்.

உன் மெய்ம்மையை இழந்து விடுவாய். விசுவாசத்தை இழந்து விடுவாய். உனக்கே நீ உண்மையானவனாக இருக்க மாட்டாய். செயற்கையாய், இயல்புக்குப் புறம்பானவனாய், ஆகிப் போய் விடுவாய். அப்படி ஆகிப் போவது மிக மலினனாகிப் போவது. முட்டாளும் மடையனுமாகிப் போவது.

உன் பிரக்ஞையின் ஒளியில் வாழ்வதே ஞானம் என்கிறார் புத்தர். அஞ்ஞானம் என்பது பிறரைப் பின்பற்றுவது. பிறரைப் போல நடிப்பது. பிறருக்கு நிழலாகிப் போவது.



உண்மையான மகான் மகான்களை உருவாக்குகிறார். தன்னைப் பின்பற்றுகிறவர்களை அல்ல. உண்மையான மகான் உன்னை உன்னிடமே செலுத்துகிறார். தன்னைச் சார்ந்திருக்கக் கூடாது என்பதிலேயே அவருடைய எல்லா முயற்சியும் இருக்கிறது. பல நூறு ஆண்டுகளாகச் சார்புடையவனாகவே இருந்து விட்டாயல்லவா! அதனால் எங்கும் போய்ச் சேர முடியாதவனாகக் கிடக்கிறாயல்லவா! இன்னமும் ஆன்ம இருட்டிலேயே கிடக்கிறாயல்லவா! அதனால்தான் தன்னைச் சார்ந்தவனாக இனியும் நீ இருக்கக் கூடாது என்கிறார்.

உன் உள்ளொளியே உனக்குச் சூரியோதயமாக முடியும். பொய்யான குரு தன்னை நீ பின்பற்ற வேண்டும் என்கிறார். தன்னைப் போல இருக்க வேண்டும் என்கிறார். தன்னுடைய கார்பன் பிரதியாக இருக்க வேண்டும் என்கிறார்.

உண்மையான குரு உன்னை ஒரு கார்பன் பிரதியாக இருக்க விடமாட்டார். நீ மூலமாக இருக்க வேண்டும் என்கிறார். அவருக்கு உன் மேல் அளவு கடந்த பிரியம். எப்படி அவர் நீ ஒரு பிரதியாக இருக்க வேண்டும் என்று நினைப்பார்? அவருக்கு உன் மேல் அளவு கடந்த கருணை. நீ வெகு சுதந்திரமாக இருக்க வேண்டும் என்கிறார். எல்லாச் சார்புகளில் இருந்தும் சுதந்திரமானவனாக...

ஆனால் சாமானியன் சுதந்திரமாக இருக்க விரும்புவதில்லை. அவன் யாரையாவது சார்ந்திருக்கவே விரும்புகிறான். யாராவது தன்னை வழிநடத்த வேண்டும் என்கிறான். ஏனென்கிறாயா? அப்போதுதானே பொறுப்பை இன்னொருவர் மேல் ஏற்றி வைத்து விட்டு இவன்



நிம்மதியாக இருக்க முடியும்! அப்படி உன் பொறுப்பை நீ தட்டிக் கழித்துக் கொண்டிருக்கும் வரைக்கும் விவேகமுடையவன் ஆவதற்கான சாத்தியமே இல்லாமல் போய்விடுகிறது. பொறுப்பும் பொறுப்பின் சவாலுமே ஞானத்துக்கு மார்க்கம்.

வாழ்வை அதன் அத்தனை பிரச்சனைகளோடும் ஏற்றுக் கொள்ள வேண்டும். எந்தப் பாதுகாப்புக் கவசமும் இல்லாமல் வாழ்வுக்குள் போக வேண்டும். தன் நெறியைத் தேடி அலைய வேண்டும். உன்னைக் கண்டுபிடித்துக் கொள்ள வாழ்க்கை ஒரு சந்தர்ப்பம், ஒரு சவால், ஆனால் அஞ்ஞானி கடினமான வழியில் போகத் தயாராக இல்லை. அவனுக்குக் குறுக்கு வழிகள் வேண்டும். ''புத்தர்தான் கண்டுபிடித்து விட்டாரே. நான் ஏன் கவலைப்பட வேண்டும்? அவர் எப்படி இருந்தார் என்பதைப் பார்த்து அப்படியே இருந்து விட்டால் போயிற்று. யேசு சாதித்து விட்டாரே. நான் ஏன் தேடி அலைய வேண்டும்? யேசுவின் நிழலாகிவிட்டால் போதுமே! அவர் எங்கே போனாலும் பின்னாலேயே போனால் போயிற்று'' என்கிறான்.

ஆனால் பிறருக்குப் பின்னால் போய் நீ எப்படி அறிந்து கொள்ளப் போகிறாய்? உன்னுடைய விவேகம் வெடித்துக் கிளம்பச் சந்தர்ப்பமே தரமாட்டாய். அதற்கு வாழ்க்கை ஒரு சவாலாக இருக்க வேண்டும். ஒரு சாகசமாக இருக்க வேண்டும். விவேகம் வெளிப்பட எப்படித் துணிந்து பரிச்சயமில்லாததற்குள் போவது என்பது தெரிந்திருக்க வேண்டும். விவேகம் மட்டுமே உன்னைக் காப்பாற்ற போகிறது. வேறு யாரும் அல்ல. உன் விவேகம். உன் விழிப்புணர்வு. அதுவே உன் நிர்வாணமாக முடியும்.

உனக்கு நீயே ஒளியாக இரு. அப்போது ஞானியாவாய். மற்றவர்களை உன்னுடைய தலைவர்களாகவும் வழிகாட்டிகளாகவும் கொண்டால் நீ அஞ்ஞானியாகவே



இருப்பாய். வாழ்வின் அனைத்துப் பொக்கிஷங்களையும் இழந்து விடுவாய். அவை உன்னுடையவை. அது எப்படிப் பிறருடைய குணாதிசயங்கள் நீ பின்பற்றுவதற்கானவை என்று கொள்வது?

ஒரு புத்தர் தன் வழியில் வாழ்கிறார். மகாவீரர் அவரிடம் இருந்து வித்தியாசமானவர். யேசு இன்னொரு வகையில் வித்தியாசமானவர். முகம்மது ஒரு முகம்மதுவாகத்தான் இருப்பார். மகாவீரராக அல்ல. யாரை நீ பின்பற்றப் போகிறாய்? உன்னுடைய வாழ்வையும் விதியையும் பிறப்பெனும் விபத்து தீர்மானிக்க வேண்டும் என்கிறாயா? அப்படியானால் நீ சந்தர்ப்ப வசமாக வந்து சேர்ந்தவனாகத்தான் இருப்பாய். அஞ்ஞானி அப்படி சந்தர்ப்பவசமாக வந்து இருப்பவன்.

ஞானி சந்தர்ப்ப வசமாக வந்து இருப்பவர் அல்ல. ஓர் இந்துக் குடும்பத்தில் பிறந்ததாலேயே இந்துவாக இருக்க மாட்டார். கிறித்துவப் பெற்றோருக்குப் பிறந்து விட்டதாலேயே கிறித்துவனாக இருக்க மாட்டார். ருஷ்யாவில் பிறந்து விட்டதாலேயே கம்யூனிஸ்டாக இருக்க மாட்டார். அவர் தேடுகிறவர். அவர் என்ன ஏது என்று விசாரிக்கிறவர்.

தேடுகிறவருக்கு மட்டுமே வாழ்க்கை பிரமாதத்துக்கு அருமையான யாத்திரையாகிறது.

தேடுங்கள் கிடைக்கும். கேளுங்கள் கிடைக்கும். தட்டுங்கள் திறக்கப்படும் என்கிறார் யேசு.

எனக்குப் பின்னால் வா என்று சொல்லவில்லை. கிறித்துவனாக இரு. கதவுகள் திறந்துவிடும் என்று சொல்லவில்லை. நான் கதவைத் தட்டிவிட்டேன். உங்களுக்காகத் திறந்திருக்கின்றன என்று சொல்லவில்லை. தட்டுங்கள். கதவு உங்களுக்காக திறக்கப்படும் என்கிறார்.



ஒவ்வொருவரும் ஒவ்வொரு கதவு வழியாகப் போக வேண்டியிருப்பதால் அவரவர் தட்ட வேண்டி இருக்கிறது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தனி மனிதர். பிரத்தியேகமானவர்.

இதுதான் உன்னுடைய கீர்த்தியே. இதை மறுத்து விடாதே. அப்படி மறுத்துவிட்டால் நீ அஞ்ஞானியாகவே இருந்து விடுவாய். புத்தர்களிடம் இருந்து கற்றுக் கொள்ள வேண்டாம் என்று பொருள் இல்லை. ஞானிகளிடமிருந்து கற்றுக் கொள். அவர்களுடைய தத்துவ மணத்தை முகர்ந்து விடு. அவர்களுடைய கண்களில் இருந்து பருகு. புத்தம் புதிய ஆனந்த ஊற்றுகளில் இருந்து பருகு. அவர்களோடு இரு. அவர்களுடைய இசையோடு வயப்பட்டுப் போய்விடு. அவர்களுடைய சுருதி சுத்தமான இசையைக் கவனி.

உன்னைப் போல ஒரு மனிதர் சாதித்து விட்டாரே. எனவே நீயும் சாதிக்க முடியும் என்ற பேரானந்தம் உன்னை நிறைக்கட்டும். உன்னைப் போல ரத்தமும் சதையுமான ஒருவர் ஞானியாகிவிட்டாரே. எனவே உனக்கும் ஞான சித்தி கிடைக்கும் என்று மெய்சிலிர்த்துப் போய்விடு.

ஒரு புத்தரைப் பின்தொடர வேண்டும் என்பதில்லை. புரிந்து கொள்ள வேண்டும். ஒரு புத்தரைப் பார்த்து நகலாக வேண்டும் என்பதில்லை. அவர் சொல்வதைக் கவனித்துக் கேட்டுக் கொள்ள வேண்டும். ஆழ்ந்த மௌனத்தில், அன்பில், நம்பிக்கையில் கவனித்துக் கேட்க வேண்டும். ஒரு புத்தரை எந்த அளவுக்குப் புரிந்து கொள்கிறாயோ அந்த அளவுக்கு அவர் வெளியே இருந்தல்ல - உள்ளே இருந்து - உன்னுடைய இருத்தலின் அடி ஆழத்திலிருந்தே பேசுகிறார் என்பதைப் புரிந்து கொள்வாய். உன்னுடைய அசலான முகத்தைப் பிரதிபலிக்கும் ஆடி அவர். ஆனால் ஓர் ஆடி மட்டுமே. எனவே ஆடியைப் பிடித்துக் கொண்டு தொங்கிக்



கொண்டிருந்துவிடாதே. பிரதிபலிக்கத் தெரிவது உன் அசலான முகம் அல்ல.

புத்தரின் இந்தச் சூத்திரங்கள் மிக உயர்வானவை. தியானத்தோடு அவற்றைப் படித்துப் பார். அப்படி நான் சொல்லும் போது தர்க்க மனோபாவத்தோடு போகாதே என்று சொல்கிறேன். கவனிப்பதற்கு அதுவல்ல வழி. ஏற்றுக் கொள்ளும் மனோபாவத்தோடு கேள். பெண்மையின் நளினத்தோடு போ. உன்னைச் சுற்றி ஒரு வேலி அமைத்துக் கொண்டு போகாதே. கவசங்களைப் பூட்டிக் கொண்டு போகாதே. சொல்வதை வியாக்கியானம் செய்வதற்கு உன் புத்தியைக் கொண்டு போகாதே.

மனதை ஒரு புறம் வைத்துவிடு. இந்தச் சூத்திரங்களோடு நெஞ்சம் நடனமாடட்டும். தியானத்தோடு போ என்று சொல்லும் போது இதைத்தான் சொல்கிறேன். நெஞ்சம் கொண்டாடட்டும். அந்தக் கொண்டாட்டத்தில் முற்றிலும் வேறு வகையான புரிதல் பிறக்கட்டும். புத்தியின் வழியில் அல்ல - விவேகத்தின் வழியில்.

நெஞ்சத்தைக் கொண்டு கவனிக்கும்போது விஷய ஞானம் பெறுவதில்லை. மேலும் மேலும் மெய்ஞ்ஞானம் பெறுகிறாய். புத்தியைக் கொண்டு கேட்கிறாயா? சரிதான். உன்னுடைய விருப்பு வெறுப்புகளோடு கலந்து நீ கேட்டது அலங்கோலமாகிப் போய்விடும். ஏற்கெனவே நீ செய்து வைத்திருக்கும் முடிவுகள் உன்னைத் திசை திருப்பிவிடும். எதைக் கேட்டாலும் அதற்கு உன் புத்தி ஒரு நிறத்தைத் தந்துவிடும்.

முதலாவதாக, சொல்வதை நீ கவனிக்க மாட்டாய். உன் புத்தி இரைச்சல் போட்டுக் கொண்டிருக்க அந்த இரைச்சலைத்தான் கேட்டுக் கொண்டிருப்பாய். இரண்டாவதாக, நீ கேட்பதெல்லாம் உன் விஷய ஞானமாகிப் போகும். மெய்ஞ்ஞானமாகாது. விஷய ஞானம்



மேம்போக்கானது. அது ஆழப் போகாது. போக முடியாது. உன்னுடைய அறியாமையை மறைத்துக் கொள்ள விஷய ஞானம் ஒரு திரை. அறியாமையை அது அழிப்பதில்லை. ஞானம் ஒளிமயமானது. இருட்டை அகற்றுவது.

ஞானம் எப்போதுமே நெஞ்சத்தினுடையது. புத்தியினுடையதல்ல. ஒரு புத்தரிடம் போகும்போது புத்தியைக் கழித்து விட்டுப் போ. உன் சக்தி முழுக்க வேறான மார்க்கத்தில் போக வேண்டும். நெஞ்சத்தின் வழியே போக வேண்டும். இதயத் துடிப்பின் வழியே கேள். பிரமாதமான இசையைக் கேட்பதைப் போல ஒன்றிப் போய்க் கேள். இதைவிடச் சிறந்த இசை வேறு என்ன இருக்க முடியும்?

இந்தச் சூத்திரங்கள் மிகப் பிரமாதமான கவிதைகள். முடிந்த முடிவான ஜீவிதத்தின் கவிதைகள். ஞானம் சித்தித்த பிரக்ஞை எனும் குளத்தில் பூத்த தாமரை மலர்கள். கவனமாகக் கேள். தியானத்தோடு கேள். அன்போடு கேள். ஆழ்ந்த நம்பிக்கையோடு கேள். பெரும் பயன் பெறுவாய். ஒரு வரமாகப் பெறுவாய்.

முதல் சூத்திரம்

**கொஞ்ச நேரத்துக்கு அஞ்ஞானியின் சில்மிஷம்**
**தேனைப் போல இனிக்கிறது.**
**முடிவிலோ கசந்து போகிறது.**
**அடாடா எவ்வளவுதான் துயருறுகிறான்!**

பௌத்த நீதிக்கதை ஒன்று இருக்கிறது. புத்தருக்கு அதைத் திரும்ப திரும்பச் சொல்வதில் பிரியம்.

ஒருவனை எதிரிகள் துரத்துகிறார்கள். நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய குதிரைகளின் குளம்பொலி கேட்கும் தூரத்துக்கு வந்துவிட்டார்கள். இனி மரணம்தான். தப்பிக்கவும் வழியே



இல்லை. அவன் வந்த சாலை முடிந்துவிட்டது. எதிரே பெரும் பள்ளத்தாக்கு. குதித்தால் மரணம்தான். திரும்பிப் போகவும் முடியாது. எதிரிகள் இருக்கிறார்களே. குதித்துப் பார்க்கலாமே என்று நினைக்கிறான். உயிரோடு முடவனாக இருப்பது எதிரிகள் கையில் சிக்கி இறப்பதை விட மேல் என நினைக்கிறான். ஆனால் கீழே பார்த்தால் இரண்டு சிங்கங்கள். பசியோடு இவனைப் பார்த்து நிற்கின்றன.

திரும்பிப் போக முடியாமல் கீழே விழுந்து தப்பிக்கவும் முடியாமல் இடையே ஒரு மரத்தின் வேரைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறான். குளிர்காலத்து விடியற்காலை. கைகள் மரத்துப்போய்விட்டன. சில நிமிடங்கள்தான். கை பிடி தவற அவன் கீழே விழத்தான் போகிறான். ஒவ்வொரு கணமும் மரணம் நிதரிசனமாகிக் கொண்டு வந்தது.

அப்போதுதான் கவனித்தான். அவன் பிடித்துத் தொங்கிக் கொண்டிருந்த மரத்தின் வேரை இரண்டு எலிகள் கடித்துக் கொண்டிருந்தன. ஒன்று வெள்ளெலி. இன்னொன்று கறுப்பு. பகலும் இரவும். ஒவ்வொருவர் வாழ்வின் வேரையும் அரித்துக் கொண்டிருக்கும் காலம். பகலும் இரவும் கழியக் கழிய மரணம் நெருங்கிக் கொண்டே இருக்கிறது.

நிச்சயம் ஓரிரண்டு கணங்களில் அவன் கீழே விழப் போகிறான். வேர்கள் தளர்ந்து கொண்டிருக்கின்றன. எலிகள் மும்முரமாக இருக்கின்றன. கைகள் மரத்துப் போய்க் கொண்டிருக்கின்றன. சிங்கங்கள் பசியோடு உறுமுகின்றன. எதிரிகள் வெகு அருகே வந்து கொண்டிருக்கிறார்கள்.

அப்போது திடீரென மரத்தின் உச்சியில் ஒரு தேன்கூடு இருக்கக் காண்கிறான். தேன் சொட்டுகிறது. எதிரிகளை மறந்து விட்டான். சிங்கங்களை மறந்துவிட்டான். எலிகளை மறந்துவிட்டான். மரத்துக் கொண்டிருக்கும் கைகளை



மறந்துவிட்டான். எல்லாவற்றையும் முழுக்க மறந்து விட்டான். அவன் கவனமெல்லாம் சொட்டும் அந்தத் தேன் துளியின் மீதுதான். வாயைத் திறந்து நாக்கை நீட்டுகிறான். ஆஹா! எவ்வளவு இனிப்பாக இருக்கிறது.

இதுதான் அஞ்ஞானி இருக்கும் வகை. இதுதான் இந்த உலகில் இருக்கும் ஒவ்வொருவனும் இருக்கும் வகை. எவ்வளவு இனிமையாகத் தெரிகிறது! ஆனால் எத்தனை நேரம் இந்த இனிமை நிலைத்திருக்கப் போகிறது? எல்லாத் திசைகளில் இருந்தும் விரைவில் மரணம் வந்து சேரப் போகிறது.

ஆனால் அவனைப் போலத்தான் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். கணநேரத்து இன்பங்களுக்காக வாழ்கிறோம். நாக்குக்குச் சுவை, காமம், பணம், அதிகாரம், கௌரவம் - எல்லாமும் தேன் துளிகள். ஆஹா எவ்வளவு இனிப்பாக இருக்கிறது! அந்தக் கணநேரத்துக்கு என்ன நடக்கப் போகிறது என்பதை நாம் மறந்து விடுகிறோம். அந்தக் கணத்தில் ஆழ்ந்து போய் வாழ்வின் எதார்த்தத்தை உணராது போய்விடுகிறோம். வாழ்க்கை மரணத்தில் வேர் பதித்திருக்கிறது. மறையப் போகிறது.

கொஞ்ச நேரத்துக்கு அஞ்ஞானியின் சில்மிஷம் தேனைப் போல இனிக்கிறது. முடிவிலோ கசந்து போகிறது. அடாடா எவ்வளவுதான் துயருறுகிறான்! என்கிறார் புத்தர்.

உன்னையே கவனித்துப் பார்த்துக் கொள். என்ன செய்து கொண்டிருக்கிறாய் இங்கே? இதுவரை என்ன செய்திருக்கிறாய்? உன்னுடைய வாழ்வில் என்ன இருக்கிறது? ஏதாவது உண்மையாகவே இருக்கப் போவதைச் செய்திருக்கிறாயா? அல்லது கனவில் வாழ்ந்து கொண்டிருக்கிறாயா? ஏதாவது வழியில் நித்தியத்தை அணுகியிருக்கிறாயா? அல்லது எப்போதுமே



அநித்தியமானதைக் கட்டிக் கொண்டிருக்கிறாயா? சத்தியத்தைச் சென்று சேர ஏதாவது திட்டம் வைத்திருக்கிறாயா? அல்லது இந்த உலக இன்பமெனும் மதுவின் போதையிலேயே இருக்கிறாயா? ஒவ்வொரு நாளும் செய்ததையே செய்து கொண்டு... விடிந்தவுடன் கடைவீதிக்குப் போகிறாய். மாலை நேரத்தில் களைத்துப் போய் வீடு திரும்புகிறாய். இதுதானே திரும்பத் திரும்ப நடந்து கொண்டிருக்கிறது? சக்கரம் சுற்றுவதைப் போல. பல பிறவிகளில் இதையேதான் செய்து கொண்டிருந் திருக்கிறாய். எப்போது இதில் சலிப்படையப் போகிறாய்? எப்போது சற்றே சுதாரித்துக் கொள்ளப் போகிறாய்? உன்னுடைய வாழ்வைப் பற்றி ஏதாவது உருப்படியாக எப்போது செய்யப் போகிறாய்? இப்போது செய்து கொண்டிருப்பதெல்லாம் வீணல்லவா?

இனிமை இருக்கிறது என்பதைப் புத்தர் மறுக்கவில்லை. ஆனால் அது அநித்தியமானது. அதற்காகத் துயரங்கள் படவேண்டி இருக்கிறது. கடைசியில் கசந்து போகிறது. உன் வாழ்வை நன்கு கவனித்துப் பார். பணம் சம்பாதிக்கலாம். சம்பாதித்துக் கொண்டிருக்கும் போது பிரமாதமானதாகத் தெரிகிறது. ஆனால் குப்பையைச் சேர்த்து வைத்துக் கொள்வதில் உன் வாழ்வை வீணடித்துக் கொண்டிருக்கிறாய் என்பது அப்போது புரிவதில்லை. வாழ்க்கை விரல் சந்துகளில் நழுவிக் கொண்டிருக்கிறது. அது உனக்குத் தெரியவில்லை. நீ எதைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறாயோ அது மிக முட்டாள்தனமானது என்பது உனக்குப் புரிவதில்லை.

வாழ்வை மறுபடி வாங்கிக் கொள்ள முடியாது. எவ்வளவுதான் செல்வம் இருந்தாலும் ஒரு கணத்தைக் கூடத் திரும்ப வாங்கிக் கொள்ள முடியாது. அதைத் திரும்பத் தனதென்று உரிமை கொண்டாட முடியாது. அவ்வளவு மதிப்பு மிக்க நேரத்தை வீணடித்துக் கொண்டிருக்கிறாய்.



மரணம் ஒன்றுமில்லாததாக்கிவிடும். செல்வத்
குவித்துக் கொண்டிருக்கிறாய். வெறுங்கையே
வந்ததைப் போல வெறுங்கையோடுதான் பே
போகிறாய். உன்னோடு இருக்கப் போகாத ஒன்றுச்
உன் வாழ்க்கை முழுக்க வீணடிக்கிறாய். அதிகா
அரசியல், கௌரவம் என்று இவற்றைத் தேடி அலைந்
ஆனால் உன்னுடைய நித்தியமான எதார்த்தத்தை ஒரு க
கூடச் சுவைத்துப் பார்த்ததில்லை. மரணமற்ற எதை
சுவைத்துப் பார்த்ததில்லை.

இதைத்தான் புத்தர் அஞ்ஞானியின் போக்கு என்கி
எல்லாமும் கசந்து போகப் போகின்றன. காதல், சிநேகி
குடும்பம், வியாபாரம், அரசியல் என்று எல்லாமும்
கடைசியில் அவை விஷமாகிப் போகின்றன. க
போகின்றன. விழித்தவன் இதை உணர்ந்து நேரம் இருக்
போதே இதைப் பற்றி ஏதாவது செய்ய வேண்டும் எ
முனைகிறான்.

**மாதக்கணக்கில் விரதமிருக்கிறான்.**
**புல் நுனி கொள்ளுமளவு மட்டும் உண்கிற**
**என்றாலும் நெறியே தன் உணவாகிப் போ**
**மகானுக்கருகே அவன் பைசா பெறமாட்டா**

கடுந்துறவியாகிவிடு என்று புத்தர் சொல்லவில்
இந்த உலகைத் துறந்துவிடு என்றோ, உணவைத் துறந்து
என்றோ, பட்டினி கிடந்து உடலைச் சித்திரவதை செ
கொள் என்றோ அவர் சொல்லவில்லை. அப்படி அவ
சொல்லவும் முடியாது. பெரிய பாடத்தைக் க
கொண்டவர் அவர். இதை எல்லாம் கைக் கொண்டு ப
கற்றுக் கொண்டவர்.

தன் மாளிகையை விட்டுக் கிளம்பிய அவர்
வருடங்கள் பட்டினி, விரதம் என்று தம்மைச் சித்திர



செய்து கொண்டார். ஏறக்குறைய மரணத்தின் விளிம்புக்கே போய்விட்டார். வெகுவாகத்தான் தம்மை வருத்திக் கொண்டார். ஞானம் பெற்ற அந்தக் கணம், ''என்ன செய்து கொண்டிருக்கிறேன் நான்? முதலில் எல்லா இன்பங்களையும் துய்த்தேன். பகலும் இரவும் மதுவும் மாதுவும் உணவும் உடையும் மாளிகையும் தேரும் வேட்டையுமாகக் கழித்தேன். ஒரு ராஜகுமாரனின் வாழ்க்கை வியர்த்தம் என்று தெரிந்து கொள்ளும் வரை அப்படியே இருந்தேன்.''

மாளிகையைத் துறந்து அவர் போனபோது அவருக்கு வயது இருபத்து ஒன்பது. வெகுகூட்டிகையானவராக இருந்திருக்க வேண்டும். எழுபது எண்பது ஆண்டுகள் வாழ்ந்தும் வாழ்வின் வியர்த்தத்தைப் புரிந்து கொள்ளாத வர்கள் இருக்கிறார்கள். அவருக்கோ அதைப் புரிந்து கொண்டபோது வயது இருபத்து ஒன்பதே. கூரிய மனம் கொண்டவராக இருந்திருக்க வேண்டும். தாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதைக் கவனித்துக் கொண்டே இருந்திருக்க வேண்டும். சிந்தனை வயப்பட்டவராக இருந்திருக்க வேண்டும். திடீரென அவருக்கு ஞான ஒளி கிடைத்தது. ''இது எல்லாம் குப்பை. இந்தப் பெண்கள், மது, வேட்டை, இந்த இன்பம் எல்லாமும் எனக்கு நித்தியமான எதையும் தரப் போவதில்லை.''

கிழக்கு எப்போதுமே நித்தியத்தைத் தேடிக் கொண்டிருந்திருக்கிறது. சத்தியத்தை நித்தியமானது என்றுதான் பார்க்கிறோம். அசத்தியமா? நிலையில்லாதது அசத்தியம். கீழ்த்திசை மெய்ஞ்ஞானிகள் எதையாவது அசத்தியம் என்று சொன்னால் அது நிலையில்லாதது என்ற பொருளில் சொல்கிறார்கள்.

இல்லாதது என்ற பொருளில் சொல்வதில்லை. அவர்களுக்குத் தெரியும் அது இருக்கிறது என்று. ஆனால்



என்றும் இருக்கப் போவதில்லை என்பதும் தெரியும். சோப்புக் குமிழைப் போல இருக்கிறது. சோப்புக் குமிழைப் பார்க்க முடியும். வெகு அழகாகத்தான் இருக்கிறது. வெய்யிலில் அதைச் சுற்றி ஒரு வானவில் கூடத் தோன்றும்.

சோப்புக் குமிழ் இருக்கிறது. ஆனால் அதனுடைய இருத்தல் நிலையில்லாதது. இல்லை என்று சொல்லு மளவுக்கு நிலையில்லாதது. எனவேதான் இந்த உலகைக் கீழ் திசை மெய்ஞ்ஞானிகள் மாயை என்கிறார்கள். இல்லை என்பது இல்லை. ஆனால் இருப்பது அவ்வளவு குறுகிய வேளை என்பதால் இருக்கிறது இல்லை என்பது அவ்வளவு முக்கியமில்லை என்றாகிப் போகிறது. அதை மாயை என்று கொள்வது பொருந்தும். ஏனென்றால் அப்போதுதான் நீ ஜாக்கிரதையாக் இருப்பாய்.

தான் சோப்புக்குமிழ்களோடு விளையாடிக் கொண்டிருக் கிறேன் என்று தெரிந்து கொள்ள அவருக்கு இருபத்து ஒன்பது வருடங்கள் போதுமானதாக இருந்தன. ராச்சியத்தை துறந்து தப்பி ஓடினார். ஆனால் எப்போதையும் போலவே மனம் நேர் எதிரிடையானதை நோக்கி ஓடுகிறது. மனம் ஒரு கடிகாரத்தின் தொங்கட்டான் போலத்தான். வலது பக்கத்திலிருந்து இடது பக்கம் போவது இடது பக்கத்திலிருந்து வலது பக்கம் வருவதற்குத்தான். எதிரெதில் திசைகள். நடுவில் நிற்பதே இல்லை. அந்த நடுமத்தில்தான் ரகசியமே இருக்கிறது. தொங்கட்டான் நடுவில் நின்று விட்டால் கடிகாரம் நின்றுவிடும். நேரம் நின்றுவிடும். உலகம் நின்றுவிடும். ஆனால் தொங்கட்டானோ வலது இடது, இடது வலது என்று ஆடிக் கொண்டே இருக்கிறது. கடிகாரத்தை ஓடிக் கொண்டே இருக்க வைக்கிறது. நேரத்தை உயிரோடு வைத்திருக்கிறது. நேரம்தான் உலகம்.



நேரத்தைக் கடந்து போய்விடுவது மரண மில்லாததைக் கண்டு கொள்வது. எனவே இந்தியா வில் காலத்துக்கும் மரணத்துக்கும் ஒரே வார்த்தை. கால். இது ஏதோ தற்செயலானதல்ல. இதற்கு ஒரு முக்கியத்துவம் இருக்கிறது.

நேரமே மரணம். ஏனெனில் நேரத்துக்குள் எல்லாமும் நிலையில்லாதவை. ஒரு கணம் இன்னொரு கணமாக மாறிக் கொண்டே இருக்கிறது. அந்தக் கணமும் போய் அதற்கு அடுத்த கணம் வந்துவிடுகிறது. இப்படிப் போய்க் கொண்டே இருப்பது காலம். நேரத்தைக் கடந்து போகும்போது மரணத்தைக் கடந்து போய்விடுகிறாய்.

எதிரெதிர் திசைகளில் மனம் இயங்குகிறது. புத்தரின் மனமும் அப்படியே இயங்கியது. மாளிகையில் இருந்து தப்பித்துப் போனார். அங்கே இருந்த வரை உடலைக் கவனித்துக் கொண்டிருந்தார். அதை விட்டு விலகியவுடன் உடலை வருத்த ஆரம்பித்து விட்டார். அதுவரை நல்ல உணவில் பிரியம் வைத்திருந்தார். இப்போது பட்டினி கிடக்க ஆரம்பித்து விட்டார். நீண்ட விரதங்கள்தான்.

அவருடைய கடுந்துறவுக்காக மக்கள் அவரை மதிக்க ஆரம்பித்து விட்டார்கள். அவரைப் பின் தொடர்ந்தார்கள். மிக அழகானவர். வெகு அழகான சிலரில் ஒருவர். ஆனால் ஆறு வருடங்கள் பட்டினி கிடந்து தன் உடலைக் கெடுத்துக் கொண்டார். கறுத்துப் போனார். மெலிந்து போனார். அசிங்கமாகிப் போனார்.

ஆனால் ஒரு நாள் அவருக்குள் ஓர் ஒளி. "என்ன செய்து கொண்டிருக்கிறேன் நான்? முதலில் சாப்பாட்டுக்கு அடிமையாக இருந்தேன். இப்போதோ பட்டினிக்கு அடிமையாகிப் போனேன். எப்படிப் பார்த்தாலும் சாப்பாடு அப்படியே இருக்கிறது. ஏற்றுக் கொண்டது அல்லது மறுத்தது என்று சாப்பாடு என்றும் என்னோடு இருந்து



கொண்டே இருந்திருக்கிறது. முதலில் காமத்துக்காகப் பெண்கள். இப்போது பிரமச்சரியம் என்ற பெயரில் காமத்தை மறுக்கிறேன். அடிப்படையில் என்னிடம் எந்த வேறுபாடும் இல்லை. இன்னமும் காமத்தோடுதான் இருக்கிறேன். முதலில் அதை நோக்கி ஓடினேன். இப்போது அதை விட்டு ஓடிக் கொண்டேயிருக்கிறேன். ஆனால் காமம் என்னுடைய சிந்தனையில் இருந்து கொண்டே இருந்திருக்கிறது.''

இந்த உணர்வு மிகப் பெரிய காரியம். அந்த உணர்வே அவருடைய ஞானத்துக்குக் களமாகிக் போனது. இதை உணர்ந்து கொண்ட அந்த மாலை நேரம் அவருக்குள் ஏதோ மிக முக்கியமான ஒன்று நடந்தது. தன் மனதின் மடத்தனத்தைக் கண்டு சிரித்துக் கொண்டார். மனதின் தந்திரத்தை எண்ணிச் சிரித்துக் கொண்டார். மனதுக்கு எதிராகப் போய்க் கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டிருந்து விட்டார். ஆனால் அப்படி எதுவும் செய்ய வில்லை. மனது மிகத் தந்திரமாக அவரோடேயே இருந்திருக்கிறது.

அவர் மனம் அவரையே ஏமாற்றிக் கொண்டிருந் திருக்கிறது. பின் வாசல் வழியாக வந்துவிட்டது. வாசல் வழியே முதலில் வந்த மனம் புறக்கடை வழியே வந்தது. புறக்கடை வழியே வரும்போது மனதால் ஆபத்து அதிகமாகிப் போய்விட்டது. வாசல் வழியே வரும்போது என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்பதாவது தெரிந்திருக் கிறது. ஆனால் புறக்கடை வழியாக வரும்போதோ ஒளிந்து கொண்டு வரும்போதோ முக்காடு போட்டுக் கொண்டு வரும்போதோ அது மிக ஆபத்தானதாகிப் போகிறது.

தனக்கு முற்றிலும் எதிரிடையானதை ஆடையாகப் போட்டுக் கொண்டு வரும் மனம் மிகத் தந்திரமானது. இன்பம் துய்ப்பதிலிருந்து கடுந்துறவுக்குப் பாய்கிறது.



லோகாயதவாதியாக இருப்பதிலிருந்து ஆன்மிக வாதியாக வேடம் கட்டிக் கொள்கிறது. இவ்வுலகத்திலிருந்து பரவுலகுக்குத் தாவுகிறது. ஆனால் மனம் மனமாகவே இருக்கிறது. உலகாயதமாக இருந்தாலும் சரி உலகை எதிர்த்துத் துறந்து விட்டாலும் சரி - மனதோடேயே இருக்கிறாய். இது அல்லது அது என்றாலும் இரண்டுமே மனதின் கூறுகளே.

மனம் மறைந்துவிடும்போது தேர்வுகள் செய்யாமல் மனம் மறைந்துவிடும்போது, இது வேண்டும் அல்லது அது வேண்டும் என்று எதையும் தேர்ந்தெடுக்காதபோது, எதற்கும் ஆதரவாகவோ எதிராகவோ இல்லாது போய்விடும்போது மனம் கழிந்த நிலைக்குப் போய்விடுகிறாய். அதுதான் நடுவில் நின்றுவிடுவது.

ஒரு தேர்வு செய்யும்போது வலது பக்கமும் மறு தேர்வு செய்யும்போது இடது பக்கமுமாக நகர்ந்து கொண்டே இருக்கிறாய். இரண்டுமே இரண்டு துருவங்கள். எதையும் தேர்வு செய்யாதபோது நடுமத்தில் நின்று போகிறாய். அப்போதுதான் நிம்மதியான நிச்சலனம் இருக்கிறது. அதுதான் மெய்யான துறவு.

உலகுக்கு எதிரானதல்ல. உடலுக்கும் அதற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அது பிரக்ஞையின் விழிப்பு தேர்வுகளில்லை. எதையும் பிடித்துத் தொங்குவதில்லை. அப்போது உனக்குள் விவேகம் உதிக்கிறது. அதுவரை தூங்கிக் கிடந்த விவேகம் விழித்துக் கொள்கிறது. அடங்கிக் கிடந்த விவேகம் வெளிக் கிளம்புகிறது. உனக்கே நீ ஒளியாகிப் போகிறாய். நீ இனியும் அஞ்ஞானியாக இருப்பதில்லை.

துய்ப்பதில் இருந்து துய்ப்பதற்குப் போவதல்ல ஆன்மிகம். அங்கேதான் எல்லா மதங்களும் திசை தப்பிப் போய்விடுகின்றன.



ஒரு கன்னியாஸ்திரீ. வங்கிக்குப் போய்விட்டு வருகிறார். நன்கொடையாக வந்த பணத்தை வங்கியில் செலுத்திவிட்டு வருகிறார். வழியில் ஒரு கொள்ளையன் மறிக்கிறான். ''உனக்கு நேரம்தான் விரயம் இளைஞனே! என்னிடம் எந்தப் பணமும் இல்லை. எல்லாம் வங்கியில் போட்டுவிட்டு வருகிறேன்.''

''அதையும் தான் பார்த்து விடலாமே!'' அவன் அவளுடைய கறுப்பு அங்கிக்குள் கைவிட்டுத் துழாவுகிறான்.

''ஓ... என்ன செய்கிறாய் நீ? ஓ... ஓ... யேசுவே! மேரியே! ஓ... ஓ... நிறுத்தாதே! உனக்கு நான் ஒரு செக் எழுதித் தருகிறேன்.''

அடக்கி வைப்பதில் எந்தப் பயனும் இல்லை. அடக்கி வைத்ததெல்லாம் சந்தர்ப்பம் பார்த்துக் காத்துக் கிடக்கிறது. உள் மனதுக்குப் போய் அடங்கிக் கிடக்கிறது. எந்தக் கணமும் திரும்பிவிடும். மெதுவாகச் சீண்டினால் போதும் வெடித்துக் கிளம்பிவிடும். அதிலிருந்து விடுதலை இல்லை. அடக்கி வைத்து அதிலிருந்து விடுதலை பெற்றுவிட முடியாது. அடக்கி வைப்பது துய்ப்பதை விட மோசமான அடிமைத்தனம். துய்ப்பவன் ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒரு சமயத்துக்குச் சலித்துப் போவான். அடக்கி வைப்பவனுக்கோ சலிப்பே கிடையாது.

சரியாகப் புரிந்து கொள். துய்ப்பது ஒரு சமயத்துக்கு உனக்குச் சலிப்பைக் கொண்டு வரும். இதையெல்லாம் விட்டு விடலாம் என்று தோன்றும். ஆனால் அடக்கி வைப்பதெல்லாம் உயிர்த்திருக்கிறது. அதை அனுபவிக்க வில்லை எனும்போது அதில் சலிப்புத் தோன்றுவது எப்படி, அனுபவிக்கவில்லை என்பதால் அதன் கவர்ச்சி இருந்து கொண்டே இருக்கிறது. அதன் மனோவசியம் தொடர்கிறது. வெகு ஆழத்தில் பம்மிக் கிடக்கிறது.



அடக்கி வைப்பவர்களை விடத் துய்ப்பவர்கள் ஒரு வகையில் இயல்பானவர்கள். அடக்கி வைப்பவன் நோயாளியாகிப் போகிறான். துய்ப்பவன் இயல்பாக இருக்கிறான். துய்ப்பது உன் இயல்பு. துறப்பது இயல்புக்கு எதிரானது. கீழே இருந்து மேலே போவது சுலபம். இயல்புக்கு எதிராக இருந்து இயல்பின் உயர்வுக்குப் போய்ச் சேர்வது கடினம்.

புத்தர் சத்தியத்தை முடிந்த இயல்பு என்கிறார். ஏஸ் தம்மோ சனந்தனோ. முடிந்த முடிவாகிப் போன இயல்பு, முடிந்த முடிவாகிப் போன நெறி என்று அறிவிக்கிறார். முடிந்த முடிவாகிப் போன நெறி என்பது எது? நித்தியமானது. மரணமற்றது. பரிசுத்தமான பிரக்ஞை.

இயல்பாக இருந்து இந்த முடிவான நெறியை அடைவது சுலபம். ஏனெனில் இயல்பானது நெறியை விடத் தாழ்ந்தது என்றாலும் இயல்பானது. கீழே இருந்து மேலே அடி எடுத்து வைக்க முடியும். கால் வைத்து ஏற ஒரு தளமாகும். ஆனால் இயல்புக்கு மாறானவனாகிப் போகும் அந்தக் கணமே நீ மாறிப் போகிறாய். இயல்பைக் கைவிட்டவனுக்கு உயர்ந்த இயல்பைச் சென்று சேர எந்த வழியும் இருக்கப் போவதில்லை.

எனவே நீ தேர்ந்தெடுத்து தான் ஆக வேண்டும் என்றால் துய்ப்பதைத் தேர்ந்தெடு. துறப்பது என்ற பெயரில் அடக்கி வைக்காதே. மிகச் சிறந்தது தேர்வே செய்யாமல் இருந்து விடுவது. சாட்சியாக இருந்து விடுவது. உன்னுடைய உணர்வுகளுக்கு, ஆசைகளுக்குச் சாட்சியாக இருந்து உன்னை அவற்றோடு அடையாளப்படுத்திக் கொள்ளாமல் இருந்து விடுவது. அவற்றுக்கு எதிராகவோ அல்லது சாதகமாகவோ இல்லாமல். அப்படிச் சாட்சியாக இருப்பதில் எல்லா ஆசைகளையும் எரித்து விடுகிறாய். ஆசைகள் மட்டுமல்ல.



ஆசைகளுக்கு விதைகளாக இருப்பதையும் சேர்த்து எரித்து விடுகிறாய். நிர்பூஜ் ஆகிவிடலாம். விதைகளற்றவன்.

ஆனால் எதிர்மறையைத் தேர்ந்து விடாதே. அடக்கி வைக்க ஆரம்பித்தால் நோயாளியாகி விடுகிறாய். பார்க்கப் போனால் நோயாளிகள்தான் அடக்கி வைக்கும் எண்ண அமைப்புகளுக்கு ஆளாகிப் போகிறார்கள்.

போருக்குப் பின் ஒரு கன்யாஸ்திரீகளின் மடத்தில் இருந்தவர்கள் எல்லோரும் கர்ப்பமடைந்திருக்கிறார்கள். கார்டினல் நேராக வந்து விசாரிக்கிறார். எல்லா கன்யாஸ்திரீகளும் ஜெர்மன் நாட்டு வீரர்களால் கற்பழிக்கப்பட்டு இருக்கிறார்கள் என்பது தெரியவருகிறது.

ஒருத்தி - மெலிந்தவள். உருவத்தில் சின்னவள். அழகற்றவள். கண்டால் எட்டிப் போய்விடலாம் என்றிருப்பவள். ''உன்னை மட்டும் ஏன் யாரும் கற்பழிக்க வில்லை?'' என்று கேட்கிறார். அவள் மட்டுமே கர்ப்பமுறவில்லை.

''நானா? நான் எதிர்த்தேன்'' என்றாள்.

இந்த நோய் பிடித்தவர்கள் ஆயிரம் காரணங்கள் சொல்வார்கள். ஈசாப் கதை ஒன்று தெரியுமா?

நரி திராட்சைகள் புளிக்கின்றன என்றது. எட்டவில்லை அதனால்தான். சுற்று முற்றும் பார்த்து எம்பி எம்பிப் பார்த்தது. எட்டுகிற வழியாகத் தெரியவில்லை. யாரும் அருகே இல்லை. கொஞ்சம் தள்ளிப் போய்ப் பார்த்தது. ஒரு முயல் கவனித்துக் கொண்டே இருக்கக் கண்டது. ஒரு புதருக்குப் பின்னாலிருந்து. நரியைப் பார்த்து, ''அத்தே! என்ன ஆச்சு? திராட்சை எட்டவில்லையா?'' என்றது.

நரி, ''இல்லேல்லே! நல்லா பழுத்துத் தான் இருக்குது. ஆனா புளிக்குது'' என்றது.



திராட்சையை அடைய முடியாதவர்கள் அவை புளிக்கின்றன என்று சொல்லிவிடலாம். அப்படிச் சொல்லி மற்றவர்களை ஏமாற்றலாம். தன்னையே ஏமாற்றிக் கொள்ள முடியுமா? நரிக்கு நன்றாகத் தெரியும் - தனக்கு அவை எட்டவில்லை என்று. ஆனால் ஒரு சமாதானம். ஒரு காரணம். இதுதான் மனதின் தந்திரம்.

ஜேக் ஒரு நாள் மதியம் எதிர்பாராமல் வீட்டுக்கு வந்தான். கதவைத் திறந்து உள்ளே போனான். மனைவிக்கு அருகில் மகன். ''அப்பா! அலமாரிக்குள் திருடன்!'' என்றான் மகன்.

வேகமாகப் போய்த் திறந்து பார்த்தான். தன்னுடைய பங்காளி - உடைகளுக்கு இடையே ஒளிந்து கொண்டு. ''ஸாம்! மத்தியான நேரம் எல்லாம் வீட்டுக்கு வந்து ஏன் மகனைப் பயமுறுத்தறே?''

மனம் காரணங்கள் கற்பிப்பதில் மிகத் தந்திரமானது. பல வழிகளும் தெரிந்து வைத்திருக்கிறது. ஆசைகளை அடக்கி வைக்கத்தான் மனம் சொல்கிறது. அப்படி அடக்கி வைக்கும்போது மனதின் ஆளுமைக்குள் வந்து விடுகிறாய். அனுபவிக்கும் போது மனத்தின் ஆளுமை இல்லாமல் போய்விடுகிறது. மனம் உன்னைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கத்தான் அத்தனையும் செய்கிறது.

புத்தர் தன்னுடைய அனுபவத்தில் இதைத் தெரிந்து கொண்டார். ஆறு வருடச் சித்திரவதை. புத்தர் இந்த உலகை ஒரு புதிய ஆன்மிகத்துக்குக் கொண்டு சென்றார். அவருக்கு முன்னால் யாரும் இந்த விரதங்களாலும் ஜபதபங்களாலும் எந்தப் பயனும் இல்லை என்று சொல்லவே இல்லை. புத்தர் இந்த உலகை ஓர் உயர்ந்த புதிய ஆன்மிகத்துக்கு இட்டுச் சென்றார்.

மானுடப் பிரக்ஞையின் பரிணாமத்தின் சரித்திரத்தில் புத்தர் மிக முக்கியமான மைல்கல். ஆனால் அவரைச்



சரியாகப் புரிந்து கொண்டவர் இல்லாமல் போய் விட்டார்கள். காரணம் வியாக்கியானம் செய்தவர்கள் பழம் பெருச்சாளிகள். அறிஞர்கள், பண்டிதர்கள், பூசாரிகள்.

புத்தருடைய அனுபவத்துக்கு நேர் எதிரிடையாக அவர் சொல்லிப் போனதற்கு வியாக்கியானம் செய்தார்கள். அந்த ஆறு வருடங்களைப் பற்றி அதிகம் பேசினார்கள். அந்த ஆறு வருடங்களைப் பற்றிய விவரங்கள் பௌத்த சாத்திரங்களில் அதிகமாக இருக்கின்றன. படித்துப் பார்த்தால் அந்த ஆறு வருடத்திய ஜபதபங்களாலேயே புத்தர் ஞானம் பெற்றார் என்று சொல்வதைப் போல் இருக்கும்.

ஆனால் அப்படியல்ல. விரதங்களால் அல்ல. விரதங்களைக் கைவிட்டதாலேயே புத்தர் ஞானம் பெற்றார். அவற்றின் மூலமாக அல்ல. அவற்றைக் கழித்து விட்டதன் மூலமே அவர் ஞானியானார்.

ஆனால் குறிப்பாக இந்தியாவில் எழுதப்பட்ட பௌத்த சாத்திரங்களைப் படித்துப் பார்த்தால் தவறான கருத்தையே காண்பாய். மானுடப் பிரக்ஞையை உணர்தலுக்கான புதிய வழிமுறை எதையும் அவர் சொல்லிப் போகவில்லை என்பதைப் போலவே அவை அமைந்திருக்கின்றன. பழைய கடுந்துறவிகளில் அவரும் ஒருவர் என்பதைப் போன்ற கருத்தைத்தான் தருகிறார்கள். என்ன கொஞ்சம் புத்தி சாலியாக, கொஞ்சம் ஏற்கத் தகுந்தபடி சொல்கிறவராக, கொஞ்சம் தர்க்க ரீதியாக, கொஞ்சம் ஆழப் போகிறவராக இருக்கிறார் என்பதைப் போலச் சொல்லிப் போயிருக் கிறார்கள். புதிதாக ஏதுமில்லை என்பது போல.

அதே ஆன்மிகத்தைப் புதிய வார்த்தைகளில் புதிய வாதங்களில் நிறுவுகிறார் என்கிறார்கள். பழைய மது - புதிய புட்டியில். அவ்வளவுதான். இப்படித்தான் புத்தரைக் காண்பிக்கிறார்கள் இந்தியர்கள். இது பொய். புத்தர்



பழையதற்குப் பிரதிநிதியல்ல. அவர் ஒரு புதிய கட்டம். அவர் புதிதாக ஓர் அடி எடுத்து வைத்ததைப் போல இன்று புதிதாக ஓர் அடி எடுத்து வைக்க வேண்டி இருக்கிறது. இதற்குள் இருபத்தைந்து நூற்றாண்டுகள் கழிந்து விட்டன.

என்னுடைய கம்யூன் அந்தப் புதிய அடியாக இருக்கப் போகிறது. மானுடத்தின் பரிணாமத்தில் அடுத்த அடி. மானுடப் பிரக்ஞையில் அடுத்த அடி.

புத்தர் விரதங்களையும் ஜபதபங்களையும் விட்டு விட்டார் என்றாலும் அவற்றை மறுத்து அதிகம் பேசவில்லை. அவரால் முடியவில்லை. ஏனென்றால் அவர் அவற்றில் பல நூற்றாண்டுகளால் ஊறிப் போனவர்களோடு பேச வேண்டி இருந்தது. என்னைப் போலப் பேசியிருந்தால் அவரை யாரும் புரிந்து கொண்டிருக்க மாட்டார்கள்.

என்னையே பலரும் புரிந்து கொள்வதில்லை. இருபத்தைந்து நூற்றாண்டுகள் கழிந்தும் இன்னமும் மக்கள் பழைய இடத்திலேயே சிக்கிக் கொண்டிருக்கிறார்கள். சககாலத்தவனைக் காண்பது மிக அரிதாகப் போய்விட்டது. உடலால் இருபதாம் நூற்றாண்டில் இருக்கிறார்கள். ஆனால் ஆன்மிகத்தில் பல ஆயிரம் ஆண்டுகள் தள்ளி இருக்கிறார்கள்.

புத்தர் இப்படிப் பேச முயற்சியே செய்யவில்லை. தன்னுடைய சீடர்களிடம், ''என்னுடைய விரதஜபதபங்களால் அல்ல நான் ஞானம் பெற்றது. அப்படிச் சொல்வது முட்டாள்தனம்.'' அப்படிச் சொல்லிய சூத்திரங்களை அவர் தனக்கு மிக நெருக்கமான சீடர்களுக்குச் சொல்லிப் போயிருக்கிறார்.

''மாதக்கணக்கில் விரதமிருக்கிறான். புல் நுனி கொள்ளுமளவு மட்டும் உண்கிறான். என்றாலும் நெறியோ தன் உணவாகிப் போன மகானுக்கருகே அவன் பைசா பெறமாட்டான்'' என்று சொல்லியிருக்கிறார்.



நிலைமாற்றம் வேண்டுமா? தம்ம உன் உணவாகட்டும். கடவுளின் நெறி உன் உணவாகட்டும். அதுவே உனக்குப் போஷாக் காகட்டும். யேசு இதையே வேறு விதமாகச் சொல்வார். என்னை உண்டு விடு. என்னைக் குடித்துவிடு. என்னைக் கிரகித்துக் கொள். ஜீரணம் செய்து விடு.

நெறியே தன் உணவாகப் போனவர்கள் என்கிறார் புத்தர். நெறி என்பது தம்ம. ஆன்மிகம். முடிந்த முடிவான சட்டம். இந்த உலகைச் சுருதி கலையாமல் வைத்திருப்பது. இந்தச் சுருதியினை உண்கின்றவர் ஞானம் பெறுகிறார். பட்டினி கிடந்தல்ல. வெகு நுண்மையான இந்த உணவை அருந்தியவர் ஞானம் பெறுகிறார்.

ஆமாம், வெகு நுண்மையான உணவு இருக்கிறதுதான். ரோசாப் பூக்களைப் பார்க்கும்போது அவற்றின் அழகில் ஆழ்ந்து விடு. உனக்கு ஒரு போஷாக்கு கிடைக்கும். நீ பூவைச் சாப்பிடவில்லை. ஆனால் காற்றை நிறைக்கும் அதன் மணம், அதன் ஒளி, காற்றில் அதன் நடனம், கண்ணுக்குத் தெரியாத அதன் மணம் இவை உனக்குச் சக்தி தருகின்றன. இதை உணர்ந்ததில்லையா நீ?

அழகான மலரைப் பார்க்கும் போது ஒரு நிறைவு தோன்றுகிறதே! வானத்தை நிறைத்து நிற்கும் நட்சத்திரங்களைப் பார்க்கும்போது ஏதோ ஒரு சக்தியை உட்கொள்கிறாயே! சூரியோதயம் அல்லது மறையும் சூரியன், அல்லது தூரத்தே கேட்கும் குயிலின் கானம் இவற்றிலிருந்து ஏதோ ஒன்று கிளம்பி உன்னை நிறைக்கக் காண்கிறாயே!

உன்னுடைய உடலுக்கு உணவு தேவை. அப்படியே உன் ஆன்மாவுக்கும் உணவு தேவை. உடலுக்கு ஜட உணவு தேவை. உடல் ஜடப் பொருள்களால் ஆன உலகின் ஒரு பகுதி. ஆன்ம உணவோ கண்ணுக்குத் தெரியாதது. இசையில், கவிதையில், அழகில், நடனத்தில், பிரார்த்தனையில்,

தியானத்தில் இருக்கிறது. உள்ளே போகப் போக ஆன்ம பௌருஷம் பெறுகிறாய்.



ஜட உணவை மறுப்பதால் அல்ல. ஆன்ம உணவான நெறியை உட்கொள்வதால் மட்டுமே ஞானம் சித்திக்கிறது என்கிறார் புத்தர். விநோதமான வார்த்தைகள். தம்மவை உண்பது. தம்ம என்பது என்ன?

ஒருவன் சொன்னான். ''அன்புக்குரிய குருவே. ஏஸ் தம்மோ சனந்தனோ என்று நீங்கள் சொல்லும்போது அவ்வளவு பிரியமாகக் கேட்கிறேன். ஆனால் அதற்குச் சரியான பொருள் என்ன?''

ஆன்மாவின் சுருதி என்று பொருள். ஆன்ம கீதம் என்ற பொருள். முடிவில்லாத நடனம் என்று பொருள். எங்கெங்கும் நிறைந்திருக்கும் கொண்டாட்டம் என்று பொருள். மரங்கள், பறவைகள், மிருகங்கள், ஆறுகள், மலைகள் என்று இயற்கை முழுக்கப் பரவசத்தால் ஆனது.

ஏஸ் தம்மோ சனந்தனோ என்று புத்தர் சொல்லும்போது அதைத்தான் குறிக்கிறார். இதுதான் முடிவான நெறி. வற்றாத நெறி. அதைத் தின்று கொண்டே இருக்கலாம். ஆனால் தீர்த்து விட முடியாது. எந்த அளவுக்குச் சாப்பிடுகிறாயோ அந்த அளவுக்கு ஆன்மச் செறிவு பெறுகிறாய். எந்த அளவுக்குச் சாப்பிடுகிறாயோ அந்த அளவுக்குத் தெய்விகமாகிறாய்.

நான் விரதங்களைச் சொல்லித் தரவில்லை. ஒரு புதிய துய்ப்பைச் சொல்லித் தருகிறேன் என்கிறார் புத்தர். ஒரு உயர்நிலைத் துய்ப்பு. புத்தர் இந்த வார்த்தைகளைப் பயன்படுத்தவில்லை. நான் பயன்படுத்துகிறேன். உயர்ந்த தளத்தில் ஒரு காதல். ஒரு கொண்டாட்டம். ஒரு நடனம். இறைவனின் சக்தியைக் கிரகித்துக் கொள்ள ஓர் உபாயம். பெண்மையில் சிறந்து ஏற்றுக் கொள்ளச் சித்தமாக இருந்தால் இறைவனை உனக்குள் சூல் கொள்ளலாம் என்கிறேன்.



பட்டினி கிடந்து, விரதமிருக்கிறவனை அவர் அஞ்ஞானி என்கிறார். ஆனால் அவர்களைத்தானே இந்தியாவிலும் உலகம் முழுக்கவும் மக்கள் வணங்குகிறார்கள்? பெரும்பாலோர் முட்டாள்கள் தானே! எனவே ஒரு முட்டாள் உளுத்து அழுகிப் போன பழக்கத்தைப் பின்பற்றும் போது, சம்பிரதாயமாக கூட்டத்தின் வழக்கம் எதுவோ அதைப் பின்பற்றும் போது, மக்களுக்கு மெய் சிலிர்த்துப் போகிறது. அவர்களுடைய அகங்காரம் ஊதிக் கொள்கிறது. அவர்கள் சொல்வது சரி. அவர்கள் பெற்றோர்கள் சொன்னது சரி. அவர்களுடைய பாரம்பரியம் சொன்னது சரி. ''பார் பார். இவர் பட்டினி கிடந்து விரதம் இருக்கிறார். ஆன்மிகவாதி என்று தம்மை நினைத்துக் கொள் கிறவர்கள் அப்படிப் பட்டினி கிடக்கிறார்கள். அதுதான் ஆன்மிகத்தை அவர்கள் புரிந்துகொண்டிருக்கும் விதம்.

சில சமயம் மகான்கள் பட்டினி கிடக்கிறார்கள். ஆனால் அதற்குக் காரணம் முற்றிலும் வேறு. மகாவீரர் பன்னிரெண்டு ஆண்டுகளில் பல முறை நீண்ட நாட்களுக்குப் பட்டினி கிடந்திருக்கிறார். பன்னிரெண்டு ஆண்டுகளில் முந்நூற்று அறுபத்தைந்து நாட்கள் மட்டும் சாப்பிட்டிருக்கிறார் என்கிறார்கள். பன்னிரெண்டு வருடத்துக்கு ஒரு வருடம். ஒரு மாதம் பட்டினியாக இருந்து விட்டு ஒரு நாள் சாப்பிடுவார். பன்னிரெண்டு வருடங்களுக்கு ஒரு வருடம் எனும்போது சராசரியாகப் பன்னிரெண்டு நாட்களுக்கு ஒரு நாள் சாப்பிட்டிருக்கிறார். அது அவர் விரதமிருந்த விதம்.

ஆனால் மகாவீரருக்குச் சலிப்பு வரவில்லை. புத்தர் சலித்துப் போனார். புத்தரும் ஞானமடைந்தார். மகாவீரரும் ஞானமடைந்தார். என்ன விஷயம்? புத்தர் தன்னுடைய கடுந்துறவைக் கழித்து விட்டு ஞானம் பெற்றார். மகாவீரர் அதை விடவே இல்லை. அப்படியானால் இருவர் செய்ததும் சரி என்று சொல்ல முடியாது என்கிறாயா? யாராவது

ஒருவர்தான் சரி என்கிறாய். இருவர் செய்ததும் சரி என்கிறேன் நான். ஆனால் காரணங்கள்தான் வெவ் வேறானவை. முழுக்க வித்தியாசமானவை.



மகாவீரருடைய விரதம் வேறு வகை. பட்டினி கிடக்கும் கடுந்துறவி அல்ல அவர். அவர் பட்டினியே கிடக்கவில்லை என்பேன். கடவுளை அந்த அளவுக்கு அவர் தமது உணவாக்கிக் கொண்டதால் அவருக்கு இந்த உணவு தேவைப்படவில்லை. அவ்வளவுதான். அவருடைய ஆன்மா சூக்கும சக்திகளால் நிரப்பப்பட்டிருந்த போது அவருடைய உடலுக்கு உணவே தேவைப்படவில்லை. சாப்பிட வேண்டிய தேவையே அவருக்கு இல்லாமல் போய்விட்டது. அவர் பட்டினி கிடந்தார் என்று சொல்வதே தவறு. அவரால் சாப்பிட முடியவில்லை என்றுதான் சொல்வேன். உனக்கும் கூட அவ்வப்போது இந்த அனுபவம் இருக்கிறதில்லையா?

புனே வரும்போது நான் சோஹனோடு தங்குவது வழக்கம். அவளுக்கு ஒரே குழப்பம். ஒரு நாள் கேட்டே விட்டாள். ''என்ன இது? வருஷத்துக்கு ஒரு தடவையோ இரண்டு தடவையோ புனே வருகிறீர்கள். நீங்கள் வருவீர்கள் வருவீர்கள் என்று வருடம் முழுக்கக் காத்திருக்கிறேன். நீங்கள் நான்கைந்து நாள் இருக்க வருகிறீர்கள் அந்த நான்கைந்து நாட்கள் எனக்குப் பசியே எடுப்பதில்லை. விரதம் என்று எதுவும் இல்லை. ஏனோ சாப்பிடவே முடியவில்லை. என்ன காரணமாயிருக்கும்? சாப்பிட வேண்டும் போல இருக்கும். ஆனால் சாப்பிடவே முடிவதில்லையே, ஏன்?''

''அதீத மகிழ்ச்சியாக இருக்கும்போது சாப்பிட முடியாதுதான். உன்னுடைய பரவசம் அந்த அளவுக்குப் பொங்கி வழிகிறது. பசியே இருப்பதில்லை. உனக்குள் எந்த இடமும் இருப்பதில்லை. உன் ஆன்மா மட்டும் நிறைந்து வழிவதில்லை. உன் ஆன்மா உன் உடலையும் அப்படியே,



வைத்திருக்கிறது. உன் உடல் உன் ஆன்மாவின் நிழல்தானே!'' என்றேன்.

துயரப்படுகிறவர் அதிகம் சாப்பிடுகிறார்கள். ஆனந்தமாக இருப்பவர்கள் குறைவாகவே சாப்பிடுகிறார்கள். கேட்பதற்கு ஆச்சரியமாகத்தான் இருக்கும். துயரப்படுகிறவன் தனக்குள் ஏதோ ஒரு வெறுமையை உணர்கிறான். ஏதோ ஒன்றைக் கொண்டு தன்னை நிரப்பிக் கொள்ள விழைகிறான். சாப்பிட்டுக் கொண்டே இருக்கிறான். எதையாவது உள்ளே திணித்துக் கொண்டே இருக்கிறான். முழுக்கக் காலியாகிப் போயிருப்பதாக உணர்கிறான். அலமந்து கிடக்கிறான். எதையாவது செய்ய வேண்டியிருக்கிறது. குளிர்சாதனப் பெட்டிக்குப் போய் எதையாவது எடுத்துத் தின்பது சுலபமாக இருக்கிறது. இன்னும் கொஞ்சம் சேர்த்துத் தின்னும்போது ஒரு நிறைவு தோன்றுகிறது. நிச்சயமாக உடலளவில் ஒரு நிரப்பலை உணர முடிகிறது.

அமெரிக்காவின் வியாதியே அதீதத் தீனிதான். காரணம் தெளிவாகத் தெரிகிறது. உள்ளே ஒரு வெறுமை. ஆன்ம வெறுமை. பட்டினி கிடப்பதால் எந்தப் பயனும் இல்லை. எத்தனை நாளைக்குத்தான் பட்டினி கிடக்க முடியும்? எப்படியோ கட்டாயப்படுத்திப் பட்டினி கிடந்தாலும் சில நாட்களுக்குக் கிடக்கலாம். சில நாட்களில் முயற்சிகள் தோற்றுப் போக வெறியோடு சாப்பிடப் போகிறாய். பட்டினி கிடந்தபோது இழந்த எடையை விடக் கூடுதல் எடையைச் சேர்த்துக் கொள்கிறாய்.

அமெரிக்கர்களின் பிரச்சனையே இதுதான். பணக்கார நாடுகளின் பிரச்சனையே இதுவாகத்தான் இருக்கப் போகிறது. ஏனென்றால் உள்ளே காலியாக இருக்க, வெளியே நிறைய உணவிருக்க, உண்டு நிரப்பிக் கொள்வதைத் தவிர செய்வதற்கு வேறு என்ன இருக்கிறது?



புதிய புதிய பொருட்களை வாங்கிக் கொண்டே இருக்க வேண்டியது. வேறு எதையும் வாங்க முடியவில்லை என்றாலும் மேசை நாற்காலிகளையாவது வாங்கிக் கொண்டு இருப்பது. ஆன்மாவை நிரப்ப முடியவில்லை என்றால் வீட்டையாவது நிரப்பிக் கொள்வது. நிரம்பி இருக்கும் உணர்வின் வேறு ஒரு வடிவம்.

மகிழ்ச்சியாக இருக்கும்போது இதற்கு நேர் எதிரிடையானது நடக்கிறது. இறக்கை கட்டிப் பறந்து கொண்டிருக்கும் போது. எடையற்ற நிலையை உணரும்போது.

ஸோஹனிடம் சொன்னேன் ''இது அப்படித்தான். இதுதான் உண்மையான விரதம்.''

உபவாசம் என்ற சமஸ்கிருத வார்த்தை பட்டினி கிடந்து விரதம் இருப்பதைக் குறிக்கிறது. அருமையான வார்த்தை. ஆங்கிலத்தில் ஃபாஸ்ட், என்ற வார்த்தைக்கு மனத்தைக் கட்டுப்படுத்திப் பட்டினி கிடப்பது என்று பொருள். சமஸ்கிருத வார்த்தையான உபவாஸ் என்பது கடவுளுக்கு அருகே இருப்பது என்று பொருள்படும். பட்டினிக்கும் அதற்கும் சம்பந்தமே இல்லை. கடவுளுக்கு மிக அருகாமையில் இருப்பதும் கடவுளால் நிறைந்திருப்பதும் உடலை மறக்க வைக்கிறது. உடலைப் போஷிக்க வேண்டும் என்ற உணர்வே இல்லாமல் போய்விடுகிறது. சூக்கும உணவு உன்னைப் போஷிக்க சூக்கும சக்தி உன்னை இயக்குகிறது.

புத்தரைப் போல மகாவீரர் பட்டினி கிடக்கவில்லை. அவர் உபவாசம் இருந்தார். இறைமையை உண்டு கொண்டிருந்தார். மகாவீரருடையது சமஸ்கிருத வார்த்தையின் பொருளில். புத்தர் இருந்தது ஆங்கில வார்த்தையின் பொருளில். எனவே மகாவீரர் உபவாசத்தைக் கைவிடாமலேயே ஞானம் பெற்றார். பட்டினி கிடக்கவில்லை



என்பதால் அதைக் கைவிட வேண்டும் என்ற நிலைமையே வரவில்லை. துய்ப்பதற்கு எதிரிடையாகப் பட்டினி கிடந்தார் என்பதால் புத்தர் அதைக் கைவிட வேண்டி இருந்தது. பட்டினி கிடப்பது ஞானத்துக்கு ஒரு மார்க்கம் என்று சாப்பிடாமல் இருந்தவர் புத்தர்.

உடலை வருத்தி எப்படிக் கடவுளை அடைவது? இதில் என்ன தர்க்க நியாயம் இருக்கிறது? இதில் எந்த விஞ்ஞான பூர்வ உண்மை இருக்கிறது? கடவுளென்ன உன் சித்திரவதையை அனுபவித்து மகிழும் அடால்ஃப் ஹிட்லரா? தன் குழந்தைகள் பட்டினி கிடந்து உணவைப் பற்றிக் கனவு காண்பதை அனுபவித்து மகிழ்கிறவரா? மனிதர்கள் நோய் பிடித்து அசிங்கமாகிப் போவதைக் கண்டு மகிழ்கிறவரா?

கடவுள் கருணை மிக்கவர். உன்னைத் தன்னால் நிறைக்க விரும்புகிறவர். அவர் உன்னை நிறைத்து இருக்கும்போது சாப்பிட வேண்டும் என்றே தோன்றாது. மகாவீரர் பட்டினி கிடக்கவில்லை. சாப்பாடு அவருக்குத் தேவையாக இருக்கவில்லை - அவ்வளவுதான். இதுதான் அவர்களுக்கிடையே இருந்த மிகப் பெரிய வித்தியாசம்.

''மாதக்கணக்கில் விரதமிருக்கிறான். புல் நுனி கொள்ளுமளவு மட்டும் உண்கிறான். என்றாலும் நெறியே தன் உணவாகிப் போன மகானுக்கருகே அவன் பைசா பெறமாட்டான்'' என்கிறார் புத்தர்.

ஒரு நாள் வேறு ஒரு வகை உணவு இருப்பதைக் கண்டு கொண்டார். ஆன்ம சுருதியே உணவாகும் என்பதைக் கண்டு கொண்டார். அந்தச் சுருதியின் ஓர் இழையாக முடியும் என்பதைக் கண்டு கொண்டார். ஆரம்பமும் முடிவும் இல்லாத கொண்டாட்டத்தின் ஒரு பகுதியாக முடியும் என்பதைக் கண்டு கொண்டார். அப்போதுதான் நிறைவு - திருப்தி.



**பால் புளிக்க நேரம் ஆகிறது.**
**அப்படியே தான் அஞ்ஞானியின்**
**சில்மிஷமும்**
**தன் விளைவைக் காட்டக் காலம் பிடிக்கிறது**
**தீக்கங்காக அவனுள் குமுறிக் கிடக்கிறது.**

ஏதாவது செய்தால் அதன் விளைவைத் தெரிந்து கொள்ளச் சற்றுக் காலம் பிடிக்கிறது. காரணத்தையும் விளைவையும் பெரும்பாலும் சம்பந்தப்படுத்தக் கூட முடிவதில்லை. அத்தனை கால அவகாசம் பிடிக்கிறது.

இன்றும் ஆப்பிரிக்காவில் கலவியும் பிறப்பும் தொடர்புடையவை என்பதைத் தெரிந்து கொள்ளாத இனத்தவர் இருக்கிறார்கள். இடையே அத்தனை மாதங்கள் இருக்கின்றனவே. அது மட்டுமல்ல. காலத்தைக் கணக்கிடவும் தெரியாதவர்களாக இருக்கிறார்கள். காலண்டர்கள் இல்லை. கடிகாரங்கள் இல்லை. காலத்தைக் கண்டு பிடிக்காத காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். எனவே ஆணும் பெண்ணும் கூடுவதால் குழந்தை பிறக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள முடியாதவர்களாக இருக்கிறார்கள்.

வேறு காரணங்களும் இருக்கின்றனவே. இணை சேர்ந்தும் குழந்தை பிறக்காமலேயே போவதும் உண்டே! எனவே காமமும் குழந்தைப் பேறும் எப்போதும் தொடர்புடையவை என்று கூறவும் முடிவதில்லை. பிறகு குழந்தை எப்படிப் பிறக்கிறது? காமத்துக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. உயிரியல் நிகழ்வு அல்ல அது. ஒவ்வொரு குழந்தையும் கடவுளின் அன்பளிப்பு. அவர் யாரை வேண்டுமானாலும் தன் பரிசுக்குத் தேர்ந்தெடுக்கலாம். கூட்டத்தின் சட்ட திட்டங்களைப் பின்பற்றினால் குழந்தை பிறக்கும். இல்லையேல் சாத்தியமே இல்லை. இப்படித்தான் அவர்கள் நினைத்திருக்கிறார்கள்.



கிறித்துவ போதகர்கள் அவர்களைச் சந்தித்தபோது இத்தனை காலம் குழந்தைகள் பெற்றுக் கொண்டிருந்து விட்டும் இந்த உண்மை இவர்களுக்குத் தெரியவில்லை என்பதை மிகுந்த ஆச்சரியத்தோடு பார்த்தார்கள். நாமும் அப்படித்தான். பல விதங்களிலும் அவர்களைப் போல முதிராமல் போனவர்களாக இருக்கிறோம்.

எந்தக் காரணமும் இல்லாமல் திடீரென ஒரு நாள் விசனப்படுகிறாய். முதல் நாள் இரவு வழக்கம் போலத்தான் படுக்கப் போனாய். மகிழ்ச்சியாகத்தான் இருந்தது. என்றாலும் விடிந்து எழும்போது ஏனோ மகிழ்ச்சியே இல்லை. யாரும் அவமதிக்கவில்லை. ஒன்றுமே நடக்கவில்லை. எந்த மோசமான செய்தியும் வரவில்லை. பிறகு ஏன் இந்தச் சோகம்? எங்கிருந்து வந்தது? எப்போதாவது ஏதாவது செய்திருக்க வேண்டும். இடையே கால இடைவெளி இருக்க வேண்டும். மூன்று மாதம் இருக்கலாம். மூன்று வருடங்கள் இருக்கலாம். இதைப் பற்றி ஆராய்ச்சி செய்தவர்கள் முற்பிறவியில் செய்த காரியமாகக் கூட இருக்கலாம் என்கிறார்கள். சில சமயம் சில விதைகள் முளைப்பதற்கு வெகு நீண்ட காலம் எடுத்துக் கொள்கின்றனதான்.

தன்னுடைய வாழ்வின் துயரம் எல்லாமும் தானே செய்து வைத்துக் கொண்டது என்பதைத் தெரிந்து கொள்ளாமல் அஞ்ஞானிகள் அவரவர் அஞ்ஞானத்திலேயே கிடக்கின்றனர். மாற்றமில்லாது ஒரே மாதிரி வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். துயரத்துக்குக் காரணமான காரியங்களை நீண்ட காலத்துக்கு முன் செய்திருக்கலாம். ஒரு வருடத்துக்கு முன் விதைகளைத் தூவிவிட்டு மறந்து போயிருக்கலாம். மழை வரும்போது விதைகள் முளைக்கின்றன. உனக்கே வியப்பாக இருக்கிறது. எங்கிருந்து இந்தச் செடிகள் வந்தன என்கிறாய்.

## பரவசத்து விதை விதைப்பு



நமது ஆன்மாவில் நாம் விதைக்கும் விதைகள் கண்ணுக்குத் தெரியாதவை. கோபப்பட்டிருக்கிறாய். வன்முறைகளைக் கையாண்டிருக்கிறாய். பொறாமைப்பட்டிருக்கிறாய். அவையெல்லாம் உனக்குள்ளே இருந்திருக்கின்றன.

தீக்கங்காக அவனுள் குமுறிக் கிடக்கிறது என்கிறார் புத்தர். உனக்குள் இருந்து கொண்டே இருக்கின்றன. தயாராகிக் கொண்டு...மழை வரக் காத்துக் கொண்டு... பிறகு திடீரென வெடித்துக் கிளம்புகின்றன. நடப்பதற்கெல்லாம் அவனவனே பொறுப்பு. ஞானி இதை உணர்ந்தவராக துயரத்துக்கான விதைகளை விடுத்து ஆனந்தத்துக்கான விதைகளை விதைக்கிறார். இப்போதோ எப்போதோ அறுவடைக்குத் தயாராக இருக்க வேண்டியதுதான்.

அதுதான் சொர்க்கம் என்பது. ஆனந்தம், அன்பு, கருணைக்கான விதைகளை ஞானி விதைப்பது. ஒரு நாள் பூங்கா தயாராகிவிடுகிறது. பேரடைஸ் என்ற ஆங்கில வார்த்தை பெர்சிய மொழியிலிருந்து வந்தது என்பது உனக்குத் தெரியுமா? ஃபிர்டோஸ் என்ற பெர்சிய வார்த்தையிலிருந்து வந்தது. மதில் சூழ்ந்த சத்தியத்தின் தோட்டம் என்று பொருள். ஆனந்தம், அழகு, நடனம், பாடல், தியானம், பிரார்த்தனை என்று இவற்றின் விதைகளை விதைத்துக் கொண்டே இருந்தால் அதுதான் சொர்க்கம். இல்லையேல் நரகத்தைத்தான் ஆக்கிக் கொண்டிருக்கிறாய். பிரக்ஞையில்லாமல் வாழ்வதும், இயந்திரத்தனமாக இயங்குவதும் அஞ்ஞானத்தையே வாழ்வதும் நரகத்துக்கான பாதையாகி விடுகிறது.

அஞ்ஞானி கற்றுக் கொண்ட எல்லாமும் அவனை மந்தமே ஆக்குகிறது. அறிவு அவன் மனதை வகிர்ந்து விடுகிறது.



அஞ்ஞானிக்கு விவேகி ஆக வேண்டும் என்பதில் எந்த அக்கறையும் இல்லை. ஏனெனில் விவேகியாக இருப்பது ஆபத்தானது. விவேகி எதிர்த்துக் கிளம்புவான். தனக்கெனத் தனி அடையாளத்தைத் தருவது விவேகம். ஒருமைப்பட்ட தனி ஒருவனாக நீ ஆகிவிடும்போது சமுதாயம் விவேகிக்கு எதிராகத் திரும்பிவிடுகிறது. தனி மனிதனை அவர்களால் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை.

ஒரு யேசுவையோ புத்தரையோ அவர்களால் மன்னிக்கவே முடிவதில்லை. அஞ்ஞானிகளோடு இருக்கும்போது மகிழ்வாக இருக்கிறார்கள். அவர்களைப் போலவே இருக்கிறானே! அவர்களை விடக் கொஞ்சம் பதவி அலங்காரம் பூசிக் கொண்டிருக்கலாம். கவுரவம் கொஞ்சம் கூட இருக்கலாம். நளினத்தில் மிஞ்சியிருக்கலாம். என்றாலும் அஞ்ஞானிகளே. எனவே அப்படிப்பட்டவர்களோடு இருப்பதில் திருப்தி.

அரசியல்வாதிகள், பேராசிரியர்கள், பண்டிதர்கள் - இவர்களோடு மகிழ்ச்சியாக இருப்பவர்கள் ஒரு யேசுவுடனோ, புத்தருடனோ சாக்ரெட்டீசுடனோ இருக்கும்போது அசௌகரியமாக உணர்கிறார்கள். ஏன் என்கிறாயா? இவர்கள் அஞ்ஞானிகள்தான் என்பதைக் காட்டி நிற்கிறார்களே! புத்தர் அருகே இருந்தாலே போதும். இவர்கள் தம் முட்டாள்தனத்தை உணர்ந்து கொள்கிறார்கள். பிறகு அவரை எப்படி மன்னிப்பது?

விவேகிகளாக இருக்கவும் அவர்கள் விரும்பவில்லை. ஏனென்றால் அது கடினம். அதற்கான பாதையில் எந்தக் குறுக்கு வழியும் இல்லை. தொடர்ந்து பிரக்ஞையைக் கூர் தீட்ட வேண்டி இருக்கிறது. அன்பால் நிறைக்கப் பட்டவர்களாக இருக்க வேண்டியிருக்கிறது. அன்பே

விவேகத்தின் மையம். தர்க்கம் புத்திசாலித்தனத்தின் மையம்.



அஞ்ஞானி புத்திசாலி ஆகிவிடும்போது தனக்கு எல்லாம் தெரியும் என்று கதைக்கிறான். விஷய ஞானத்தில்தான் அவனுக்கு அக்கறை. பைபிள் படிப்பான். குரான் படிப்பான். வேதங்களைப் படிப்பான். தகவல்களைத் தனக்குள் திணித்துக் கொண்டே இருப்பான். அவன் மூளை ஒரு கம்ப்யூட்டராகிவிடும். நடமாடும் என்சைக்ளோபீடியாக ஆகிவிடுவான். இது சுலபம். இதற்கு பிரமாதமான எந்த அறிவும் தேவையில்லை. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் முனை மழுங்கிக் கிடக்கின்றன. சுயநலமிகளின் கைப்பாவையாகத்தான் பல்கலைக்கழகங்கள் இருக்கின்றன. இருப்பதை அப்படியே வைத்திருக்கச் செய்யும் தொழிற்சாலைகள் அவை. மானுடத்தின் எதிர்காலத்துக்கு அவை சேவை செய்யவில்லை. கடந்த காலத்துக்குச் சேவை செய்கின்றன. மரணித்துப் போனதன் சேவகர்கள் அவை.

விவேகிகளை, படைப்பாளிகளை, விழித்தவர்களை, கவனித்து இருப்பவர்களை அவை ஆக்குவதில்லை. மந்தமானவர்கள், முட்டாள் ஆனால் திறமைசாலிகள் - இவர்களைத்தான் அவை தயாரிக்கின்றன. அவனவன் வேலையைத் திறமையாகச் செய்கிறார்கள். இயந்திரங்கள் மனிதர்களை விடத் திறமை பெற்றவை. எனவே மனிதர்கள் மேல் அவர்களுக்கு அக்கறை இல்லை. மனிதர்களை இயந்திரங்களாக்குவதில்தான் அவர்களுக்கு அக்கறை.

அஞ்ஞானி கற்றுக் கொண்ட எல்லாமும் அவனை மந்தமே ஆக்குகிறது என்கிறார் புத்தர். விஷய ஞானம் அதிகமாக ஆக மந்தத்தனமும் அதிகமாகி விடுகிறது. முட்டாள்தனமும் அதிகமாகிறது. இதைத்தான் நான் காண்கிறேன். பிஎச்டி அல்லது டிலிட் பட்டம் பெற்றவர்கள். பேராசிரியர்கள், டீன்கள், துணைவேந்தர்கள் இவர்களை



விடச் சாதாரண கிராமத்தான் விவேகியாக இருக்கிறான். அவர்கள் மிக மந்த புத்தி உள்ளவர்களாகவே இருக்கிறார்கள்.

ஒரு கிராமத்தான் அல்லது ஒரு விறகு வெட்டியின் விவேகம் அதிகமாக இருக்கிறது. அவனிடம் தகவல்கள் அதிகம் இல்லைதான். அவனிடம் விஷய ஞானம் இல்லைதான். என்றாலும் வெகுளியாக இருக்கிறான். வெகுளித்தனம் விவேகத்தின் ஒரு பகுதி. விஷய ஞானம் பெற்றிருப்பது இயந்திரத்தனமாக இருப்பது. இயந்திரங்கள் மந்தமானவை. விவேகத்தோடு கூடிய இயந்திரத்தை எங்கேயாவது பார்த்திருக்கிறாயா? இந்த டீன்களையும் துணை வேந்தர்களையும் பார்த்து இயந்திரத்தையும் பார். ஒரே மாதிரித்தானே?

பார்க்கப் போனால் எந்த அளவுக்கு மந்த புத்தியோடு இருக்கிறாயோ அந்த அளவுக்கு ஒரு துணை வேந்தர் ஆவதற்குச் சாத்தியங்கள் அதிகம். ஏனென்றால் ஒரு புத்தர் துணைவேந்தர் ஆவதற்கு இந்த அரசியல்வாதிகள் விடமாட்டார்கள். ஒரு சாக்ரெட்டீஸ் துணைவேந்தர் ஆவதற்கு விடமாட்டார்கள். இளைஞர்களைக் கெடுத்தார் என்பதுதானே சாக்ரெட்டீஸ் மீது சுமத்திய குற்றம்? சாக்ரெட்டீஸாவது இளைஞர்களைக் கெடுப்பதாவது. இந்த முட்டாள்கள் - நியாயவான்கள், துணை வேந்தர்கள், பிரதம மந்திரிகள், ஜனாதிபதிகள் - இவர்கள் கெடுக்கவில்லையா என்ன? சாக்ரெட்டீஸ் கெடுத்தாராம். என்ன சொல்கிறார்கள் இவர்கள்?

ஒரு வகையில் அவர்கள் சொன்னதும் சரிதான். இளைஞர்களை எதிர்காலத்துக்குத் தயாராக்கிக் கொண்டிருந் தார். கடந்து போனதை ஒழித்துக் கட்ட வேண்டி இருந்தது. சந்தேகப்பட வைக்க வேண்டி இருந்தது. விசாரங்கள் செய்யத் தூண்ட வேண்டி இருந்தது. தேடுதலை முடுக்கி விட வேண்டி

இருந்தது. வெறுமனே நம்பிக் கொண்டிருக்காத வர்களை உருவாக்க வேண்டி இருந்தது. சமுதாயத்துக்கோ அப்படி நம்புகிறவர்களே தேவை.



மந்த புத்தி உடையவர்களே நம்புபவர்கள். ஒரு முகம்மதியன், ஒரு கிறித்துவன், ஒரு இந்து, ஒரு சமணன் -எந்த அளவுக்கு நம்பிக்கையோடு தம்மை அப்படி அடையாளப்படுத்திக் கொள்கிறானோ அந்த அளவுக்கு மந்த புத்தி உடையவனாக இருப்பான். அவன்தான் என்ன ஏது என்று கேள்வி கேட்க மாட்டானே! அவன் பயந்து கிடக்கிறவன். சத்தியத்தைத் தானாகத் தெரிந்து கொள்ளும் திறன் தனக்கு இல்லை என்பது அவனுக்குத் தெரியும். எனவே யாராவது சொல்வதை அவன் நம்ப வேண்டி இருக்கிறது.

அறிவு அவன் மனதை வகிர்ந்து விடுகிறது என்கிறார் புத்தர். அறிவு அவனுக்கு ஒரு சுமையாகிப் போகிறது. ஓர் இமாலயச் சுமை.

தனக்கு அங்கீகாரம் வேண்டும் என்கிறானே! மற்றவருக்கு முன் ஓரிடம். மற்றவர்க்கு மேல் ஓரிடம்.

அவனுடைய அறிவு என்பதே அகங்காரத்துக்குள் ஒரு யாத்திரையாகிப் போகிறது. அகங்காரமே மிகப் பெரியதளை. அகங்காரத்தை விட்டுவிடுவதே ஈடேற்றம். ஆனால் அஞ்ஞானி எப்படிப் புகழ் பெற்றவனாவது என்பதைத் தெரிந்தவன். அதிகாரம் உள்ளவனாகப் பிறர் தன்னை அங்கீகரிக்க வைப்பது எப்படி என்பதைத் தெரிந்தவன். ஒரு நிபுணராக இருக்கத் தெரிந்தவன்.

தற்பெருமை பேசிக் களிக்கவே அஞ்ஞானி விஷய ஞானம் சேகரித்துக் கொள்கிறான். தான் எவ்வளவு புத்திசாலி என்பதை மற்றவர்களுக்குக் காட்ட வேண்டுமே! விவேகம் அகங்காரம் பாற்பட்டதல்ல. தான் என்பது கழிந்த ஓர் ஆழ்நிலையில்தான் விவேகம் பிறக்கிறது. அகங்காரம்



மறைந்துவிடுவதே விவேகம். முழுமையைச் சந்தித்து ஐக்கியமாகி விடுவதே விவேகம். பிளவை மறந்து விடுவதே விவேகம். இறைவன் எனும் கடலின் ஓர் அலையாகிப் போவதே விவேகம்.

**''என் பணியைத் தெரிந்து கொள்ளட்டும்.**
**திசை தெரிய என்னிடம் வரட்டும்.''**
**இப்படித்தான் அவனுடைய ஆசைகள்.**
**இப்படியானதே அவனுடைய கர்வம்.**

ஒரு வழியில் போனால் செல்வமும் புகழும்.

அஞ்ஞானி விவேகியை விடச் சுலபமாகவும் சீக்கிரத்திலும் புகழ் பெற்று விடுவான். எனவே செல்வமும் புகழும் வேண்டும் என்றால் அஞ்ஞானியைப் பின்பற்று. விவேகிக்குப் புகழ் வந்து சேர்கிறது என்றால் அது தற்செயலாக நடப்பது. புகழைத் தேடி ஞானி அலைவதில்லை. அவரை எல்லோருக்கும் தெரியும் என்றால் அவர் முயற்சியின் பேரால் தன்னைப் பிறர் தெரிந்து வைத்துக் கொள்ள வைத்திருக்கிறார் என்பதல்ல. அவருடைய மணம் பிறரைச் சென்று சேர்ந்திருக்கிறது. ஆனால் அவருடைய முயற்சி அதில் ஏதும் இல்லை. தன் இருத்தல் பற்றி அவருக்குத் தெரியும். எனவே மற்றவர்களுடைய அங்கீகாரம் அவருக்குத் தேவையில்லை. தான் யாரென்பது அவருக்குத் தெரியும். எனவே பிறருடைய் சான்றிதழ்கள் அவருக்குத் தேவையில்லை.

பல்கலைக்கழகப் படிப்பு முடிந்தவுடன் கல்வி அமைச்சரைச் சந்தித்தேன். ''இதுதான் என் கல்வித் தகுதிகள். எனக்கு எங்கேயாவது வேலை கொடுங்களேன். எங்கேயானாலும் சரி'' என்றேன். அவர் என்னுடைய படிப்புத் தகுதியைப் பார்த்து அசந்து விட்டார். அற்ப விஷயங்களுக்காக அசந்து போகிறார்கள் பலரும். தங்கப் பதக்கம்



வாங்கியிருந்தேன். முதல் வகுப்பு. முதல் ரேங்க. ''உடனே உனக்கு லெக்சரர் வேலை தருகிறேன். ஆனால் ஒன்று செய்ய வேண்டுமே. எங்கே உன் கேரக்டர் சர்டிபிகேட்?'' என்றார்.

நான் ''என்னிடம் கேரக்டர் இருக்கிறது. சர்டிபிகேட் இல்லை. என் கண்களைப் பாருங்கள். என் கையைப் பிடித்துப் பாருங்கள். வேண்டுமானால் உங்களைக் கட்டிப் பிடிக்கிறேன்'' என்றேன்,

அவரோ ''அதுவல்ல விஷயம். கேரக்டர் சர்டிபிகேட் வேண்டுமே!'' என்றார்.

''இல்லையே!'' என்றேன்.

''துணை வேந்தரிடம் போய் அல்லது துறைத் தலைவரிடம் போய் கேரக்டர் சர்டிபிகேட் மட்டும் வாங்கிக் கொண்டு வா. இது ஒரு சம்பிரதாயம்தான்'' என்றார்.

''துணைவேந்தரைப் போய்க் கேட்க மாட்டேன். அவருக்கே கேரக்டர் இல்லையே! அவருடைய சர்டிபிகேட்டுக்கு என்ன மதிப்பு இருக்கும்? என்னுடைய துறைத் தலைவரா? அவரைப் பற்றி அவருக்கே தெரிந்ததை விட எனக்கு அதிகம் தெரியும். அவருக்கு நான் கேரக்டர் சர்டிபிகேட் கொடுக்கக் கூட முடியாது.''

அவருக்கே ஒரே குழப்பமாகிப் போய்விட்டது. எனக்கு உதவ வேண்டும் என்று விரும்பினார். என்மேல் அக்கறை கூட. எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறார். இப்படி ஒருவரைப் பார்த்ததே இல்லை. யாரும் அவரிடம், ''என் கண்ணைப் பார். அல்லது என் கையைப் பிடித்து பார்த்துக் கொள். வேண்டுமானால் உங்கள் வீட்டில் ஒரு வாரம் இருக்கிறேன். எல்லா வகையிலும் என் கேரக்டரைப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள். என்னுடைய பாத்ரூமைக் கூட நான் திறந்து வைத்துக் கொள்கிறேன். எல்லாம் திறந்து



வைத்திருக்கிறேன். தடையில்லாமல் நீங்களே பார்த்துக் கொள்ளலாம்'' என்று சொல்லியதில்லை.

''அதெல்லாம் வேண்டியதில்லை. ஒரு கேரக்டர் சர்டிபிகேட் போதும்.''

''அப்படியானால் நானே எனக்கு ஒரு சர்டிபிகேட் எழுதித் தருகிறேன்''. அதைத்தான் செய்தேன். அவருக்கு முன்னாலேயே சர்டிபிகேட் எழுத ஆரம்பிக்கவும், ''என்ன செய்கிறாய் நீ? இப்படி யாரும் செய்ததில்லையே. உனக்கு நீயே கேரக்டர் சர்டிபிகேட் தந்து கொள்வதா? வேறு ஒருத்தர் கையெழுத்தல்லவா வேண்டும்!'' என்றார்.

''சரி. என்னுடைய துறைத் தலைவருக்காக நான் கையெழுத்து போடுகிறேன். இது நகல். ஒரிஜினலை அவரிடம் இருந்து வாங்கிக் கொள்கிறேன்.''

அப்படியே செய்துவிட்டுத் துறைத் தலைவரிடம் போனேன். ''உங்கள் பெயரில் நான் எனக்கு ஒரு கேரக்டர் சர்டிபிகேட் கொடுத்திருக்கிறேன். ஒரிஜினலை நீங்கள் தர வேண்டும்.''

''விநோதம்பா! ஒரிஜினல்தானே முதலில் வேண்டும்!'' என்றாலும் நான் சொன்னது அவருக்குப் பிடித்துப் போய்விட்டது. ஒரிஜினலைத் தந்தார்.

ஒரு வழியில் போனால் செல்வமும் புகழும். ஆமாம். அஞ்ஞானியின் வழியில் போனால் செல்வந்தனாகலாம். புகழ் பெறலாம். ஒரு நாட்டுக்கு ஜனாதிபதியாகலாம். ஒரு பிரதம மந்திரியாகலாம். என்ன வேண்டுமானாலும் ஆகலாம். எத்தனை செல்வம் வேண்டுமோ அத்தனையும் கிடைக்கலாம். அஞ்ஞானியின் வழியில் போனால் போதும். விவேகத்தோடு இருந்து விடாதே. முட்டாளாகவே இருந்து விடு. ஏனென்றால் மடையனைத் தவிர வேறு யாரும் பணத்துக்குப் பின்னால் ஓடமாட்டார்கள்.



சிலசமயம் விவேகிகளிடமும் பணம் வந்து சேரும். ஆனால் அது அவனுக்குப் பின்னால் வருகிறது. அவன் அதைத் தேடிப் போவதில்லை. புகழ் கூட அப்படித்தான். தானாக வந்து சேர்வது. அவனுக்கு அதைப் பற்றி எந்த அக்கறையும் இல்லை.

மறு வழியில் போனால் அந்தம். காலம் காலமாகப் பல பிறவிகள் தோறும் அரங்கேறிக் கொண்டிருக்கும் இந்த நாடகம் முடியவேண்டும் என்றால் பிறப்பும் இறப்புமான சக்கர ஓட்டம் நின்றுவிட வேண்டுமானால், விவேகியின் வழியில் போ. ஞானியின் வழியில் போ. உனக்கு நீயே ஒளியாகிப் போ.

**அங்கீகாரம் தேடி அலையாதே**
**ஞானியைப் பின்பற்றி**
**விடுபட்டு விடு.**

எந்த அக்கறையும் தேவையில்லை. அங்கீகாரம் வேண்டும் என்று ஆசைப்படாதே. கோடிக்கணக்கான மடையர்கள் உன்னை அங்கீகரிப்பதால் என்ன பயன்? அவர்களை விடப் பெரிய மடையன் நீ என்றுதான் ஆகிப் போகும். வேறு எதுவும் நிருபணமாவதில்லை.

ஞானியைப் பின்பற்று. என்ன சொல்கிறார் புத்தர்? அவரைப் பார்த்து அப்படியே இரு என்று சொல்லவில்லை. அவர் எப்படி விழித்திருக்கிறாரோ அப்படி விழித்திருக்க வேண்டும் என்கிறார். விழித்திருப்பதே விழித்திருப்பவரைப் பின்பற்றுவதாகும். அவர் எப்படி வாழ்கிறார், எப்படிச் சாப்பிடுகிறார், எப்போது தூங்கப் போகிறார் - இதிலெல்லாம் ஏதுமில்லை. விழித்திருப்பவனாக ஆவதில் விழித்திருப்ப வரைப் பின்பற்று.

விடுபட்டு விடு. ஏனென்றால் விழித்திருப்பது மட்டுமே விடுதலையைத் தரும். பிரக்ஞை விழித்திருப்பதே விடுதலை.



தியானம் விடுதலை. என்ன ஏதென்று தெரிந்திருப்பது விடுதலை. இயந்திரத்தனமாக, உணர்வில்லாமல், விவேகம் இல்லாமல் வாழ்கிறவர்கள் சிறையில் இருக்கிறவர்கள், சிறையில் இருப்பதென்பது துயரத்தில் இருப்பது.

**சுதந்திரம் அடைவதே வாழ்வதன் பயன்.**
**ஞானியைப் பின்பற்றி விட்டுவிடு.**
**ஏஸ் தம்மோ சனந்தனோ.**

இன்றைக்கு இது போதும்...





தம்மபதம் – ஓஷோவின் சொற்பொழிவுகள்

# பழமையான வற்றாத சட்டம்

# 10





முதல் கேள்வி

அன்புக்குரிய குருவே,

இசைப் பரிமாணம் என்கிறீர்களே, அதைப் பற்றி மேலும் சொல்லுவீர்களா?

**யோக சின்மயா**, வாழ்வை இரண்டு வகைகளில் வாழலாம். கணக்குப் போட்டு வாழ்வது. கவிதையாக வாழ்வது. மனிதனின் இருத்தலுக்கு இயற்கைக்கு இரண்டு பக்கங்கள் இருக்கின்றன. கணக்குப் போடும் பகுதி விஞ்ஞானம், அரசியல், வியாபாரத்தை ஆக்கி வைத்திருக்கிறது. கணக்குப் போடாத பகுதி கவிதை, சிற்பம், இசையை ஆக்கி வைத்திருக்கிறது. இந்த இரண்டு பக்கங்களை இணைக்க இன்னும் பாலம் போடவில்லை. அவை தனித்தனியாக இருக்கின்றன. அதனால் மனிதன் வறியனாகிப் போனான். தேவையில்லாமல் ஏறுமாறான வனாகிப் போனான். இந்த இரண்டு பக்கங்களையும் இணைக்க ஒரு பாலம் அமைத்தாக வேண்டும்.



விஞ்ஞானத்தின் மொழியில் மூளைக்கு இரண்டு பக்கங்கள் இருப்பதாகச் சொல்கிறார்கள். இடது பக்கம் கணக்குப் போடுகிறது. அதில் உரைநடைதான் இருக்கிறது. வலது பக்கத்தில் கவிதை இருக்கிறது. காதல் இருக்கிறது. பாடல் இருக்கிறது. ஒரு பக்கம் தர்க்கம். இன்னொரு பக்கம் வாய்ப்பாடு. இன்னொரு பக்கம் பாடல். அவை இன்னமும் இணைக்கப்படவில்லை. எனவே மனிதன் வகிர்ந்து போனவனாகக் கிடக்கிறான்.

இங்கே இந்த இரண்டு பக்கங்களையும் இணைப்பதே என் முயற்சியாகும்.

புற உலகைப் பொறுத்த அளவில் மனிதன் விஞ்ஞானச் சிந்தனை உடையவனாக இருக்க வேண்டும். வீடு, பணம், மேசை, நாற்காலி என்று... அடுத்த பக்கம் மக்களுக்கானது. மனைவி, கணவன், தாய், குழந்தைகள், நண்பன் என்று... பொருட்களோடு சம்பந்தப்பட்டிருக்கும் வரை விஞ்ஞான சிந்தனை வேண்டும். ஆனால் மனிதர்களோடு சம்பந்தப் பட்டு இருக்கும்போது விஞ்ஞான சிந்தனையோடிருந்தால் அவர்களைப் பொருட்களாக எடுத்துக் கொண்டு நடத்துவதாகிப் போகும். அதுதான் ஒருவர் செய்யும் மிகப் பெரிய குற்றமாக இருக்கும்.

உன் மனைவியைச் சம்போகத்துக்கான பொருளாக மட்டுமே கருதினால் மிக அசிங்கமாக நடந்து கொள்கிறாய் என்று பொருள். கணவனைச் சம்பாத்தியத்துக்காக மட்டுமேயானவன் என்று நினைத்தால் அது ஒழுக்கக் கேடாகி விடும். அது விபச்சாரம் தவிர வேறு எதுவுமாக முடியாது.

யாரையும் ஒரு காரியத்துக்காக என்று கொள்ளாதே. ஒவ்வொருவரும் ஒரு குறிக்கோள். காதலோடும்



மரியாதையோடும் அவர்களோடு உறவு கொள். அவர்களை உடைமையாகக் கருதாதே. நீ அவர்களுடைய உடைமையாகிப் போகாதே. அவர்களைச் சார்ந்தவனாகிப் போகாதே. யாரும் உன்னைச் சார்ந்திருக்க வைக்காதே. யாரையும் சாராமல் இரு. மற்றவரையும் அப்படியே இருக்க விடு.

அதுதான் இசை. இந்தத் தளத்தைத்தான் நான் இசைப் பரிமாணம் என்கிறேன். பொருட்களைப் பொறுத்த அளவில் விஞ்ஞானச் சிந்தனையோடு இருக்கும் அளவுக்குச் செல்வந்தனாக இருக்கலாம். உனக்குள் இசை இருக்குமானால் நீ அழகோடு இருக்கலாம். மூன்றாவது பருமானம் ஒன்று உண்டு. அது மனம் கடந்தது. அந்த இரண்டும் மனத்தளவே ஆனவை. விஞ்ஞானியும் கலைஞனுமாவது. கண்ணுக்குத் தெரியாத மூன்றாவது பருமானம் ஒன்று உண்டு. மனம் கடந்த பரிமாணம். அது மெய்ஞ்ஞானிகளுக்கே உரியது. அதைத் தியானத்தின் மூலமே பெறலாம்.

எனவே மூன்று வார்த்தைகளை நினைவில் கொள்ள வேண்டும் என்கிறேன். கணிதம்-கீழ் நிலையில். இசை-நடுவில். தியானம்-உயர்ந்ததாக. பரிபூரணமானவன் பொருட்களைப் பொறுத்த அளவில் விஞ்ஞானியாக இருக்கிறான்.

பிறரோடான உறவில் அழகுணர்வோடு இருக்கிறான். தன்னைப் பொறுத்த அளவில் தியானத்தோடு இருக்கிறான். எங்கே இவை மூன்றும் சந்தித்துக் கொள்கின்றனவோ அங்கே பெரும் கொண்டாட்டம்தான்.

அதுதான் உண்மையான திருமூர்த்தி. கீழ்த்திசை நாடுகளில், இந்தியாவில் குறிப்பாக, மூன்று நதிகள் சந்திக்கும் இடத்தைச் சங்கமம் என்பார்கள். அந்தச்

சங்கமங்களில் சிறந்தது பிரயாகை. கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகள் சங்கமிக்கும் இடம். கங்கையையும் யமுனாவையும் கண்களால் பார்க்கலாம். சரஸ்வதி கண்ணுக்குத் தெரியாத நதி. அது ஒரு உவமை. மூன்றும் அகத்தே சங்கமிப்பதற்கான குறியீடு.



கணக்கைத் தெரிந்து கொள்ளலாம். இசையைத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் அவற்றைத் தெரிந்து கொள்வதைப் போலத் தியானத்தைத் தெரிந்து கொள்ள முடியாது. விஞ்ஞானியை அவன் செய்யும் காரியங்களை வைத்து இனம் கண்டு கொள்ளலாம். இசைக் கலைஞன் காரியமும் அப்படியே. ஆனால் மெய்ஞ்ஞானியை அப்படி இனம் காண முடியாது. அதுதான் சரஸ்வதி. கண்ணுக்குத் தெரியாத நதி.

ஒரு புண்ணிய நதியாகிவிடலாம். ஒளிரும் திரேகம் பெறலாம். உலகுக்கே ஒளியேற்றலாம். இந்த உடலே புத்தர். இந்த உலகமே தாமரைச் சொர்க்கம். இதுதான் எனது சன்னியாசிகளுக்கான கோஷம். கடவுள் என்னவாக இருக்கிறாரோ அதன் ஒருமிப்பே உயர்வான சன்னியாசி.

இந்த ஒருமிப்புக்கு வரும்போதுதான் கடவுளைத் தெரிந்து கொள்ள முடியும். இல்லையேல் கடவுள் மீது நம்பிக்கை வைக்கலாம். ஆனால் தெரிந்து கொள்ள முடியாது. நம்பிக்கை உன் அறியாமைக்கு ஒரு திரை. அவ்வளவுதான். தெரிந்து கொள்வதென்பது நிலை மாறுபாட்டைக் கொண்டு வருவது. தெரிந்து கொண்டாலே புரிந்து கொள்ள முடியும். தெரிந்து கொள்வது என்றால் தகவல்களைப் பெற்றிருப்பது என்று பொருள் அல்ல. தெரிந்து கொள்வது என்பது ஒருமிப்பு. உன் சாத்தியங்கள் அனைத்தும் ஒருங்கிணைந்து விடுவது.



விஞ்ஞானியும் கவிஞனும் மெய்ஞ்ஞானியும் சந்தித்துக் கொள்ளும்போது இந்த ஒருமிப்பு நடந்தேறுகிறது. இறைவனின் மூன்று முகங்களும் உன்னில் வெளிப்படும்போது நீ கடவுளாகிப் போகிறாய். பிறகு அஹம் பிரம்மஸ்மி என்று அறிவிக்கலாம். நானே கடவுள்! பிறகு காற்றிடமும், நிலவிடமும், மழையிடமும் அனால் ஹக், நானே சத்தியம் என்று சொல்லலாம். அதற்கு முன் நீ வெறும் விதைதான்.

இந்த ஒருமிப்பு நடந்தேறும்போது நீ மலர்ந்து விடுகிறாய். ஆயிரம் இதழ்த் தாமரையாக மலர்ந்து விடுகிறாய். தங்கத் தாமரை. நித்தியமான தாமரை, என்றும் மரணிக்காத தாமரை. ஏஸ் தம்மோ சனந்தனோ. இதுதான் எல்லாப் புத்தர்களும் காலம் காலமாகப் போதித்த வற்றாத நெறி.

இரண்டாவது கேள்வி

அன்புக்குரிய குருவே

**''வெறுமனே நிற்காதே. ஏதாவது செய்து கொண்டிரு'' என்ற மந்திரத்தை மேற்கத்திய நாடுகளில் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். ஆனால் புத்தர் ''எதையாவது செய்து கொண்டிருக் காதே. சும்மா அப்படியே இரு'' என்கிறார். ''உணர்வுகளின் அடித்தளத்தில் இருந்து பிரதியான செயல்களைச் செய்கிறோம். ஞானி கவனித்திருக்கிறார்'' என்கிறார். அப்படியானால் இயல்பாகப் பிரவகிப்பது எப்படி? இயல்பாகச் செயல் புரிவுதும் கவனித்திருப்பதும் ஒன்றுக்கொன்று இசைவானவையா?**



''எதையாவது செய்து கொண்டிருக்காதே. சும்மா அப்படியே இரு'' என்று புத்தர் சொல்கிறார். ஆனால் அது யாத்திரையின் ஆரம்பம்தான். முடிவல்ல. நின்றுவிடுவது எப்படி என்று தெரிந்து கொள்ளும் போதும், மௌனத்தில் உறைந்து விடுவது எப்படி? என்று தெரிந்து கொள்ளும் போதும், ஸ்திரமாக இருப்பது எப்படி என்று தெரிந்து கொள்ளும் போதும் மௌனமாக உட்கார்ந்து கொண்டு எதையும் செய்யாமல் இருப்பது எப்படி என்று தெரிந்து கொள்ளும் போதும் ஊற்று பிரவகிக்கப் புல் தானாக வளர்கிறது. வளர்தல் இருக்கிறது என்பதை மறந்து விடாதே. செயல் மறைவதில்லை. புல் தானாகவே வளர்கிறது. புத்தர் செயலற்றுப் போவதில்லை. மிகப் பெரிய செயல் அவருக்குள் நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் செயல்படுகிறவர் இல்லாமல் போகிறார். செய்கிறவன் மறைந்து போகச் செயல் மட்டுமே தொடர்கிறது. செய்கிறவன் என்று யாரும் இல்லாதபோது செயல் சுயம்புவாகிவிடுகிறது. வேறு எப்படியும் இருக்க முடியாது. செய்கிறவன்தான் செயலின் இயல்பான பிரவாகத்தைக் தடுத்துவிடுகிறான்.

செய்கிறவன் என்றாலே தான் என்பது வந்து விடுகிறது. தான் என்பது கடந்த காலத்தது. செயல்படும் போது கடந்து போனதன் மூலமாகவே செயல்படுகிறாய். சேர்த்து வைத்திருக்கிற அனுபவத்தின் மூலமாகவே செயல்படுகிறாய். கடந்த காலத்தில் செய்து கொண்ட முடிவுகளின் பாற்பட்டே செயல்படுகிறாய். பிறகெப்படி இயல்பாகச் செயல்படுவது?

கடந்த காலம் மேலாதிக்கம் செலுத்துகிறது. கடந்த காலம் இருந்து கொண்டே இருப்பதால் நிகழ் காலத்தைப் பார்க்கக் கூட முடிவதில்லை. கண்கள் நிறையக் கடந்த



காலம். அதை மூடிக் கொண்டும் கடந்ததன் புகை மண்டலம். பிறகெப்படிக் காண்பது? புகை, கடந்த கால முடிவுகள், சேகரித்த அறிவு-இவை உன்னை முழுக்கக் குருடாக்கி விடுகின்றன.

சேகரித்த அறிவு இருக்கிறவனே முழுக்குருடனு மாகிறான். எது எப்படி இருக்கிறது என்பதைப் பார்க்காமல் தன் அறிவின்படி நடந்து கொள்கிறான். இயந்திரத்தனமாக நடந்து கொள்கிறான். எதையோ படித்து வைத்திருக்கிறான். அது ஆயத்த நிலையில் இருக்கும் இயந்திரமாக அவனிடம் இருக்கிறது. அதன் வழியே செயல்படுகிறான்.

பிரபலமான கதை ஒன்று.

ஜப்பானில் இரண்டு கோயில்கள் இருந்தன. கோயில்கள் காலம் காலமாக ஒன்றுக்கொன்று போட்டியாக இருந்திருக்கின்றன அல்லவா? அப்படியேதான் இவையும் பூசாரிகளிடையே பெரும் பகை. நேருக்கு நேர் பார்த்துக் கொள்வது கூட இல்லை. வழியில் நேருக்கு நேர் வர நேர்ந்து விட்டால் பேசிக் கொள்ள மாட்டார்கள். இப்படி பல நூற்றாண்டுகளாக அந்தக் கோயில் பூசாரிகளுக்கு இடையே பகை இருந்து வந்தது.

இரண்டு பூசாரிகளுக்கும் ஒவ்வொரு எடுபிடிப் பையன் இருந்தான். பையன்கள் பையன்கள்தானே! அவர்கள் நண்பர்களாகிப் போகலாமே!

ஒரு பூசாரி தன் பையனிடம், ''அந்தக் கோயில் நமது எதிரி. மறந்துவிடாதே. அந்தப் பையனோடு பேசி விடாதே. ஆபத்தான ஆட்கள். கொள்ளை நோயைத் தவிர்ப்பது போல அவர்களைத் தவிர்த்து விடு'' என்றார்.

அந்தப் பையனுக்கோ தத்துவம் எல்லாம் அலுத்துப் போய்விட்டது. புரியவே இல்லையே! என்னென்னவோ படிக்கிறார்கள். பேசுகிறார்கள். விவாதிக்கிறார்கள்.



இவனுக்கு ஒன்றுமே புரிவதில்லை. விளையாடுவதற்கு யாரும் கூட இல்லை. பேசுவதற்குக் கூட யாரும் இல்லை. எனவே அவனோடு பேச வேண்டாம் என்று சொன்னபோது பேசிப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அதிகமாகிப் போய்விட்டது. அப்படித்தானே ஆசைகள் தோன்றுகின்றன!

ஒரு நாள் அந்தப் பையனோடு பேசுவதைத் தவிர்க்க முடியவில்லை. வழியில் பார்த்த போது, ''எங்கே போகிறாய்?'' என்று கேட்டான்.

அவன் கொஞ்சம் தத்துவவாதி. ''போகிறேனா? யாரும் வருவதும் இல்லை. போவதும் இல்லை. அதது அப்படி அப்படி நடக்கிறது. காற்று எந்தப் பக்கம் போகிறதோ அந்தப் பக்கம்...'' என்றான்.

அவனுடைய குரு அடிக்கடி அப்படித்தான் புத்தர் வாழ்வதாகச் சொல்லக் கேட்டிருக்கிறான். விழுந்து விட்ட இலையைப் போல... காற்று எங்கே கொண்டு போகிறதோ அங்கே போய்க் கொண்டு...

எனவே, ''நான் எங்கும் போகவில்லை. இது என்ன முட்டாள்தனமான கேள்வி? நான் ஓர் உதிர்ந்த இலை. காற்று எங்கே கொண்டு போகிறதோ...''

கேட்டவனுக்கோ பேச நாக்கு எழவில்லை. பதில் கூடச் சொல்ல முடியவில்லை. என்ன சொல்வதென்றே அவனுக்கு விளங்கவில்லை. தர்மசங்கடம், வெட்கம் கூட... ''அவர் சொன்னது சரிதான். ஆபத்தான ஆட்கள் இவர்கள். என்ன பேச்சு இது? எங்கே போகிறாய் என்று சும்மா கேட்டேன். இரண்டு பேருமே கடைவீதிக்குக் காய்கறி வாங்கத்தானே போய்க் கொண்டிருக்கிறோம். எனக்குத் தெரியாதா என்ன? சாதாரணமாகப் பதில் சொல்லியிருக்கலாமே!'' என்று நினைத்துக் கொண்டான்.



திரும்பிப் போனவன் தன் குருவிடம் சொன்னான், ''மன்னிக்க வேண்டும் குருவே. நீங்கள் சொன்னதைக் கேட்காமல் போனேன். நீங்கள் அவர்களோடு பேசக் கூடாது என்று சொன்னதே என் ஆசையைத் தூண்டிவிட்டது. இதுதான் முதல் தடவை அவர்களோடு நான் பேசியது. எங்கே போகிறாய் என்று கேட்டேன். அதற்குப் போய் அவன் யார் வருகிறவர்கள்? யார் போகிறவர்கள்? நான் யாருமற்றவன். உதிர்ந்த இலை... காற்றில் அலைந்து கொண்டு... என்கிறான்.''

''நான்தான் சொல்லியிருக்கிறேன் இல்லையா? சரி. நாளைக்கு அதே இடத்தில் நின்று அதே கேள்வியைக் கேள். அதே பதிலைச் சொல்லும் போது, ''ரொம்ப சரி. நானும்தான் ஓர் உதிர்ந்த இலை. ஆனால் காற்று அடிக்காத போது நீ எங்கே போய்க் கொண்டிருப்பாய்? எங்கே போக முடியும்? இப்படிக் கேள். அவனுக்குத் தர்மசங்கடமாகிப் போகும். அவனைத் தோற்கடிக்க வேண்டும். நமக்குள் எப்போதுமே வாதப் பிரதிவாதம்தான். ஆனால் நம்மை அவர்கள் தோற்கடிக்க முடிந்ததே இல்லை. எனவே நாளைக்காவது அவர்களைத் தோற்கடிக்க வேண்டும்.''

மறுநாள் அந்தப் பையன் நேரத்தில் எழுந்து கொண்டான். தன் பதிலை மனப்பாடம் செய்து கொண்டான். பிறகு அந்தப் பையன் வழக்கமாகப் போகும் வழியில் நின்று கொண்டான். மீண்டும் மீண்டும் சொல்லிப் பார்த்துக் கொண்டு அவனுக்காகக் காத்திருந்தான். அவன் வரக் கண்டவுடன், ''சரிதான், தயாராக இரு'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அவனும் வந்து சேர்ந்தான், ''எங்கே போகிறாய்?'' என்று இவன் கேட்டான். சரியான சந்தர்ப்பம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தான்.

ஆனால் அவனோ, ''என் கால்கள் எங்கே என்னை அழைத்துப் போகிறதோ அங்கே!'' என்றான். காற்றைப் பற்றி ஒரு வார்த்தை இல்லை.



யாருமில்லாததைப் பற்றி ஒரு வார்த்தை இல்லை. செயல்படாதவன் பற்றி ஒரு வார்த்தை இல்லை. எனவே இவனுடைய பதில் பொருத்தமாக இருக்காது. என்ன செய்வது? தயாராக வைத்திருந்த பதில் முட்டாள்தனமாகிப் போகும். காற்றைப் பற்றிப் பேசுவதைத்தான் சொல்கிறேன்.

மறுபடியும் முகம் வாடியவனாக, தன் முட்டாள் தனத்துக்காக உண்மையிலேயே வெட்கப்பட்டுக் கொண்டு, ''இவனுக்குப் பலதும் தெரியும்தான். இப்போது கால்கள் எங்கே கொண்டு போகுமோ அங்கே என்கிறானே!'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

தன் குருவிடம் திரும்பிப் போனான். அவர், ''நான்தான் அவர்களோடு பேச வேண்டாம் என்று சொல்லியிருந்தேனே. அவர்கள் ஆபத்தானவர்கள். இது பல நூறு ஆண்டுகளாக நமக்கு அனுபவம். ஆனால் இப்போது ஏதாவது செய்தே ஆக வேண்டும். நாளைக்கு மறுபடியும் நீ எங்கே போகிறாய் என்று கேள். அவன் கால்கள் எங்கே கொண்டு போகிறதோ அங்கே என்று சொன்னால் உனக்குக் கால்கள் இல்லையென்றால் என்ன செய்வாய் என்று கேள். எப்படியாவது அவனைச் சும்மாயிருக்கச் செய்ய வேண்டும்'' என்றார்.

அடுத்த நாள் இவன் அவனிடம், ''எங்கே போகிறாய்?'' என்று கேட்டுவிட்டுப் பதிலுக்காகக் காத்திருந்தான். அவனோ, ''கடைவீதிக்குக் காய்கறி வாங்கப் போகிறேன்'' என்றான்.

மனிதன் சாதாரணமாகக் கடந்த காலத்து அனுபவத்தின் பேரில் செயல்படுகிறான். வாழ்வோ மாறிக் கொண்டே



இருக்கிறது. உன்னுடைய முடிவுகளின்படியே இருக்க வேண்டும் என்ற கட்டாயம் வாழ்வுக்கு இல்லை. அதனால்தான் வாழ்க்கை மிகக் குழப்பமானதாக இருக்கிறது. பகவத் கீதை, புனித குரான், பைபிள், வேதங்கள் என்று எல்லாவற்றையும் தனக்குள் திணித்துக் கொண்டு ஏகப்பட்ட பதில்களைத் தயாராக வைத்திருக்கும். ஆனால் மனிதனுக்கு வாழ்க்கை ஒரே கேள்வியை எப்போதும் எழுப்புவதில்லை. எனவே சேகரித்த அறிவு உள்ளவன் வாழ்வோடு போட்டி போட முடிவதில்லை.

எப்படிச் சும்மா இருப்பது என்பதைத் தெரிந்து கொள் என்று புத்தர் சொல்கிறார். ஆனால் அதற்கு எப்போதும் மௌனமாக உட்கார்ந்து கொண்டே இரு என்று பொருள் அல்ல. செயலற்றுப் போ என்று பொருள் அல்ல. மாறாக மௌனத்திலிருந்தே செயல்கள் தோன்றுகின்றன. மௌனித்திருக்காமல் தியானத்தில் இருக்காமல் நீ செய்யும் காரியங்கள் எல்லாமும் திருப்பிச் செய்வதாக இருக்குமே ஒழியச் செயல்களாக இருக்காது. ஒருவன் உன்னை அவமானப்படுத்துகிறான். உடனே நீ திருப்பி ஏதாவது செய்கிறாய். கோபப்பட்டு அவன் மேல் பாய்கிறாய். இதைச் செயல் என்கிறாயா? இது செயல் அல்ல. திருப்பிச் செய்வது. அவன் உன்னைத் தூண்டுகிறான். நீ தூண்டப்படுகிறாய். இங்கே ஒரு விசையைத் தூண்டினால் இயந்திரத்தைப் போல இயங்க ஆரம்பித்து விடுகிறாய். அங்கே ஒரு விசையைத் திருப்பினால் விளக்கு அணைந்து விடுகிறது. அதே விசையை மறுபடி தூண்டினால் விளக்கு எரிகிறது. இதைத்தான் மற்றவர்கள் உனக்குச் செய்து கொண்டிருக்கிறார்கள். விளக்கைப் போல உன்னை எரிய வைக்கிறார்கள். அணைத்து விடுகிறார்கள்.

ஒருவன் வந்து உன்னைப் புகழ்ந்து அகங்காரத்தைத் தூண்டிவிடுகிறான். எவ்வளவு பெரியவன் நான் என்று நினைத்துக் கொள்கிறாய். இன்னொருவன் வந்து உன்னைக் குத்திச் சிறுக்க வைத்து விடுகிறான். நீ கீழே விழுந்தே விடுகிறாய். நீ உன்னுடைய கட்டுப்பாட்டில் இருப்பதே இல்லை. யார் வேண்டுமானலும் உன்னை அவமானப்படுத்தி வருந்த வைக்கலாம். யார் வேண்டுமானாலும் எரிச்சலூட்டலாம். உபத்திரப்பட வைக்கலாம். பலாத்காரம் கைக்கொள்ள வைக்கலாம். பைத்தியமாக அடிக்கலாம். யார் வேண்டுமானாலும் உன்னைப் பாராட்டிப் பேசி உயர்ந்தவனாக உணர வைக்கலாம். நீதான் பெரிய ஆள் என்று நினைக்க வைக்கலாம். அலெக்ஸாண்டர் கூட உன்னளவு இல்லை என்று நினைக்க வைக்கலாம்.

இப்படி மற்றவர்கள் உன்னை வைத்துக் கொண்டு என்ன செய்ய நினைக்கிறார்களோ அதைச் செய்ய ஆட்பட்டு விடுகிறாய். இது உண்மையில் செயல்படுவதாக ஆகாது.

புத்தர் ஒரு முறை ஒரு கிராமம் வழியாகப் போய்க் கொண்டிருந்தார். வந்த கூட்டம் அவருக்கு அவமரியாதை செய்தது. அசிங்கமாகப் பேசியது. எவ்வளவு அசிங்கமாக முடியுமோ அவ்வளவு அசிங்கமாகத்தான். புத்தர் அமைதியாக அவர்களுடைய ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டுக் கொண்டார். பின், ''என்னைப் பார்க்க வந்ததற்கு நன்றி. இப்போது நான் அவசரமாகப் போக வேண்டி இருக்கிறது. அடுத்த ஊரில் எனக்காக மக்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது அதிக நேரம் உங்களோடு இருக்க முடியாது. நாளைக்குத் திரும்பி வரும்போது உங்களோடு கொஞ்சம் அதிக நேரம் இருக்கிறேன். மறுபடி நீங்கள் கூட்டமாக வந்து சொல்லிவிட்டுப் போனது ஏதாவது



இருந்தால் அதையும் சேர்த்துச் சொல்லிவிடலாம். இன்றைக்கு நான் போய்விட்டு வந்து விடுகிறேனே!'' என்றார்.

அங்கிருந்தவர்களுக்குத் தம் காதுகளையே நம்பவே முடியவில்லை. இது என்ன இவன் எந்த வகையிலும் பாதிக்கப்படாமல் இருக்கிறானே! இவனைத் திசை திருப்ப முடியவில்லையே! ஒருவன், ''என்ன நாங்கள் சொன்னதெல்லாம் காதிலே விழவில்லையா? உன்னை நாங்கள் திட்டித் தீர்த்துக் கொண்டிருக்கிறோம். நீ எந்தப் பதிலும் சொல்லவில்லையே!'' என்று கேட்டே விட்டான்.

புத்தர், ''பதில் வேண்டும் என்றால் காலம் தாழ்ந்து வந்து விட்டாய். பத்து வருடத்துக்கு முன்னால் வந்திருக்க வேண்டும். மற்றவர்கள் சுண்டிய கயிற்றுக்கு ஆடுவதை நிறுத்தி நிறையக் காலம் ஆகிவிட்டது. இனியும் நான் அடிமையல்ல. என் கட்டுப்பாட்டுக்குள் வந்துவிட்டவன். நான் சொல்கிறபடி செயல்படுகிறவன். வேறு யார் சொல்கிறபடியும் அல்ல. என்னுடைய உள்ளார்ந்த தேவைகள் பாற்பட்டு நான் செயல்படுகிறேன். என்னை யாரும் வலுக்கட்டாயம் செய்ய முடியாது. சரிதான். என்னைத் திட்ட வேண்டும் என்றிருக்கிறது. திட்டுகிறாய். திருப்திப்பட்டுக் கொள். உன்னுடைய காரியத்தை நன்றாகவே செய்திருக்கிறாய். ஆனால் என்னைப் பொருத்த அளவில் உன்னுடைய திட்டுதலை நான் பொருட்படுத்தவே இல்லை. அதனால் அதில் பொருளேதும் இல்லை'' என்றார்.

உன்னை ஒருவர் திட்டும்போது அதை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் நீ திருப்பி ஏதாவது செய்ய அல்லது பேச முடியும். அப்படி நீ ஏற்றுக் கொள்ளவில்லை என்றால் அதிலிருந்து விலகி நிற்கிறாய்



என்றால். சங்கடமின்றி நிற்கிறாய் என்றால் அவன் என்ன செய்ய முடியும்?

''எரியும் பந்தத்தை ஆற்றுக்குள் எரியலாம். தண்ணீருக்குப் போய்ச் சேரும் வரை எரிந்து கொண்டுதான் இருக்கும். தண்ணீருக்குள் விழுந்த அடுத்த கணம் தீ தீர்ந்து போய்விடுகிறது. நதி அணைத்து விடுகிறது. நான் ஒரு நதியாகிப் போனவன். என்னைப் பார்த்துத் திட்டுகளை வீசுகிறாய். நீ என்னை நோக்கி விட்டெறியும் தீ. ஆனால் அது என்னைச் சேர்ந்த அந்தக் கணமே அணைந்து போகிறது. அதில் சுட்டெரிக்க எதுவும் இல்லாமல் போகிறது. முட்களை வீசுகிறாயா? என்னுடைய மௌனத்தில் அவை மலர்களாகிப் போகின்றன. என்னுடைய அடிப்படை இயல்பின் பேரில் என்னுடைய செயல்கள்'' என்கிறார் புத்தர்.

இதுதான் ஊற்றின் இயல்பு. விழித்தவர், புரிந்து கொண்டவர், செயல்படுகிறார். விழிப்பில்லாதவன், உணர்வில்லாதவன், இயந்திரத்தனமானவன்-அவன் பிரதி வினையாற்றுகிறவன்.

கர்டிஸ்! ''உணர்வுகளின் அடித்தளத்தில் இருந்து பிரதியான செயல்களைச் செய்கிறோம். ஞானி கவனித்திருக்கிறார்'' என்று புத்தர் சொன்னதைப் பற்றிக் கேட்டாய். அவர் வெறுமனே கவனித்துக் கொண்டு மட்டும் இருக்கவில்லை. கவனித்திருப்பது அவருடைய இருப்பின் ஒரு பகுதி. ஞானி கவனித்திருக்காமல் செயல்படுபவர் மட்டும் அல்ல. ஆனால் புத்தர் சொன்னதைத் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடாது. புத்தரை வழக்கமாக எல்லோரும் தவறாகத்தான் புரிந்து கொண்டிருக்கிறார்கள். எனவே நீதான் முதல் முதலாக அப்படிச் செய்கிறவன் என்பதில்லை.



இந்தத் தேசம் முழுக்கப் புத்தரைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறது. அதனால்தான் எந்தச் செயல்பாடும் இல்லாமல் இருக்கிறார்கள். சும்மா இரு என்று எல்லா ஞானியரும் சொல்லியிருக்கிறார்கள் என்று தவறாகப் புரிந்து கொண்டு இந்தத் தேசம் முழுக்க செயலற்றுப் போய் விட்டது. சோம்பேறிகளாகி விட்டார்கள். இந்தத் தேசம் தன்னுடைய சக்தியையும் ஆற்றலையும் ஜீவனையும் இழந்து விட்டது. முழுக்க மந்தமாகிப் போனது. அறிவைத் துறந்து விட்டது. செயல்படும் போதுதான் அறிவு கூர் தீட்டப்படுகிறது. கணத்துக்குக் கணம் விழிப்போடும் கவனிப்போடும் செயல்படும் போது விவேகம் பிறக்கிறது. ஜொலிக்கிறாய். ஆனால் அதற்கு இரண்டு விஷயங்கள் தேவை. கவனிப்போடும். அதன் அடிப்படையில் செயல்படுதல். கவனித்திருப்பது என்ற பெயரில் செயல்படாமல் கிடந்தால் அது தற்கொலைக்குச் சமம். கவனித்திருப்பது செயலுக்கு இட்டுச் செல்ல வேண்டும். ஒரு புது வகையான செயல்பாடு. ஒரு புதிய இயல்பு செயல்பாட்டுக்கு வந்து சேர்கிறது.

கவனித்திருக்கும் போது அமைதியாகிப் போகிறாய். மௌனித்து விடுகிறாய். சூழல் எப்படி இருக்கிறது என்பதைப் பார்க்கிறாய். அந்தப் பார்வைக்கு ஏற்பச் செயல்படுகிறாய். விழித்தவர் சூழலுக்கு ஏற்பச் செயலாற்றுகிறார். அவருடைய செயல்கள் பிரதி வினைகள் அல்ல. அவருடைய செயல்கள் சூழலை அவர் புரிந்து கொண்டதற்கு ஏற்ப அமைகின்றன. சூழல் சொன்னபடி அவர் செயலாற்றுவதில்லை. அதுதான் வித்தியாசம். எனவே கவனித்திருத்தலுக்கும் இயல்பாகச் செயல்படு வதற்கும் இடையே எந்தப் பொருத்தமின்மையும் இல்லை. கவனித்திருத்தலே இயல்பாகச் செயல்படுவதற்கான

ஆரம்பமாகிறது. இயல்பாகச் செயல்படுவது கவனித்தலின் முகிழ்வு.



உண்மையாகப் புரிந்து கொண்டவர் செயல்படுகிறார். ஈடுபாட்டோடு செயல்படுகிறார். ஆனால் அவருடைய செயல்கள் அவரே நிர்ணயித்துக் கொள்கிறார். ஒவ்வொரு கணத்துக்கும் ஏற்பச் செயல்படுகிறார். அவர் ஒரு கண்ணாடியைப் போல.

சாதாரணமானவன் அப்படிக் கண்ணாடியைப் போன்றவன் அல்ல. அவன் ஒரு போட்டோ பிளேட் போல. என்ன வித்தியாசம் என்கிறாயா? ஒரு முறை எக்ஸ்போஸ் செய்து விட்டால் போட்டோ பிளேட் பயனற்றுப் போகிறது. ஒரு பிரதியைப் பெற்றான பின் அப்பிரதியை அப்படியே வைத்துக் கொண்டிருந்து விடுகிறது. ஆனால் பிரதி அசலாகாது. அசலான எதுவும் வளர்ந்து கொண்டே இருக்கிறது.

ஒரு ரோஜாச் செடியைப் படம் பிடிக்கலாம். மறுநாள் அந்தப் படம் அப்படியேதான் இருக்கும். அடுத்த நாளும் அப்படியேதான் இருக்கும். மறுபடி போய் அந்த ரோஜாச் செடியைப் பார். அது அப்படியே இருப்பதில்லை. பூக்கள் இல்லாமல் போயிருக்கலாம். பழைய பூக்களின் இடத்தில் புதிய பூக்கள் பூத்திருக்கலாம். ஆயிரத்தெட்டு வித்தியாசங்கள். ஒரு நாள் எதார்த்தவாதி ஒருவர் பிக்காஸோவைச் சந்தித்தாராம். பிக்காஸோவின் ஓவியங்கள் அப்ஸ்ட்ராக்ட் வகையானவை. அவை எதார்த்தமாக இருப்பதில்லை என்று குற்றம் சொல்லப் போயிருந்தார். அவை எதார்த்தத்தைக் காட்டுவதில்லை. குறியீடுகளாக இருக்கின்றன.

அந்த எதார்த்தவாதி, ''உங்களுடைய ஓவியங்கள் எனக்குப் பிடிக்கவே இல்லை. ஓவியம் எதார்த்தமானதாக



இருக்க வேண்டும். என்னுடைய மனைவியின் ஓவியத்தை வரைந்தால் அது அவளைப் போல இருக்க வேண்டும்'' என்றார். பிக்காஸோ அந்த ஓவியத்தைப் பார்த்தார் ''இது உன்னுடைய மனைவியா?'' என்றார். அவர், ''ஆமாம், ஆமாம். என் மனைவிதான்!'' என்றார்.

உடனே பிக்காஸோ, ''ஆச்சரியம்தான். இது என்ன இவ்வளவு சின்னதாகவும் தட்டையாகவும் இருக்கிறாளே!'' என்றார்.

படம் மனைவியாக முடியாது.

இன்னொரு கதை.

ஓர் அழகான பெண் பிக்காஸோவிடம் வந்தாள். ''உங்களை நீங்களே வரைந்து கொண்ட படத்தை நண்பர் ஒருவர் வீட்டில் பார்த்தேன். அவ்வளவு அழகாக இருந்தது. அதைக் கட்டிப் பிடித்து முத்தம் இட்டேன். அந்த அளவுக்கு என்னை மயக்கிவிட்டது'' என்றாள்.

பிக்காஸோ, ''அப்படியா, படம் திருப்பி முத்தமிட்டதா?'' என்று கேட்டார்.

''உங்களுக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது? படம் எப்படித் திருப்பி முத்தம் கொடுக்க முடியும்?''

''அப்படியானால் அது நான் அல்ல!''

படம் செத்துப் போனது. கேமரா, போட்டோ பிளேட் இவையெல்லாம் உறைந்து போனதைப் பிடித்து வைத்திருக்கின்றன. வாழ்வு என்றும் உறைந்து போனதல்ல. அது மாறிக் கொண்டே இருப்பது. உன் மனம் ஒரு கேமராவைப் போலச் செயல்படுகிறது. படங்கள் ஒன்றுக்குப் பின் ஒன்றாக ஓர் ஆல்பமாகச் சேர்த்துக் கொண்டிருக்கிறது. அந்தப் படங்களைச் சார்ந்து பிரதி வினைகள் ஆற்றிக்



கொண்டிருக்கிறது. எனவே நீ எப்போதும் வாழ்வுக்கு உண்மையானவனாக இருப்பதில்லை. நீ செய்வதெல்லாம் தவறானதாகவே இருக்கின்றனவே! வாழ்வோடு இசைவாக இருப்பதில்லையே!

ஒரு பெண் தன் குடும்பப் போட்டோ ஆல்பத்தைத் தன் மகனுக்குக் காட்டிக் கொண்டிருந்தாள். அதில் ஒரு படம். அழகான ஒருவன். நீள முடி. அருமையான தாடி. இளைஞன். வெகு உயிர்ப்போடு இருந்தான்.

பையன், ''இது யார் அம்மா?'' என்றான்.

அவள், ''அதுதான் உன் அப்பா. தெரியவில்லையா என்ன?'' என்றாள்.

அவன் பார்வையில் குழப்பம், ''அப்படியானால் நம்ம வீட்டுலே இருக்கற அந்தச் சொட்டைத் தலை யாரு?'' என்றான்.

படம் உறைந்து போனது. அது அப்படியே தானிருக்கும். மாறவே மாறாது. ஆழ்மனம் ஒரு கேமராவைப் போலச் செயல்படுகிறது. ஒரு போட்டோ பிளேட்டைப் போலச் செயல்படுகிறது.

கவனித்திருக்கும் மனம், தியானிக்கும் மனம் ஒரு கண்ணாடியைப் போலச் செயல்படுகிறது. கண்ணாடியில் எந்தப் பிம்பமும் தங்கிப் போவதில்லை. எப்போதும் துல்லியமாக இருக்கிறது. எனவே அதன் முன் எதைக் கொண்டு போனாலும் பிரதிபலிக்கிறது. நீ நின்றால் உன் பிரதிபலிப்பு. போய்விட்டால் நீ இருப்பதில்லை. கண்ணாடி வெறும் கண்ணாடிதான். நீ போன பின்னும் உன்னைப் பிரதிபலிக்க வேண்டும் என்ற கட்டாயம் எதுவும் அதற்கு இல்லை. வேறு ஒருவர் முன்னால் வந்து நின்றால் அவரை அது பிரதிபலிக்கிறது. யாரும் இல்லையென்றால்



எந்தப் பிரதிபலிப்பும் இருப்பதில்லை. இப்படியாக அது எதார்த்தத்துக்கு உண்மையாக இருக்கிறது.

போட்டோ பிளேட் அப்படியில்லை. இப்போதுதான் எடுக்கப்பட்டது என்றாலும் படத்தை கேமராவில் இருந்து எடுத்து நீ பார்க்கும் நேரத்துக்குள் நீ மாறிப் போயிருக்கிறாய். வளர்ந்துவிடுகிறாய். மாறிவிடுகிறாய். வயதாகிப் போகிறது. ஒரே ஒரு நிமிடம் என்றாலும் அதற்குள் நிறையத்தான் நடந்து போய்விடுகிறது. நீ இறந்து கூடப் போய்விடலாம். ஒரே நிமிட இடைவெளியில் இறப்பு கூடச் சாத்தியமே. ஆனால் போட்டோ அப்படியேதான் இருக்கும்.

ஆனால் கண்ணாடியில் நீ உயிர்ப்புடன் இருக்கிறாய். நீ இறந்து விட்டால் கண்ணாடியிலும் இறந்து போய்த்தான் இருப்பாய்.

மௌனமாக உடகார்ந்திருக்கக் கற்றுக் கொள் என்கிறார் புத்தர். ஒரு கண்ணாடியாகிவிடு என்கிறார். மௌனம் உன் பிரக்ஞையை ஒரு கண்ணாடியாக்கி விடுகிறது. பிறகு நீ கணத்துக்குக் கணம் செயல்படத் தொடங்கிவிடுகிறாய். வாழ்வைப் பிரதிபலிக்கத் தொடங்கி விடுகிறாய். உன் மனதில் ஓர் ஆல்பத்தைச் சுமந்து கொண்டு திரிவதில்லை. உன் கண்களில் தெளிவு இருக்க வருகிறது. தீர்க்கமான நோக்கம் இருக்கிறது. எப்போதும் வாழ்வுக்கு உண்மையானவனாக இருக்கிறாய்.

இதுதான் ஆணித்தரமான வாழ்வு.

மூன்றாவது கேள்வி



அன்புக்குரிய குருவே,

**ஏன் யாரும் விமர்சனத்துக்குட்படத் தயாராக இருக்காமல் பிறரை விமர்சனம் செய்ய மட்டுமே விரும்புவது?**

**காயத்ரி**, அகந்தை தொட்டாற் சுருங்கியைப் போல. வெகு எளிதில் உடைந்துவிடும். விமர்சனத்தைக் கண்டு பயப்படுகிறது. அகந்தை பிறருடைய அபிப்பிராயங்களைச் சார்ந்தது. தனக்கென்று எந்த அடையாளமும் இல்லாதது. தனக்கென்று எந்த வடிவும் இல்லாதது. தனக்கென்று ஒரு பொருண்மை இல்லாதது. அது பிறருடைய அபிப்பிராயங்களின் மூட்டை.

ஒருவர் உன்னை அழகி என்கிறார். அதை எடுத்து வைத்துக் கொள்கிறாய். இன்னொருவர் அறிவாளி என்கிறார். அதையும் எடுத்து வைத்துக் கொள்கிறாய். இன்னமொருவர் உன்னைப் போலத் தனித்தன்மை உடையவரை நான் கண்டதே இல்லை என்கிறார். அதையும் எடுத்து வைத்துக் கொள்கிறாய்.

திடீரென ஒரு நாள் ஒருவர் வந்து சகிக்க முடியவில்லை என்கிறார். விமர்சனத்தை ஏற்றுக் கொள்ள முடியும் என்கிறாயா? உனக்கென்று ஒரு வடிவத்தைக் கற்பித்து வைத்திருக்கிறாய் அல்லவா? அதற்கு எதிரிடையாக விமர்சனம் அமைகிறது. திருப்பியடிக்கிறாய். பலமான எதிர்ப்புத்தான். என்னதான் செய்தாலும் மனம் அந்த அபிப்பிராயத்தையும் எடுத்து வைத்துக் கொள்கிறது. ஒருவர் சகிக்கவில்லை என்று சொல்ல இன்னொருவர் நீ ஒரு அடிமடையன் என்கிறார். கோடிக்கணக்கானவர்கள்



இருக்கும் உலகில் கணக்கில்லாத அபிப்பிராயங்கள், விருப்பு வெறுப்புகள் இருக்கின்றன.

எனவே உன் அகந்தை முரண்பாடுகளின் மூட்டையாகிப் போகிறது. ஒரு பகுதி உன்னை அழகானவன் என்கிறது. இன்னொரு பகுதி அசிங்கமானவன் என்கிறது. ஒரு பகுதி உன்னைப் புத்திசாலி என்கிறது. இன்னொரு பகுதி சும்மா இரு. வாயை மூடு. நீ அடிமடையன் தவிர வேறு எதுவும் இல்லை என்கிறது. எனவே ஒவ்வொருவரும் குழப்பத்திலேயே வாழ்கிறார்கள்.

தாம் யார்? என்பது தெரிவதே இல்லை. புத்திசாலிகளா? முட்டாள்களா? அழகானவர்களா? அசிங்கமானவர்களா? நல்லவர்களா? மோசமானவர்களா? மகானா? பாவியா? ஒன்றுமே தெரிவதில்லை. ஒருவர் உன்னை மகான் என்கிறார். இன்னொருவரோ உன்னைப் பாவி என்கிறார். உலகில் வெவ்வேறு மதிப்பீடுகளும் அறநெறிகளும் இருக்கின்றனவே. உனக்குப் பக்கத்து வீட்டுக்காரர் ஒரு கிறித்துவராக இருக்கலாம். நீ ஒரு சமணனாக இருக்கலாம். கிறித்துவனுக்கு ஒயின் குடிப்பது சகஜமான செயல். கிறித்துவுக்கே ஒயின் பிடித்தமானது. ஆனால் மகாவீரர் மது குடித்திருப்பார் என்று ஒரு சமணன் தன் கனவில் கூட நினைத்துப் பார்க்க முடியாது.

கிறித்துவனுக்கு யேசுவின் அற்புதச் செயல்களில் ஒன்று தண்ணீரை ஒயினாக மாற்றியது. மகாவீரர் அப்போது பக்கத்தில் இருந்திருந்தால் ஒயினை மறுபடி தண்ணீராக மாற்றியிருப்பார். அது அவருடைய அற்புதச் செயலாக இருந்திருக்கும்.

ஏதோ ஓரிருமுறை மது அருந்துகிறாய் என்று வைத்துக் கொள். நீ மகானா அல்லது பாவியா? ஒவ்வொருவரும்



ஒவ்வொரு விதமாகச் சொல்வார்கள். மகாத்மா காந்தியின் ஆசிரமத்தில் டீ குடிப்பதற்குத் தடையாமே. மதுவைப் பற்றிப் பேசவே வேண்டியதில்லை. சாதாரணமான டீயே குடிக்க முடியாது என்றால் என்ன செய்வது?

பௌத்த பிக்ஷுக்கள் எல்லோரும் பல காலமாகவே டீ குடிக்கிறவர்கள். தியானத்துக்கு டீ உதவியாக இருக்கிறது என்று நினைக்கிறவர்கள். தூங்காமல் வைத்திருக்கிறது என்பதால் அதிலும் ஒரு நியாயம் இருக்கிறது. பௌத்த தியான முறையில் தூக்கம் வந்துவிடும். ஒரே விதமாகப் பல மணி நேரம் உட்கார்ந்து பார். தூக்கம் தன்னால் வந்து விடும். ஒரு மணி நேரம் போதும்.

டீ அதைத் தவிர்க்க உதவியாக இருந்திருக்கும். உண்மையில் டீயைக் கண்டு பிடித்தவர்களே பௌத்தர்கள்தான். போதி தர்மா என்ற பௌத்த குருவே டீயைக் கண்டு பிடித்தவர். டா என்று சீன மொழிப் பெயரைக் கொண்ட மடத்தின் பெயரில் இருந்தே டீ என்ற பெயர் வந்தது. ஒரு மலை முகட்டில் இருந்த மரம். டா என்ற சீன வார்த்தையை இரண்டு வகையாக உச்சரிக்கலாம். டா அல்லது ச்சா. எனவேதான் இந்தியில் சாய். மராத்தியில் சா. ஆங்கிலத்தில் டீ. ஸென் மார்க்கத்தை ஸ்தாபித்த போதி தர்மா கண்டு பிடித்ததுதான் டீ.

பல காலமாகவே மடாலயங்களில் ஒயின் வடித்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். கத்தோலிக்கப் பாதிரியார்களும் கன்னியாஸ்திரீகளுமே மிகச் சிறந்த ஒயினை வடித்தவர்கள் என்பது உனக்கு ஆச்சரியமாக இருக்கலாம். மிகப் பழைய தும் மிகப் பிரமாதமானதுமான ஒயின் ஐரோப்பாவில் பழைய மடாலயங்களின் நிலவறைகளில்தான் இருக்கிறது. ஒயினை வடிக்கும் மடாலயங்களா? அது என்ன மடாலயங்கள் அவை என்கிறாயா? யார் முடிவு செய்வது?



வாஸ்தவத்தில் அதிலும் ஒரு நியாயம் இருக்கிறது. பௌத்தத் தியானம் விழித்திருப்பது. டீயில் உணர்வூக்கிகள் இருக்கின்றன. ஒரு நாள் இன்னொரு போதி தர்மா வந்து புகை பிடிப்பதை நியாயப்படுத்தலாம். அதிலும் நிகோடின் என்ற உணர்வூக்கி இருக்கிறதே. டீ தியானத்துக்கு உதவியாக இருக்குமே யானால் புகை பிடிப்பதும் உதவியாக இருக்கலாம். இன்னொரு போதிதர்மா வரவுக்காகப் புகையிலை காத்திருக்கிறது. பிறகென்ன? புகை பிடித்துக் கொண்டே உன்னை ஒரு மகான் என்று நினைத்துக் கொள்ளலாம். எவ்வளவு அதிகம் புகை பிடிக்கிறாயோ அவ்வளவு பெரிய மகான்.

ஒயின் மடாலயங்களின் படைப்பாக்கத்தின் ஒரு பகுதியாக அமைந்தது தற்செயலானதல்ல. கடவுளிடம் முழுகிப் போய்விடுவதே பிரார்த்தனை என்றார் யேசு. அவருடைய மார்க்கம் பக்தி மார்க்கம். புத்தருடைய மார்க்கம் தியான மார்க்கம். எனவே புத்தர் ஒயினை ஏற்றுக் கொள்ளவே மாட்டார். யேசு ஒயினை ஏற்றுக் கொள்கிறார் என்றால் அது உன்னை மெய்மறக்கச் செய்கிறது என்பதால் தான். தான் என்ற உணர்விலிருந்து வெளியேற, தன்னை மறந்து விட, கவலைகளை மறந்து போக ஒரு வழி. புரிந்து கொள்ளாததைத் தூரத்தே இருந்து பார்க்க ஒரு வழி.

எது சரி எது தவறு என்று யார் முடிவு செய்வது? எல்லாமும்தான் அங்கங்கே இருக்கின்றன. இவற்றை வைத்துக் கொண்டு உனக்கென ஒரு வடிவம் கற்பித்துக் கொண்டிருக்கிறாய். அது ஓர் அஞ்சறைப் பெட்டியாகத்தான் இருக்கும். இப்படி அல்லது அப்படித்தான் என்று வரையறுத்ததாக இருக்க முடியாது.

எனவே விமர்சனத்தைக் கண்டு பயப்படுகிறாய். அது உன் அஞ்சறைப் பெட்டித்தனத்தைக் காட்டிவிடுகிறது. நீ



விமர்சனத்துக்கு எதிரானவன் அல்ல. எப்படியோ அடக்கி வைத்திருக்கும் பிரச்சனைகளை விமர்சனம் வெளியே கொண்டு வருகிறது என்பதுதான் உன்னுடைய பயமே. பிரச்சனைகளைத் தெரிந்து கொள்ள வைப்பது விமர்சனம். யாருக்கும் பிரச்சனைகளைத் தெரிந்து கொள்ள விருப்பம் இருப்பதில்லை. ஏனென்றால் பிரச்சனைகளைத் தீர்க்க வேண்டுமே. அது ஒரு சிக்கலான காரியமாயிற்றே. துணிச்சல் வேண்டிருக்கிறதே.

பார்க்கப் போனால் பலரும் பிரச்சனைகளைத் தீர்க்க விரும்புவதில்லை. பிரச்சனைகளில் முதலீடு செய்து வைத்திருப்பவர்கள்தான் அதிகம். ஏனென்றால் அவற்றோடு தான் எத்தனை காலம் வாழ்ந்திருக்கிறாய்! உன் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ள நீ தயாரில்லை. துயரத்தோடு வாழ்ந்து பழகிவிட்டாயா? அப்படியே இருக்க வேண்டும் என்கிறாய். மேம்போக்காக நீ என்ன சொன்னாலும் சரி. அது வேறு இது வேறு, அடி ஆழத்தில் துயரப்பட்டவனாகவே இருக்கிறாய்.

உதாரணமாக மனைவி உடல் நலிவுறும்போது கணவன் அனுசரணையாக இருக்கிறான் என்று தெரிந்து வைத்திருக்கிறாள். அவள் சாதாரணமாக இருந்தால் அவன் கண்டு கொள்வதே இல்லை. ஆனால் உடல் நலிவு என்று தெரிந்தால் அருகே வந்து உட்கார்ந்து கையைப் பிடித்து ஆறுதல் தருகிறான். அது தன் கடமை என்று நினைக்கிறான். அவள் நன்றாக இருக்கும் வரை அவள் இருப்பதே அவனுக்கு நினைவிருப்பதில்லை.

கணவன்மாரைக் கேட்டுப் பாருங்கள். உன் மனைவியின் முகத்தைச் சரியாகப் பார்த்து எத்தனை நாளாயிற்று என்று. உன் நாய் தொலைந்து விட்டால் நீ அடையாளம் கண்டு சொல்வாய். ஆனால் உன் மனைவி தொலைந்துவிட்டால் நீ அடையாளம் கண்டு சொல்ல நீ



பக்கத்து வீட்டுக்காரர்களைதான் அழைக்க வேண்டும். உன்னை விட அவர்கள் பரவாயில்லை. யார் அவரவர் மனைவியைப் பார்த்துக் கொண்டே இருக்கிறார்கள்?

முல்லா நஸ்ருதீன் ஒரு நாடகம் பார்க்கப் போனார். அதில் ஒரு நடிகன். பிரமாதமான காதல். அவனுடைய காதல் நடிப்பைப் பார்த்த முல்லா தன் மனைவியிடம் இவன் பிரமாதமான நடிகனாகத்தான் இருக்க வேண்டும் என்றார். அவருடைய மனைவி, ''காதலியாக நடிப்பவள் அவனுடைய மனைவியாக்கும்'' என்றார். ''அப்படியானால் அவன் எல்லோரையும் விஞ்சிய நடிகனாகத்தான் இருக்க வேண்டும்'' என்றாராம்.

தன்னுடைய மனைவியிடம் அவ்வளவு காதலா? சாத்தியமே இல்லை.

இருபது வருடங்களாக இந்த நாட்டில் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறேன். ஆயிரக்கணக்கானோர் வீடுகளில் தங்கியிருக்கிறேன். கணவன் வீட்டில் இல்லாத போது மனவைி மகிழ்ச்சியாக இருக்கிறாள். அவன் வந்தால் போதும் அவளுக்குத் தலைவலி வந்து விடுகிறது. போய்ப் படுத்துக் கொள்கிறாள். நான்தான் இருக்கிறேனே. பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். ஒரு நிமிடத்துக்கு முன் நன்றாக இருந்தவள்-அவன் வந்தவுடனே தலைவலியும் வந்து விடுகிறது.

மெது மெதுவே இதைப் புரிந்து கொண்டேன். இது ஒரு பெரும் முதலீடு. அவள் பாசாங்கு செய்கிறாள் என்று நான் சொல்லவில்லை. நீண்ட காலப் பாசாங்கு நிசமாகிவிடும். ஒரு வகையான சுய மனோவசியம். அவளுக்கு உண்மையிலேயே தலைவலி இல்லை என்று நான் சொல்லவில்லை. கணவனைப் பார்த்தாலே போதும்.



உண்மையான தலைவலி வந்து விடலாம். எத்தனை முறை அப்படி நடந்திருக்கிறது! அது தானாக அப்படியே மீண்டும் நடக்கிறது. எனவே அவள் கணவனை ஏமாற்றுகிறாள் என்று நான் சொல்லவில்லை. அவள் தன்னையே ஏமாற்றிக் கொள்கிறாள் என்றுதான் சொல்வேன்.

உனக்கென ஒரு வடிவம் கற்பித்து வைத்திருக்கிறாய். அதை மாற்றுவதற்கு நீ தயாராக இல்லை. விமர்சனம் என்றாலேயே அதைத் தொல்லைக்குள்ளாக்குவது.

லிட்டில் ரெட் ரைடிங் ஹூட் கதை உனக்குத் தெரியும்.

இந்தச் சின்னப் பெண் தன் பாட்டியைப் பார்க்கப் போனாள். ஒரு மோசமான ஓநாய், பாட்டியைத் தின்றுவிட்டு அவள் படுக்கையில் கிடக்கிறது. பாட்டியின் உடைகளைப் போட்டுக் கொண்டு, பாட்டியின் நைட்டீ, பாட்டியின் நைட்கேப், பாட்டியின் போர்வை, வந்தவளுக்கு என்னவோ வித்தியாசமாகத் தெரிய பாட்டியின் கண்களைப் பார்த்து, ''எவ்வளவு பெரிய கண்கள் உனக்குப் பாட்டி!'' என்றாள்.

''உன்னை நன்றாகப் பார்ப்பதற்குத்தான்.''

''எவ்வளவு பெரிய மூக்கு உனக்குப் பாட்டி!''

''உன்னை நன்றாக முகர்வதற்குத்தான்.''

''எவ்வளவு பெரிய கைகள் உனக்குப் பாட்டி!''

''உன்னை நன்றாகக் கட்டி அணைக்கத்தான்.''

''ஆனால் பாட்டி, இது என்ன உன் கைகளில் இவ்வளவு முடி?''

''ஏய் நீ என்னைக் குறை சொல்லவே வந்திருக்கிறாயா?''



எதற்கும் ஓர் எல்லை இருக்கிறது. யாரும் விமர்சனத்தை விரும்புவதில்லை. ஆனால் மற்றவரை விமர்சிக்க விரும்புகிறார்கள். அதில் ஒரு திருப்தி. மற்றவர்கள் மோசம் என்றால் நீ நல்லவன் என்று நினைப்பு. மற்றவன் ஒரு போக்கிரி, ஏமாற்றுக்காரன், பாசாங்கு செய்கிறவன், நேர்மையற்றவன், தந்திரக்காரன் என்றால் உனக்கு ஒரு திருப்தி. நீ அவ்வளவு மோசமானவன் இல்லையே. அவ்வளவு நேர்மையற்றவன் இல்லையே. ஒப்பிடுவதில் ஒரு திருப்தி. நேர்மையற்ற வனாக இருக்க முடிகிறது. அவனளவுக்கு நான் நேர்மையற்றவன் இல்லை என்ற எண்ணம்தான் காரணம். இந்த அநியாயமான உலகில் நேர்மையாக இருந்து எப்படிப் பிழைப்பது? ஓரளவுக்கு நேர்மையில்லாமல் இருப்பதில் தவறில்லை.

காலையில் செய்தித்தாளைப் படிக்கும் போது உனக்கு ஒரு திருப்தி. என்னென்ன அசிங்கமெல்லாம் நடக்கிறது உலகில்! வன்முறை, கொலை, தற்கொலை, கற்பழிப்பு, திருட்டு, கொள்ளை-இவற்றோடு ஒப்பிடும் போது நீ பெரிய மகான்தான். அதனால்தான் காலையில் யாரும் பகவத் கீதை படிப்பதில்லை. செய்தித்தாள்தான். கீதையைப் படித்தால் உன்னை ஒரு பாவி என்று எடுத்துக் கொள்வாய். பைபிளைப் படித்தால் நரகத்துக்குப் போகிறவன் நீ என்ற பயம் வந்து விடும். ஏற்கெனவே அதற்கான வழியில் இருக்கிறாய் என்ற பயம் வந்துவிடும். நடுங்கிப் போகிறாய். ஒன்று நிச்சயமாகத் தெரிகிறது. நீ சொர்க்கத்துக்குப் போகப் போவதில்லை என்பது. என்னவோ அது முடியவே முடியாத காரியமாகத் தெரிகிறது. என்னென்ன நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டியிருக்கிறது!

யாருக்குமே சாத்திரங்களைப் படிக்க விருப்பம் இருப்பதில்லை. யாருக்குமே சாத்திரங்களைக் கேட்க



விருப்பம் இருப்பதில்லை. அதனால்தான் கோயிலுக்குப் போனால் எல்லோரும் தூங்கி வழிந்து கொண்டிருக்கக் காண்கிறாய். தூக்கம் வராத வியாதி இருப்பவர்களை உபன்னியாசம் கேட்பதற்கு அனுப்பும் மருத்துவர்களை எனக்குத் தெரியும். மயக்க மருந்துகள் வேலை செய்யவில்லை என்றால் கவலைப்படாதே. உபன்னியாசம் கேட்கப் போய்விடு. அதுதான் எல்லாவற்றுக்கும் மீறிய தூக்க மருந்து.

சாத்திரங்களைக் கேட்டால் தூக்கம்தான் வருகிறது. அது ஒரு பாதுகாப்பு. தவிர்த்துப் போக ஒரு வழி. இல்லையென்றால் சொர்க்கம் உனக்கானதல்ல என்ற நிச்சயம் வந்து விடும். மிகப் பெரிய அச்சம் வந்துவிடுகிறது. எனவே அதிலிருந்து தப்பிக்கவே முடியாது என்ற நினைப்பு வந்து விடுகிறது.

எல்லோருக்கும் பிறரை விமர்சனம் செய்யப் பிடிக்கிறது. விமர்சனம் செய்வது மட்டுமல்ல. தவறுகளைப் பெரிதுபடுத்தவும் பிடிக்கிறது. பிறருடைய தவறுகள் எந்த அளவுக்குப் பெரியதோ அந்த அளவுக்கு உன் தவறுகள் சிறியதாகப் போய் விடுகின்றன.

கடவுளோ கருணையாளர்-ரஹீம் ரெஹ்மான்! கருணையே கடவுள். மாபாவிகள் இருக்கிற உலகில் உன்னுடையவை சிறிய குறைகள்தான்.

கடைசித் தீர்ப்பென்று உன் பெயரைக் கூப்பிட மாட்டார்கள். நிச்சயமாகக் கூப்பிட மாட்டார்கள் என்கிறாய். நீண்ட வரிசை. அதுவும் இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் முடிவு சொல்ல வேண்டும். லட்சக்கணக் கானவர்கள் வரிசையில் - டாமர்லேய்ன், செங்கிஸ்கான், அலெக்ஸாண்டர், அடால்ஃப் ஹிட்லர், முசோலினி, ஜோசப் ஸ்டாலின், மாசேதுங் அவர்கள் உனக்கு முன்னால்



வரிசையில் நிற்கிறார்கள். நீ கடைசியில் நிற்கிறாய். உன்னுடைய எண் வரப்போவதில்லை. பூதக்கண்ணாடி வைத்துக் கொண்டு பிறரைப் பார்க்கும்போது அப்படித்தான் நினைப்பாய்.

ஒரு பாஸ்கட் பால் நடுவர். கூட்டம் அவரைப் பார்த்துக் கூச்சல் போடுகிறது. மனைவியும் போட்டியைப் பார்க்க வந்திருக்கிறாள். இனி வரும் போட்டிகள் நடக்கும் இடத்தில் இருக்க வேண்டாம். பத்திரம் என்று மனைவியிடம் சொல்கிறான். ''எல்லோரும் என்னைப் பார்த்துக் கூச்சல் போடும்போது உனக்குத் தர்ம சங்கடமாக இருக்கும்'' என்கிறான்.

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. நானும்தான் கூச்சல் போட்டேன்'' என்றாளாம்.

அகந்தை பிறருடைய விமரிசனத்தை ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால் எல்லோரையும் விமரிசிக்க விரும்புகிறது. இந்த அகந்தையின் தந்திரத்தைப் புரிந்து கொள். எப்படி அது தன்னை வளர்த்துக் கொள்கிறது, எப்படி அது தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறது என்பதைப் புரிந்து கொள். அந்தத் தந்திரங்களை எல்லாம் புரிந்து கொள்ளவில்லை என்றால் அதிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது. அதிலிருந்து தப்பித்துக் கொள்வதுதான் ஆன்மிகத்துக்கான ஆரம்பம். சன்னியாசத்தின் ஆரம்பம். மற்றவர்கள் உன்னைப் பற்றி என்ன சொல்கிறார்கள் என்பதில் எந்த அக்கறையும் இல்லாமல் போய்விடும்.

என்னைப் பார். எவ்வளவு பேசுகிறார்கள் என்னைப் பற்றி! நான் அவற்றைப் படிப்பது கூடக் கிடையாது. ஒவ்வொரு நாளும் பல மொழிகளில் பல நாடுகளில் என்னைப் பற்றி என்ன எழுதியிருக்கிறார்கள் என்பதை என்னிடம் லக்ஷ்மி காட்டுகிறாள். எனக்கென்ன கவலை?



வதந்திகளை அவர்கள் அனுபவிக்கிறார்கள் என்றால் அனுபவித்துப் போகட்டுமே. அவர்களுடைய வாழ்வில் அனுபவிப்பதற்கு என்று ஏதுமில்லை. அவர்களுக்கும் கொஞ்சம் இன்பம் தேவைதான். அதில் எந்தத் தவறும் இல்லை. அவர்களால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. அவர்கள் என் உடலை அழித்து விடலாம். ஆனால் அவர்கள் எனக்குத் தீங்கு செய்ய முடியாது.

எனக்கென்ற எந்த வடிவத்தையும் நான் கற்பித்துக் கொள்ளவில்லை. எனவே அதை அவர்கள் சிதைக்க முடியாது. நான் பிரதிவினையாற்றுகிறவன் அல்ல. செயல்படுகிறவன். என்னிடமிருந்தே என் செயல்கள் கிளம்பி வருகின்றன. யாரும் என்னை எதுவும் செய்ய வைக்க முடியாது. நான் சுதந்திரமானவன். நான் என் விருப்பத்தின் பேரில் செயல்படுகிறவன்.

நீயாகச் செயல்படுகிற கலையைக் கற்றுக் கொள். விமரிசனங்கள் பற்றிக் கவலைப்படாதே. புகழ்ச்சியில் ஆர்வம் காட்டாதே. புகழ்ச்சியில் ஆர்வம் இருக்கிறது என்றால் விமரிசனத்தைப் பற்றிக் கவலைப்படாமல் இருக்க முடியாது. எதிலும் ஒட்டாதவனாக இருந்து விடு. புகழ்ச்சி - இகழ்ச்சி, வெற்றி - தோல்வி எல்லாமும் ஒன்றே. ஏஸ் தம்மோ சனந்தனோ.

நான்காவது வினா

**அன்புக்குரிய குருவே,**

**உங்களிடம் சரணாகதியடைந்து சன்னியாசியாகத் தான் விருப்பம். என்றாலும் ஏனோ முடியவில்லை. ஏன்? சற்றே தெளிவுறுத்துங்களேன்.**



**எஸ்.டி.பிரசாத்**, இது வெகு சாதாரணம். இதில் தெளிவுறுத்த ஏதுமில்லை. மக்களைக் கண்டு பயந்திருக்கிறாய். சமுதாயத்தைக் கண்டு பயந்து கொள்கிறாய். சம்பிரதாயமான மதத்தைப் பார்த்துப் பயந்து கொள்கிறாய். பூசாரிகள், அரசியல்வாதிகள் - இவர்களைப் பார்த்துப் பயந்து கொள்கிறாய். அந்தப் பயம்தான் உன்னைத் தடுத்து நிறுத்தியிருக்கிறது. சன்னியாசத்துக்குத் தைரியம் வேண்டும். துணிவு வேண்டும். குறிப்பாக என் சன்னியாசத்துக்கு...

பழைய சன்னியாசிகளுக்குத் துணிச்சல் தேவை யில்லை. ஏற்கெனவே இருப்பவர்களைப் போல இருந்தால் போதும். அவர்களை ஏற்றுக் கொண்டாயிற்று. அந்தச் சன்னியாசம் நிர்ணயிக்கப்பட்ட ஒன்றாகிப் போய்விட்டது. அப்படிப்பட்ட சன்னியாசியாகிவிட்டால் மக்கள் உன்னை நமஸ்கரிக்க ஆரம்பித்து விடுவார்கள். ஆனால் என்னுடைய சன்னியாசியாக ஆனால் எப்போதும் ஆபத்துக்கு மத்தியில் இருப்பாய். உன்னைப் பைத்தியக்காரன் என்று நினைத்துக் கொள்வார்கள். மனோவசியத்துக்கு ஆட்பட்டவன் என்று நினைத்துக் கொள்வார்கள். என்னவோ எங்கேயோ சரியில்லை என்று நினைப்பார்கள். ''அட அவ்வளவு நல்லவனுக்கு இப்படியா? இப்படியாகும் என்று கனவில் கூட நினைத்ததில்லையே!'' என்பார்கள்.

உன்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். வதந்திகளைப் பரப்புவார்கள். கிசுகிசுப்பார்கள். ஆயிரத்தெட்டுப் பிரச்சனைகளைக் கொண்டு வருவார்கள். அவர்களோடு இருக்க வேண்டியிருக்கிறதே. அவர்கள் மத்தியில் வாழ வேண்டி இருக்கிறதே. ஒவ்வோர் அடியிலும் தடைகளைப் போடுவார்கள். பாறைகளைப் போட்டு வைப்பார்கள்.

உன்னிடமிருந்து தூரமாக இருக்கக் கூடியவர்கள் மட்டுமல்ல. உன்னோடு இருப்பவர்களும் அதைத்தான்



செய்வார்கள். உன் மனைவி அத்தனை பிரச்சனைகளைக் கொண்டு வருவாள். உன் குழந்தைகள், பெற்றோர் என்ற ஒவ்வொரு மூலை முடுக்கிலிருந்தும் பிரச்சனைகள் கிளம்பும்.

நீ பயந்திருக்கிறாய். அந்தப் பயத்தைப் புரிந்து கொள். பிறகு எல்லாமும் சரியாகிப் போகும். பயத்தைக் கண்டு கொண்டவுடன் அதைப் போக்கிவிடு; பயங்கள் எத்தனை இருந்தாலும் சன்னியாசத்துக்குள் குதித்து விடு. ஏனென்றால் பயந்து கொண்டே இருப்பது கோழைத்தனம். பயந்து கொண்டே இருப்பது வாழ்வின் பரவசத்தைத் தவறவிட்டு விடுவதாகிப் போகும்.

ஆபத்துகள் இன்னதெனத் தெரிந்தவருக்கே வாழ்க்கை உரியது. சாகசக்காரர்களுக்கே உரியது. சன்னியாசமே மிகப் பெரிய சாகசம். சன்னியாசத்துக்குப் புதியதொரு சித்தாந்தம் வகுத்திருக்கிறேன். அது தப்பித்துப் போவதல்ல. துறவின் மேல் அந்தச் சன்னியாசத்துக்கு நம்பிக்கை இல்லை. கொண்டாட்டத்தை நம்புவது. இந்த உலகில் வாழ விரும்புவது என்றாலும் இந்த உலகத்தவனாக இல்லாமல் இருப்பது.

பழைய சன்னியாசம் சுலபம். உலகத்தை விட்டுத் தப்பித்துப் போய்விடு. மயக்கி ஆசை காட்டுவதை விட்டுத் தூரப் போய்விடு. இமாலயத்தின் குகைகளுக்குப் போய்ச் சேர்ந்து விடு. அங்கே இருந்தால் மகான் ஆகிவிடலாம். ஏனென்றால் உன்னை மயக்க ஏதும் இருப்பதில்லையே. மகானாக இருந்து தொலைக்க வேண்டி இருக்கிறது. வேறு எதுவும் செய்ய முடியாதே.

இந்த உலகில் எல்லா ஆசைகளும்தான் இருக்கின்றன. அப்படிப்பட்ட உலகில் மகானாக இருப்பது வெகு சிலாக்கியம். அசாதாரணம். பெண்களே இல்லாத



இமாலயத்தில் பிரம்மச்சாரியாக இருப்பது சுலபம்தான். பெண்கள் புத்திசாலிகள். அவர்கள் ஏன் இமாலயத்துக்குப் போக வேண்டும்? அவர்கள் இந்த உலகத்தை விட்டு அவ்வளவு சுலபமாக ஓடிவிட மாட்டார்கள். அவர்கள் உணர்வால் வாழ்கிறவர்கள். புத்தியால் அல்ல. எதார்த்தவாதிகள். சித்தாந்தத்துக்கும் தத்துவங்களுக்கும் வார்த்தைகளுக்கும் பின்னால் அலைய மாட்டார்கள்.

ஆண்மகன்தான் கருத்துப் பொருளுக்குப் பின்னால் அலைகிறவன். பெண்ணுக்கு அடுத்த உலகத்தைப் பற்றி அக்கறை இல்லை. அவளுக்கு இங்கே இப்போது அழகான ஒரு சேலை வேண்டும். சொர்க்கத்தில் அழகான பெண்ணுக்காகக் காத்திருந்தால் நீ ஒரு முட்டாளாகத்தான் இருக்க வேண்டும்.

பெண்மை அடுத்த உலகத்தைப் பற்றி அதிகம் கவலைப்படுவதில்லை. ''பார்க்கலாம். இந்த உலகில் காலம் தள்ள முடியுமானால் அங்கேயும் காலம் தள்ள முடியும். இங்கே முட்டாள்கள் இருந்தால் அங்கேயும் அதே முட்டாள்கள்தான் இருக்கப் போகிறார்கள். பிறகு ஏன் அடுத்த உலகத்தைப் பற்றி அநாவசியக் கவலை?'' என்பாள்.

ஆண் கருத்துப் பொருளைத் தேடி அலைகிறவன். அதுதான் ஆண்மையின் மிகப் பெரிய குறையே. அது கொள்கைகளில் வாழ்கிறது. வார்த்தைகளில் தன்னை இழந்து வாழ்வையே தியாகம் செய்கிறது. குகைகளைத் தேடிப் போய், இந்த வாழ்வை அடுத்த வாழ்வுக்காகத் தாரை வார்த்து விடுகிறது. கடந்த காலத்திலும் எதிர்காலத்திலும் வாழ்கிறது.



பெண் நிகழ்காலத்தில் வாழ்கிறவள். எனவேதான் இமாலயக் குகைகளில் எந்தப் பெண்ணும் இருப்பதில்லை. நீ வேண்டுமானால் அங்கே போய்க் கனாக் கண்டு கொண்டு இருக்கலாம். எந்தச் சந்தர்ப்பமும் எதற்கும் கிடைக்காது. பணம் இல்லை. அதிகாரம் இல்லை. அழகு இல்லை. எதுவுமே இல்லை. உன்னுடைய குகையில் உட்கார்ந்து கொண்டு மந்தமாகிப் போய் மெது மெதுவே தற்கொலை செய்து கொண்டிருக்கப் போகிறாய்.

என்னுடைய சன்னியாசம் இந்த உலகத்தை விட்டுவிடுவதல்ல. அதனுள் ஆழப் போவது. அதன் நடுமத்துக்குப் போவது. கடவுள் உலகத்தின் நடுமத்தில்தான் இருக்கிறார். கடவுள் இந்த உலகின் ஆன்மா. இந்த உலகத்தை விட்டுத் தப்பித்துப் போய் அவரைக் கண்டுபிடிக்க முடியாது. இந்த உலகத்துக்குள் இன்னமும் இன்னமும் என்று ஆழப் போகும் போதுதான் அவரைக் கண்டுபிடிக்க முடியும்.

இருப்பின் மையத்திற்கு போய்ச் சேரும்போது அவரைக் காண்பாய். அவர் இந்த உலகில் மறைந் திருக்கிறார். இந்த உலகம் முழுக்க அவர் பரவியிருக்கிறார். மரங்களிலும் பாறைகளிலும் பறவைகளிலும் உன் குழந்தைகளிலும் அவர் இருக்கிறார். அவர் உனக்குள் இருக்கிறார். அவரைக் கண்டுகொள்வதற்குச் சிறந்த சாத்தியம் இந்த உலகத்தில் இருப்பதில் இருக்கிறது. இந்த உலகத்திலிருந்து தள்ளியல்ல.

உலகத்தை விட்டுப் போய்விடுவது பலரையும் கவர்ந்ததாகிப் போய்விட்டது. அதுவும் பயந்து கொண்டு. தப்பித்துப் போகிறவன் பெரிய கோழை. இந்த உலகில் வாழ்ந்திருந்து ஆனால், அதனால் பாதிக்கப்படாமல்



இருப்பதற்கான விழிப்பு அவனிடம் இல்லை. அந்த அளவுக்கு அவன் கவனமாக இருப்ப தில்லை. அந்த அளவுக்கு அவன் புத்திசாலியல்ல. விழித்திருப்பதற்கான முயற்சி செய்ய முடியாதவன். எனவே தப்பித்து ஓடுகிறான். அவன் ஒரு கோழை.

எனவே எஸ்.டி. பிரசாத், உனக்குப் பழைய சன்னியாசம் பொருத்தமாக இருக்கும். ஆனால் அதனால் எந்தப் பயனும் இல்லை. கோழையாகவே இருப்பாய். பயந்தவனாகவே இருப்பாய். மேம்போக்காகப் பார்த்தால் உலகைத் துறந்து சன்னியாசம் எடுத்துக் கொள்கிறவன் தைரியசாலியாகத் தெரிகிறான். ஆனால் அப்படி இல்லை. எனவே தோற்றங்களால் மயங்கிப் போய்விடாதே. அடி ஆழத்தில் அவன் நடுங்கிக் கொண்டிருக்கிறான். பயந்திருக்கிறான்.

அடால்ப் ஹிட்லர் ரஷ்யாவில் போர் முனையில் இரண்டாவது குளிர்காலத்துக்குத் தன்னைத் தயாராக வைத்துக் கொள்ள ஆடைகளைச் சேர்த்துக் கொண்டிருந்தான்.

அவனுடைய உதவியாளர்களில் ஒருவன், ''தலைவரே! நெப்போலியன் ரஷ்யாவுக்கு வந்தபோது செய்ததை நினைத்துப் பாருங்கள். பிரகாசமான சிவப்பு உடை அணிந்தான். தப்பித் தவறிக் காயம் பட்டு ரத்தம் வந்தாலும் அவனுடைய ஆட்களுக்குத் தெரியக் கூடாது என்று'' என்றான்.

''பிரமாதம். பிரமாதம்.'' கொஞ்சம் யோசித்த ஹிட்லர், ''என்னுடைய பழுப்பு உடையைத் தா!'' என்றான்.

தோற்றங்கள் உன்னை ஏமாற்ற விடாதே. ஹிட்லர் போன்றவர்கள் கூடப் பயந்தவர்கள்தான். நடுங்கிக் கொண்டு இருந்தவர்கள். உலகத்தை விட்டுத் தப்பிப்



போனவர்களைச் சன்னியாசிகள் என்கிறாயே. அவர்களும் பயத்தால்தான் தப்பித்து ஓடியவர்கள்.

நான் உனக்குப் பயமற்ற நிலையைச் சொல்லித் தருகிறேன். பயம் மட்டுமே உன்னைத் தடுத்துப் பிடித்திருக்கிறது. இதைச் சொன்னால் நீ ஏற்றுக் கொள்ள மாட்டாய். உன்னுடைய அகந்தைக்கு ஏற்ப நான் ஏதாவது சொல்வேன் என்று எதிர்பார்த்திருப்பாய். மன்னிக்க வேண்டும். நான் உண்மையற்றதைப் பேச மாட்டேன்.

உண்மையே பேசுவேன். அது காயப்படுத்தும் என்றாலும் கூட; உண்மையின் வழியிலேயே உன் ஜீவிதத்துக்குள் ஒளி வந்து சேர முடியும். எனவே காயப்பட்டுப் போயிருப்பதாக உணர்ந்தால்... நீ இந்த இடத்துக்குப் புதியவனாக இருக்க வேண்டும். உன் பெயர் பரிச்சயமானதாக இல்லை. புதிதாக வருகிறவர்களிடம் இவ்வளவு வெளிப்படையாகப் பேசுவது இல்லை. ஆனால் உன்னிடம் சன்னியாசத்துக்கான சாத்தியங்கள் பலமாக இருக்கின்றன. அதனால்தான் சற்றே கடுமையாகப் பேசுகிறேன்.'

ஒருவனிடம் சன்னியாசியாகும் சாத்தியம் இருந்தால் நான் கடுமையாகத்தான் பேசுவேன். சாத்தியமில்லாதவர்களிடம் பேசும்போது நாகரிகமாகப் பேசுவேன். எனவே நளினமாகப் பேசினால் உன்னைப் போகச் சொல்கிறேன் என்று பொருள். கடுமையாகப் பேசினால், உன் மண்டையில் சுத்தி அடி தருவேன். அதற்குப் பொருள் ஏற்கெனவே உன்னிடம் எனக்கு மதிப்புத் தோன்றிவிட்டது என்பதுதான்.

ஐந்தாவது வினா



அன்புக்குரிய குருவே,

**எனக்குப் பணத்தின் மீது அவ்வளவு ஆசை. என்னுடைய முற்பிறவியில் யூதனாக இருந்திருப்பேனோ?**

**சுரேஷ்**, அது ஏன் முற்பிறவி என்கிறாய். இப்போதே நீ யூதன்தான். இந்தியாவில் ஓர் இந்துக்குடும்பத்தில் பிறந்திருப்பதில் எந்த வித்தியாசமும் இல்லை. யூதன் எனும்போது ஓர் இனத்தைக் குறிப்பதில்லை. ஒரு மனப்பாங்கைக் குறிக்கிறோம். மார்வாரி இந்திய யூதன். பார்க்கப்போனால் யாருக்கெல்லாம் பணத்தின் மீது ஆசை இருக்கிறதோ அவனெல்லாம் ஒரு யூதன் தான். பேராசை யூத இலக்கணம்.

யூதராகப் பிறந்திருந்தாலும், யேசு ஒரு யூதர் அல்ல. யூதன் என்று நான் சொல்லும் போதெல்லாம் ஓர் இனத்தை நான் குறிக்கவில்லை என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். எனக்கு யூத ரத்தம், கிறித்துவ ரத்தம், இந்து ரத்தம் எல்லாமும் ஒன்றுதான்.

சில சாம்பிள்களை வேண்டுமானால் எடுத்துக் கொண்டு டாக்டரிடம் போய்ப் பார். இங்கே எல்லோரும் தான் இருக்கிறார்கள். எந்த ரத்தம் யூத ரத்தம்? எது இந்து ரத்தம்? எது பௌத்த ரத்தம்? என்ற கேட்டுப் பார். அவருக்குத் தலை சுற்றிவிடும். கண்டுபிடிக்கவே முடியாது. ரத்தம் ரத்தம்தான். அதில் சில வகைகள் இருக்கின்றன. ஆனால் யூத, இந்து, பௌத்த வகைகள் அல்ல.

யூதன் என்பவன் பேராசைக்கு இன்னொரு பெயர். அப்படித்தான் இந்த உலகம் எடுத்துக் கொண்டிருக்கிறது. ஏறக்குறைய எல்லோருமே யூதர்கள்தான். நீ ஒரு யேசுவாக

இருக்க வேண்டும், அல்லது யூதனாக இருக்க வேண்டும். இவை தவிர வேறு சாத்தியங்கள் இல்லை.



யூதனாக இருக்க விருப்பமில்லையா? சரி. யேசுவாக இருந்து விடு. முற்பிறவி என்றெல்லாம் சொல்லிச் சமாதானம் செய்துகொள்ளாதே. அவையெல்லாம் தந்திரக்கார மனித மனத்தின் கண்டுபிடிப்புகள். முற்பிறவியில் அல்ல. இப்போதே நீ ஒரு யூதன்தான். முற்பிறவியின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டுச் சௌகரியமாக அப்படியே இருக்க முடிகிறது.

ஒரு யூதன் ஒரு விலைமாதிடம் போகிறான். காரியம் முடியும் வரை என் தலை மேல் கை வைத்துக் கொண்டிருந்தால் உனக்கு இரட்டிப்புப் பணம் தருகிறேன் என்றான். அவளும் சரி என்றாள். அப்படியே காரியம் முடிந்ததும் அவன் இரட்டிப்புப் பணம் தந்தான். பெற்றுக் கொண்டவளுக்குக் காரணம் தெரிந்து கொள்ள வேண்டும் என்றிருந்தது. கேட்டுவிட்டாள்.

''அதுவா! நான் முனைப்பாக இருக்கும்போது நீ என் பையில் இருக்கும் பணத்தைச் சுருட்டிக் கொள்ளக் கூடாது என்றுதான்.''

உனக்காக இன்னுமொரு கதை சுரேஷ்.

ஓய்வு பெற்ற வயதான ஒரு யூதனுக்கு மகனால் பெரிய பிரச்சனை. அவன் பாட்டுக்கு எவளையாவது கெடுத்துக் கர்ப்பிணியாக்கி விட்டுவிடுவான். இவன் அவளுக்குப் பணம் கொடுத்துச் சரிக்கட்ட வேண்டியது. இப்படியே நடந்து கொண்டிருந்தது. ஒரு நாள் கல்யாணமாகாத அவனுடைய மகள், தான் 'கர்ப்பம்' என்று சொன்னாள். ''சரிதான். இப்போதுதான் வியாபாரம் சூடு பிடிக்கிறது'' என்றானாம்.



மூன்றாவது கதை.

ஓர் அறை நிறைய யூதர்கள். எந்த வியாபாரம் சிறந்தது என்று பேசிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் ஒரு தாடிக்காரக் கிழவன் சொன்னான். ''இனியும் பொய் சொல்லித் திரிய வேண்டாம். விபச்சாரம் தான் பிரமாதமான வியாபாரம். இருக்கிறதை விக்கிறாங்க; இருந்தாலும் வெச்சுக்கிட்டே இருக்காங்க'' என்றான்.

''என்ன சொல்றீங்க?'' அதிர்ச்சியடைந்த இன்னொரு கிழவன் கேட்டான்.

''என்ன சொல்கிறேனா? மேல்செலவு இல்லே. பராமரிப்பு இல்லே. இருப்பு வைக்க வேண்டியதில்லை. எந்த வியாபாரம் அப்படி வரும்? ஆமாம். அதுதான் மொத்த வியாபாரம்'' என்றான்.

பேராசை யூதத்துவம். எல்லோருமே அப்படிப் பார்த்தால் யூதர்கள்தான். பேராசை பயத்தின் வெளிப்பாடுகள். பயத்தால்தான் ஒருவன் பேராசைக்காரனாகிறான். எதிர்காலத்தைப் பற்றிப் பயந்து கொண்டு சேர்த்து வைக்கிறான். அடுத்த நாளுக்காக இன்றைய நாளைத் தியாகம் செய்கிறான். அடுத்த நாள் வருவதே இல்லை. பேராசைக்காரன்தான் உலகத்திலேயே மிக முட்டாள்தனமானவன். புத்தர் அவனை அதிமடையன் என்கிறார். ஏனென்றால் வராத எதிர்காலத்துக்காக நிகழ்காலத்தை அவன் தியாகம் செய்து கொண்டே இருக்கிறான். பணத்தைச் சேர்த்து வைக்கிறான். பயன்படுத்தவே முடிவதில்லை. என்றும் ஏழையாகவே இருக்கிறான்.

பேராசைக்காரன் என்றைக்கும் செல்வந்தனாவ தில்லை. உலகம் முழுக்க அவனுடையதாக இருக்கலாம்.



என்றாலும் அவன் ஏழைதான். அவனால் அனுபவிக்க முடியாது. அவனுடைய பேராசை அவனை அனுபவிக்க விடாது. அவன் கஞ்சத்தனத்தில் கிடக்கிறான். எதிர்காலத்தைப் பற்றி எப்போதும் பயந்து கொண்டே இருப்பதால் அவன் பணத்தை விட்டு விடமாட்டான். சேர்க்கிறான். சேர்ப்பதிலேயே வாழ்வைக் கழிக்கிறான். ஒரு நாள் இறந்து போகிறான். வாழ்க்கை முழுக்க ஏழையாகவே இருந்து விடுகிறான். வெறுங்கையோடு வந்தவன் வெறுங்கையோடு போய்ச் சேருகிறான். இதற்காக வாழ்க்கை முழுக்க வீணாக ஓட்டிவிடுகிறான்.

போனபிறவியில் நீ யூதனாக இருந்திருப்பாய் என்று சொல்லி ஆறுதல் தேடாதே. உன்னுடைய இருப்பைப் பார். நீ ஒரு யூதன்தான். பார்க்கத் தெரிந்தால், ''ஓ... நான் யூதன்தான். நான் பேராசைக்காரன். எங்கே இருந்து வந்தது இத்தனை ஆசையும்?'' என்று கேட்டுக் கொள்வாய். பேராசையை ஆழ்ந்து பார்க்கும்போது பயத்தைக் காண்கிறாய். பயத்தைக் கண்டுபிடித்து விட்டால் அடிப்படையானதைக் கண்டு பிடித்து விடுகிறாய்.

வாழ்வை இரண்டு வகையாகத்தான் வாழ முடியும். ஒன்று பயத்தோடு வாழ்வது. இரண்டாவது அன்போடு வாழ்வது. பயத்தோடு வாழ்கிறவன் பேராசைக் காரனாகிறான். மற்றவர்களைத் தன் ஆளுமைக்குட் படுத்துகிறான். வன்முறையைக் கையாள்கிறான். தன் முனைப்புள்ளவனாகிறான்.

அன்போடு வாழ்கிறவன் பேராசையற்றவன். அவனுடைய அன்புக்குப் பகிர்ந்து கொள்வது எப்படி என்று தெரியும். அன்பு பகிர்ந்து கொள்வதை அனுபவிக்கிறது. பகிர்வதில் இருக்கும் ஆனந்தத்தை விட வேறு ஆனந்தம் இல்லை என்பது அன்புக்குத் தெரியும். என்ன இருக்கிறதோ



அதை அன்பு பகிர்ந்து கொள்கிறது. அப்படி ஒரு அதிரகசியத்தைத் தெரிந்து கொள்கிறது. எந்த அளவுக்குப் பகிர்ந்து கொள்கிறாயோ; அந்த அளவுக்கு அன்பின் சக்தி உன்னிடம் வந்து சேர்ந்து கொண்டே இருக்கிறது. எங்கிருந்து என்று தெரியாமல் வந்து கொண்டே இருக்கிறது. ஏஸ்தம்மோ சனந்தனோ.

எந்த அளவுக்கு அன்புடையவனாக இருக்கிறாயோ அந்த அளவுக்கு ஆன்மிகமுடையவனாகிறாய். எவ்வளவுக்கு அன்பிருக்கிறதோ அந்த அளவுக்குக் கடவுள் உனக்குத் தருகிறார். நீ தருகிறாயல்லவா, அதனால்தான். பிறருக்கு நீ என்ன செய்கிறாயோ அதைக் கடவுள் உனக்குச் செய்கிறார். நீ கஞ்சத்தனத்தைக் காண்பித்தால் கடவுள் கஞ்சனாகிவிடுகிறார். பகிர்ந்து கொண்டால் கடவுளும் பகிர்ந்து கொள்கிறார்; வாழ்தல் ஒரு கண்ணாடியைப் போல. உன்னுடைய முகத்தைப் பிரதிபலிக்கிறது. உன்னுடைய ஜீவனை எதிரொலிக்கிறது. அன்பினுள் வாழ். நீ யேசுவாகி விடுவாய்.

யேசு அன்பே கடவுள் என்கிறார். பயத்தோடு வாழ்ந்தால் நீ யூதனாகிப் போகிறாய். இந்து யூதனாக இருப்பாய். முகம்மதிய யூதனாக இருப்பாய். அல்லது கிறித்துவ யூதனாக இருப்பாய். அவ்வளவுதான். வித்தியாசம் ஏதுமில்லை.

கடைசி வினா

**அன்புக்குரிய குருவே,**

**ஏன் உங்களை நான் புரிந்து கொள்ளக் கூடாது?**

**ராம் கோபால்,** புரிந்து கொள்வதென்பது இரண்டாவது நிலை. முதல் நிலை கவனிப்பது. நான் சொல்வதைக் கவனிக்கவே இல்லை. நீ முதல்



நிலையையே தவற விட்டுவிட்டாய். இரண்டாவது நிலை சாத்தியமில்லைதான்.

நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே உன் மனதில் ஆயிரத்தெட்டு விஷயங்கள் அலை பாய்கின்றன. அவை உன்னைச் செவிடாக்கி வைத்திருக்கின்றன. என்னுடைய வார்த்தைகள் தம் பரிசுத்தமான வடிவில் உன்னை வந்து சேர்வதே இல்லை. வடிவிழந்து போய்விடுகின்றன. உன்னுடைய எண்ணங்கள் அவற்றுக்கு வர்ணம் பூசி விடுகின்றன. உன்னுடைய விருப்பு வெறுப்புகள், உன்னுடைய தீர்மானங்கள். அறிவால் என்னைக் கவனிக்கும்போது உண்மையாக நீ நான் சொல்வதைக் கவனிப்பதில்லை.

சொன்னது ஒன்று; உன்னிடம் வந்து சேர்ந்தது இன்னொன்று. நான் ஒன்றைச் சொல்கிறேன்; நீ ஒன்றைக் கேட்டுக் கொள்கிறாய். எனவேதான் தவறுகள். அதனால்தான் உனக்கு என்னைப் புரிந்து கொள்ள முடியவில்லை. புரிந்து கொள்ள வெகு சுலபமான வார்த்தைகளில்தானே பேசுகிறேன்!

எந்த அறிவார்ந்த அலங்கார வார்த்தைகளையும் நான் பயன்படுத்துவதில்லை. அன்றாட மொழியில் பேசுகிறேன். பெரிய வார்த்தைகளை நான் பயன்படுத்துவதே இல்லை. புரிந்து கொள்ள முடியவில்லை என்றால் உனக்குள் நீ செவிடாகிப் போனாய் என்று பொருள்.

உனக்குள் இந்து முகம்மதிய கிறித்துவ யூதச் சாத்திரங்கள், கோட்பாடுகள், விருப்பு வெறுப்புகள் என்ற எல்லாமும் இருந்து கொண்டு இரைச்சலிட்டுக் கொண்டிருக்கின்றன. அவற்றைத் தாண்டி உன்னை நான் அடைய வழி காண்பது ஏறக்குறைய முடியாத காரியம்.



புரிந்து கொள்வது பற்றிய கேள்வியே இல்லை. ஒரு காரியம் செய்தால் புரிதல் தானாகவே நடந்தேறும். கவனித்தால் போதும். நான் உன்னை அடைந்து விடுவேன். நெஞ்சைத் திறந்து வைத்துக் கொள். நீ செவிடன் அல்ல என்றால் புரிதல் நடக்கத்தான் செய்யும்.

கேட்ட சத்தியத்தைப் புரிந்து கொள்ள முடியும். புரிந்துதான் ஆக வேண்டும்; வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை. நெஞ்சைத் திறந்து வைத்துக் கொண்டிருந்தால் போதும். ஒரு சன்னலைத் திறந்து வை போதும். நான் உனக்குள் புகுந்து விடுவேன். ஒரு சன்னல் போதும். முன் கதவைத் திறக்க முடியவில்லை என்றால் கவலைப்படாதே. பின்கதவு போதும். ஆனால் ஏதாவது ஒரு கதவைத் திறந்து வை. நான் உனக்குள்ளே வரவிடு. பிறகு புரிந்து கொள்ளாமல் இருப்பது முடியவே முடியாது. தவறாகப் புரிந்து கொள்வது முடியாது.

ஒரு முறை புரிந்து கொண்டால் உன் வாழ்வை முழுக்க மாற்றிவிடும். அவ்வளவு தெளிவு சத்தியத்தில் இருக்கிறது. ஒரு தடவை கவனித்தால் புரிந்து விடும். அவ்வளவு எளிமையானது. ஒரு முறை கேட்டால் போதும். புரிந்து விடும். புரிந்தாயிற்று என்றால் உன் வாழ்வை மாற்றி விடும். சரியாகப் புரிந்து கொண்டால் ''என் வாழ்வை அதற்கேற்ப எப்படி மாற்றிக் கொள்வது?'' என்று கேட்க வேண்டிய அவசியமே இருக்காது. சத்தியம் மாற்றி விடுகிறது. சத்தியம் விடுவித்து விடுகிறது.

எதையெல்லாம் கேட்க முடியுமோ அதையெல்லாம் கேட்கிறாய். சொல்லாததையெல்லாமும் கேட்டுக் கொள்கிறாய். பிறகு உனக்குச் சௌகரியப்பட்டது போல வியாக்கியானம் செய்து கொள்கிறாய். தவறான வியாக்கி



யானங்களும் கூடத்தான். பிறகு நீ செய்வதெல்லாம் விரக்தியைத் தருகிறது. ஏனென்றால் தவறான வியாக்கியானங்கள் உன்னைச் சத்தியத்துக்குக் கொண்டு போய்ச் சேர்க்காது.

''தோழன் ஒருவனைக் கண்டு கொள். குரு ஒருவரைத் தேடிப் பிடி. அவரோடு தொடர்பு கொள்'' என்கிறார் புத்தர். தொடர்பு என்பது என்ன? எல்லா நிபந்தனைகளையும் திரும்ப எடுத்துக் கொள்வது. எல்லா விருப்பு வெறுப்புகளையும் திரும்பப் பெற்றுக் கொள்வது. வருகிறவரோடு சேர்ந்து அப்பழுக்கற்றுப் போவது. ஞானிக்கு முன் ஒரு குழந்தையாகிப் போவது. வியப்பும் ஆச்சரியமும் கொண்ட குழந்தையாக எதையும் ஏற்றுக் கொள்ளச் சித்தமாக இருப்பது. பிறகென்ன? ஓர் அம்பைப் போல உனக்குள் பாய்ந்து விடுவேன்.

ஆமாம். சிறிது வலிக்கும்தான். என்றாலும் அந்த வலி இனிமையாக இருக்கும். அப்படிப்பட்ட இனிமையை உன் வாழ்வில் சுவைத்திருக்க மாட்டாய். முதல் முதலாக சத்தியம் உனக்குள் ஓர் அம்பாகப் பாயும்போது அது உன்னைக் கொன்று விடுகிறது. உன் அகந்தையைக் கொன்று விடுகிறது. அது ஒரு விதமான சிலுவை மரணம். உயிர்த்தெழுவதற்கு முன் நிகழும் மரணம். இது வரை இருந்ததன் மரணம். இனி இருக்கப் போவதன் ஜனனம். இதைத்தான் இரண்டு முறை பிறந்தவன் என்பது - த்விஜ் - நீ ஒரு பிராம்மணன் ஆகிப் போகிறாய். தெரிந்து கொண்டவனாகிப் போகிறாய்.

ஆனால் இதற்குக் குருவுக்கும் சிஷ்யனுக்கும் இடையே ஒரு காதல் இருக்க வேண்டும். அந்தக் காதல் உறவு முழுமையானதாகும் போதுதான் இது சாத்தியம். ஈடுபாடு முழுமையானதாக இருக்க வேண்டும். வேடிக்கை பார்க்கிறவனைப் போலக் கவனித்துக் கொண்டிருந்தால்



அது சாத்தியமில்லை. ஆர்வத்தால் மட்டுமே கேட்டால் அது சாத்தியமில்லை. உன்னுடைய சிந்தனைகள், கருத்துகள், தீர்மானங்கள் இவற்றை வைத்துக் கொண்டே கேட்டால் சொல்லாததைத்தான் கேட்டுக் கொண்டே இருப்பாய்.

என்னுடைய வார்த்தைகளைப் புரிந்து கொள்வதைப் பற்றி நான் பேசவில்லை. என் இருப்பைப் புரிந்து கொள்ள வேண்டும் என்கிறேன். ஒரு சீடன்தான் பாக்கியசாலி.

ராம் கோபால், இன்னும் நீ சீடனாகவில்லை. உனக்கு ஆர்வம் இருக்கிறது. என்ன நடக்கிறது என்று பார்க்க வந்திருக்கிறாய். நீ இன்னமும் உன்னை ஒப்புவிக்கவில்லை. நான் சொல்வதைக் கவனிக்கிறாய். என்றாலும் தூரத்தே நிற்கிறாய். எக்கச்சக்கமாய் ஏதாவது நடந்தால் தப்பித்துப் போய்விடலாம் என்று நினைத்திருக்கிறாய். இன்னமும் வெளி வட்டத்தில் நிற்கிறாய். உள்ளே நுழையவில்லை.

உள் வட்டத்துக்குள் நுழைந்து பார். இது என்னுடைய அழைப்பு. என்னுடைய விருந்தாளியாக இரு; என்னிடமிருப்பதைக் குடி. நீ அதில் மூழ்கிப் போவாய். மாறிப் போவாய். இது ஒரு வாக்குறுதி.

இன்றைக்கு இது போதும்...

